# பாபாசாகேப்

# டாக்டர் அம்பேத்கர்

## நூல் தொகுப்பு :

தொகுதி 21





டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''இராணுவச் சேவையிலிருந்து பணிவிடுப்பு பெற்றவர்கள் மட்டுமன்றி போர் சம்பந்தமான தொழில்களிலிருந்து வெளியேற்றப்பட்ட தொழிலாளர்களையும் பதிவு செய்யவும், அவர்களைப் பொருத்தமான பணிகளில் அமர்த்தவும் பொறுப்புடையவை வேலை வாய்ப்பு நிலையங்களாகும்.''

*- டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர்*

வேலைவாய்ப்பு மற்றும் மறுவாழ்வு இயக்கத்தின்
செலவுக்கு நிதி ஒதுக்குதல்

This Volume XXI in Tamil forms the third part of the English Edition Volume 10 Part III of Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - published by the Education Department, Government of Maharashtra, 1991.

முதற் பதிப்பு : நவம்பர் 2000
சக ஆண்டு, ஐப்பசி



விலை : ரூ. 40/-
நூலகப் பதிப்பு: ரூ. 105

வெளியீட்டாளர் :

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூகநீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சகம்,
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

விற்பனை நிலையம்:

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41 B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

அச்சிட்டோர்:

பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 8532441, 8532973.

# ஆலோசனைக்குழு

திருமதி மேனகா காந்தி
சமூக நீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சு -
இணை அமைச்சர் (தனிப் பொறுப்பு)
இந்திய அரசு

டாக்டர் பிந்தேஸ்வர் பாதக், பிஎச்.டி., டி.லிட்.,
செயல் துணைத் தலைவர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி

திரு. கிரிஷன்லால்
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புது டில்லி.

நிர்வாகப் பதிப்பாளர் (தமிழ்) :
டாக்டர் எஸ். பெருமாள், எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,

ஆங்கில நூல் தொகுப்பாளர் :

திரு. வஸந்த் மூன்
மும்பை

தமிழ் நூல் பதிப்பாளர் :

டாக்டர் எஸ். பெருமாள்

மொழிபெயர்ப்பாளர்கள் :

திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)
திரு. என். ராமகிருஷ்ணன்
திரு. பசுமைக்குமார்
திரு. வி. இராதாகிருஷ்ணன்
திரு. எஸ். குகராஜ்

ஒப்புநோக்கியோர் :

திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)
டாக்டர் எஸ். பெருமாள்

பிழைதிருத்த உதவி:

திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)
திரு. கே. நீலகண்டன்

## அணிந்துரை

மனிதர்கள் தமது ஆதிக்க பலத்தை நிலைநாட்டுவதற்கு வன்முறையை மேற்கொள்ள நேரிடுகின்றது. தமது பலத்தால் தங்களை எதிர்ப்பவர்களை வெற்றி கொண்டு ஆதிக்கத்தை நிலைநாட்டுகின்றனர். இதன் விளைவாகச் சமூகத்தில் அமைதி யின்மை ஏற்படுகின்றது. இதனாலேயே மக்கள் பலவகைப் பிரிவினராகப் பிரிந்து எண்ணற்ற சாதியினராயினர். மனிதர் கள் சிலபோது தமது அறிவுபலத்தாலும், செல்வ வளத் தாலும், அதிகார பலத்தாலும் தமது செல்வாக்கை நிலைநாட்ட முயல் கின்றனர். இதனால் சமூகத்தில் ஏழை, பணக்காரன், வசதிமிக்கவர், வசதியற்றவர், தூய்மையானவர், தூய்மை யற்றவர், அழகானவர்கள், விகாரமானவர்கள், பண்பட்ட வர்கள், பண்படாதவர்கள், உயர் சாதியினர், தாழ்ந்த சாதி யினர் என்னும் ஏற்றத்தாழ்வுகள் மலிந்தன. மக்களிடையே இத்தகைய வேறுபாடுகளால் இடைவெளி உள்ளவரையில் சமூக அமைதி என்பது ஏற்பட முடியாது.

இன்றளவும் இந்திய மக்கள் நால்வகை சாதியினராக பிரிந்துள்ளனர். இந்திய அரசியலமைப்புச் சட்டப்படி வருண முறையின் கட்டுக்கோப்பு நெகிழ்ந்துள்ள போதிலும், வேறுபாடுகள் முழுமையாக உடைத்தெறியப்படவில்லை. ஜனநாயக நெறிகளில் நம்பிக்கையுள்ளோர் இந்த சாதி முறையை நீக்கப் பெரிதும் பாடுபட வேண்டும்.

டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம், படிப்போரைச் சிந்திக்க வைத்து இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படையில் புதியதொரு சமுதாயம் அமைவதற்கு உதவக் கூடியதாகும்.

நல்வாழ்த்துக்கள்!

மேனகா காந்தி
(திருமதி மேனகா காந்தி)
சமூக நீதி மற்றும் அதிகாரமளிப்பு
அமைச்சக இணை அமைச்சர்
(தனிப் பொறுப்பு)

புதுடில்லி

# தமிழ் நூல் பதிப்பாசிரியர் உரை

மகாராஷ்டிர மாநில அரசு வெளியிட்டுள்ள டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை பத்தாவது தொகுதியின் முதல் பகுதியும், மூன்றாவது பகுதியும் தமிழில் பதினெட்டு, இருபது, இருபத்தொன்றாவது தொகுதிகளாக வெளிவருகின்றன. டாக்டர் அம்பேத்கர் அவர்கள் 1942-இல் வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினராக நியமனம் பெற்று, தொழிலாளர் நலத்துறையின் பொறுப் பேற்றுப் பேசிய உரைகளின் விவாதங்களின்போது அளித்த வினா-விடைகளும் இந்தத் தொகுதிகளில் இடம் பெற்றுள்ளன.

தொழிலாளர் நலன்களுக்காகவும், வசதிகளுக்காகவும் டாக்டர் அம்பேத்கர் வகுத்தளித்த சட்டங்களும் அவற்றை நிறைவேற்றுவதற்காக நடத்திய மாநாடுகளும் இன்றளவும் நின்று பயன்தரக் கூடியவையாக உள்ளன. பொருளாதார ஜனநாயகமும், அரசியல் ஜனநாயகமும் உயிரோட்ட முள்ளதாக விளங்க வேண்டுமானால் சமூக ஜனநாயகமும் அவற்றின் ஒரு அங்கமாக இருக்க வேண்டுமென்பதை டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து வலியுறுத்தி வந்துள்ளதை இந்தத் தொகுதிகளில் காணலாம். இந்தக் கண்ணோட்டத்தில் அவர் வகுத்தளித்த திட்டங்கள் இந்திய நாட்டுத் தொழிலாளர் வாழ்வில் அமைதியானதொரு மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளன.

டாக்டர் அம்பேத்கரின் சீரிய சிந்தனைகளும், தீர்க்கதரிசன மான திட்டங்களும் மக்களைச் சென்றடைவதற்கு அவற்றைத் தமிழ் உட்பட இந்திய மொழிகளில் மொழி பெயர்த்தளிக்கும் மகத்தான பணியை மேற்கொண்டுள்ள இந்திய அரசும், நூல் வெளியீட்டுத் திட்டத்தை நிறைவேற்றி வரும் சமூகநீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சகத்தின் டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷனும் நன்றிக்குரியவர்கள்.

முன் தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதிகளை யும் மிகுந்த பொறுப்புணர்வுடன் மொழி பெயர்த்துள்ள மொழிபெயர்ப்பாளர்கள் மற்றும் ஆய்வு நோக்குவோர், சரிபார்ப்போர் ஆகியோர் பாராட்டுக்குரியவர்களாவர்.

**எஸ். பெருமாள்**
தமிழ் நூல் பதிப்பாசிரியர்.

# 255

## *நிலக்கரி சுரங்கங்களில் உயிரிழப்புகள்

52. திரு. அப்துல் கையூம்: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பதிலளிப்பாரா?

(அ) 1943 ஆம் ஆண்டிலும் 1944 ஆம் ஆண்டிலும் நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்து கொண்டிருக்கும்பொழுது எத்தனை பேர் கொல்லப்பட்டனர் அல்லது காயமுற்றனர்?

(ஆ) சுரங்கங்களில் வேலை செய்யும் பெண்களுக்குச் சுரங்க முகட்டில் குளிக்கும் வசதியும் அவர்களது குழந்தைகளுக்கு குழந்தைகள் காப்பகமும் ஏற்பாடு செய்யப்பட வேண்டுமென்ற திட்டம் அமலாக்கப்பட்டதா?

(இ) இல்லையென்றால் தாமதத்திற்கான காரணம் என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:

| | | கொல்லப்பட்டவர்கள் | காயமுற்றோர் |
|---|---|---|---|
| (அ) | 1943 | 290 | 1,320 |
| (ஆ) | 1944 | 332 | 1,395 |

(ஆ) இதுவரை திக்வார்தி சுரங்கங்களில் மட்டும் சுரங்க முகட்டில் குளிக்கும் வசதி செய்யப்பட்டுள்ளது; மத்திய மாகாணங் களில் 7 இடங்களிலும், ராணிகஞ்சில் (வங்காளம்) ஒரு சுரங்கத் திலும் குழந்தைக் காப்பகங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

(இ) தாமதத்திற்கான காரணம் என்னவென்பது இந்திய அரசாங்கத்திற்குத் தெரியாது. சுரங்கங்களில் வேலைக்கு அமர்த்தும்

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 9, 1945, பக்கங்கள் 109-110.

பெண்களின் குழந்தைகளுக்குக் காப்பகங்கள் நடத்துவதை சுரங்க முதலாளிகளுக்கு கட்டாயமாக்கும் விதத்தில் இந்தியச் சுரங்கங்கள் சட்டத்தைத் திருத்தும் பிரச்சினை அரசாங்கத்தின் தீவிர பரிசீலனையில் இருக்கிறது.

*திரு. அப்துல் கையூம்:* நிலத்தடியில் பெண்கள் வேலை செய்வதற்குத் தடை விதிக்கப்படுவதற்கு முன்பே தக்க தருணத்தில் இத்தகைய அபிவிருத்திகளை அரசாங்கம் செய்யுமா?

இல்லையென்றால், பின்னர் இத்தகைய அபிவிருத்திகளுக்கு எவ்விதப் பயனும் இராது? அவை நீண்டகாலம் தாமதப்படுத்தாதபடி மாண்புமிகு உறுப்பினர் பார்த்துக் கொள்வாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நிலத்தடியில் பெண்கள் வேலை செய்வது நிறுத்தப்படலாம்; ஆனால் மேற்பரப்பில் பெண்கள் வேலை செய்வது தொடரும். குழந்தைக் காப்பகங்கள் அவசியத் தேவையாகும். இவ்வாறு கூறுவதன் பொருள் நான் இந்த விஷயத்தை தாமதப்படுத்துவேன் என்பதல்ல.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* சுரங்க விபத்துகளால் உயிரிழந்தவர்களில் எத்தனைப் பேர் பெண்கள்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதற்குப் பதில் சொல்ல எனக்கு அவகாசம் வேண்டும்.

*பண்டிட் லட்சுமி காந்த மிஸ்ரா:* இத்தகைய சாவுகளில் எத்தனை சதவீதம் பேர் மூச்சுத் திணறி இறந்தனர். எத்தனை சதவீதம் பேர் விபத்துக்களில் இறந்தனர்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதற்குப் பதில் சொல்ல எனக்கு அவகாசம் வேண்டும்.

# 256

## *தென்னிந்தியாவின் கனிமப் படிவங்கள்

61. திரு. கே.எஸ். குப்தா: (அ) கடந்த 30 ஆண்டுகளாக தென்னிந்தியாவில் மண்ணியல் ஆய்வுத் துறை அவ்வப்போது நடத்திய ஆய்வுகளின் விளைவாக உலோகம் சார்ந்த மற்றும் உலோகம் சாராத வகைப்பட்ட பல்வேறு வகையான தாதுப் படிவங்கள் குறித்து விளக்குவாரா?

(ஆ) சுலபமாகக் கிடைக்கக்கூடிய இடங்களில் ஏராளமான அளவில் காந்த இரும்புத்தாது ப் படிவங்கள் இருப்பது உண்மையா?

(இ) ஓர் இரும்பு மற்றும் உருக்குத் தொழிலை நிறுவுவதற்கோ அல்லது இத்தகைய படிவங்கள் கிடைக்குமிடத்திற்கு அருகில் இதரர்கள் அதை ஏற்படுத்துவதற்கு உற்சாகமளிப்பதற்கோ இந்திய அரசாங்கம் ஏதாவது முயற்சி செய்துள்ளதா? இல்லையென்றால் ஏன் இல்லை?

(ஈ) சென்னை மாகாணத்தில் பின்வரும் படிவங்கள் குறித்து எந்தவொரு முறையான பரிசீலனை மற்றும் ஆய்வு மேற்கொள்ளப் பட்டுள்ளதா? (அ) செம்பு (ஆ) துத்தநாகம் (இ) ஈயம் மற்றும் (ஈ) அலுமினியம். அவ்வாறானால் முடிவுகள் என்ன?

(உ) சென்னை மாகாணத்திலுள்ள இத்தகைய படிவ வளங்கள் முறையாக எடுக்கப்பட்டால் உயர்ரக பீங்கான் பொருட்கள் தயாரிக்கப்படக்கூடும் அல்லவா? இந்தத் தொழில் குறித்து ஏதாவது ஆய்வுகள் செய்யப்பட்டுள்ளதா? இந்தத் தொழிலை வளர்க்க ஏதாவது திட்டமுள்ளதா? அல்லது ஏதாவது முயற்சி செய்யப்பட்டுள்ளதா? இல்லையெனில் ஏன் இல்லை?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 9, 1945, பக்கம் 116-117.

*(எ) பெயிண்ட் தயாரிப்பதற்கு மிக முக்கியமாகத் தேவைப் படும் தாதுவான இல்மனைட், சில தென் மாவட்டங்களில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது உண்மையா? இந்தத் தொழிலை வளர்க்க ஏதாவது திட்டமுள்ளதா அல்லது முயற்சி மேற்கொள்ளப்பட்டதா? இல்லையென்றால் ஏன் இல்லை?*

*(ஏ) உயர் அழுத்த மின்சார வேலைகளுக்குத் தவிர்க்க இயலாத தாதுவான மைக்கா, சென்னை மாகாணத்தின் கடலோர மாவட்டங்கள் சிலவற்றில் மிகப் பெரும் அளவில் கிடைப்பது உண்மையா?*

*(ஐ) தோண்டி எடுக்கப்படும் மைக்காவைக் கொண்டு மின்சாரப் பொருட்களை தயாரிப்பதற்கான ஒரு தொழிலை ஆரம்பிக்க எவ்வித முயற்சியும் செய்யாமல், தோண்டி எடுக்கப் பட்ட உடனேயே அதனை அன்னிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவது உண்மையா?*

*(ஒ) இத்தகைய தாதுப் படிவங்கள் குறித்து ஆராய தென்னிந்தியாவில் ஒரு மத்திய ஆராய்ச்சி நிறுவனத்தை உருவாக்க இந்திய அரசாங்கம் திட்டம் வைத்துள்ளதா? அவ்வாறானால் எப்பொழுது? இல்லையென்றால் ஏன் இல்லை?*

*(ஓ) விஞ்ஞான மற்றும் தொழில்நுட்ப ஆராய்ச்சிக் கழகத்தினால் துவக்கப்பட்டுள்ள ஏறத்தாழ அனைத்து ஆராய்ச்சி நிலையங்களும், இனி துவக்கப்பட உள்ள நிறுவனங்களும் வட இந்தியாவிலேயே இருப்பது உண்மையா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *(அ) உலோகம் சார்ந்தவை: குரோமைட், இரும்புத்தாது, இல்மனைட் மற்றும் கொலம்பைட்- டென்டலைட்.*

*உலோகம் சாராதவை: காலின், சுட்டமண் மற்றும் இதர வகைப்பட்ட களிமண் உள்ளிட்ட பீங்கான் வகைகள், குவார்ட்ஸ், பெல்ஸ்பர், சில்லிமனைட், பழுப்பு நிலக்கரி மற்றும் மொனாசைட், ஜிர்கான், சமர்ஸ்கைட்.*

(ஆ) ஆம்.

(இ) இல்லை. தாதுக்கள் மிக மட்டமான தரம் என்பதுடன் உருக்குவதற்கு ஏற்ற எரிபொருளுடன் சம்பந்தப்படாதது.

(ஈ) ஆம். எனினும் பொருளாதார ரீதியில் மதிப்புள்ள படிவங்கள் எதுவும் மண்ணியல் ஆய்வில் கண்டுபிடிக்கப்படவில்லை.

(உ) சாத்தியப்படலாம். இந்தப் பிரச்சினை குறித்து சென்னை அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது என்பதுடன் பீங்கான் தொழில்நுட்ப நிபுணர்களைப் பணிக்கு அமர்த்தியுள்ளது.

சென்னையில் பீங்கான் மூலப் பொருள்களின் அளவு மற்றும் தரம் குறித்து மண்ணியல் ஆய்வுத்துறை ஆய்வுகள் நடத்தி வருகிறது.

(ஊ) முதல் பகுதி. ஆம். இரண்டாவது பகுதி. இல்லை, ஏனென்றால் திருவாங்கூரிலுள்ள படிவங்கள் சென்னையில் உள்ளதைவிட மிகவும் வளம் வாய்ந்தவை என்பதுடன் இந்தப் படிவத்திற்கான தேவை ஒரு வரம்புக்குட்பட்டே உள்ளது.

(எ) ஆம்.

(ஏ) ஆம். மைக்கா பெரும்பாலும் ஏற்றுமதி செய்யப்படுகிறது.

(ஐ) இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையில் கூடுதலாக ஆட்களைச் சேர்க்கவும், அதனுடைய செயல்பாடுகளை விரிவுபடுத்தவும் இந்திய அரசாங்கம் ஒரு திட்டத்தை ஆராய்ந்து வருகிறது. தற்சமயத்திலிருப்பதை விட வரவிருக்கும் காலத்தில் நாட்டில் கனிமப் படிவங்கள் குறித்து மேலும் தீவிரமான ஆய்வு செய்யப்படுமென்று நம்பப்படுகிறது.

(ஒ) இந்தக் கேள்வியை சம்பந்தப்பட்ட மாண்புமிகு உறுப்பினரிடம் எழுப்ப வேண்டும்.

# 257

## *தாமோதர் கால்வாய் மற்றும் போலாவரம் திட்டங்கள்

65. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்டவற்றுக்குப் பதிலளிப்பாரா?

(அ) தாமோதர் கால்வாயும் (வங்காளம்) போலாவரம் (சென்னை) திட்டங்களும் டென்னஸி பள்ளத்தாக்குத் திட்டப்படி உருவாக்கப்பட வேண்டும் என்று அவர் கூறியிருப்பதால், அந்தத் திட்டம் மற்றும் அதனுடைய சாதனை குறித்து பொதுவான அம்சங் களை விளக்கும் ஒரு சுருக்கமான அறிக்கையை அரசாங்கம் வெளி யிடுமா?

(ஆ) வெள்ளத்திலிருந்து வங்காளத்திற்கு நிவாரணம் வேண்டுமென்ற விசேடத் தேவை என்ற கண்ணோட்டத்தில் பார்க்கும்பொழுது வெள்ள நிவாரணம் என்பது உருவாக்கப் படவுள்ள தாமோதர் திட்டத்தின் பிரதான இலக்காக ஏற்றுக் கொள்ளப்படுமா?

(இ) வங்காளம் மற்றும் பீகாரிலுள்ள ஷெட்யூல்டு வகுப் பினருக்கு (ஹரிஜனங்கள்) நிலம் மிக மிகத் தேவையாக இருப் பதால் வங்காளத்திலும் பீகாரிலும் ஷெட்யூல்டு வகுப்பு மக்க ளுக்கு கூட்டுறவு முறையில் விவசாயம் செய்ய ஏராளமாகத் தேவைப்படும் நிலத்தைப் பெற இந்திய அரசாங்கம் போதுமான நிதி ஒதுக்கீடு செய்ய விசேட நடவடிக்கைகள் எடுக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) டென்னஸி பள்ளத்தாக்கு ஆணையம் என்பது ஒரு அன்னிய அரசாங்க அமைப் பாகும். அந்த ஆணையத்தின் செயல்பாடு குறித்த அறிக்கையின் ஒரு பிரதி பெறப்பட்டு மத்திய சட்டமன்றத்தின் நூலகத்தில் வைக்கப்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 9, 1945, பக்கம் - 118.

(ஆ) ஆம். இதர கட்டுப்பாடு நடவடிக்கைகள் குறித்த அம்சங் களை விட வெள்ளக் கட்டுப்பாடு என்பது முன்னுரிமை பெறும்.

(இ) நிலமற்ற விவசாயத் தொழிலாளிகளுக்கு எத்தகைய சிறந்த வழியில் உதவிடுவதென்ற பிரச்சினை அரசாங்கத்தின் கவனத்தைப் பெற்று வருகிறது.

# 258

## *பீகார் நிலக்கரிச் சுரங்கங்களில் அரிசிக்கு அதிக விலை கேட்பது பற்றி

72. திரு. கே.சி. நியோகி: (அ) மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வருபவற்றுக்குப் பதில் கூறுவாரா: 1944 நவம்பர் 20 ஆம் தேதிய என்னுடைய நட்சத்திரக் குறியிட்ட கேள்வி 611 (ஆ) விற்கு அவர் பதிலளித்திருந்த போதிலும் பீகார் அரசாங்கம் மொத்தக் கட்டுப்பாட்டு விலைக்கு மேல் நிர்வாகச் செலவிற் கென்று நான்கணாவை மேலும் சுமத்துவதென்று தீர்மானித்துள் ளது என்பதும், ஜாரியாவிலுள்ள கூட்டுக்குழு அதனுடைய உறுப் பினர்களிடமிருந்து தொடர்ந்து பழைய கட்டணத்தையே வசூலித்து வருகிறது என்பதும் உண்மையா?

(ஆ) இப்பிரச்சினை குறித்து சில சுரங்க முதலாளிகள் மத்திய அரசாங்கத்திற்குத் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்துள்ளது உண்மையா? அவ்வாறானால் அவர்களுடைய குறைகளைப் போக்கு வதற்கு என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன?

(இ) தன்னுடைய சுரங்கத்தில் கூடுதல் நிலக்கரி உற்பத்தி யாக வேண்டுமென்பதற்காக தனது சுரங்கத் தொழிலாளிகளுக்கு நிச்சயிக்கப்பட்ட விகிதத்தை விட அதிகமாக அரிசியை வினியோ கித்தார் என்று பீகார் மாகாணத்திலுள்ள ஒரு பெரிய சுரங்கத்தின்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 9, 1945, பக்கம் 121.

பொது மேலாளர் மீது இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் 81வது பிரிவின்கீழ் தன்பாத் உணவுப் பொருள் வழங்கல் அதிகாரி குற்றஞ்சாட்டியதைத் தொடர்ந்து அந்த பொதுமேலாளர் மீதான வழக்கு குற்றவியல் நடுவரால் முறை அமர்வு மன்றத்திற்கு அனுப்பப்பட்டுள்ளது என்பது உண்மையா?

(ஈ) மாண்புமிகு உறுப்பினர் என்னுடைய கேள்விக்கு அளித்த பதிலில் ஒப்புக் கொண்டதுபோல் தன்பாத் உணவு வழங்கல் அதிகாரியே பீகார் அரசாங்கத்தின் சார்பாக இதே காலகட்டத்தில் நிச்சயிக்கப்பட்டு அறிவிக்கப்பட்ட விலைகளை விடக் கூடுதல் கட்டணத்தை வசூலித்ததோடு கூட்டுக்குழுவையும் வசூலிக்க அனுமதித்தது உண்மையா?

(உ) தன்பாத் உதவி ஆணையர் 1944 பிப்ரவரி 9 ஆம் தேதியன்று வெளியிட்ட அவசரச் சட்டத்தின் விதிகளை மீறி தன்பாத் உணவு வழங்கல் அதிகாரி, அரிசிக்கு நிச்சயிக்கப்பட்ட கட்டுப்பாட்டு விலைக்கும் அதிகமாக கட்டணம் வசூலித்ததற்காக அவர் மீது தேவையான நடவடிக்கைகள் எடுக்கும் சாத்தியக்கூறை அரசாங்கம் ஆராயுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) இந்த விஷயத்தில் எவ்வித எதிர்ப்பும் தங்களுக்கு வரவில்லை என்று பீகார் அரசாங்கம் கூறுகிறது; ஆனால் எனக்கு ஒரு கடிதம் வந்துள்ளது என்பதுடன் மேற்கொண்டு ஓர் அறிக்கை அனுப்பும்படி பீகார் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். அவர்களுடைய அறிக்கை கிடைத்தவுடன் இந்த விஷயம் மேற்கொண்டு பரிசீலிக்கப்படும்.

(இ) ஆம்.

(ஈ) மாகாண அரசாங்கத்தின் உத்தரவுப்படி 1944 நவம்பருக்கு முன்னர் நிலக்கரிச் சுரங்கங்களிடமிருந்து உணவு தானியங்களுக்கு கட்டுப்பாட்டு விலைக்கும் அதிகமாக வசூலிக்கப்பட்டன.

(உ) (ஈ) பகுதிக்கான பதில் காரணமாக எழவில்லை.

# 259

## *டில்லி மின் வினியோக மற்றும் டிராக்ஷன் நிறுவனத்தை வாங்குவது குறித்து

76. திரு. கே.சி. நியோகி: (அ) 1944 ஆம் வருடம் நவம்பர் 15 ஆம் தேதிய என்னுடைய நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண். 419க்குத் தாம் அளித்த பதிலை மனத்திற் கொண்டு மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்டவைகளுக்குப் பதிலளிப்பாரா: டில்லி மின் வினியோக மற்றும் டிராக்ஷன் நிறுவனத்தின் தற்பொழுதைய உரிமம் முடிவடைந்தபின் அரசாங்கம் தனக்குள்ள உரிமையைப் பயன்படுத்தி அந்த நிறுவனத்தை வாங்குவது குறித்து முடிவு எடுத்துள்ளதா?

(ஆ) அந்த வாய்ப்பை பயன்படுத்திக் கொள்வதென்று முடிவு செய்திருந்தால், அந்த நிறுவனத்திற்கு தர வேண்டிய முன் அறிவிப்பு கொடுக்கப்பட்டு விட்டதா?

(இ) அரசாங்கம் அந்த நிறுவனத்தை எடுத்துக் கொள்ளும் பட்சத்தில் எதிர்காலத்தில் அதை நடத்துவதற்கு என்ன ஏற்பாடு செய்துள்ளது?

(ஈ) மேற்கண்ட இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்வதில்லை என்று தீர்மானித்திருந்தால், அத்தகைய முடிவிற்கான காரணம் குறித்து மாண்புமிகு உறுப்பினர் ஒரு விரிவான அறிக்கையை அளிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) அதை வாங்குவதற்கான தங்கள் உரிமையைப் பயன்படுத்திக் கொள்வதென்ற அரசாங்கத்தின் விருப்பத்தை, அந்த நிறுவனத்திற்கு தெரிவிக்கும் விதத்தில் அந்த நிறுவனத்திற்கு அறிவிப்புத்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 9, 1945, பக்கங்கள் 123-24

தருவதென்று பிரதம ஆணையர் தீர்மானித்துள்ளார்; ஆனால் அந்த அறிவிப்பு இன்னும் கொடுக்கப்படவில்லை.

(இ) இதுவரை எவ்வித முடிவும் எடுக்கப்படவில்லை.

(ஈ) எழவில்லை.

# 260

## *குடியிருப்புகளை ஒதுக்குவதில் தொழிலாளர் நலத்துறையின் சமீபத்திய இன மற்றும் மத தாரதம்மியம்

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அடுத்த ஒத்திவைப்புத் தீர்மானத்துக்கான அறிவிப்பு திரு. சர் சையது ராசா அலியிடமிருந்து வந்துள்ளது; தொழிலாளர் நலத் துறையானது ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் மற்றும் இந்தியக் கிறித் தவர்களுக்குக் குடியிருப்புகளை ஒதுக்குவதில் இன மற்றும் மத தாரதம்மியத்தைக் கொண்ட 1945 ஜனவரி 25ந் தேதிய WII-4/114 எண்ணுள்ள அறிவிக்கையை வெளியிட்டதற்காக அரசாங்கத்தைக் கண்டிக்கும் பொருட்டு இந்த ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வந்துள்ளார்.

சரியான நிலைமை என்னவென்பதை இதற்குப் பொறுப் பான உறுப்பினரிடமிருந்து அறிய விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, அந்த அறிக்கையை நான் படித் தேன். ''இந்தியன்'' என்ற வார்த்தைக்குப் பதிலாக ''இந்தியக் கிறித்தவர்கள்'' என்ற வார்த்தை தவறுதலாகப் புகுந்துவிட்டது என்று என்னிடம் கூறப்பட்டது. அது சரிசெய்யப்படும், எவ்விதப் பாகுபாட்டிற்கும் அதில் இடமிருக்காது.

சர் சையது ராசா அலி (ஐக்கிய மாகாணங்களின் நகரங் கள்: நகர்ப்புற முகமதியர்): இந்தச் சபையில் ஓர் அறிக்கை தாக்கல்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 9, 1945, பக்கங்கள் 123-24

செய்து விஷயம் முழுவதையும் அவைக் குறிப்பில் பதிவு செய்வது தான் மாண்புமிகு உறுப்பினருக்கு சிறந்த வழி என்று கருதுகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அலுவலகக் குறிப்பை நான் திருத்தி சரிசெய்து விட்டேன் என்பதுடன் திருத்தப் பட்ட வடிவத்தில் அது வெளியிடப்படும்.

*சர் சையது ராசா அலி:* நடந்தது என்ன என்பதை அறிந்து கொள்ள அவை விரும்புகிறது. அலுவலகக் குறிப்பு என்பதன் பொருள் என்ன? என்னுடைய மாண்புமிகு நண்பர் என்ன திருத்தம் செய்தார்? திருத்தத்தின் விளைவு என்னவாக இருக்கக்கூடும்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* முதன்முதலாக வெளியிடப்பட்ட குறிப்பு பின்வருமாறு: டில்லியிலும், புதுடில்லி யிலும், சிம்லாவிலும் மாதம் 600 ரூபாய்க்கு குறைவாக சம்பளம் வாங்கும் அதிகாரிகளுக்கான குடியிருப்புகளில் உள்ள ''பழம்பாணி'' மற்றும் ''புதுபாணி'' குடியிருப்பு வகைகளுக்கிடையிலான தார தம்மியத்தை ஒழிப்பது குறித்த பிரச்சினையை இந்தத் துறை ஆராய்ந்து வருகிறது. இந்தத் துறையின் கருத்தை ஆராய்ந்த பின், வரவிருக்கும் கோடைக்காலத்திலிருந்து இத்தகைய தாரதம்மி யத்தை ஒழிப்பது என்று தீர்மானிக்கப்பட்டுள்ளது.

ஐரோப்பியர்கள், ஆங்கிலோ-இந்தியர்கள் மற்றும் இந்திய கிறித்தவர்கள் சம்பந்தப்பட்டவரை, குடியிருப்புகளுக்கான அதிகாரி, ஐரோப்பிய பழக்கவழக்கங்களை பின்பற்றுகிறார் என்று யாரைக் குறித்து திருப்தியடைகிறாரோ அவருக்கு உயரமாக்கப்பட்டுள்ள கழிப்பறையைக் கொண்டுள்ள புதுபாணி வீட்டை ஒதுக்கீடு செய்ய லாம்; ஆனால் அவர்கள் 'ஏ', 'பி', 'சி' மற்றும் 'டி' வகைப்பட்ட குறிப்பிட்ட குடியிருப்புகளுக்கு தகுதிபடைத்தவர்களாக இருக்க வேண்டும்.

உரிய காலத்தில் தேவையான திருத்தங்கள் கொண்டு வரப் படும். முதன் முதலாக வெளியிடப்பட்ட குறிப்பு அதுதான். திருத்தப் பட்ட குறிப்பு இந்த மாற்றத்தைச் செய்துள்ளது.

''ஐரோப்பிய, ஆங்கிலோ-இந்திய அல்லது இந்திய அதிகாரி கள் சம்பந்தப்பட்டவரை ஐரோப்பிய பழக்கவழக்கங்களை

பின்பற்றுகிறவர் என்று யாரைக் குறித்து குடியிருப்புகளுக்கான அதிகாரி திருப்தியடைகிறாரோ அவருக்கு உயரமாக்கப்பட்டுள்ள கழிப்பறையைக் கொண்டுள்ள புதுபாணி குடியிருப்புகளை ஒதுக்கீடு செய்ய அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது; ஆனால் அவர்கள் 'ஏ' 'பி' 'சி' 'டி' வகைப்பட்ட குறிப்பிட்ட குடியிருப்புகளுக்கு தகுதி படைத்தவர்களாக இருக்க வேண்டும்.

# 261

## *வெஸ்டர்ன் கோர்ட் அறைகளில் மத்திய சட்டமன்ற உறுப்பினர்கள் தங்குவதற்குள்ள உரிமை புறக்கணிக்கப்படுதல்

*156. திரு. அப்துல் கையூம்:* மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்வருபவற்றுக்குப் பதில் கூறுவாரா:

(அ) வெஸ்டர்ன் கோர்ட்டிலும், இதர சில இடங்களிலு முள்ள சில அறைகள் பிரதானமாக மத்திய சட்டமன்ற கூட்டத் திலோ அல்லது தெரிவுக்குழு கூட்டங்களிலோ கலந்துகொள்ள விரும்பும் மாண்புமிகு உறுப்பினர்களுக்காக நிச்சயிக்கப்பட் டுள்ளதா?

(ஆ) காப்பீட்டு மசோதா மீதான தெரிவுக்குழுக் கூட்டத் திற்கு வந்த உறுப்பினர்களுக்கு இடம் தராமல் புறக்கணிக்கப் பட்டு தேசியப் பாதுகாப்பு உறுப்பினர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டதா? அவ்வாறானால் ஏன்?

(இ) இனி எதிர்காலத்திலாவது மத்திய சட்டமன்ற உறுப் பினர்கள் முதலிலேயே இடம் கேட்கும் பொழுது அதற்கு உரிய மரியாதை தரப்படுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) வெஸ்டர்ன் கோர்ட்டில் 19 அறைகளும் 69 குடியிருப்புகளும், சட்டமன்ற கூட்டம் நடக்கும்பொழுது இந்திய சட்டமன்ற மதிப்பிற்குரிய உறுப்பினர் களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளன. சட்டமன்றம் நடை

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 14, 1945, பக்கங்கள் 323-24.

பெறாத காலங்களில் வெஸ்டர்ன் கோர்ட்டில் ஏழு அறைகளும், 8 குடியிருப்புகளும், மத்திய சட்டமன்ற பணி சம்பந்தமாக டில்லிக்கு வருகை தரும் உறுப்பினர்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளன.

(ஆ) இல்லை; 1945 ஜனவரியில் காப்பீட்டு மசோதா சம்பந்த மான தெரிவுக்குழு கூட்டம் குறித்து எவ்வித தகவலும் இல்லாத நிலையில் அல்லது தங்கும் வசதி தேவை என உறுப்பினர்களிட மிருந்து எவ்விதக் கோரிக்கையும் வராத நிலையில் வெஸ்டர்ன் கோர்ட்டிலிருந்த அறைகள் தேசியப் பாதுகாப்புச் சபை உறுப் பினர்களுக்கு ஒதுக்கப்பட்டன. எனினும் வெஸ்டர்ன் கோர்ட்டில் தங்க இடம் வேண்டுமென்று கேட்ட தெரிவுக்குழு உறுப்பினர் களுக்கு இடவசதி செய்து தரப்பட்டது.

(இ) முன்கூட்டியே தகவல் கொடுத்தால் மத்திய சட்டமன்ற உறுப்பினர்களுக்கு இடவசதி செய்துதர ஏற்பாடுகள் எப்பொழுதும் உள்ளன.

# 262

## *முக்தேஷ்வரில் உள்ள பேரரசு ஆராய்ச்சிக் கழகத்திற்குச் சாலை அமைப்பது குறித்து

178. திரு. பத்ரி தத் பாண்டே: (அ) நைனிடால் மாவட்டத் திலுள்ள முக்தேஷ்வரில் இருக்கும் பேரரசு ஆராய்ச்சிக் கழகத் திற்குச் செல்ல வண்டிசாலை அல்லது மோட்டார் சாலை அமைக்க ஏதாவது திட்டமுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) அவ்வாறானால் அந்தச் சாலையின் தூரம் எவ்வளவு? கட்டுமானச் செலவு என்னவாகும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) அரசாங்கத் திடம் அத்தகைய திட்டம் எதுவும் கிடையாது.

(ஆ) எழாது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 14, 1945, பக்கம் 337.

# 263

## *இந்திய நீரூற்றுகளின் வாணிக அம்சங்கள் பரிசீலனை

308. திரு. கே.சி. நியோகி: (அ) மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் 1943 ஆகஸ்டு 5ந் தேதிய 50வது எண் நட்சத்திரக் குறியிடப்படாத கேள்வியையும், அதற்குத் தரப்பட்ட பதிலையும் கணக்கிலெடுத்துக் கொண்டு இந்திய ஊற்றுநீரை வாணிக ரீதியாகப் பயன்படுத்துவது குறித்து ஆராய்தல், அதற்காக மேற்கொள்ளப்பட்ட சோதனைகள், எந்தெந்த இடங்களில் பல்வேறு ஊற்றுக்கள் குறித்து ஆராயப்பட்டன, சம்பந்தப்பட்ட நீரில் அடங்கியுள்ள பொருட்கள், குணம் போன்றவற்றின் முடிவுகள் குறித்து ஓர் அறிக்கை வெளியிடுவாரா?

(ஆ) ஊற்றுநீரைப் பயன்படுத்துவது குறித்து அரசாங்க அமைப்பு மூலமாகவோ அல்லது ஏதாவது தனிப்பட்ட நிறுவனம் மூலமாகவோ அரசாங்கம் ஏதாவது திட்டம் வைத்திருக்கிறதா? அவ்வாறானால் அத்தகைய திட்டங்கள் குறித்த விபரங்கள் யாவை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) பீகாரில் சில தாதுக்கள் கொண்ட வெப்ப நீரூற்றுகள் குறித்து இந்திய மண்ணியல் ஆய்வுத்துறை பரிசோதித்தது; இத்தகைய நீரின் ரசாயனத் தன்மை குறித்து ஆராய்ந்தபின், இத்தகைய நீரை யுத்த காலத்தில் வாணிக நோக்கில் அரசாங்க அமைப்புகள் பயன்படுத்துவதில் ஆதாயமில்லை என முடிவு செய்யப்பட்டது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 14, 1945, பக்கம் 454-455.

# 264

## *வங்கத்திலுள்ள நிலக்கரிக்கு தாமோதர் நதிப் போக்குவரத்து

*310. திரு. ஆர்.ஆர். குப்தா: வங்கத்தின் நிலக்கரி சுரங்கங்களிலிருந்து கல்கத்தாவிற்கு அனைத்துப் பருவங்களிலும் நிலக்கரி கொண்டு செல்லும்படியாக தாமோதர் ஆற்றுப் போக்கு வரத்து ஏற்படுத்துவதென்று கடந்த நூற்றாண்டில் இந்திய அர சாங்கம் கொண்டிருந்த ஒரு திட்டம் குறித்து மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா? இல்லை யென்றால் பலநோக்கு தாமோதர் ஆற்றுத் திட்டம் தொடர்பாக அத்தகையதொரு திட்டத்தை மீண்டும் பரிசீலிக்க வேண்டிய சாத்தியக்கூறை அரசாங்கம் ஆராயுமா? இல்லையென்றால் ஏன் இல்லை?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அத்தகைய தொரு திட்டம் குறித்து எனக்கு எதுவும் தெரியாது; ஆனால் ராணிக்கஞ்சிலிருந்து கல்கத்தாவிற்கு ஒரு கால்வாய் வெட்டும் ஆலோசனை உள்ளது.*

*தற்பொழுது செய்யப்பட்டுவரும் விசாரணையானது தாமோதரை கட்டுப்படுத்துவதற்கான ஒரு பன்முகப்பட்ட திட் டத்தின் சாத்தியக்கூறை ஆராய்வதுதான் - இந்த ஆய்வு நீர்ப் போக்கு வரத்திற்கு உத்வேக மூட்டுவதற்கான சாத்தியக் கூறுகளை ஆராயு மளவிற்கு விரிவுபடுத்தப்படும்.*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 19, 1945, பக்கம் 455.*

# 265

## *ராவல்பிண்டி அருகே பெட்ரோலியம் கண்டுபிடிப்பு

*314. திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்டவற்றுக்குப் பதிலளிப்பாரா?

(அ) ராவல்பிண்டி அருகிலும் பஞ்சாப்பிலும் பெட்ரோலியம் கண்டுபிடிக்கப்பட்டிருப்பது குறித்து செய்தித்தாள்களில் வெளியான தகவல்கள் குறித்து அவர் கவனம் ஈர்க்கப்பட்டுள்ளதா?

(ஆ) இந்தப் பெட்ரோலியத்தை எடுப்பதற்கான ஏகபோக உரிமை ஒரு அன்னிய நிறுவனத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) ஆம், சம்பந்தப்பட்ட விபரங்களை அரசாங்கம் கண்டது.

(ஆ) இந்த விஷயமானது மாகாண அரசாங்கம் சம்பந்தப்பட்டது; இந்திய அரசாங்கத்திற்கு எவ்விதத் தகவலுமில்லை.

# 266

## +டில்லி மாகாணத்தில் மில்களிலும், ஆலைகளிலும் பெண் தொழிலாளிகள்

*327. திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

(அ) தொழிற்சாலை சட்டம் பொருந்தக்கூடிய டில்லி மாகாண மில்களிலும், தொழிற்சாலைகளிலும் 1944 ஆம் ஆண்டில் வேலைசெய்த பெண் தொழிலாளிகளின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 19, 1945, பக்கம் 456.

\+ மேற்படி அதே தொகுதி, பக். 456.

*(ஆ) பெண் தொழிலாளிகளின் பாதுகாப்பு நலன்களைக் காக்கத் தவறியதற்காக இத்தகைய நிறுவனங்கள் மீது தொழிற் சாலை சட்டப்படி ஏதேனும் நடவடிக்கை எடுக்கப்பட்டதா?*

*(இ) டில்லி மாகாணத்திற்கு பெண் தொழிலாளர் நல அதிகாரி எவராவது நியமிக்கப்பட்டிருக்கிறாரா; அவ்வாறானால் அவருடைய வேலைகள் என்ன?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, உங்கள் அனுமதியுடன் கேள்விகள் 327க்கும் 328க்கும் சேர்த்து பதில் அளிக்கிறேன்.

இவை குறித்து விசாரித்துள்ளேன் என்பதுடன் தக்க நேரத்தில் சபையில் ஓர் அறிக்கை சமர்ப்பிப்பேன்.

# 267

## *டில்லி மின் வினியோக மற்றும் டிராக்ஷன் நிறுவனம்

403. **திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

(அ) டில்லி மின் வினியோக மற்றும் டிராக்ஷன் நிறுவனம் குறித்து கடந்த சட்டமன்றக் கூட்டத்தில் திரு. நியோகியின் 419 ஆம் எண்ணுள்ள கேள்விக்குப் பதில் அளிக்கும்போது அவர் வாக்குறுதி அளித்த விசாரணையை முடித்துவிட்டாரா;

(ஆ) அந்த நிறுவனம் பெற்று வரும் லாபம் எவ்வளவு?

(இ) விசாரணையின் முடிவு என்ன? அதை வாங்குவதற்குள்ள உரிமையை அரசாங்கம் பயன்படுத்துமா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 21, 1945, பக்கம் 583.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (இ).*

*1945 பிப்ரவரி 9ந் தேதியன்று கே.சி. நியோகியின் கேள்விக்குக் கொடுக்கப்பட்ட பதில் மீது மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனம் ஈர்க்கப்படுகிறது.*

*(ஆ) 1939 லிருந்து நிறுவனம் அறிவித்த ஆதாயப்பங்கு பின் வருமாறு:*

| | |
|---|---|
| *1939 - 11 சதவீதம்* | *வருமான வரி இல்லை.* |
| *1940 - 11 சதவீதம்* | |
| *1941 - 11 சதவீதம்* | |
| *1942 - 9 சதவீதம்* | |
| *1943 - 9 சதவீதம்* | |

*திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: அந்த நிறுவனத்தை எடுத்துக் கொள்வதென்று அரசாங்கம் முடிவு செய்துள்ளதா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். ஐயா.*

*திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: அது எப்பொழுது அமலுக்கு வரும்?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: உரிமம் முடிந்ததும்*

*திரு. கே.சி. நியோகி: அதற்கான தகவல் கொடுக்கப்பட்டு விட்டதா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தகவல் கொடுக்கப்பட்டிருக்கும் என்றே நம்புகிறேன்.*

# 268

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்திற்கு அரசாங்க நன்கொடை

*404. திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:*

*(அ) அரசாங்கத்திடமிருந்து தாம் பணம் வாங்கியதாக தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறியதை தொழிற்சங்க காங் கிரசின் தலைவர் திரு. ஜம்னாதாஸ் மேத்தா மறுத்திருப்பதால் இந்த விஷயத்தை விசாரிப்பாரா?*

*(ஆ) அந்தப் பணம் தொழிற்சங்க காங்கிரசின் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளதா?*

*(இ) பணம் யாரிடம் கொடுக்கப்பட்டது?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. மேத்தா தலைவராக உள்ள இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் குறித்து இக்கேள்வி கேட்கப்பட்டுள்ளதென்றும், அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸ் குறித்து அல்ல என்றும் கருதுகிறேன்.

(அ) 1944 நவம்பர் 2ந் தேதியன்று திரு. லால்சந்த் நாவல் ராயினுடைய 31 ஆம் எண்ணுள்ள கேள்விக்கு நான் அளித்த பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

(ஆ) எனக்கு எதுவும் தெரியாது.

(இ) துவக்கத்தில் தேசிய யுத்த முன்னணி மூலம் சம்மேளனத் தின் பிரதிநிதிகளிடம் பணம் கொடுக்கப்பட்டது; பின்னர் தேசிய

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 21, 1945, பக்கம் 583-84.

தொழிலாளர் சேவை தீர்ப்பாயத்தின் தலைவர் மூலம் கொடுக்கப் பட்டது. 1944 ஜூன் முதல் பணம் சம்மேளனத்தின் செயலாளருக்கு கொடுக்கப்பட்டது.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** ஒரு குறிப் பிட்ட அமைப்பிற்கு பணம் கொடுக்கும்பொழுது அது அந்த அமைப் பின் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளதா என்பதை அரசாங்கம் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்தவொரு அமைப்பின் கணக்கையும் ஆராய்வது என் வேலை அல்ல.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** அந்தக் கணக்கு களைத் தணிக்கை செய்ய ஒரு தணிக்கையாளர் அனுப்பப்பட்டுள் ளதாக் முன்பொரு முறை மாண்புமிகு உறுப்பினர் அளித்த தகவல் படி, அந்த தணிக்கையாளரின் அறிக்கை பெறப்பட்டுள்ளதா என்பதை நான் அறிய இயலுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த விஷயம் குறித்து என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் ஒரு திட்டவட்டமான கேள்வி எழுப்ப வேண்டும்.

**திரு. அப்துல் கையூம்:** பணத்தை உண்மையில் பெற்றுக் கொண்ட அந்த நிறுவனத்தின் நிர்வாகிகள் பெயர்களை மாண்பு மிகு உறுப்பினர் தெரிவிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முதலில் அது தேசிய யுத்த முன்னணி மூலம் கொடுக்கப்பட்டது; பின்னர் ஒரு மாற்றம் செய்யப்பட்டு தேசியத் தொழிலாளர் சேவை தீர்ப்பாயத் தின் தலைவர் மூலம் கொடுக்கப்பட்டது; 1944 ஜூன் முதல் அது சம்மேளனத்தின் செயலாளரிடம் கொடுக்கப்பட்டது.

**திரு. அப்துல் கையூம்:** அந்தப் பணத்தைப் பெற்றுக் கொண்ட குறிப்பிட்ட கனவானின் பெயரை மாண்புமிகு உறுப்பினர் அளிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்குக் கால அவகாசம் வேண்டும்.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** திரு. ராய்க்குக் கொடுக்கப்பட்ட இந்தப் பணத்திற்கு எவ்வித பற்றுச் சீட்டுகளோ அல்லது கணக்கோ வைக்கப்படவில்லை என்று 1942-43 ஆம் ஆண்டிற்கான பொதுக்கணக்குக்குழு கூறியிருப்பதால் திரு. ராய்க்கு கொடுக்கப்பட்ட பணம் அவர் பெயரில் கொடுக்கப்பட்டதா என்பதையும், தணிக்கைகள் செய்யப்பட்டனவா என்பதையும், அந்தப் பணம் அந்த அமைப்பின் கணக்கில் வரவு வைக்கப்பட்டது என்பதையும் நான் அறியலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த ஏற்பாடு செய்யப்படும் முன்பு யாரிடம் பணம் கொடுக்கப்பட்டது என்பதை நான் கூற இயலாது. புதிய ஏற்பாடு செய்யப்பட்டபின், செயலாளர் என்று அறியப்பட்ட நபரிடம் பணம் கொடுக்கப்பட்டது.

**திரு. பத்ரி தத் பாண்டே:** தொழிலாளர் சம்மேளனத்திற்கு உதவித் தொகை வழங்குவது இந்தச் சபையினால் அங்கீகரிக்கப் படாததால், அரசாங்கம் அதை நிறுத்தத் திட்டமிட்டுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முடிவை முன் கூட்டியே நான் எதிர்பார்க்க விரும்பவில்லை.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** அதற்கு, அடுத்த பட்ஜெட்டில் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் காத்திருப்பாரானால் அவர் அதை அறிய இயலும்.

**திரு. ஸ்ரீபிரகாசா:** அந்தப் பணம் முறையாகச் செலவிடப் படும் என்பதை அரசாங்கம் உறுதி செய்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், ஐயா, அது குறித்து எனக்கு எவ்வித ஐயப்பாடும் கிடையாது.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** இது ஒரு ஆத்திரமூட்டும் பதில் என்பதை அவைத்தலைவருக்கு நான் சுட்டிக் காட்ட லாமா? பட்ஜெட் விரைவில் வரவிருக்கிறது. இதற்கான பணம் ஒதுக்கப்பட்டுள்ளதா என்பது அவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். இந்தப் பணம் ஒதுக்கப்பட்டுள்ளதா என்பதை நான் அறியலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் பிப்ரவரி 28ந் தேதியன்று அதை அறிவார்.

# 269

## *தொழிலாளர் பரிவர்த்தனை அமைப்புகள்

405. **திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** (அ) எத்தனை இடங்களில் தொழிலாளர் பரிவர்த்தனை அமைப்புகள் உருவாக்கப் பட்டுள்ளன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் அறிவிப்பாரா?

(ஆ) எத்தகைய தகுதி படைத்தோர்க்கு இந்தக் குழுக்கள் சேவை செய்ய விரும்புகின்றன?

(இ) இதுவரை எத்தனை பேருக்கு அவை வேலைவாய்ப்பு அளித்துள்ளன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இந்தியாவில் 10 இடங்களில் வேலை தேடித்தரும் அமைப்புகள் உருவாக்கப்பட்டுள்ளன. அவையாவன: பம்பாய், அகமதாபாத், நாகபுரி, சென்னை, கல்கத்தா, தன்பாத், கான்பூர், டில்லி, லாகூர் மற்றும் கராச்சி.

(ஆ) தற்பொழுது பம்பாய் மற்றும் கல்கத்தா நகரங்களில் ரூ. 1-8-0க்கு குறையாமல் தினக்கூலி வாங்கும் தொழிலாளிகளுக்கும் இதர இடங்களில் 1 ரூபாய் கூலி வாங்கக்கூடிய 1940 ஆம் ஆண்டின் தேசிய சேவை (தொழில்நுட்ப) ஊழியர்கள் அவசரச் சட்டத்தின் கீழ்வரும் தொழில்நுட்பத் தொழிலாளர்களுக்கும் சேவை செய்வதையே இந்த வேலை தேடித்தரும் அமைப்புகள் நோக்கமாகக் கொண்டுள்ளன.

(இ) 1944 டிசம்பர் 31 வரை இந்த வேலை தேடித்தரும் அமைப்புகள் 5,909 தொழிலாளிகளுக்கு வேலை கிடைக்கச் செய்துள்ளன.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 21, 1945, பக்கம் 584.

மற்றொன்றையும் நான் கூற விரும்புகிறேன். 1943ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில்தான் இத்தகைய வேலை தேடித்தரும் அமைப்புகளை உருவாக்குவதென்று தீர்மானிக்கப்பட்டது. அதற்குத் தகுதியான ஊழியர்களையும், தக்க இட வசதிகளையும் பெறுவதில் பெரும் சிரமத்தை எதிர்கொள்ள நேரிட்டது.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** இத்தகைய வேலை தேடித்தரும் அமைப்புகளை இதர வகைப்பட்ட பிரிவினருக்கும் விரிவுபடுத்த அரசாங்கம் திட்டமிடுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். ஐயா.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** எந்த வகைப் பட்ட பிரிவினருக்கு இதை விரிவுபடுத்தத் திட்டமுள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுகுறித்து நாங்கள் எந்த முடிவும் எடுக்கவில்லை.

**திரு. அப்துல் கையூம்:** மொத்தம் மனுச் செய்தவர்களில் எத்தனை சதவீதத்தினருக்கு வேலை தேடித் தரப்பட்டது என்பதை நான் அறியலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வேலை தேவை என்று பதிவு செய்த மொத்தத் தொழிலாளிகளின் எண்ணிக்கை 14,697 ஆகும்; இதில் 5909 பேருக்கு வேலை தேடித் தரப்பட்டது.

**திருமதி ராதா பாய் சுப்பராயன்:** இந்த எண்ணிக்கையில் பெண்களும் அடங்குவார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னுடைய எண்ணிக்கையானது ஆண், பெண் என்று பிரித்துப் பார்ப்பதில்லை.

# 270

## *பெண் சுரங்கத் தொழிலாளர்களின் குழந்தைகளைக் கவனிக்க ஏற்பாடுகள்

436. திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

(அ) சுரங்கத்திற்குள்ளும், அனைத்து சுரங்கப் பகுதிகளின் மேற்பரப்பிலும் வேலை செய்யும் பெண் சுரங்கத் தொழிலாளி களின் கைக்குழந்தைகளையும், பிள்ளைகளையும் கவனிக்கத் திட்ட வட்டமான ஏற்பாடுகள் என்ன செய்யப்பட்டுள்ளன? யாருடைய மேற்பார்வையின்கீழ் இத்தகைய ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன?

(ஆ) சுரங்கத்திற்குள் வேலை செய்யும் பால் கொடுக்கும் பெண்கள் முறையான இடைவெளிகளுக்கிடையே தங்கள் கைக் குழந்தைகளுக்கு பால் கொடுக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள் ளனவா?

(இ) (அ) மற்றும் (ஆ) முறிப்பிடப்பட்டுள்ள ஏற்பாடுகள் மருத்துவ அதிகாரிகளால் அங்கீகரிக்கப்பட்டுள்ளனவா; அவ்வா றானால், அது யாரால்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) எந்தவொரு திட்டவட்டமான ஏற்பாடும் இதுவரை செய்யப்படவில்லை; ஆனால் ஒரு சில சுரங்கங்களில் குழந்தைக் காப்பகங்கள் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன; சில சுரங்கங்களில் குழந்தை மருத்துவமனை கள் உள்ளன. அங்கே சுரங்கத் தொழிலாளர் குழந்தைகளுக்குப் பால் இலவசமாக வழங்கப்படுகிறது. குழந்தைக் காப்பகங்களில் மேலும் வசதிகள் செய்து தருவது குறித்த பிரச்சினையானது தற்பொழுது அரசாங்கத்தின் பரிசீலனையில் உள்ளது.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 21, 1945, பக்கம் 609.

(ஆ) சுரங்கத்திற்குள் குழந்தைகள் அனுமதிக்கப்படுவதில்லை; எனவே சுரங்கத்திற்குள் விசேட வசதிகள் தேவையில்லை. பிரசவித்த ஒரு மாத காலத்திற்கு தாய்மார்கள் சுரங்கத்திற்குள் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. வெளியே வந்து குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் தாய் மார்களுக்கு என்ன வசதி செய்து கொடுக்கப்பட்டுள்ளது என்ற விபரம் கேட்கப்பட்டுள்ளது.

(இ) இல்லை.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** இந்தப் பிரச்சினையை அரசாங்கம் ஆராயும்வரை, ஏற்பாடுகள் செய்யப்படாத சுரங்கங்களில் நிலத்துக்கடியில் பெண்கள் வேலை செய்வதை அரசாங்கம் தடுக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்வி புரியவில்லை.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** குழந்தைகள் கவனிப்பிற்கு முறையான ஏற்பாடுகளைச் செய்யவும், தங்களுடைய கைக் குழந்தைகளுக்கு பால் கொடுக்க சுரங்கத்தின் மேல் பகுதிக்கு வர பெண்களுக்கு வசதி செய்து தரவும் அரசாங்கம் திட்டவட்டமான நடவடிக்கைகள் எடுக்குமா? ஒரு மாதம் ஆன பின்னும் கூட கைக் குழந்தைகளுக்கு நிச்சயம் பால் கொடுக்க வேண்டியது அவசியம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பிரச்சினை எத்தகையது என்பதைப் புரியும் வரை நான் எந்த முடிவுக்கும் வர இயலாது. விபரங்கள் கேட்டிருக்கிறேன்.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** இந்தப் பிரச்சினையானது மிகக் கடுமையான ஒன்று என்று மாண்புமிகு உறுப்பினரே ஒத்துக் கொண்டிருப்பதால் இந்தப் பிரச்சினையை ஆராய்ந்து முடிவெடுக்கும் வரை நிலத்துக்கடியில் பெண்கள் வேலை செய்வதை அரசாங்கம் தடை செய்யுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கைக் குழந்தைகளுக்கு பால் தரும் பெண்கள் நிலத்துக்கடியில் பலர் இருக்கிறார்களா என எனக்குத் தெரியாது.

திரு. மனு சுபேதார்: மாண்புமிகு உறுப்பினர் குறிப்பிட்ட குழந்தை காப்பகங்களோ அல்லது இதர வசதிகளோ இல்லாத சுரங்கங்களில் பெண்கள் நிலத்தடியில் வேலை செய்வதை அவர் நிறுத்தி வைப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஒவ்வொரு சுரங்கத்திற்கும் குழந்தைக் காப்பகங்கள் உருவாக்கிட நான் நடவடிக்கை எடுத்து வருகிறேன்.

திரு. மனு சுபேதார்: அதுவரை பெண்கள் வேலை செய்வதை மாண்புமிகு உறுப்பினர் நிறுத்தி வைப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அதுதான் ஒரே மாற்று என்றால் அந்த யோசனையும் பரிசீலிக்கப்படலாம்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: தாய்ப்பால் குடிக்கும் குழந்தைகளைக் கொண்டுள்ள பெண்கள் நிலத்தடியில் வேலை செய்வது சரியானதுதானா என்பது சம்பந்தமான இந்தக் கேள்வியின் (இ) பகுதி சம்பந்தப்பட்டமட்டில் அகில இந்திய மருத்துவக் கவுன்சிலுடன் அரசாங்கம் ஆலோசனை செய்யுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயத்தில் அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறும் பொறுப்பை அவர்கள் ஏற்பார்களா என்பது எனக்குத் தெரியாது.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: அவர்களது ஆலோசனையைக் கேட்க அரசாங்கம் விரும்புகிறதா, அவர்கள் அதை அளிக்க தயாராகயிருக்கிறார்களா இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது, ஆலோசனை அத்தியாவசியமாகத் தேவைப்படும் பிரச்சினை என்று நான் கருதவில்லை.

திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்: இந்த விஷயத்தில் சர்வதேசத் தொழிலாளர் மாநாடு தன்னுடைய கடைசிக் கூட்டத் தொடரின்போது சில ஆலோசனைகள் கூறியுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தற்பொழுது என்னிடம் எந்த விபரமும் இல்லை.

**திருமதி ரேணுகா ரே:** பார்வையாளர்கள் சுற்றிப் பார்க்க அழைத்து வரப்படும்போதும், முன்கூட்டியே ஏற்பாடு செய்யப் பட்டபடி அரசாங்க ஆய்வாளர்கள் சுற்றிப் பார்க்கச் செல்லும் போதும் மட்டும் பெரும்பாலான சுரங்கங்களில் உள்ள குழந்தைக் காப்பகங்கள் தீவிரமாகச் செயல்படுவது உண்மையா? அண்டைப் பகுதிகளில் வசிக்கும் சுரங்கத் தொழிலாளிகளின் குழந்தைகள் சில சமயங்களில் இந்தக் குழந்தைக் காப்பகங்களில் அனுமதிக்கப்படுவ தில்லை என்பது உண்மையா? மிக அபூர்வமாக பெயரளவுக்கு குழந்தைக் காப்பகம் இருக்கும் சுரங்கங்களில் கூட பெரும்பாலான வற்றில் போதுமான வசதிகள் இல்லை என்பதும் உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய இந்த உறுப்பினர் போய் பார்க்காமலே குழந்தைக் காப்பகங்கள் இல்லை என்று எவ்வாறு கூறுகிறார் என எனக்குத் தெரியவில்லை.

**திரு. என்.எம். ஜோஷி:** மதிப்பிற்குரிய உறுப்பினர் சுரங்கப் பகுதிகளுக்குப் போயிருக்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நானும் போயிருக் கிறேன்.

# 271

## *சுரங்கப் பகுதிகளில் மகப்பேறு நல வசதிகளை அமுலாக்குவதற்கான நடவடிக்கைகள்

437. **திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

(அ) பெண் சுரங்கத் தொழிலாளிகள் படிப்பறிவில்லாத வர்களாகவும், தங்கள் உரிமைகளை அறியாதவர்களாகவும் இருப்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 21, 1945, பக்கம் 610-11.

பதால் சுரங்கப் பகுதிகளில் மகப்பேறு வசதிகள் சட்டத்தின் விதிகளை அமல்படுத்த அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளது?

(ஆ) 1941 ஆம் ஆண்டில் அது இயற்றப்பட்டதிலிருந்து இந்தச் சட்டம் பயன்படுத்தப்பட்டது குறித்து அரசாங்கத்திடம் அறிக்கை எதுவும் உள்ளதா?

(இ) குழந்தை பிறப்பதற்கு முன்னும் குழந்தை பிறந்த பின்னும் நான்கு வார ஓய்வென்பது பெண் சுரங்கத் தொழிலாளிகளுக்குப் போதுமான நிவாரணம் அளிப்பதற்கும் அவர்களுடைய ஆரோக்கியத்திற்குப் பாதிப்பை தவிர்ப்பதற்கும் போதுமானதல்ல என்பது நிரூபிக்கப்படவில்லையா?

(ஈ) (இ) பகுதியில் குறிப்பிடும் பிரச்சினை மீது மருத்துவர் கருத்தை அரசாங்கம் பெற்றதா? அவ்வாறானால் அதனுடைய பிரதி ஒன்றை அரசாங்கம் அவையில் வைக்குமா? இல்லையென்றால் இத்தகைய ஆலோசனையைப் பெறுவதற்கு நடவடிக்கைகள் எடுக்க அரசாங்கம் திட்டமிட்டுள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இந்தியாவின் பிரதம சுரங்க ஆய்வாளரின் கீழ் தகுதிவாய்ந்த மருத்துவர்களான ஒரு முதுநிலைத் தொழிலாளர் ஆய்வாளரும், இரண்டு கீழ்நிலைத் தொழிலாளர் ஆய்வாளர்களும் நியமிக்கப்பட்டுள்ளனர்.

(ஆ) இந்தச் சட்டம் செயல்படும்விதம் குறித்து அரசாங்கத்திற்கு எவ்வித அறிக்கையும் வரவில்லை என்ற போதிலும் பிரதம சுரங்க ஆய்வாளரின் கீழுள்ள ஆய்வாளர்கள் அவருக்கு முறையாக அறிக்கைகள் அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள் என்பதுடன், சுரங்கத் துறை தக்க நடவடிக்கை எடுத்து வருகிறது.

(இ) மற்றும் (ஈ) பெண்கள் சம்பந்தமாக பிரசவத்திற்கு முன்னும் பின்னும் நான்கு வார காலம் தருவதென்பது தொழிற்சாலை சட்டத்தின் இதேபோன்ற விதிகளுக்கேற்ப உள்ளது. நிலத்தடியில் வேலை செய்யும் பெண்கள் சம்பந்தப்பட்ட மட்டில்

பிரசவத்திற்கு முன்பு அவர்களுக்குக் கூடுதல் விடுமுறை தரும் பிரச்சினை பரிசீலனையில் உள்ளது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** பிரசவத்திற்குப் பிந்தைய நிலை என்ன? பிரசவத்திற்குப் பிந்தைய காலத்தை அதிகரிப்பதற்கான சாத்தியக்கூறை அரசாங்கம் ஆராயுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது தேவையில்லை. பிரசவித்த பெண்கள் வேலை செய்வதற்கு முழுத் தடையுள்ளது.

**திருமதி ரேணுகா ரே:** நிலத்துக்கடியில் பெண்கள் வேலை செய்யக்கூடாது என்று விதிக்கப்பட்ட தடை நீக்கப்பட்டு விட்டதால் சில சுரங்கங்களில் குழந்தைகள் நிலத்தடியில் பிறந்துள்ளது குறித்து மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னிடம் எவ்விதத் தகவலுமில்லை.

**திருமதி ரேணுகா ரே:** இத்தகைய சம்பவங்கள் மீண்டும் நிகழா வண்ணம் உரிய நடவடிக்கையை மாண்புமிகு உறுப்பினர் அன்புகூர்ந்து எடுப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் திட்டவட்டமான சம்பவங்களைக் கூறுவாரானால் நிச்சயம் விசாரிக்கிறேன்.

**திருமதி ரேணுகா ரே:** அதைச் செய்யத் தயாராக உள்ளேன்.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** இந்தப் பிரச்சினை மீது முடிவெடுப்பதற்கு முன்னர், இந்த முக்கியமான பிரச்சினை குறித்து ஒரு தகுதி வாய்ந்த மருத்துவ அதிகாரியின் கருத்தை அரசாங்கம் கேட்கும் என்ற உத்தரவாதத்தை நான் கேட்கலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தேவை என்று கருதினால் அது இருக்கும்.

*திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:* மகப்பேறு நல உதவி சட்டத்தின் கீழ் பிரசவத்திற்கு முன்பும் பின்பும் இரண்டு மாத காலம் இருக்க வேண்டுமென்று சர்வதேசத் தொழிலாளர் மாநாடு தன்னுடைய கடைசிக் கூட்டத்தில் பரிந்துரை செய் திருப்பது உண்மையில்லையா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* என்னிடம் எவ்வித விபரமும் இல்லை. அதை என்னால் நினைவுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

*திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:* அரசாங்கம் எங்களுக்கு வினியோகித்த அறிக்கையில் அது குறிப்பிடப்பட்டுள்ளது என்று நினைக்கிறேன்.

*திருமதி ரேணுகா ரே:* பெண்கள் நிலத்துக்கடியில் வேலை செய்வதைத் தடுக்கும் சர்வதேச மரபை தான் புறக்கணிப்பது நியாய மானது என்று மாண்புமிகு உறுப்பினர் கருதுவதால், சர்வதேச தொழிலாளர் மாநாடு உருவாக்கிய மகப்பேறு நல உதவி விதி களை ஆராய்வதும் அவசியமற்றது என அவர் கருதுகிறாரா என்பதையும் நான் அறிய விரும்புகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அந்த விஷயத்தை நாங்கள் பரிசீலித்து வருகிறோம்.

# 272

## *பழம்பாணி மற்றும் புதுபாணி குடியிருப்பு களுக்கிடையிலான தாரதம்மியத்தை ஒழித்தல்

*451. திரு. எச்.ஏ. சத்தார் எச். எஸ்சாக் சேட்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

*(அ) 1945* ஜனவரி 25ந் தேதிய தொழிலாளர் நலத்துறை அறிவிக்கையில் கூறப்பட்டுள்ளபடி ''பழம்பாணி'' மற்றும் ''புது

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 21, 1945, பக்கம் 618.

*பாணி'' வகைப்பட்ட குடியிருப்புகளுக்கிடையிலான தாரதம்மியத்தை ஒழிப்பது குறித்த முடிவிற்கான காரணங்கள் யாவை?*

*(ஆ) (1) இத்தகைய குடியிருப்புகளில் தற்பொழுது வசிப்பவர்கள் மற்றும் (2) எதிர்காலத்தில் இத்தகைய குடியிருப்புகள் பெறத் தகுதியானவர்கள் மீது இந்த முடிவின் விளைவுகள் யாவை?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) இதுவரை அமலில் இருந்த ஒதுக்கீட்டு விதிகளின்படி குடியிருப்புகள் கோரும் மனுதாரர்கள் ''பழம்பாணி'' மற்றும் ''புதுபாணி'' குடியிருப்பிற்கு விண்ணப்பிக்கலாம்; ஒரு வகைப்பட்ட குடியிருப்புக்கு விண்ணப்பிப்பவர்கள் மற்றொரு வகைப்பட்ட குடியிருப்புக்கு தகுதியற்றவர்கள் ஆவர். குடியிருப்புகளில் தற்பொழுது பற்றாக்குறை இருப்பதால் மேலே சொல்லப்பட்ட விதிகள் பெரும்பாலும் இத்தகைய வகைப்பட்ட குடியிருப்புகளுக்கு தகுதியான அதிகாரிகளுக்குச் சாதகமற்றதாகப் போய்விடுகிறது; ஒரு விண்ணப்பதாரருக்கு அவர் கோரிய வகைப்பட்ட குடியிருப்பு கிடைக்கவில்லையென்றால் அவர் எவ்வித குடியிருப்பும் கிடைக்காமலே போக வேண்டிய நிலை ஏற்படுகிறது; அவர் வேறொரு வகைப்பட்ட குடியிருப்பிற்கு திட்டவட்டமாக விண்ணப்பித்திருந்தால் அவருக்கு குடியிருப்பு கிடைத்திருக்கக் கூடும்.*

*மேலும், இவ்விரு வகைப்பட்ட குடியிருப்புகளுக்கிடையே உள்ள தாரதம்மியத்தைப் பராமரிப்பது வீட்டு வசதித்துறை அதிகாரிகளுக்கு கூடுதல் வேலையாகும்; ஏனென்றால் இவ்விரு வகைப்பட்ட குடியிருப்பு ஒதுக்கீடுகளைத் தனித்தனியாக வைக்க வேண்டும். மேலும், பழம்பாணி மற்றும் புதுபாணி குடியிருப்புகளிடையிலான தாரதம்மியத்தைப் பராமரிப்பதும், பழமையான அல்லது வேறு வகையிலான அடிப்படையில் குடியிருப்புகளை ஒதுக்குவதும் காலத்திற்கு ஒவ்வாததாகும்.*

*(ஆ) (1) ஒன்றுமில்லை.*

*(2) 1945 ஜனவரி 25ந் தேதிய முடிவானது 1945 பிப்ரவரி 15ந் தேதியன்று சற்று மாற்றியமைக்கப்பட்டுள்ளது. 'ஏ', 'பி', 'சி' மற்றும் 'டி' வகைப்பட்ட குடியிருப்புகளுக்குத் தகுதி பெற்றவர்கள் இவ்விரு வகைப்பட்ட குடியிருப்புகளுக்கும் விண்ணப்பிக்க தகுதி பெற்றவர்கள் ஆவர்.*

# 273

## *சுரங்கங்களில் பெண் தொழிலாளிகள் மரணம்

*453. திரு. கே.எஸ். குப்தா:* (அ) 1942, 1943 மற்றும் 1944 ஆம் ஆண்டுகளில் (அ) நோய்கள் மற்றும் (ஆ) விபத்துக்கள் காரணமாக இந்தியச் சுரங்கங்களில் (நிலக்கரிச் சுரங்கங்கள் உள்ளிட்டு) மரணமடைந்த பெண் தொழிலாளிகளின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) ஆண் தொழிலாளிகளுக்குத் தரப்படும் சம்பளம், உணவுப் பொருட்கள் மற்றும் வாழ்வின் இதர அத்தியாவசியப் பொருட்களின் விலை உயர்வுக்கு ஏற்றாற்போல் இல்லையென்பதால் நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்ய ஆண் தொழிலாளிகள் கிடைக்கவில்லை என்பது உண்மையா?

(இ) நிலத்துக்கடியில் பெண்கள் வேலை செய்வதை அரசாங்கம் தடை செய்து இதர ஒவ்வொரு நாகரிக நாட்டிலும் உள்ளது போன்று பெண்மையின் கண்ணியத்தைக் காத்திடும் பொருட்டு ஆண் தொழிலாளிகளைச் சுரங்க வேலைக்கு ஈர்த்திட அவர்களுக்கு நல்ல ஊதியத்தையும், உணவுப் பொருட்கள் வினியோகம் மற்றும் வீட்டு வசதி போன்ற வாழ்வின் விசேட வசதிகளையும் அளிக்க சுரங்க உரிமையாளர்களிடமோ அல்லது இந்திய அரசாங்கத்திடமோ ஏதாவது முயற்சி உள்ளதா?

(ஈ) நிலத்தடியில் மிகக் கடுமையாகவும் மிகச் சிரமத்துடனும் பெண்கள் வேலை செய்ய வேண்டியிருப்பதால் பெண்களின் தாய்ப்பால் தானாகவே வறண்டு போவதால் அந்தத் தாய்மார்கள் சுரங்கப் பகுதிகளில் பால் தர இயலாததால் கைக் குழந்தை சாவு மிக அதிகமாக இருப்பது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1945, பிப்ரவரி 21, பக்கம் 620.

*(உ) சுரங்கப் பகுதிகளிலுள்ள தொழிலாளிகளுக்குச் சுத்த மான பால் கிடைப்பதில்லை என்பது உண்மையா?*

*(ஊ) பல்வேறு சுரங்கப் பகுதிகளிலுள்ள குறைந்தபட்சம் ஒரு வயதிற்கு உட்பட்ட குழந்தைகளுக்கு இலவசமாகப் பால் வழங்க சுரங்க முதலாளிகளோ அல்லது அரசாங்கமோ ஏதாவது முயற்சிகள் செய்துள்ளதா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) இந்தியா வில் அனைத்துச் சுரங்கங்களிலும் மேற்பரப்பிலும் நிலத்தடியிலும் விபத்துக்களால் இறந்த பெண் தொழிலாளிகளின் எண்ணிக்கை 1942, 1943 மற்றும் 1944 ஆம் வருடங்களில் முறையே 9, 11 மற்றும் 53 ஆகும். நோய்வாய்ப்பட்டதால் இறந்தவர்கள் எண்ணிக்கை கிடைக்கவில்லை.*

*(ஆ) இல்லை.*

*(இ) ஆம். ஊதியங்கள், சேம நல வசதிகள் சம்பந்தமாக பின்வரும் மேம்பாடுகள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன:*

*(1) மானியத்தில் உணவுப் பொருட்கள் மற்றும் தானியக் கடைகள் ஏற்பாடு;*

*(2) மலேரியாவைக் கட்டுப்படுத்துதல் உள்ளிட்டு மேம் பட்ட ஆரோக்கிய நடவடிக்கைகள் மற்றும் மருத்துவமனைகள் கட்ட அதிக நிதி ஒதுக்கல்;*

*(3) வாங்கும் பொருட்டு போதுமான தரங்களில் நுகர்வுப் பொருட்கள் ஏற்பாடு செய்தல்;*

*(4) வேலை செய்யுமிடத்திற்கு போக்குவரத்து வசதி;*

*(5) ரயில்வே சுரங்கங்களில், ஒப்பந்தக்காரர்கள், தொழி லாளிகளை ஈர்க்கும் விதத்தில் கூடுதல் ஊதியம் தரும் பொருட்டு அந்தச் சுரங்கங்களில் நிலக்கரி எடுப்பதற்கான கட்டண விகிதங் களை அதிகரித்தல்; மற்றும்*

*(6) சுரங்கத் தொழிலாளிகளுக்கு ஊதியங்களை அதிகரிப்பது குறித்து அரசாங்கத்திற்கும், சுரங்க முதலாளிகளுக்குமிடையில் ஒப் பந்தம்.*

(ஈ) சுரங்கப் பகுதிகளில் பால் கிடைக்காததால் பச்சிளங் குழந்தைகள் மரணம் மிக அதிகமாக இருப்பதாகக் கூற முடியாது. நிலக்கரிச் சுரங்கங்களில் பச்சிளங் குழந்தை சாவு விகிதம், அகில இந்திய எண்ணிக்கையை விடக் குறைவு.

(உ) சுரங்கப் பகுதிகளில் சுத்தமான பால் கிடைக்கிறது. பால் அடிக்கடி ஆரோக்கிய அமைப்புகளின் ஆய்வாளர்களால் பரிசோதிக் கப்பட்டு கலப்படம் செய்திருப்பது கண்டுபிடிக்கப்பட்டால் நட வடிக்கை எடுக்கப்படுகிறது.

(ஊ) இல்லை. சுரங்கப் பகுதிகளில் பெண்கள் மற்றும் குழந் தைகளின் ஆரோக்கியத்தை மேம்படுத்துவது சம்பந்தமாக மேலும் உள்ள சாத்தியப்பாடுகளை அரசாங்கம் பரிசீலித்து வருகிறது.

# 274

## *சுரங்கங்களில் நிலத்தடியில் வேலை செய்யும் பெண் தொழிலாளிகள்

454. திரு. கே.எஸ். குப்தா: (அ) 1942, 1943 மற்றும் 1944 ஆம் ஆண்டுகளில் நிலத்தடியில் வேலை செய்யும் பெண் தொழிலாளர் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தருவாரா?

(ஆ) நிலத்தடியில் வேலை செய்யும் பெண்களின் எண் ணிக்கையைக் குறைக்க ஏதாவது முயற்சியுண்டா? இல்லையென் றால், ஏன் இல்லை?

(இ) சில சுரங்கங்களில் தாய்மைப் பேற்றின் கடைசிக் கட்டத் திலுள்ள பெண்கள் வேலை செய்ய அனுமதிக்கப்படுவதாலும் அல்லது வேலை செய்யும்படி நிர்ப்பந்திக்கப்படுவதாலும் நிலத்துக் கடியிலேயே குழந்தைகள் பிறந்திருப்பது உண்மையா? அத்தகைய தொரு அறிக்கை எதுவும் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டுள்ளதா? அவ்வாறானால், அத்தகையதொரு தவறான பழக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1945, பிப்ரவரி 21, பக்கம் 621.

*(ஈ) நிலத்தடியில் வேலை செய்யும் கருவுற்ற பெண்கள் ஏழு மாதத்தைப் பூர்த்தி செய்தபின் அவர்கள் வேலை செய்யக்கூடாது என்று கண்டிப்பான உத்தரவு போடும் பிரச்சினையை அரசாங்கம் ஆராயுமா? இல்லையெனில் ஏன் இல்லை?*

*(உ) பெண் தொழிலாளிகளுக்கு வழங்கப்படும் பிரசவகால வசதிகள் பெயரளவுக்கு மட்டுமே என்பதையும், அவர்களுக்கு மேல் உள்ள அதிகாரிகளுக்கு பல புகார்கள் செய்யப்பட்டு உள்ளதென் பதையும், அவர்கள் அதை சம்பந்தப்பட்ட உயர் அதிகாரிகளுக்கு அனுப்ப அக்கறை எடுக்கவில்லை என்பதையும் அரசாங்கம் அறியுமா?*

*(ஊ) மாண்புமிகு உறுப்பினர் இதுகுறித்து விசாரணை செய்து குறைகளைக் களைய திட்டம் வைத்துள்ளாரா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) 1942 - இல்லை; 1943 - சுமார் 7,000; 1944 - 16,000.*

*(ஆ) ஆம். நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்கள் நிலத்துக்கடியில் வேலை செய்வது குறித்து விதிக்கப்பட்ட தடையை மீண்டும் அமல்படுத்துவதை அரசாங்கத்திற்கு சாத்தியமாக்கும் பொருட்டு அத்தகைய நிலைமைகளை மீண்டும் ஏற்படுத்துவதை துரிதப் படுத்துவதற்காக ஒவ்வொரு முயற்சியும் செய்யப்படுகிறது. இதர சுரங்கங்களில் இந்தத் தடை ஏற்கனவே உள்ளது.*

*(இ) இல்லை. எனக்குத் தெரிந்தவரை சுரங்கங்களில் நிலத் துக்கடியில் எந்தக் குழந்தையும் பிறக்கவில்லை. அத்தகைய தகவல் கள் எதுவும் வரவில்லை. கேள்வியின் கடைசிப் பகுதி எழாது.*

*(ஈ) இந்த அடிப்படையில் ஒரு திட்டம் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது.*

*(உ) தாய்மை நலன் சட்டத்தை அமல்படுத்துவதற்காக சுரங்கங்களின் பிரதம ஆய்வாளருக்குக் கீழ் ஒரு முதுநிலைத் தொழி லாளர் நல ஆய்வாளரும், இரண்டு இளநிலை தொழிலாளர் நல ஆய்வாளர்களும் உள்ளனர்; இந்தச் சட்டத்தின் விதிகள்படி நடப் பதைக் கண்காணிப்பதற்காக ஒவ்வொரு முயற்சியும் செய்யப்படுகிறது.*

*(ஊ) இல்லை.*

# 275

## *கோரக்பூர் தொழிலாளிகளை நிலக்கரிச் சுரங்கங்களில் வேலைக்கு எடுப்பதற்கான திட்டம்

*464. திரு. கே.சி. நியோகி: (அ)* கோரக்பூர் தொழிலாளிகளை வேலைக்குத் தேர்வு செய்து நிலக்கரி சுரங்கங்களில் அவர்களுக்கு வேலை வாய்ப்பு தரும் திட்டத்தை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் விரிவாக விளக்குவாரா?

(ஆ) இந்தத் திட்டத்தின் கீழ் இதுவரை எடுக்கப்பட்டுள்ள மொத்தத் தொழிலாளர் எண்ணிக்கை எவ்வளவு? இதுவரை செல விடப்பட்ட மொத்தத் தொகை எவ்வளவு? இந்தத் தொழிலாளி கள் வேலைக்கு வைக்கப்பட்டுள்ள சுரங்கங்களிலிருந்து எவ்வளவு தொகை திரும்பப் பெறப்பட்டுள்ளது? அல்லது அவர்களை வேலைக்கு வைக்க விரும்பும் சுரங்கங்களிலிருந்து எவ்வளவு திரும்பக் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது?

(இ) இந்தத் தொழிலாளிகளுக்கு எத்தகைய ஊதிய விகிதங் களும், வசதிகளும் கிடைக்கும்? நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்யும் இதர தொழிலாளிகளின் சராசரி நிபந்தனை விதிகளுடன் அவை எவ்வாறு ஒப்பிடப்படுகின்றன? மற்றும் அவர்களுடைய வேலைத் திறமை, பொதுவான திறமை, அவர்கள் வெவ்வேறு சுரங்கங்களில் நிலக்கரி வெட்டி எடுக்கும் திறன் போன்றவை குறித்து ஏதாவது அறிக்கைகள் பெறப்பட்டுள்ளனவா?

(ஈ) இந்தத் திட்டத்தின் செயல்பாட்டுக்கு நேரடிப் பொறுப் பான அதிகாரிகளின் பெயர்கள் என்ன? அவரவர்களுடைய பொறுப்புக்கள் யாவை? இந்த வேலையில் அவர்களுடைய தகுதி கள் மற்றும் அனுபவம் யாவை? என்ன ஊதியத்தை அவர்கள் பெறுகிறார்கள்?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1945, பிப்ரவரி 21, பக்கம் 629.

*(உ) இதற்குத் தேவைப்படும் நிதி துவக்கத்தில் எங்கிருந்து பெறப்பட்டது? இந்தத் திட்டம் சம்பந்தப்பட்ட கணக்குகள் தலைமை தணிக்கை அதிகாரியின் கட்டுப்பாட்டிற்குக் கீழ் முறை யாக தணிக்கை செய்யப்படுகிறதா? இந்தக் கணக்குகள் தணிக்கை எந்தக் காலகட்டம் வரை முடிக்கப்பட்டுள்ளது? கணக்குகள் தணிக்கை செய்யப்பட்டதன் விளைவாக ஏதாவது நிதி முறைகேடு அல்லது கணக்கு முறைகேடு வெளிவந்துள்ளதா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) ஐக்கிய மாகாணத்தில் கோரக்பூர் தொழிலாளர் வழங்கல் நிறுவனம், பல்வேறு அரசாங்க வேலைகளுக்கும் அதைப் போன்றே நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்வதற்கும் தொழிலாளிகளை எடுக் கிறது. பின்வரும் மேற்பார்வை ஊழியர்களின் கீழ் குழுக்களாக அது அணிதிரட்டப்படுகிறது:*

*50 பேர்களைக் கொண்ட ஒவ்வொரு குழுவிற்கும் ஒரு சர்தார்.*

*250 பேர்களைக் கொண்ட ஒவ்வொரு பிரிவிற்கும் ஒரு யூனிட் மேற்பார்வையாளர்.*

*1000 பேர்களைக் கொண்ட ஒவ்வொரு முகாமிற்கும் ஒரு முகாம் மேற்பார்வையாளர்.*

*ஸ்தலத்திற்கேற்றவாறு ஒன்றோ அல்லது அதற்கு மேற் பட்ட முகாம்களிலோ உள்ள நபர்களுக்குப் பொறுப்பாக ஒரு பிரிவு அதிகாரி.*

*இந்தத் தொழிலாளர் முகாம்களுக்கு நேரடி பொறுப்பான அதிகாரி, தன்பாத்தை தலைமையகமாகக் கொண்ட தொழிலாளர் வழங்கல் (நிலக்கரி) உதவி இயக்குனராவார்.*

*இந்தத் தொழிலாளிகள் வேலை ஸ்தலத்தில் ஆறுமாதம் அல்லது ஒரு வருடம் வேலை செய்வதற்காக அல்லது இனியும் தேவையில்லை என்ற கால அளவுக்கு, எது குறைவானதோ அதுவரை வேலை செய்வதற்காக எடுக்கப்படுகிறார்கள். ஒவ்வொரு தொழி லாளிக்கும் கனமான உடை இரண்டும், போர்வையும் கொடுக்கப் படுகின்றன; துவக்கச் செலவுகளுக்காக முன்பணம் கொடுக்கப்படு*

*கிறது; இலவசக் குடியிருப்பும், மருத்துவ வசதி, சமையல் எரிவாயு மற்றும் உணவு தானியங்கள் அளிக்கப்படுகின்றன. நன்றாக வேலை செய்ததற்காகவும், நீண்ட காலம் சேவை செய்ததற்காகவும் போனஸ் அளிக்கப்படுவதுடன் கூடவே அவர் செய்த வேலைக்கு நிர்ணயிக்கப்பட்ட விகிதத்தில் ஊதியம் அளிக்கப்படுகிறது.*

*(ஆ) சுரங்கங்களில் வேலை செய்வதற்காக இதுவரை எடுக்கப்பட்டுள்ள மொத்தத் தொழிலாளிகளின் எண்ணிக்கை 33,500. தற்பொழுது வேலை செய்வோர் எண்ணிக்கை 15,000.*

*செலவிடப்பட்ட மொத்தத் தொகை 1945 ஜனவரி முடிய ரூ. 74,16,584.*

## திரும்பப் பெறப்பட்டவை

| | | |
|---|---|---|
| *1945 ஜனவரி மத்தி வரை மொத்தம் வரவேண்டியது* | ... | *14 1/2 லட்சம்* |
| *உண்மையில் பெறப்பட்டது* | ... | *5 லட்சம்* |

*(இ) கோரக்பூர் தொழிலாளிகள் சுரங்கப் பகுதிகளில் வேலை செய்யும்பொழுது பின்வரும் ஊதியங்களையும், இதர வசதிகளையும் பெறத் தகுதியானவர்கள்:*

| | | |
|---|---|---|
| *அடிப்படைச் சம்பளம் தினமொன்றுக்கு* | ... | *12 அணாக்கள்* |
| *தினமொன்றுக்கு உற்பத்தி போனஸ்* | ... | *4 அணாக்கள்* |
| *நிலத்துக்கடியில் வேலை செய்ய கூடுதல் அலவன்ஸ்* | ... | *தினமொன்றுக்கு 4 அணாக்கள்* |

*இதுதவிர, ஒரு முழு உணவுக்கான உணவுப் பொருள்கள் தொழிலாளிக்கு இலவசமாகக் கிடைக்கும்; அதன் உத்தேச மதிப்பு தினமும் 14 அணாக்கள் ஆகும். தொழிலாளிகளுக்கு இலவசக் குடியிருப்பு மற்றும் இலவச மருத்துவ சிகிச்சை கிடைக்கும்.*

*மொத்தத்தில் உள்ளூர் தொழிலாளிகளை விட கோரக்பூர் தொழிலாளிகள் நல்ல ஊதிய மற்றும் வேலை நிலைமைகளைப் பெற்றுள்ளனர்.*

உள்ளூர் சுரங்கத் தொழிலாளிகளுக்குக் கிடைப்பவை:

(1) யுத்தத்திற்கு முந்தைய ஸ்தல சம்பள விகிதங்களை விட 50 சதவீதம் அதிகமாக பண ஊதியம் - யுத்தத்திற்கு முந்தைய சம்பள விகிதங்கள் எனப்படுபவை மேற்பரப்பில் வேலைபார்க்கும் சராசரி தொழிலாளிக்கு தினமொன்றுக்கு 8 அணாவும், நிலத்தடியில் வேலை செய்ய ஒருவருக்கு 14 அணாவும் என்றளவில் இருந்தன.

(2) உணவுச் சலுகைகள் பின்வருமாறு:

வேலை செய்யும் நாளொன்றுக்கு 1/2 சேர் அரிசி இலவசம்.

ஒரு ரூபாய்க்கு 6 சேர் வீதம் தேவையான அளவுக்கு பருப்பு வினியோகிக்கப்படும்.

தொழிலாளிக்கு மேற்கொண்டு தேவைப்படும் அரிசி மற்றும் பருப்பு கட்டுப்பாட்டு விலையில் விற்கப்படும்.

தற்பொழுதைய சலுகை விலையின் நோக்கமானது சுரங்கத் தொழிலாளிக்கு மட்டும் சலுகை விலையில் முழு ரேஷன் வழங்கீடு செய்து, அவருடைய குடும்பத்திற்கு கட்டுப்பாட்டு விலையில் அவரைப் பணம் கொடுத்து வாங்கச் செய்ய வேண்டுமென்பதுதான். இத்தகைய சலுகைகள் கடந்த மே மாதத்தில் அறிமுகப்படுத்தப் பட்டன; ஆனால் முன்பு தொழிலாளர் குடும்பங்களுக்கு அளிக்கப் பட்ட சலுகைகள் என்பவை அதிகளவு தானியங்கள் அளிப்பவை யாகவே இருந்தன. அதற்குப் பதிலாக தொழிலாளிக்கு தற்பொழுது, அவர் திருமணமாகாதவராக இருந்தால் இரண்டணாவும், திருமண மாகி பிள்ளைகளுடன் இருந்தால் ஐந்து அணாவும் கூடுதலாக பணம் கொடுக்கப்படுகிறது.

முகாம்கள் அமைப்பது, நிலக்கரி எடுக்கும் திட்டங்களில் கூடுதல் சுமைகளைக் குறைப்பது, நிலக்கரியை ரயில் வேகனுக்குள் ஏற்றுவது, அதைப் போன்று நிலக்கரியை வெட்டி எடுப்பது போன்ற பல்வேறு வகைப்பட்ட வேலைகளைச் செய்வதற்கு கோரக்பூர் தொழிலாளிகள் ஏற்றவர்களா யிருக்கிறார்கள் என்பதை நிலக்கரிச் சுரங்க உரிமையாளர்கள் உள்ளிட்ட பல்வேறு தரப்புகளிலிருந்து வந்துள்ள தகவல்கள் காட்டுகின்றன. அந்தத் தொழிலாளிகள்

ஒழுங்காக வேலைக்கு வருகிறார்கள் என்றும், முறையான மேற்பார்வையின்கீழ் அவர்களுடைய உற்பத்தி இதர வேறு எந்த தொழிலாளர்களையும் போலுள்ளது என்றும் தகவல்கள் வந்துள்ளன.

(ஈ) (1) திரு. வால்ஸ் - துணை இயக்குனர்,
தொழிலாளர் வழங்கீடு (நிலக்கரி)
மாதச் சம்பளம் ரூ. 1925/-

(2) திரு. மோரிஸ் - உதவி இயக்குனர்
நிலக்கரி (உற்பத்தி)
மாதச் சம்பளம் ரூ. 1215.

திரு. வால்ஸ், ரேஷன்கள், சம்பளம், குடியிருப்பு மற்றும் சேமநலம் உள்ளிட்ட கோரக்பூர் தொழிலாளிகள் சம்பந்தப்பட்ட அனைத்து விஷயங்களுக்கும் முழுப் பொறுப்பாளர். அவருக்கு 12 ஆண்டுகள் தொழிற்கூட அனுபவம், ராணுவ அதிகாரியாக நிர்வாகத் துறையில் மூன்றாண்டுகள் அனுபவம், எண் 3, இந்திய ரிசர்வ் தளத்தில் தொழிலாளர் நல அதிகாரியாக 10 மாதங்கள் அனுபவம் உள்ளவர்; அங்கே அவர் கோரக்பூர் தொழிலாளிகளின் ஆரம்ப அமைப்பை ஒரு மத்தியப்படுத்தப்பட்ட சக்தியாக உருவாக்குவதற்குப் பொறுப்பாக இருந்தார்.

திரு. மோரிஸ், வேலை ஸ்தலத்திலுள்ள தொழிலாளிகளுக்கும், உற்பத்திக்கு வேண்டிய கருவிகள் வழங்குவதற்கும் மற்றும் போக்குவரத்திற்கும் பொறுப்பானவராக உள்ளார். அவர் கடந்த 25 ஆண்டுகளில் இந்தியாவிலும், பர்மாவிலும் பல்வேறு வகைப்பட்ட தொழிலாளிகளை வேலைவாங்கியுள்ளார். கடந்த இரண்டாண்டுகளில் அவர் முன்னோடிப் பிரிவை உருவாக்கி வழி நடத்தியுள்ளார்.

(உ) துவக்கத்தில் செலவுகள் ''திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய முன்பணம் - சிறப்பு முன்பணம்'' என்ற செலவுக் கணக்கில் எழுதப்பட்டன; சுரங்க உரிமையாளர்களிடமிருந்து திரும்பப் பெறப்பட்ட பணம் ''XXXVI- நானாவிதத் துறைகள்'' என்ற தலைப்பில் வரவு வைக்கப்பட்டன. செலவிடப்பட்ட தொகைக்கும், திரும்பப் பெறப்பட்ட தொகைக்குமிடையிலான வித்தியாசம் சுரங்க உற்பத்தி நிதியிலிருந்து பெறப்பட்டது. செலவுக்கான தணிக்கைக்கு தணிக்கைப் பிரிவு பொறுப்பாகும். தணிக்கை அல்லது கணக்கு முறைகேடுகள் எதுவும் இதுவரை வெளிவரவில்லை.

# 276

## *சட்டமன்ற மற்றும் மாநிலங்களவை விவாதங்களை (1944 இலையுதிர்கால) பிரசுரிப்பதில் தாமதம்

13. திரு. அனங்க மோகன் தாம்: மாண்புமிகு அரசாங்கத் தரப்புத் தலைவர் பதிலளிப்பாரா?

(அ) 1944 இலையுதிர்கால (நவம்பர்) சட்டமன்ற விவா தங்களும், மாநிலங்களவை விவாதங்களும் பிரசுரிக்கப்பட்டு எந்நாளில் விற்பனைக்கு வந்தன?

மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு எப்பொழுது வினியோ கிக்கப்பட்டன?

(ஆ) இந்த விவாதங்கள் தாமதமாக வெளியிடப்பட்டதற் கான காரணங்கள் யாவை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இத்துடன் இணைக்கப்பட்டுள்ள அறிக்கையில் தகவல் கொடுக்கப்பட்டுள்ளது.+

(ஆ) விவாதங்களை வெளியிடுவதில் ஏற்பட்ட தாமதத் திற்கு பல்வேறு காரணங்கள் உள்ளன; அதாவது யுத்த காலப் பணி களை அவசரமாகச் செய்ய வேண்டியிருந்தது; உதிரி பாகங்கள் மாற்றப்பட முடியாததால் இயந்திரங்கள் குறைபாடுகளைக் கொண் டிருந்தன; மற்றும் தக்க ஆட்கள் கிடைக்காததால் ஊழியர் குறைவு ஏற்பட்டது போன்றவை.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 21, 1945, பக்கம் 630.

+ அறிக்கை சேர்க்கப்படவில்லை - ஆசிரியர்

# 277

## *கல்கத்தா ரயில்வேத் தொழிலாளரின் மேற்பார்வையாளர் அளிக்கும் வருடாந்திர அறிக்கைகள்

*532. திரு. லால்சந்த் நாவல்ராய்:* மாண்புமிகு தொழிலாளர் உறுப்பினர் பதிலளிப்பாரா?

(அ) கல்கத்தா ரயில்வே தொழிலாளரின் மேற்பார்வை யாளர் (1) சம்பளப் பட்டுவாடாச் சட்டம் (2) 1940-41க்குப் பின் வேலை நேரச் சட்டங்களின் செயல்பாடு குறித்து அவருடைய வருடாந்திர அறிக்கையை அரசாங்கத்திற்கு சமர்ப்பித்துள்ளாரா; அவ்வாறானால், இத்தகைய அறிக்கைகள் முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ பதிப்பிக்கப்பட்டுள்ளனவா? மாண்புமிகு உறுப்பினர் அவற்றின் பிரதிகளை அவையில் முன்வைப்பாரா?

(அ) கேள்வி (அ) வின் கடைசிப் பகுதிக்கான பதில் எதிர்மறையாயிருந்தால் மாண்புமிகு உறுப்பினர் பின்வரும் தகவல் களை ஒவ்வொரு ரயில்வேக்கும் 1941-42, 1942-43 மற்றும் 1943-44 நிதியாண்டிற்கென்று தனித்தனியாக தருவாரா:

(1) ரயில்வே ஊழியர் மீது விதிக்கப்பட்ட அபராதங்கள் எவ்வளவு?

(2) அபராதங்கள் விதிக்கப்பட்ட மொத்த வழக்குகளின் எண்ணிக்கை எத்தனை?

(3) சம்பளப் பட்டுவாடா சட்டத்தின் செயல்பாட்டில் கண்டுபிடிக்கப்பட்ட முறைகேடுகளின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 797.

*(4) வேலை நேர விதிகள் செயல்பாட்டில் கண்டுபிடிக்கப் பட்ட முறைகேடுகளின் எண்ணிக்கை எவ்வளவு?*

*(5) இத்தகைய முறைகேடுகள் திரும்பத் திரும்ப வராதபடி தடுக்க பல்வேறு ரயில்வே நிர்வாகங்களுக்கு கொடுத்த கட்டளை யின் தன்மை எத்தகையது?*

*(6) தொழிலாளர் மேற்பார்வையாளருக்கும் ரயில்வே நிர் வாகங்கள் அல்லது வாரியத்திற்குமிடையே ஏதாவதொரு விஷ யத்தில் மாறுபட்ட கருத்து இருந்தால் அதுகுறித்து இந்திய அரசாங் கத்தின் தொழிலாளர் நலத் துறைக்கு தொழிலாளர் மேற்பார்வை யாளர் எந்த அளவுக்கு முறையீடு செய்ய முடியும்?*

*(7) மேலே குறிப்பிட்ட 6வது கேள்வியில் பொதிந்துள்ள அம்சங்கள் மீதான முடிவு என்ன?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) 1940-41 ஆம் ஆண்டிலிருந்து 1941-42 மற்றும் 1942-43 ஆம் ஆண்டுக்கான சம்பளப் பட்டுவாடாச் சட்டம் மற்றும் வேலை நேர ஒழுங்குபடுத்தும் சட்டம் போன்றவற்றின் செயல்பாடு குறித்த வருடாந்திர அறிக்கை கள் (ரயில்வே) ரயில்வே சமரச அதிகாரியாலும் ரயில்வே தொழி லாளர் மேற்பார்வையாளராலும் சமர்ப்பிக்கப்பட்டு வருகின்றன. 1944, பிப்ரவரி 10 ஆம் தேதியன்று மதிப்பிற்குரிய உறுப்பினரின் கேள்வி எண் 43க்கு நான் அளித்த பதிலில் குறிப்பிட்டபடி கடும் காகித நெருக்கடியின் காரணமாக இத்தகைய அறிக்கைகளை பிரசுரிப் பதில்லை என்று அரசாங்கம் முடிவு செய்துள்ளது. எனினும் 1942-43 ஆம் ஆண்டு சம்பந்தப்பட்டமட்டில் பத்திரிகையில் அறிக்கை வெளியிடுவதென்று முடிவு செய்துள்ளனர்; இந்த அறிக்கைகளைப் பிரசுரிப்பதென்ற முந்தைய நடைமுறை மீண்டும் தொடரும் காலம் வரை எதிர்கால அறிக்கையும் பத்திரிகை அறிக்கையாகவே வெளி யாகும்.*

*(ஆ) கிடைக்கக்கூடிய இத்தகைய விபரங்கள் தொகுக்கப் பட்டு உரிய காலத்தில் அவையில் ஓர் அறிக்கை சமர்ப்பிக்கப் படும்.*

# 278

## *முத்தரப்பு (தொழிலாளர்) மாநாடுகளுக்கான ஊழியர்கள் பிரதிநிதிக்குழுவின் இயைபு

+533. திரு. லால்சந்த் நாவல்ராய்: பின்கண்டவற்றுக்கு மாண்புமிகு உறுப்பினர் பதிலளிப்பாரா:

(அ) முத்தரப்பு (தொழிலாளர்) மாநாடுகள் அல்லது நிலைக் குழுவிற்கான ஊழியர் பிரதிநிதிக்குழு பின்கண்ட பிரதிநிதிகளைக் கொண்டிருக்கிறதா:

(1) இந்தியத் தொழிலாளர் சம்மேளனம்;

(2) அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸ்; மற்றும்

(3) இதரத் தொழிலாளிகள்;

(ஆ) (3)வது பிரிவில் கூறப்படும் ''இதரத் தொழிலாளிகள்'' என்பதில் எந்தத் தொழில்கள் மற்றும் தொழிலாளிகள் உள்ளனர்; அவர்களுடைய பிரதிநிதிகள் எவ்வாறு தேர்ந்தெடுக்கப் படுகின்றனர் அல்லது நியமிக்கப்படுகின்றனர்?

(இ) ''இதரத் தொழிலாளிகளுக்கான'' பிரதிநிதிகள், அரசாங்கத்தால் நியமிக்கப்படுவதாயிருந்தால் அந்த நடைமுறையை கைவிடும் திட்டமுள்ளதா? இல்லையென்றால் ஏன் இல்லை?

(ஈ) எந்த அடிப்படையில், எந்த நோக்கத்தில் அரசாங்கம் இத்தகைய பிரதிநிதிகளை நியமிக்கிறது? இத்தகைய நியமனத்தில் மாகாண அரசாங்கங்களுக்கு ஏதாவது பங்குண்டா? அவ்வாறானால் எந்தளவுக்கு?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 798.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ), (இ), (ஈ). இந்தப் பிரிவு (3) என்பது இரண்டு அகில இந்தியத் தொழிலாளர் அமைப்புகளான அகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸ் மற்றும் இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் ஆகிய இரண்டு அகில இந்தியத் தொழிலாளர் அமைப்புகளால் போதிய அளவுக்குப் பிரதிநிதித்துவப்படுத்தாத தொழிலாளர் நலன்கள் சம்பந்தப்பட்டதாகும். மாகாண அரசாங்கங்களிடமிருந்து வரும் ஆலோசனைகளை கணக்கிலெடுத்துக் கொண்டபின் இந்திய அரசாங்கம் இந்த நியமனங்களைச் செய்கிறது. குறைந்தபட்சம் தற்சமயத்திற்கு இந்த நடைமுறையைக் கைவிடும் உத்தேசம் ஏதும் இல்லை. நாட்டில் தொழிலாளர் அமைப்புகளின் தற்பொழுதைய வளர்ச்சிக் கட்டத்தில் இத்தகைய நியமனம் தேவைப்படுகிறது.

# 279

## *நீர்மின் நிலையங்கள்

539. **திரு. மனு சுபேதார்:** (அ) தற்பொழுது இந்தியாவில் எத்தனை நீர்மின் நிலையங்கள் உள்ளன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) அவை ஒவ்வொன்றும் எந்தளவு மின்சாரம் தயாரிக்கின்றன?

(இ) இந்த மின்சாரத்தில் எந்தளவு தொழில் நோக்கங்களுக்குப் பயன்படுத்தப்படுகிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) தனியார், தொழில் மற்றும் ராணுவ நிலையங்கள் நீங்கலாக 34.

(ஆ) ஒவ்வொரு நீர்மின் நிலைய வாரியாக தகவல் தருவது சாத்தியமில்லை. அனைத்து மின்நிலையங்களும் உற்பத்தி செய்த மின்சாரம் உத்தேசமாக 198.30 கோடி கிலோவாட் மணி ஆகும்.

(இ) சுமார் 56 சதவீதம்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 804.

# 280

## *நீர்மின் நிலையத் திட்டங்கள்

540. திரு. மனு சுபேதார்: (அ) இதர எத்தனை நீர்-மின் நிலையத் திட்டங்கள் பரிசீலிக்கப்பட்டு வருகின்றன என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) இவற்றில் எத்தனை நீர்மின் திட்டங்கள் (1) இந்திய அரசாங்கத்தாலும், (2) மாகாண அரசாங்கங்களாலும், (3) இந்திய சமஸ்தானங்களாலும் பரிசீலிக்கப்பட உள்ளன?

(இ) இந்தத் திட்டங்களின் மொத்த குதிரைச் சக்தி எவ்வளவு?

(ஈ) இவற்றில் எத்தனை திட்டங்களுக்கு இந்திய அரசாங்கம் ஏற்கனவே அனுமதி அளித்துள்ளது?

(உ) இவற்றில் எத்தனைத் திட்டங்களுக்கு இயந்திரங்களை வாங்குவது குறித்து பேச்சுவார்த்தை நடக்கிறது அல்லது 'ஆர்டர்' தரப்பட்டுள்ளது?

(ஊ) அவை உத்தேசமாக எந்நாளில் செயல்பட்டு மின்சாரம் அளிக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது?

(எ) இந்தத் திட்டங்களில் எது முதலில் செயல்படக்கூடும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) சமீபத்தில் பல திட்டங்கள் ஆராயப்பட்டன; அவற்றில் பல திட்டங்கள் பரிசீலனையின் பல்வேறு கட்டங்களில் உள்ளன. அரசாங்கச் செயலாளர் 31 திட்டங்களுக்கு இயந்திரங்கள் தேவை என அறிவிப்புச் செய்துள்ளார்.

(ஆ) (1) தற்பொழுதைய அரசியல் சட்டப்படி நீர் மின் நிலையத் திட்டங்கள் உருவாக்கப்படுவது மாகாண அரசாங்கங்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 804-805.

களின் அதிகாரத்திற்குள் வருகிறது. எனினும் இந்திய அரசாங்கம், மத்தியத் தொழில்நுட்ப மின்சார வாரியம் மூலமாக கேட்கப்படும் உதவியைச் செய்து வருகிறது; இந்த வாரியமானது மின் வளர்ச்சித் திட்டங்களைத் துவக்குவதற்கும், ஒருங்கிணைப்பதற்கும் மற்றும் முன்கொண்டு செல்வதற்குமென்று சமீபத்தில் உருவாக்கப்பட்டுள்ளது.

*(2) மற்றும் (3), (அ) பகுதிக்கு அளித்த பதில்படி அதில் குறிப்பிடப்பட்ட 31 திட்டங்களில் 14 திட்டங்கள் மாகாண அரசாங்கங்களாலும், 13 திட்டங்கள் சமஸ்தானங்களாலும், 4 திட்டங்கள் தனியார் நிறுவனங்களாலும் பரிசீலிக்கப்படுகின்றன.*

*(இ) உத்தேசமாக 6,70,000.*

*(ஈ) 1947 இறுதிக்கு முன்பாக இயந்திரங்கள் தேவைப்படும் 28 திட்டங்கள் சம்பந்தப்பட்ட அதிகாரிகளால் இதுவரை அங்கீகரிக்கப்பட்டுள்ளன.*

*(உ) ஏழு.*

*(ஊ) 1946 இறுதியிலிருந்து 1949க்குள்*

*(எ) யுத்த-பிற்காலத் திட்டங்களில் ஐ.மா. அரசாங்கத்தின் முகம்மத்பூர் நீர் மின் நிலையத் திட்டங்கள் அனேகமாக முதலில் துவங்கக்கூடும்.*

**திரு. மனு சுபேதார்:** *மாகாணங்களிலிருந்தும், மன்னராட்சி மாநிலங்களிலிருந்தும் சமர்ப்பிக்கப்படும் நீர்மின் நிலையத் திட்டங்கள் சம்பந்தமாக இந்திய அரசாங்கம் தேவையில்லாமல் கண்டிப்பாக உள்ளதா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *ஒவ்வொரு திட்டத்திற்கும் தேவைப்படுவதை விட அதிகக் கண்டிப்பாக இருக் கிறார்கள் என்று நம்புவதற்கு ஏதாவது ஆதாரம் உள்ளது என்று நான் கருதவில்லை.*

.4

# 281

## *மின்சார ஆணையருடைய அறிக்கை

+41. திரு. மனு சுபேதார்: (அ) மின்சார ஆணையர் தயாரித்து இந்திய அரசாங்கத்திற்குக் கொடுத்திருக்கும் அறிக்கையின் பிரதி ஏன் சபையின் நூலகத்தில் வைக்கப்படவில்லை என்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் விளக்குவாரா?

(ஆ) மின்சாரம் சம்பந்தப்பட்ட கொள்கைக் குழுவிற்கு இது குறித்து அறிவிக்கப்பட்டுள்ளதா?

(இ) அவ்வாறானால், அவர்களுடைய அறிக்கையின் ஒரு பிரதி சட்டமன்ற உறுப்பினர்களுக்குக் கிடைக்கச் செய்ய முடியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மதிப்பிற்குரிய உறுப்பினர் அனேகமாக மின்சார ஆணையர் தலைவராக உள்ள தொழில்நுட்ப மின்சார மாநாட்டு விவாதங்களைக் குறிப்பிடு கிறார் என்றே கருதுகிறேன். அந்த அறிக்கை தற்பொழுது அச்சில் உள்ளது என்பதுடன், அச்சிட்ட பிரதிகள் கிடைத்தவுடன் அவையின் நூலகத்தில் வைக்கப்படும்.

(ஆ) மற்றும் (இ). இங்கே கூறப்படுவதும் அனேகமாக 1945 பிப்ரவரி 2 ஆம் தேதியில் நடைபெற்ற கொள்கைக் குழுவின் இரண்டாவது கூட்டத்தைக் குறிப்பிடுகிறது. அந்தக் கூட்டத்தின் பதிவு கள் இறுதியாக்கப்பட்டு வருவதுடன் அதன் பிரதிகள் உரிய காலத் தில் அவையின் நூலகத்தில் வைக்கப்படும். குழுவின் முதல் கூட்ட பதிவுகள் அவை நூலகத்தில் ஏற்கனவே வைக்கப்பட்டு விட்டன.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 804.

+ கேள்வி கேட்டவர் சபையில் இல்லாததால் இக்கேள்விக்கான விடை அவைமுன் வைக்கப்படுகிறது.

# 282

## *மத்திய பொதுப்பணித் துறையில் தாழ்த்தப்பட்ட வகுப்பு ஊழியர்கள்

556. திரு. பியாரிலால் குரீல்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

(அ) மத்தியப் பொதுப்பணித் துறையில் நிர்வாகப் பொறியாளர் களாகவும், சப்-டிவிசனல் அதிகாரிகளாகவும், இளநிலை உதவியாளர்களாகவும் நிரந்தரப் பதவியிலும், தற்காலிக பணியிலும், தினச் சம்பளத் தொழிலாளர் பகுதியைக் கவனிக்கும் நிர்வாகப் பிரிவிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பு உறுப்பினர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) இளநிலை உதவியாளர் பணியிடங்களில் தற்காலிகமாக வேலை செய்த தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த எவரொருவரும் கூட நிரந்தரமாக்கப்படவில்லை என்பது உண்மையா? மேலும்

(இ) மத்திய பொதுப்பணித் துறையின் நிரந்தர ஊழியர்களில் தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்தவர்களுக்கு நியாயமான பிரதிநிதித்துவம் கிடைக்க அரசாங்கம் எத்தகைய நடவடிக்கைகளை எடுக்க உத்தேசித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) பொதுப்பணித் துறையில் நிரந்தர மற்றும் தற்காலிக நிர்வாகப் பொறியாளர்களின் எண்ணிக்கை முறையே 12 மற்றும் 55 ஆகும். தற்காலிகப் பொறியாளர்களில் இருவர் தாழ்த்தப்பட்ட வகுப்புகளைச் சேர்ந்தவர்கள். நிரந்தரப் பொறியாளர் பதவிகளில் தாழ்த்தப்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 804.

பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் எவருமில்லை; தினச் சம்பளத் தொழிலாளர்கள் பகுதியைக் கவனிக்கும் நிர்வாகப் பொறியாளர் பணியிடங்கள் ஏதும் இல்லை.

மதிப்பிற்குரிய உறுப்பினர் கோரும் இதர விபரம் கைவசம் இல்லை. அது சேகரிக்கப்பட்டு வருகிறது என்பதுடன் எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் அவருக்கு அளிக்கப்படும்.

(இ) அரசாங்கப் பணிகளில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் குறித்த உத்தரவின்கீழ் இருபது இடங்களில் ஒன்று (பதவி உயர்வு காரணமாக பூர்த்தி செய்யப்படும் இடங்கள் தவிர) தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காக ஒதுக்கப்படுகிறது. மத்தியப் பொதுப்பணித் துறையில் அனைத்துப் பிரிவு பதவிகளுக்கும் பொதுவாக பொருந்தக் கூடிய இத்தகைய உத்தரவுகள், அந்தத் துறையில் தாழ்த்தப்பட்ட வகுப்பு உறுப்பினர்களுக்கு நியாயமான பிரதிநிதித்துவம் கிடைக்கச் செய்யும்.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** சிறுபான்மையினரில் ஒரு பகுதியினர் என்று ஷெட்யூல்டு வகுப்பினர் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளனரா? அவ்வாறானால் அவர்களுடைய பங்கு 33 சதவீதத்திலிருந்து கிடைக்குமல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்கள் ஒரு தனிப் பிரிவினர்.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** அவர்களைத் தனியாக நீங்கள் வைத்தால் சிறுபான்மையினருக்காக ஒதுக்கி வைக்கப் பட்ட 33 சதவீதம் எவ்வாறு இந்த வகையினரால் பாதிக்கப்படக் கூடும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது பாதிக்கப் படவேயில்லை; அதிலிருந்து இது தனியானது.

# 283

# *கல்கத்தாவிற்கும் பம்பாய்க்கும் மாற்றப்பட்ட அரசாங்க ஊழியர்கள் புதுடில்லி அரசாங்க குடியிருப்பை தங்கள் வசமே வைத்திருத்தல்

564. சையது குலாம் பிக் நைரங்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

(அ) புதுடில்லியில் அரசாங்க ஊழியர்களுக்கான அரசாங்கக் குடியிருப்புகள் அவர்கள் புதுடில்லியில்/சிம்லாவில் தொடர்ந்து வேலையிலிருந்து வரும் நாளிலிருந்து கணக்கிடப்பட்டு பணிமூப்பின் அடிப்படையில் அளிக்கப்படுகின்றன என்பது உண்மையா?

(ஆ) சிம்லாவிற்கு மாற்றப்பட்டவர்கள், தாங்கள் மாற்றப் பட்ட காலத்திற்கு புதுடில்லியில் உள்ள குடியிருப்புகளை வைத்துக் கொள்ளலாமா?

(இ) சமீபத்தில் கல்கத்தாவிலுள்ள கிளைத் தலைமைச் செயலகத்திற்கு மாற்றப்பட்டவர்கள் புதுடில்லியில் உள்ள அரசாங்க குடியிருப்புகளை அப்படியே வைத்துக் கொள்ள ஏதாவது உத்தரவு போடப்பட்டுள்ளதா? அதே நேரத்தில் இணைப்பு அலுவலகங் களுக்கு மாற்றப்பட்டவர்களுக்கு இந்தச் சலுகை இல்லையா?

(ஈ) மத்தியப் பொதுப்பணித்துறை கூடுதல் தலைமை பொறி யாளர் அலுவலகத்துடன் கல்கத்தாவிற்கு மாற்றப்பட்டவர்கள் புதுடில்லியில் உள்ள தங்களுடைய குடியிருப்புகளை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டதோடு டில்லிக்குத் திரும்பியதும் அவர்களுக்குக் குடியிருப்புகள் ஒதுக்கப்பட்டது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 817-18.

(உ) சிம்லாவிற்கு அல்லாமல் வேறிடங்களுக்கு மாற்றப் பட்டதன் காரணமாக பணிக்காலத் தொடர்ச்சி தடைப்பட்ட மத்திய பொதுப்பணித் துறையில் வேலை செய்தவர்கள் டில்லிக்கு மீண்டும் பதவி மாற்றம் செய்யப்பட்டபின் ஒரு விசேட சலுகையாக அவர் களுடைய பணிக்காலத் தொடர்ச்சி வெட்டு கைவிடப்பட்டது உண்மையா?

(ஊ) பணியின் பொருட்டு டெல்லியிலிருந்து கல்கத்தா மற்றும் பம்பாய்க்கு மாற்றப்பட்ட மத்திய அரசாங்க ஊழியர்கள் புதுடில்லி யில் உள்ள தங்களது குடியிருப்புகளை பணி மாற்றத்தின்பொழுது வைத்துக் கொள்ள அனுமதிக்கப்படவில்லை என்பதும், அவர்கள் புதுடில்லிக்குத் திரும்பியபின் குடியிருப்புகள் ஒதுக்குவது சம்பந்த மாக அவர்களது பணிக்காலம் தொடர்ச்சியாகக் கருதப்படவில்லை என்பதும் உண்மையா?

(எ) அத்தகைய நபர்கள், (இ) மற்றும் (உ) பகுதிகளில் மேலே குறிப்பிட்டபடி அதே மாதிரி நடத்தப்படுவார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) 1942 நவம்பர் 10ந் தேதியோ அல்லது அதற்கு முன்போ சிம்லாவிற்கு மாற்றப்பட்ட நபர்கள் புதுடில்லியில் அவர்கள் வைத்திருந்த குடியிருப்பை வைத்துக் கொள்ளலாம்; ஆனால் அந்தத் தேதிக்குப் பிறகு சிம்லாவிற்கு தற்காலிகமாக மாற்றப்பட்டவர் கள் அவர்களுடைய பணிமாற்றத் தேதியிலிருந்து ஓராண்டு காலத் திற்கு அவர்கள் குடியிருப்புகளை வைத்துக் கொள்ள அனுமதிக்கப் பட்டுள்ளனர்.

(இ) ஆம்.

(ஈ) மத்தியப் பொதுப்பணித்துறையைச் சேர்ந்த கூடுதல் தலைமைப் பொறியாளர் அலுவலக ஊழியர்கள் இருவர், கல்கத்தா வில் ஓராண்டிற்கும் குறைவாகவே இருக்க வேண்டியிருப்பதால் டில்லியில் உள்ள தங்கள் குடியிருப்புகளை வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டார்கள்.

(உ) ஆம், ஆனால் பணிக்காலத் தொடர்ச்சி துண்டிப்பு என்பது அந்த நபர்களைப் பொறுத்தமட்டில் ஓராண்டிற்கும் குறைவு.

(ஊ) சம்பந்தப்பட்ட துறைகள், மாற்றப்படும் தனிநபர்கள் டில்லிக்கு ஓராண்டிற்குள் வந்துவிடுவார்கள் என்று சான்றிதழ் அளிக்குமானால் மத்திய அரசாங்க ஊழியர்கள், பணிக்கால மாற்றத் தின்பொழுது தங்கள் குடியிருப்புகளை வைத்துக் கொள்ளலாம்.

(எ) (ஊ) பகுதி பதில் காரணமாக எழாது.

# 284

## *நிலக்கரிச் சுரங்கங்கள் மீது உற்பத்தி வரி

565. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: (அ) பிரிட்டிஷ் இந்தியா வின் சுரங்கங்களிலிருந்து அனுப்பிவைக்கப்படும் நிலக்கரி மீது அரசாங்கம் ரூ. 1-4-0 உற்பத்தி வரியாக விதிக்கிறதா என்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் விளக்குவாரா?

(ஆ) ஐக்கிய மாகாணங்களின் கோரக்பூர், பாலியா மற்றும் இதர மாவட்டங்களிலிருந்து தேர்ச்சியற்ற தொழிலாளர்களை வேலைக்கு எடுப்பதற்கான செலவும், நிலக்கரி எடுக்குமிடங்களில் அவர்களைப் பராமரிப்பதற்கான செலவும் இந்த வரியிலிருந்து கிடைக்கும் தொகையால் சமாளிக்கப்படுகிறதா?

(இ) தொழிலாளர் கையொப்பமிட வேண்டிய (பெண்கள் உள்ளிட்டு) ஒப்பந்தப் படிவம் யாது? எந்த ஆணையின்படி இந்தத் தொழிலாளர்கள் வேலைக்கு எடுக்கப்படுகிறார்களோ, எந்த ஆணை யின்கீழ் அவர்களுடைய ஒப்பந்தப் படிவம் உள்ளதோ அந்த ஆணை யின் ஒரு பிரதியை அரசாங்கம் அவையில் வைக்குமா?

(ஈ) அவர்களை வேலைக்கு எடுப்பதற்கான ஏற்பாடு யாது?

(உ) வழக்கமாக அவர்கள் எங்கே தங்க வைக்கப்படு கிறார்கள்?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 818-19.

(ஊ) 1944 டிசம்பர் 31ந் தேதிய நிலவரப்படி பல்வேறு நிலக்கரி சுரங்கங்களில் உள்ள தொழிலாளர்களின் உத்தேச எண்ணிக்கை எவ்வளவு?

(எ) அவர்களுக்கென தனித்தனியான முகாம்கள் ஏற்படுத்தப் பட்டுள்ளனவா? அவ்வாறானால், கழிப்பறை மற்றும் குளியலறை வசதிகள் செய்து தரப்பட்டுள்ளதா?

(ஏ) இதுவரை எத்தனை குழுக்கள் அனுப்பப்பட்டுள்ளன? அவற்றின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) துவக்கத்தில் இந்தச் செலவை அரசாங்கம் ஏற்றுக் கொண்டது. அதன் ஒருபகுதி சுரங்க முதலாளிகளிடமிருந்து பெறப் பட்டது; மீதமுள்ளது உற்பத்தி வரி நிதியிலிருந்து பெறப்பட்டது.

(இ) 6 மாதத்திற்கோ அல்லது 12 மாதத்திற்கோ வேலை செய்வதாக வாய்மொழியாகக் கூறும் தொழிலாளி எவ்வகையான ஒப்பந்தப் படிவத்திலும் கையெழுத்திடுவதில்லை.

(ஈ) கோரக்பூரிலுள்ள தொழிலாளர் வழங்கு நிலையம் ஐக்கிய மாகாணங்களின் அரசாங்கத்தால் நடத்தப்படுகிறது.

(உ) வங்காளம், பீகார் மற்றும் ஹைதராபாத்திலுள்ள சிங்கரேணி நிலக்கரிச் சுரங்கங்கள்.

(ஊ) (1) வங்காளம்/பீகார் நிலக்கரிச் சுரங்கங்கள் 15,400
(2) சிங்கரேணி நிலக்கரிச் சுரங்கம் 2,500

(எ) ஆம். பல முகாம்களில் கழிப்பறைகள் ஏற்பாடு செய்யப் பட்டுள்ளன என்பதுடன் விரைவில் அனைத்து இடங்களிலும் ஏற் பாடு செய்யப்பட்டுவிடும்; ஆனால் குளியலறைகள் அல்ல. எனினும், போதுமான அளவுக்குத் தண்ணீர் வினியோகம் செய்யப் பட்டுள்ளது.

(ஏ) அனுப்பப்பட்ட தொழிலாளர் மொத்த எண்ணிக்கை:
வங்காளம்/பீகார் நிலக்கரிச் சுரங்கங்கள் - 37,000
சிங்கரேணி நிலக்கரிச் சுரங்கங்கள் - 5,000

# 285

## *நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் முகாம்களில் மருத்துவ வசதி

566. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: (அ) நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளிகளுக்கு அவர்களுடைய முகாம்களில் மருத்துவ உதவி அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் விளக்குவாரா?

(ஆ) அவ்வாறானால், இத்தகைய முகாம்களில் குறைந்தபட்ச அளவு மருந்துகளும், அறுவைச் சிகிச்சைக் கருவிகளும் கையிருப்பு வைக்க ஏதாவது விதி உருவாக்கப்பட்டுள்ளதா? மருத்துவப் பணியாளர்களின் எண்ணிக்கை எவ்வளவு ? அவர்களுடைய தகுதிகள் என்ன?

(இ) இத்தகைய முகாம்களில் பால்வினை நோய்களுக்கு சிகிச்சை அளிக்க ஏதாவது ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதா?

(ஈ) உடல்நலக் குறைவு சம்பவங்கள் பதிவு செய்யப்படுகின்றனவா?

(உ) அவ்வாறானால், இத்தகைய தொழிலாளர் முகாம்கள் நிறுவப்பட்டதிலிருந்து, 1944 டிசம்பர் 31 ஆம் தேதிவரை மலேரியா மற்றும் பால்வினை நோய்களினால் பாதிக்கப்பட்டவர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

(ஊ) தொழிலாளிகளை முறையாக குறிப்பிட்ட காலத்தில் பரிசோதிக்க ஏதாவது ஏற்பாடு உள்ளதா?

(எ) அவ்வாறாயின், எந்தெந்த நோய்கள் மிக அதிகமாகப் பரவியுள்ளன என்பதை இந்த ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன? அவற்றின் சதவிகிதம் என்ன?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 819.

(ஏ) யாராவது மரணமடைந்திருக்கிறார்களா? அவ்வாறானால், எவ்வளவு பேர், எந்தக் காரணங்களால் மரணமடைந்துள்ளனர்?

(ஐ) முகாமின் மருத்துவத் துறையை மேற்பார்வையிடும் ஏற்பாடு ஏதாவது உள்ளதா? ஸ்தலத்திலுள்ள அரசாங்க மருத்துவ அதிகாரி இந்த முகாம்களுக்கு வருகை தந்து கடுமையாகப் பாதிக்கப் பட்ட நோயாளிகளுக்குச் சிகிச்சை அளித்துள்ளாரா? மிக மோசமாகப் பாதிக்கப்படுபவர்கள் அரசாங்க மருத்துவமனைக்குக் கொண்டு செல்லப்படுகிறார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) ஒவ்வொரு முகாமிலும் போதுமான அளவிற்கு மருந்து களும், அறுவைச் சிகிச்சைக் கருவிகளும் கையிருப்பு உள்ளன. 1000 தொழிலாளர்களுக்கு அதிகமாக உள்ள ஒவ்வொரு முகாமிலும் மருத் துவப் பட்டம் பெற்ற பட்டதாரி பொறுப்பாக உள்ளார்; 1000 தொழிலாளிகளுக்கு குறைவாக உள்ள ஒவ்வொரு முகாமிலும் மருத்துவத்தில் தகுதிச் சான்று பெற்ற ஒருவர் பொறுப்பாக உள்ளார்.

(இ) ஆம்.

(ஈ) ஆம்.

(உ) இந்த முகாம்கள் பரந்த பகுதியில் பரவிக்கிடப்பதால் குறிப்பிட்ட காலத்திற்குள் தகவல் சேகரிப்பது சாத்தியமில்லை.

(ஊ) ஆம்.

(எ) ரத்தச் சோகை. இது விஷயத்தில் கூட கேட்கப்பட்ட புள்ளி விபரங்களைச் சேகரிக்க கால அவகாசம் தேவைப்படுகிறது.

(ஏ) ஆம். கடந்த டிசம்பர் வரை 156. பெரும்பாலான சாவுகள் இயற்கைக் காரணங்களால் ஏற்பட்டவை. வேலை ஸ்தலத்தில் ஏற்பட்ட விபத்துக்களால் ஒரு சிறு எண்ணிக்கையினர் இறந்தனர்.

(ஐ) ஆம். தேர்ச்சியற்ற தொழிலாளர் வழங்கீடு இயக்குனரகத்தில் ஒரு தலைமை மருத்துவ அதிகாரி பதவி அனுமதிக்கப்பட்டுள்ளது. இத்தகைய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதால், ஸ்தல சிவில் சர்ஜன் முகாம்களுக்கு வருகை தர மாட்டார். கடுமையாக நோய்வாய்ப் பட்டவர்கள் அரசாங்க மருத்துவ மனைகளுக்குக் கொண்டு செல்லப் படுகிறார்கள்.

# 286

## *சுரங்கத் தொழிலாளிகள் முகாம்களில் ரேஷன்

567. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: (அ) இத்தகைய சுரங்கத் தொழிலாளர் முகாம்களில் வசிக்கும் தொழிலாளிகளுக்கு ரேஷன் அரசாங்கத்தால் நேரடியாக வழங்கப்படுகிறதா அல்லது ஒப்பந்தக் காரர் மூலமாக வழங்கப்படுகிறதா என்பதை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) ஒவ்வொரு தொழிலாளிக்கும் ரேஷன் தனியாக வழங்கப் படுகிறதா அல்லது 50 பேர் கொண்ட குழுவிற்கென்று மொத்தமாக வழங்கப்படுகிறதா?

(இ) ஒப்பந்தக்காரர்கள் வழக்கமாக அளவைக் குறைத்தே வழங்குகிறார்கள் என்பது உண்மையா?

(ஈ) இந்தத் தொழிலாளிகள் தங்களுடைய ரேஷன்களை ஸ்தலத்திலுள்ள அரசாங்க ரேஷன் கடைகள் அல்லது டெப்போக் களிலிருந்து வாங்கிக் கொள்ளலாமா? இல்லையென்றால் ஏன் இல்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) குழு அதிகாரிகள் மேற்பார்வையின்கீழ் ஒப்பந்தக்காரர் மூலமாக சுரங்கத் தொழிலாளிகள் முகாம்களில் உள்ள தொழிலாளிகளுக்கு அரசாங்கம் ரேஷன் வழங்கி வருகிறது.

(ஆ) ஒவ்வொரு குழுவிற்கும் வாராவாரம் மொத்தமாக ரேஷன்கள் வழங்கப்படுகின்றன.

(இ) இல்லை.

(ஈ) இல்லை. அவர்களுக்கு அரசாங்கம் ரேஷன் இலவசமாக வழங்கி வருவதால் இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கங்கள் 819- 20.

# 287

## *நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளிகள் முகாம்களில் உடல் இம்சைத் தண்டனைகள்

*568. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: (அ)* இந்தச் சுரங்கத் தொழிலாளர் முகாம்களில் தொழிலாளிகளுக்கு கசையடி போன்ற உடல் இம்சைத் தண்டனைகள் அளிக்கப்பட்டு வருகின்றனவா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் விளக்குவாரா? ஆண், பெண் இருபாலாருக்கும் இது பொருந்துமா?

(ஆ) இந்தத் தொழிலாளியின் குறைகளைப் போக்குவதற்கு ஏற்பாடு எதுவும் நடைமுறையில் உள்ளதா?

(இ) இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நல ஆலோசகர் மற்றும் அவருடைய உதவியாளர்கள் அல்லது சுரங்கத் தொழிலாளர் நல்வாழ்வு ஆணையர் மற்றும் அவரின்கீழ் உள்ள அதிகாரிகள் இத்தகைய தொழிலாளரின் நலன்களைக் கவனித்துக் கொள்ளவோ அல்லது அவர்களுடைய குறைகள் குறித்து விசாரிக்கவோ அதிகாரம் பெற்றுள்ளார்களா? இல்லையென்றால் ஏன் இல்லை?

(ஈ) அவ்வாறானால் அவர்களுடைய புகார்களை யார் விசாரிக்கிறார்கள்?

(உ) இந்த விஷயங்கள் குறித்து பதிவேடுகள் பராமரிக்கப் படுகின்றனவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ)* இல்லை. பெண்கள் முகாம்கள் இல்லை.

(ஆ) ஆம். தொழிலாளிகள், தொழிலாளர் வழங்கீடு (நிலக்கரி) உதவி இயக்குனரை அணுகலாம்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 820.

(இ) இல்லை. தொழிலாளர் முகாம்கள், தொழிலாளர் வழங்கீடு (நிலக்கரி) உதவி இயக்குனராலும் அவருடைய ஊழியர்களாலும் கவனித்துக் கொள்ளப்படுகின்றன.

(ஈ) தேர்ச்சியற்ற தொழிலாளர் வழங்கீடு இயக்குனரகத்தின் பிரதம மக்கள் தொடர்பு அதிகாரி மற்றும் குழு அதிகாரிகள்.

(உ) எழுத்து மூலமாக முறையீடுகள் செய்யப்பட்டால் அந்த ஆவணங்கள் தொழிலாளர் வழங்கீடு (நிலக்கரி) உதவி இயக்குனர் அலுவலகத்தில் பாதுகாத்து வைக்கப்படுகின்றன. வாய் மூலமாகக் கூறப்படும் புகார்கள் ஸ்தலத்திலேயே தீர்க்கப்படுகின்றன. தேவைப் படும் என்று கருதப்படுகிறபோது அவசியமான ஆவணங்கள் பாதுகாத்து வைக்கப்படுகின்றன.

# 288

## *மைக்கா கமிஷன்

661. மனு சுபேதார்: (அ) மைக்கா கமிஷன் நியமிக்கப் பட்டதன் நோக்கத்தை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப் பினர் விளக்குவாரா?

(ஆ) அதனுடைய விதிகள் மற்றும் இயைபு எத்தகையவை?

(இ) நாட்டின் மைக்கா உற்பத்தியாளர்களுக்கு அரசாங்கம் எந்த சமயத்திலேனும் ஏதாவது உதவி செய்திருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மற்றும் (ஆ). மதிப்பிற்குரிய உறுப்பினர் மைக்கா விசாரணைக் குழுவையே அனேகமாக குறிப்பிடுகிறார் என்று கருதுகிறேன். மே 15, 1944 மற்றும் அக்டோபர் 23, 1944 தேதிகளின் தீர்மானங்கள் எண். எம்.டி. 55ன் பால், அவர் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன்;

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, பிப்ரவரி 28, 1945, பக்கம் 1022-23.

இவற்றின் பிரதிகள் இந்திய சட்டமன்றத்தின் நூலகத்தில் வைக்கப் பட்டுள்ளன.

(இ) 1935 ஆம் வருடத்திய இந்திய அரசாங்கச் சட்டத்தின் கீழ் கனிம வளங்கள் ஆய்வு என்பது பொதுநலன் சம்பந்தப்பட்டதென்று சமஷ்டிச் சட்டம் பிரகடனம் செய்தாலொழிய அது ஒரு மாகாண விஷயமாகும். அத்தகையதொரு சமஷ்டிச் சட்டம் தற்பொழுதில்லை என்பதுடன், மாகாண அரசாங்கங்களிடமே இது முற்றிலும் விடப் படுகிறது. அவ்வாறிருந்தும்கூட, யுத்த காலத்தில் மைக்கா உற்பத்தி யாளர்களுக்கு பொருட்கள் கிடைக்கச் செய்தும், கூடுதல் உற்பத்திக் கான போனசாக கூடுதல் லாப வரியிலிருந்து விலக்கு அளித்தும் மத்திய அரசாங்கம் கணிசமாக உதவி செய்தது.

திரு. மனு சுபேதார்: அரசாங்கம் மைக்காவின் விலையை கட்டுப்படுத்தியுள்ளதென்பதும், மைக்கா மொத்தமாக இந்த அரசாங்கத்திற்காகவும், நேச நாட்டு அரசாங்கங்களுக்காகவும் கட்டுப்பாட்டு விலையில் வாங்கப்பட்டுள்ளதென்பதும், மத்திய அரசாங்கம் கட்டுப்பாட்டை அறிமுகப்படுத்தியுள்ளதென்பதும் உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விலைகள் நிர்ண யிக்கப்பட்டுள்ளன.

திரு. மனு சுபேதார்: இந்த விலைகள் யுத்த - முற்கால விலைகளோடு எவ்வாறு ஒப்பிடப்படுகின்றன என்பதை நான் அறியலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவை மிகச் சாதகமாகவே ஒப்பிடப்படுகின்றன.

திரு. மனு சுபேதார்: வித்தியாசம் எவ்வளவு?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, இந்தக் கேள்விக்கு எனக்கு பதில் சொல்ல அவகாசம் வேண்டும்.

திரு. என்.எம். ஜோஷி: மைக்காக் கமிஷன் மைக்கா சுரங்கத் தொழிலாளிகளின் வேலை நிலைமைகளை ஆராயுமா என்பதை

நான் கேட்கலாமா? அவ்வாறானால், மைக்காக் கமிஷனில் மைக்கா தொழிலாளர்கள் பிரதிநிதித்துவம் பெறுவார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை. கமிஷன் பரிசீலிக்க வேண்டிய விஷயங்களில் அது ஒன்றல்ல.

**திரு. ஜி. டபிள்யூ. டைசன்:** இந்தக் கேள்வியின் (இ) பகுதி சம்பந்தமாக, மைக்கா தொழிலுடன் மத்திய அரசாங்கம் நல்ல உறவு கொண்டிருந்த யுத்த காலத்தில், மைக்கா தொழிலில் கள்ள வாணிகம் நடைபெற்றதால் மிகப் பெரும் இழப்பிற்காளான இயந்திரமயமாக்கப்பட்ட மைக்கா தொழிலுக்கு அரசு உரிய பாது காப்பு அளித்தது என மாண்புமிகு உறுப்பினர் திருப்தியடைந்தாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரு விசாரணைக் குழு நியமிக்கப்பட்டதற்கு அதுவும் ஒரு காரணமாகும்.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** மைக்காத் தொழிற் சாலைகளுக்கும் மகப்பேறு நல் உதவிச் சட்டம் பொருந்துமா என்பதை நான் அறியலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது அனைத்து சுரங்கங்களுக்கும் பொருந்தும்.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** மைக்கா பிளக்கும் தொழிற்சாலைகளில் தொழிற்சாலைச் சட்டம் அமலாக்கப்படுவ தில்லை என்பது உண்மையா? அவ்வாறானால் ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது அமலாக்கப் படவில்லை என்று நம்புவதற்கு எனக்கு எவ்வித காரணமுமில்லை.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** 1944 செப்டம்பர் மாதத்திய டிரேட் யூனியன்ஸ் ரிகார்டு வெளியீட்டில் வந்த அறிக்கை மீது அரசாங்கத்தின் கவனத்தை நான் ஈர்க்கலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதற்கு மேலும் விபரங்கள் தேவைப்படுகின்றன.

**திரு. என்.எம். ஜோஷி:** தொழிற்சாலைகள் சட்டம் மைக்காத் தொழிற்சாலைக்கு பொருந்துகிறதா அல்லது இல்லையா என்பதைக் கண்டறிய மாண்புமிகு உறுப்பினர் விசாரணை மேற்கொள்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விசாரிக்கிறேன்.

# 289

## *பழம்பாணி மற்றும் புதுவகை குடியிருப்புகளுக்கிடையிலான தாரதம்மியத்தை ஒழித்தல்

*662. திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி: (அ) பழம்பாணி மற்றும் புதுபாணி குடியிருப்புகளுக்கிடையிலான தாரதம்மியத்தை ஒழிப்பது குறித்து 1945 பிப்ரவரி 10 ஆம் தேதியன்று கொண்டு வரப்பட்ட ஒத்திவைப்புத் தீர்மானத்திற்கு மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அளித்த பதில் தொடர்பாக, அரசாங்கத்தின் இதர துறைகளும் இதுகுறித்து ஆலோசிக்கப்பட்டனவா, இந்திய அரசாங்கத்தின் எத்தனை துறைகள், எவையெவை இந்த வித்தியாசத்தை ஒழிப்பதை ஆதரிக்கின்றன? எவையெவை எதிர்க்கின்றன?*

*(ஆ) புதுபாணி குடியிருப்புகளை ஒதுக்குவதில் தம் உசிதம் போல் செயல்பட குடியிருப்பு அதிகாரிக்கு இதுவரை அதிகாரம் வழங்கப்பட்டுள்ளதா? இல்லையென்றால் இத்தகைய அதிகாரம் அவருக்கு ஏன் வழங்கப்படவில்லை?*

*(இ) புதுபாணி குடியிருப்புகளில் ஒன்றைக் கோரும் இந்திய விண்ணப்பதாரர் ஐரோப்பிய பழக்க வழக்கங்களைப் பின்பற்றுபவரா என்பது குறித்துத் திருப்தியடைய குடியிருப்பு அதிகாரி எந்த முறையை அல்லது ஏற்பாட்டைக் கொண்டுள்ளார்?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) ஆம். இந்த திட்டத்திற்கு எதிராக இருப்பவை அல்லது ஆதரவாக இருப்பவை எந்தெந்தத் துறைகள் என்பதை திட்டவட்டமாக அறிவிப்பது அவசியமானது என்று அரசாங்கம் கருதவில்லை.*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 5, 1945, பக்கம் 1023.*

(ஆ) இல்லை. விண்ணப்பதாரர் தனது மனுவில் தனது வாழ்க்கை முறை குறித்து கூறும் உறுதிமொழி குறித்து கேள்வி கேட்கப்படாமல் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்று அரசாங்கம் முடிவு செய்திருப்பதால், புதுபாணி குடியிருப்புகளை ஒதுக்குவதில் குடியிருப்பு அதிகாரி தம் உசிதம்போல் நடந்து கொள்ள முடியாது.

(இ) எழாது.

# 290

## *பழம்பாணி மற்றும் புதுவகை குடியிருப்புகளுக்கிடையிலான தாரதம்மியத்தை ஒழித்தல்

663. திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி: (அ) மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா? முந்தைய கேள்வியில் குறிப்பிடப்பட்டபடி இம்மாதம் 10 ஆம் தேதியன்று ஒத்திவைப்பு தீர்மானத்திற்கு அளித்த பதில் பிரகாரம் புதுவகை குடியிருப்புகளில் தற்காலிகமாக குடியிருப்பவர்கள் பாதிக்கப்படுவார்களா? அவ்வாறானால் அவர்களுடைய தகுதிக்குரிய புதுவகை வீடுகள் அவர்களுக்கு அளிக்கப்படுமா?

(ஆ) இத்தகைய உயர் பிரிவு வீடு கிடைக்காத நிலையில், அவர்களுக்கு அந்த வீடுகள் கிடைக்கும் காலம் வரை அவர்கள் இருக்கும் வீட்டிலேயே குடியிருக்க அனுமதிக்கும் எண்ணம் உள்ளதா? இல்லையென்றால் ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இந்தக் கேள்வியின் முதல் பகுதிக்கான பதில் இல்லையென்பதாகும். இரண்டாவது பகுதி எழாது.

(ஆ) ஆம்.

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 5, 1945, பக்கம் 1023-24.

# 291

## *ஆமதாபாத்தில் தொழில் தகராறுகள் நடுவர் மன்றம் செயல்படாமை

668. திரு. கே.எஸ். குப்தா: (அ) ஆமதாபாத்தில் தொழில் தகராறுகளைத் தீர்ப்பதற்கான நிரந்தர நடுவர் மன்றம் செயல் படாமல் போயிருப்பதால் எழுந்துள்ள கடுமையான நிலைமையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(ஆ) ஆமதாபாத் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் கூட்டுப் பிரதிநிதித்துவ குழுமம், இந்த செயல்படாமல் போயுள்ள இந்த நிலைமையைக் கவலையோடு கருதுகிறது என்பது உண்மை யில்லையா?

(இ) இந்திய அரசாங்கம் மத்தியஸ்த முறையை மீண்டும் ஏற்படுத்த திட்டமிட்டுள்ளதா? இல்லையென்றால் ஏன் இல்லை?

(ஈ) ஆமதாபாத் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கமும், மில் உரிமையாளர் சங்கமும் 1937ல் கையொப்பமிட்ட எழுத்துப்பூர்வ மான ஓர் ஒப்பந்தம் இருப்பது உண்மையா?

(உ) மேலே சொல்லப்பட்ட ஒப்பந்தம் இன்னும் பதிவு செய்யப்படவில்லை என்பதும், மில் உரிமையாளர்கள் சங்கம் அதன்படி நடக்கவில்லை என்பதும் உண்மையா? அவ்வாறானால், இந்தத் தகராறைத் தீர்ப்பதற்கு அரசாங்கம் தன்னுடைய செல்வாக் கையும், அதிகாரத்தையும் பயன்படுத்தத் திட்டமிட்டுள்ளதா?

(ஊ) தொழிலாளர் வர்க்கங்களின் நலனுக்கென்று ஆமதா பாத் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் உத்தேசித்துள்ள தொழி

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 5, 1945, பக்கம் 1027.

லாளர் ஆராய்ச்சிக் கழகம் உருவாகிடுவதற்கு உற்சாகமூட்டவும், உதவிடவும் அரசாங்கம் திட்டமிட்டுள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: போனஸ் பிரச்சினை குறித்து அகமதாபாத் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்திற்கும், மில் உரிமையாளர் சங்கத்திற்குமிடையே ஒரு தொழில் தகராறு இருப்பதை நான் அறிவேன்; இது, 1938ம் வருடத்திய பம்பாய் தொழில் தகராறு சட்டத்தின் கீழ் பிரதம சமரச அதிகாரியால் பரிசீலிக் கப்படுகிறது. இந்த சமரச முயற்சி முடங்கிப் போனது குறித்தும் இந்தக் கேள்வியில் குறிப்பிடும் இதர விஷயங்கள் குறித்தும் எனக்கு எவ்விதத் தகவலுமில்லை; இவை அனைத்தும் மாகாண அரசாங்கம் சம்பந்தப்பட்டதாகும்.

# 292

## *தொழிலாளர் நலத்துறையின் கீழுள்ள சில ஊழியர்களின் வகுப்புவாரி இயைபு

55. சர்தார் சாந்த் சிங்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

அவர் கீழே உள்ள எல்லா இலாகாக்களிலும் அலுவலகங்களிலும் 1934 முதல் மாதம் 100 ரூபாய் சம்பளத்திலும் அதற்கு அதிகமாகவும், நிரந்தரமாகவும், மற்றும் தற்காலிகமாகவும் நியமிக்கப்பட்ட ஊழியர்களின்

(அ) மொத்த எண்ணிக்கை, இதில்

(ஆ) சீக்கியர்கள் எண்ணிக்கை,

(இ) கிறித்துவர்கள் எண்ணிக்கை,

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 5, 1945, பக்கம் 1039.

(ஈ) இங்கேயே தங்கியுள்ள ஐரோப்பியர்கள் மற்றும் ஆங்கிலோ-இந்தியர்கள் எண்ணிக்கை,

(உ) பார்சிகள் எத்தனை?

(ஊ) இவ்வாறு நியமிக்கப்பட்ட சீக்கியர்களது பதவிப் பெயர் என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தத் தகவலைத் திரட்டுவதற்கு செலவிட வேண்டிய நேரமும், உழைப்பும் உரிய பலனை அளிக்காது. எனவே இந்தத் தகவலை அளிக்க இயலாமைக்கு அரசாங்கம் வருந்துகிறது.

# 293

## *டில்லியில் வீடுகள் விற்பனையில் நடைபெறும் லாப வேட்டை

57. திரு. சத்திய நாராயண் சின்கா: டில்லி நகரத்தில் வீட்டுச் சொத்து விற்பனைகளில் கொள்ளை லாபம் கிடைக்கிறது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் விளக்குவாரா? அவ்வாறானால், அதைத் தடுக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இதுகுறித்து அரசாங்கத்திற்கு எவ்விதத் தகவலுமில்லை.

(ஆ) மாண்புமிகு உறுப்பினர் கூறிய தகவலைத் தவிர, கேள்வியே எழவில்லை; டில்லி நகரில் தனியார் வீட்டுச் சொத்து விற்பனையை ஒழுங்குபடுத்தக்கூடிய எந்த நடவடிக்கையையும் அரசாங்கம் எடுக்கவில்லை.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 8, 1945, பக்கம் 1039.

# 294

## *பிரிட்டனில் தொழிலாளர் நல அதிகாரிகளுக்குப் பயிற்சி

*810. திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிப்பாரா:

(அ) தொழிலாளர் நல அதிகாரிகள் இங்கிலாந்துக்கு பயிற்சிக்காக அனுப்பப்படுகிறார்களா?

(ஆ) இதன் நோக்கமும் பயிற்சி முறையும் என்ன?

(இ) எத்தனை பேரை அனுப்பத் திட்டமுள்ளது? இந்தத் திட்டத்திற்கான செலவு எவ்வளவு?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) ஆம்.

(ஆ) தொழிலாளர் நிர்வாகம் குறித்த பிரச்சினைகளைச் சமாளிப்பதற்கு அனுபவமிக்க, தக்க பயிற்சி பெற்ற ஊழியர்களைப் பயிற்றுவித்து உருவாக்குவது இதன் நோக்கம். உதாரணத்திற்குச் சொல்வதென்றால் தொழில் தகராறுகள் தீர்ப்பது உள்ளிட்டு தொழியியல் உறவுகள், தொழிற்சாலை சோதனை, தொழிலாளர் நலம், ஊதிய ஒழுங்கமைப்பு, அது சரிவர உள்ளதா என்று பரிசோதித்தல், வேலை வாய்ப்பு நிறுவனங்கள், பணிவிடுப்பு மற்றும் மறுவாழ்வு இவை அனைத்தும் இந்தியாவிற்கு உடனடி முக்கியத்துவம் வாய்ந்தவை. இந்தப் பயிற்சித் திட்டமானது பிரதானமாக மேலே கூறிய அனைத்துப் பயிற்சிகளையும் கொண்டிருக்கும் என்பதோடு அந்தப் பயிற்சியின் ஒரு பகுதி தொழிலாளர் அமைச்சகத்தின் தலைமையகத்தில் நடக்கும்; இதர பகுதி இங்கிலாந்தின் இதர மையங்களில் நடக்கும். அது ஆறு முதல் எட்டு மாத காலத்திற்கு நடக்கும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 8, 1945, பக்கம் 1167.

(இ) ஒவ்வொன்றும் 20 அதிகாரிகள் கொண்ட மூன்று குழுக்களை அனுப்பத் திட்டமிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு குழுவிலும் 12 மத்திய அரசாங்க அதிகாரிகளும் 8 மாகாண மற்றும் சமஸ்தான அரசாங்க அதிகாரிகளும் இருப்பார்கள். முதல் குழுவில் இடம் பெறும் மத்திய அரசாங்க அதிகாரிகள் 12 பேருக்கு நிதி அனுமதிக்கப் பட்டு விட்டது. இதனால் மத்திய அரசாங்கத்திற்கு 1 லட்சம் ரூபாய் செலவாகும். மாகாண அரசாங்கங்களும், சமஸ்தான அரசாங்கங் களும் அவை அனுப்பும் அதிகாரிகளுக்கான செலவை ஏற்கும்.

*சர்தார் சாந்த் சிங்:* இந்தத் தேர்வுகளை எவ்வாறு செய்யப் போகிறார் என்பதை மாண்புமிகு உறுப்பினர் கூறுவாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மாகாணங்கள் மற்றும் சமஸ்தானங்களின் பயிற்சியாளர்களை தெரிவு செய்வது அந்த அரசாங்கங்களைச் சார்ந்தது. மத்திய அரசாங்க அதிகாரிகள் தேர்வு சம்பந்தப்பட்டமட்டில் அது இந்தியாவின் மத்திய அரசாங் கத்தையே சாரும். இந்தத் தேர்வுகளைச் செய்வது வகுப்புவாரி அடிப்படையில் இருக்குமா என்பது என்னுடைய மதிப்பிற்குரிய நண்பரின் கேள்வியானால், அந்தக் கோட்பாட்டை பின்பற்ற நான் கருதியுள்ளேன் என்று அவருக்குக் கூற விரும்புகிறேன்.

*சர்தார் சாந்த் சிங்:* கல்வித் தகுதிகள் சம்பந்தப்பட்ட மட்டில் நல்ல தகுதி பெற்றவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அதுவும் தகுதி களுள் ஒன்றாக இருக்கும்.

*திரு. லால்சந்த் நாவல்ராய்:* இத்தகைய அதிகாரிகள் அந்தந்தத் துறைகளின் தலைவர்களால் தேர்ந்தெடுக்கப்படுவார்களா அல்லது ஏதேனும் ஒரு குழுவால் தேர்ந்தெடுக்கப்படுவார்களா என்பதை மாண்புமிகு உறுப்பினர் மூலம் நான் அறியலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அவர்கள் வெவ்வேறு இலாகாக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

*முகமது யாமின் கான்:* அவர்கள் ஏற்கனவேயே அரசாங்கப் பணியிலுள்ள அதிகாரிகளா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம், அவர்கள் ஏற்கனவேயே பணியிலுள்ள அதிகாரிகள் ஆவர்.

*திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:* பெண் தொழிலாளி களின் நலன், மிகுந்த முக்கியத்துவமுடையதென்பதால் பெண்களை யும் இந்தக் குழுவில் அரசாங்கம் சேர்க்குமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம்.

# 295

## *சுரங்கங்களில் மகப்பேறு நல உதவி (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* ஐயா, 1941ம் வருட சுரங்கங்கள் மகப்பேறு நல உதவி சட்டத்தை மேலும் திருத்துவதற்கான ஒரு மசோதாவை அறிமுகப்படுத்த அனுமதி கோருகிறேன்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):* தீர்மானம் வருமாறு:

> ''1941ம் வருடத்திய சுரங்கங்கள் மகப்பேறு நல உதவி சட்டத்தை மேலும் திருத்தக் கோரும் மசோதாவிற்கு அனுமதி வேண்டப்படுகிறது.''

தீர்மானம் ஏற்கப்பட்டது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, மசோதாவை நான் அறிமுகப்படுத்துகிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 8, 1945, பக்கம் 1206.

# 296

## தொழிற்சாலைகள் (இரண்டாவது திருத்த) மசோதா

## *தெரிவுக்குழுவின் அறிக்கை சமர்ப்பிக்கப்படுதல்

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, 1934ம் வருடத்திய தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்தக் கோரும் மசோதா மீதான தெரிவுக் குழுவின் அறிக்கையை சமர்ப்பிக்கிறேன்.*

# 297

## +பொது பட்ஜெட் - கோரிக்கைகள் பட்டியல் - தொடர்ச்சி

*திருமதி ரேணுகா ரே (அலுவல்சாரா நியமன உறுப்பினர்): ஐயா, எதிலும் சாராத உறுப்பினர்களுக்கென ஒதுக்கப்பட்ட நேரத்தில் தொழிலாளர் நலத்துறை தலைப்பின் கீழ் உள்ள கோரிக்கை எண். 23 கீழ் உள்ள தீர்மானங்களின் மொத்த பட்டியலில் திரு. என்.எம். ஜோஷியின் தீர்மானத்திற்குப் பிறகு என்னுடைய 189ஆம் எண்ணுள்ள வெட்டுத் தீர்மானத்தை முன்மொழிய விரும்புகிறேன். எதிலும் சாராத உறுப்பினர்களான திரு. பிராங்க் அந்தோணியும், சர்தார் சாந்த் சிங்கும், திரு. ஹுசேன்பாய் லால்ஜியும் தங்களுடைய வெட்டுத் தீர்மானங்களுக்கு முன்னதாக என்னுடைய வெட்டுத் தீர்மானத்தை எடுத்துக் கொள்ள சம்மதம் தெரிவித்திருக்கிறார்கள்.*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 10, 1945, பக்கம் 1311.

+ முன் சொன்னது, தொகுதி II, மார்ச் 10, 1945, பக்கம் 1312.

அதன்படி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்கும் நான் தகவல் அளித்துள்ளேன். இந்த ஏற்பாட்டிற்கு நீங்கள் அன்புடன் சம்மதிப்பீர்களென்று நம்புகிறேன்.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): அரசாங்க உறுப்பினர் இதற்கு ஏதாவது ஆட்சேபனை தெரிவிக்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்) இவ்விஷயத்தில் எனக்கெந்த உரிமையும் இல்லை. இந்த விஷயம் முழுவதும் உங்கள் விருப்பத்திற்கு உட்பட்டது, ஐயா.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): மதிப்பிற்குரிய உறுப்பினர் எதிலும் சாராத உறுப்பினர்களின் தீர்மான நேரத்தில் இதை முன்மொழிய அனுமதி பெற்றிருப்பதாலும், இந்தத் தீர்மானத்திற்கு அரசாங்கம் தனது பதிலைத் தர திங்கட்கிழமை அல்லது செவ்வாய்க்கிழமை வரை போதுமான கால அவகாசம் பெற்றிருப் பதாலும், இந்தத் தீர்மானம் நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப்பட நான் அனுமதிக்கலாம் எனக் கருதுகிறேன்.

# 298

## *பதிவு செய்யப்பட்ட தொழிற்சங்கங்கள்

*814.* **திரு. மனு சுபேதார்:** (அ) இந்தியாவில் பதிவு செய்யப்பட்ட தொழிற்சங்கங்கள் எத்தனை உள்ளனவென்பதையும், அவற்றின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை எவ்வளவு என்பதையும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) அரசாங்கத் தொழில் நிலையங்கள் நீங்கலாக தொழில்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 8, 1945, பக்கம் 1171.

கூடங்களில் வேலையிலுள்ள நபர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

(இ) தபால், தந்தி, ரயில்வே போன்ற அரசாங்க நிறுவனங் களில் பணியாற்றும் ஊழியர்களுக்கான தொழிற்சங்கங்களை அர சாங்கம் எந்த அடிப்படையில் அங்கீகரித்துள்ளது?

(ஈ) இந்திய அரசாங்கத்தின் சிவில் துறைகளின் கீழ்நிலைப் பணியிலுள்ளவர்கள் தங்களுடைய நியாயமான குறைகள் குறித்து, குறிப்பாக யுத்தத்தின் காரணமாக அகவிலைப்படி குறித்து கோரிக்கை களை முன்வைக்க அரசாங்கம் என்ன வழிவகை ஏற்பாடு செய் துள்ளது?

(உ) கடந்த ஐந்தாண்டுகளில் இந்திய அரசாங்கம், இந்திய தொழிற்சங்கங்களுக்கு என்ன உதவி அல்லது பங்களிப்பு அல்லது மானியம் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ என்ன நோக்கங்களுக்கு அளித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) 1942 மார்ச் மாதம் 31 ஆம் தேதியன்று 747 பதிவு செய்யப்பட்ட தொழிற் சங்கங்கள் இருந்தன; இவற்றில் 455 தொழிற்சங்கங்கள் அவற்றின் உறுப்பினர்கள் சம்பந்தப்பட்ட விவரங்களையும் சட்ட திட்டங் களையும் ஏனைய விளக்கங்களையும் சமர்ப்பித்தன; இவற்றின் உறுப்பினர் எண்ணிக்கை 5,73,520. இதற்கு பிந்தைய விபரம் தர இயலாததற்கு வருந்துகிறேன்.

(ஆ) கடைசியாகக் கிடைத்த அறிக்கைகள்படி, 1934 ஆம் வருடத்திய தொழிற்சாலைகள் சட்டத்தின்படி, தனியார் தொழிற் சாலைகளில் 1943ல் வேலை செய்தவர்கள் சராசரி தின எண்ணிக்கைப் படி சுமார் 21 லட்சம் பேர் ஆவர். சுரங்கங்களில் 1923ம் வருடத்திய சுரங்கங்கள் சட்டப்படி, வேலை செய்தவர்கள் எண்ணிக்கை 31/2 லட்சமாகும். அசாம் தேயிலைத் தோட்டங்களில் பதிவுப் புத்தகப்படி சராசரியாக வேலை பார்த்தவர்கள் எண்ணிக்கை 1942-43ல் 6 லட்சத் திற்கும் சற்று அதிகம்.

(இ) மத்திய அரசாங்கத்தின் தொழில்துறை ஊழியர்களின் சங்கங்களுக்கு அங்கீகாரம் தருவது சம்பந்தமான விதிமுறைகளின் ஒரு பிரதி அவையில் வைக்கப்பட்டுள்ளது.

(ஈ) சிவில் துறைகளில் உள்ள கீழ்நிலைப் பணியாளர்கள். தங்களுடைய குறைகளை வாய் மூலமோ அல்லது எழுத்து மூலமோ தங்கள் துறைத் தலைவர்களுக்குத் தெரியப்படுத்தலாம்; அல்லது அதே தரத்தில் உள்ள அதிகாரிகளை அணுகலாம்; அல்லது அங்கீகரிக்கப்பட்ட சங்கங்கள், ஊழியர் கவுன்சில்கள் அல்லது வேலைக் குழுக்கள் எங்கிருக்கின்றனவோ அங்கே அவற்றின் மூலமாக அத்தகைய அதிகாரிகள் அல்லது அரசாங்கத்தை அணுகலாம். 1938ம் ஆண்டு ஆகஸ்டு 24ம் தேதியிட்ட உள்துறை குறிப்பாணை எண். 106/38ல் கொடுத்துள்ள கட்டளைகளுக்கேற்ப பாதிக்கப்பட்ட எந்தவொரு அரசாங்க ஊழியரும் தன்னுடைய துறைத் தலைவருக்கோ அல்லது இந்திய அரசாங்கத்திற்கோ முறையீடு செய்யலாம்; அந்தக் குறிப்பாணை, அவையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

(உ) ரயில்வேத் துறையானது, சங்க நிர்வாகிகளான ரயில்வே ஊழியர்களுக்கு நேர்வு விடுமுறை, சங்கத்தின் கூட்டங்களில் கலந்து கொள்ள இலவச ரயில்வேப் பயணச் சீட்டுகள் போன்ற வசதிகளை தருகிறது. இந்திய அரசாங்கம் தொழிலாளர் சங்கங்களுக்கு வேறெவ்வித நேரடி உதவியும் தருவதில்லை.

# 299

## *யுத்தப் பொருட்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகளில் தொழிலாளிகளின் வேலை நேரங்கள், ஊதியங்கள் போன்றவை

+936. திரு. அமரேந்தி நாத் சட்டோபாத்தியாயா: (அ) யுத்தப் பொருட்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகளிலும், சுரங்கங்களிலும் வேலை செய்யும் தொழிலாளிகள் தொடர்ச்சியாக எத்தனை மணி நேரம் வேலை செய்ய வேண்டியிருக்கிறதென்பதையும், அவர்களுடைய உழைப்பிற்கு என்ன ஊதியங்கள் கொடுக்கப்படுகின்றன என்பதையும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் விளக்குவாரா?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 13, 1945, பக்கம் 1407.

+ இக்கேள்வியைக் கேட்டவர் சபையில் இல்லாததால் அதற்கான பதில் அவையில் வைக்கப்படுகிறது.

*(ஆ) இதே தொழிலாளிகள் அதே தொழிற்சாலைகள் மற்றும் சுரங்கங்களில் ஷிப்டுகளில் வேலை செய்கிறார்களா?*

*(இ) தொழிற்சாலைகளிலும், சுரங்கங்களிலும் வேலை செய்யும் தொழிலாளிகளுக்கு மிகை நேர உழைப்பு ஊதியங்கள் என்ன விகிதத்தில் தரப்படுகின்றன?*

*(ஈ) தொழிற்சாலைகளிலும், சுரங்கங்களிலும் வேலை செய்யும் தொழிலாளிகளுக்கு அளிக்கப்படும் ரேஷன் என்ன கட்டணத்தில் தரப்படுகிறது? மில்கள், தொழிற்சாலைகள் மற்றும் சுரங்கங்களில் ஒவ்வொரு தொழிலாளிக்கும் எந்தளவு ரேஷன் தரப்படுகிறது? தொழிற்சாலைகள், மில்கள் மற்றும் சுரங்கங்களிலுள்ள தொழிலாளிகளுக்கு ரேஷன் வினியோகத்தை கண்காணிக்க அரசாங்கம் அதிகாரி எவரையேனும் நியமித்துள்ளதா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) தொழிற்சாலைகளில் வேலை நேரம் என்பது 1934 ஆம் வருடத்திய தொழிற்சாலைகள் சட்டம் 34, 36-38 பிரிவுகள்படி ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது; சுரங்கங்களில் 1923 ஆம் வருடத்திய இந்திய சுரங்கங்கள் சட்டத்தின் 22 பி மற்றும் 22 சி பிரிவுகள்படி ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது. யுத்தத்திற்குத் தேவையான பொருட்களைத் தயாரிக்கும் தொழிற்சாலைகள் சம்பந்தப்பட்டமட்டில், மாகாண அரசாங்கங்கள் இந்தப் பிரிவுகள் அனைத்திலுமிருந்தோ அல்லது சிலவற்றிலிருந்தோ விலக்கு அளிக்கிறது. குறுகிய காலத்திற்கு அல்லது அவசர நிலைமைகள் நீங்கலாக வேலை நேரம் என்பது வாரத்திற்கு 60 மணி நேரத்திற்கு மேல் போகக் கூடாதென்று ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. சாதாரணமாக, இடைவேளை, ஓய்வு போன்ற சட்டபூர்வ தேவைகளிலிருந்து விதிவிலக்குகள் அளிக்கப்படுவதில்லை. மேலும் சரியான தகவல் கிடைக்காததற்கு வருந்துகிறேன்.*

*ஊதிய விகிதங்கள், தொழிற்சாலைகளின் வெவ்வேறு பிரிவினருக்கும் சுரங்கங்களில் ஒரு குறிப்பிட்ட பிரிவில் வெவ்வேறு யூனிட்டுகளுக்குமிடையில் கணிசமாக வேறுபடுகிறது. ஊதியங்கள் அல்லது ஊதியங்களின் பொதுவான சராசரிகள் குறித்து விரிவான தகவல் கிடைக்காமைக்கு வருந்துகிறேன்.*

*(ஆ) இந்தக் கேள்வி புரியவில்லை.*

*(இ) 1934 ஆம் ஆண்டின் தொழிற்சாலைச் சட்டம் 47வது பிரிவு, தொழிற்சாலைகளில் மிகைநேர உழைப்பு ஊதிய விகிதங்கள்*

குறித்துக் கூறியுள்ளது. பொதுவாக, இந்தப் பிரிவின் விதிகளிலிருந்து எவ்வித விதிவிலக்கும் அனுமதிக்கப்படுவதில்லை. சுரங்கத்தின் பாதுகாப்பிற்கோ அல்லது அங்கே வேலை செய்பவர்களின் பாது காப்பிற்கோ பெரும் ஆபத்து ஏற்படும் என்ற அவசர நிலை இருந்தா லொழிய சுரங்கங்களில் மிகை நேர வேலை அனுமதிக்கப்படுவ தில்லை.

(ஈ) தொழிற்சாலைகளிலும், மில்களிலும் உள்ள தொழிலாள ருக்கு அளிக்கப்படும் ரேஷன் பொருட்களின் விலைகள் சம்பந்தப் பட்டமட்டில் அவை ஒரே மாதிரியாக இருப்பதில்லை. ஆனால் பல தொழிற்சாலை உரிமையாளர்கள் உணவு தானியங்கள் போன்ற வற்றைக் கட்டுப்பாட்டு விலையைவிடக் குறைவாகவும், பெரும் பாலோர் கட்டுப்பாட்டு விலைக்கும் வினியோகிக்கிறார்கள்.

'ரேஷன்' உள்ள பகுதிகளில், பொதுமக்களுக்குக் கிடைக்கும் அதே அளவிற்கு ரேஷன் பொருட்களை தொழிலாளர்கள் பெறு கிறார்கள். 'கடினமான உழைப்புத் தொழிலாளிகள்' கூடுதல் ரேஷன் பெற தகுதியானவர்கள். தவிர, சமைக்கப்பட்ட உணவை வழங் கவும் தொழிற்சாலைச் சிற்றுண்டிச்சாலைகள் ரேஷனில் அல் லாமல் வெளியிலிருந்தும் தானிய வழங்கீடுகளைப் பெறுகின்றன.

பீகாரிலுள்ள சுரங்கத் தொழிலாளிகளுக்கு வாராந்திர ரேஷன் கள் கட்டுப்பாட்டு விலையில் அளிக்கப்படுகின்றன; அங்கே ஒவ் வொரு தொழிலாளிக்கும் அவரைச் சார்ந்துள்ள வயதுவந்த ஒருவருக் கும் தலா 4 சேர்கள் வீதமும், ஒரு குழந்தைக்கு 2 சேர்கள் வீதமும், பருப்பு, ரேஷன் அளவில் நான்கில் ஒரு பகுதி ஒரு ரூபாய்க்கு 6 சேர் கள் வீதமும் சலுகைக் கட்டணத்தில் அளிக்கப்படுகிறது. இதுதவிர, 1/2 சேர் அரிசி அல்லது இதர உணவுத் தானியம், சுரங்கத்தில் ஒவ்வொரு முறை வேலை செய்யும் போதும் இலவசமாக அளிக்கப்படுகிறது. வங்காளத்திலுள்ள சில சுரங்கங்கள் இதே அளவை சற்று மாற்றி வழங்குகின்றன; இதர சுரங்கங்கள் குறைந்த கட்டணத்தில் ஒரு தொழிலாளிக்கு ஒரு வாரத்திற்கு 6 சேர்கள் என்று ஒரே மாதிரியாக வழங்குகின்றன. மத்திய மாகாணத்திலும், பேராரிலும் உள்ள சில சுரங்கங்களில் வயது வந்த தொழிலாளிக்கு 1 வாரத்திற்கு 6 சேர்கள் வீதமும், அவரைச் சார்ந்துள்ள ஒவ்வொரு பெண்ணுக்கும் 3 1/2 சேர்கள் வீதமும், ஒவ்வொரு குழந்தைக்கும் 1 3/4 சேர்கள் வீதமும் சலுகை கட்டணத்தில் ரேஷன் வழங்கப்படுகிறது. தொழிலாளிகளுக்கு ரேஷன் வழங்கப்படுவதை கண்காணிக்க வழக்கமான உணவு ரேஷன் அமைப்புகள் நீங்கலாக வேறெந்த விசேஷ அரசாங்க அதிகாரி

களும் நியமிக்கப்படவில்லை. எனினும், நிலக்கரி சுரங்கங்களைப் பொறுத்தமட்டில் ரேஷன் ஆய்வாளர்கள் ஆறுபேர் நியமிக்கப்பட்டுள்ளனர்; மூன்றுபேர் பீகார் அரசாங்கத்தின்கீழ் பீகாருக்கும் மூன்று பேர் வங்காளத்திற்கும் எனச் சுரங்கத் துறையில் இணைக்கப்பட்டிருக்கின்றனர்.

# 300

## *தொழிலாளருக்குக் குறைந்தபட்ச வாழ்க்கை ஊதியம் நிச்சயித்தல்

+937. திரு. அமரேந்திர நாத் சட்டோபாத்தியாயா: (அ) தொழிற்சாலைகள், மில்கள் மற்றும் சுரங்கங்களில் வேலை செய்யும் தொழிலாளிகளுக்குத் தேவைப்படும் அத்தியாவசிய உணவுப் பொருள்கள், துணிமணிகள் போன்றவற்றின் விலைகளுக்கு ஏற்ப அவர்களுக்குக் குறைந்தபட்ச வாழ்க்கை ஊதியத்தை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் நிர்ணயித்துள்ளாரா?

(ஆ) தொழிற்சாலைகள், மில்கள் மற்றும் சுரங்கங்களில் வேலை செய்யும் தொழிலாளிகளின் பிள்ளைகளுக்கு கல்வி புகட்ட தகுந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதா? வயதுவந்த தொழிலாளிகளுக்கு ஏதாவது கல்வி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதா?

(இ) தொழிற்சாலைகள், மில்கள் மற்றும் சுரங்கங்களில் சம்பளத்துடன் கூடிய விடுமுறைக்கு வழிவகை செய்யப்பட்டுள்ளதா? மருத்துவ சிகிச்சைக்கு என்ன ஏற்பாடுகள் உள்ளன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மில்கள் உள்ளிட்டு தொழிற்சாலைகளிலும் அல்லது சுரங்கங்களிலும்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 13, 1945, பக்கம் 1407.

+ கேள்வி கேட்டவர் சபையில் இல்லாததால் இக்கேள்விக்கான பதில் அவையில் வைக்கப் படுகிறது.

உள்ள ஊழியர்களுக்கு குறைந்தபட்ச ஊதியம் நிச்சயிக்க சட்டம் ஒன்றும் இல்லை.

(ஆ) தொழிற்சாலைகள் அல்லது சுரங்கங்களுக்கு வெளியே தொழிலாளிகளின் பிள்ளைகளுக்கு அல்லது வயதுவந்த தொழிலாளிகளுக்கு கல்வி வசதிகள் மாகாண அரசாங்கத்தால் செய்யப்படுகின்றன.

சில நிறுவனங்களின் உரிமையாளர்கள் இவ்விரு நோக்கங்களின் பொருட்டு அவர்களே ஏற்பாடு செய்துள்ளனர்; ஆனால் இதுகுறித்து விரிவான தகவல் என்னிடம் இல்லை. தொழில் நிறுவனங்களின் உரிமையாளர்கள் சம்பந்தப்பட்டமட்டில் இது விஷயத்தில் அவர்களுக்கு எவ்வித சட்டபூர்வ கடமையும் கிடையாதென்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் அறிவார் என்பதில் ஐயமில்லை.

(இ) சம்பளத்துடன் விடுமுறை அளிக்க வேண்டுமென்று எவ்விதச் சட்டவிதிகளும் கிடையாது. தொடர்ந்து செயல்படும் தொழிற்சாலைகள் சம்பந்தப்பட்டவரை இவ்விஷயம் குறித்து ஒரு மசோதா அவை முன்பு உள்ளது; அந்த மசோதா தற்போது தெரிவுக் குழுவிற்கு அனுப்பப்பட்டுள்ளது.

சட்டப்படி தருவதுபோக, பல நிறுவனங்கள், அவற்றின் ஊழியர்களுக்கு வெவ்வேறு முறையில் சம்பளத்துடன் கூடிய விடுமுறைகள் அளிக்கின்றன.

மருத்துவ சிகிச்சை சம்பந்தப்பட்டமட்டில், ஒரேயொரு சட்டபூர்வமான விதிமுறை என்பது தொழிற்சாலைகளிலும், சுரங்கங்களிலும் முதல் உதவி சிகிச்சை அளிப்பது என்பதுதான். சில நிறுவனங்கள் மருந்து மட்டும் தரும் இடங்களையும், மருத்துவ மனைகளையும் நடத்துகின்றன; ஆனால் ஊழியர்கள் இவை நீங்கலாக மாகாண அரசாங்கங்கள் அளிக்கும் மருத்துவ வசதிகளையும் சார்ந்திருக்க வேண்டியுள்ளது.

# 301

## *சுரங்கங்களில் பெண் தொழிலாளிகள்

938. **திரு. அமரேந்திர நாத் சட்டோபாத்தியாயா:** (அ) சுரங்கங்களிலுள்ள பெண் தொழிலாளிகள் எண்ணிக்கை எவ்வளவு; சுரங்கங்களில் குழந்தை உழைப்பாளிகள் அதாவது சுரங்கங்களில் சிறுவர்கள் இருந்தால் என்ன வயதில் உள்ளனர்?

(ஆ) தொழிற்சாலைகள், மில்கள் மற்றும் சுரங்கங்களில் பெண்களுக்கு எத்தகைய மகப்பேறு நல உதவிகள் அளிக்கப்படுகின்றன? சுரங்கங்களில் பெண் தொழிலாளிகள் எவ்வளவு காலம் நீடிக்க வேண்டுமென்று மாண்புமிகு உறுப்பினர் உத்தேசித்திருக்கிறார்?

(இ) தொழிற்சாலைகள், மில்கள் மற்றும் சுரங்கங்களில் தொழிலாளர் நல அதிகாரிகளின் செயல்பாடு என்ன? அவர்களுடைய தகுதிகள் யாவை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 1943ல் சுரங்கங்களில் 72,403 பெண் தொழிலாளிகள் இருந்தனர் (இந்த எண்ணிக்கையானது நிலத்தடியில் வேலை செய்பவர்களையும் சேர்த்தது).

1944 ஆம் ஆண்டுக்கான எண்ணிக்கைகள் கிடைக்கவில்லை. இந்தியச் சுரங்கங்கள் சட்டத்தின்படி, சுரங்கங்களில் சிறுவர்கள் வேலைக்கு அமர்த்தப்படுவதில்லை.

(ஆ) தற்பொழுது அமலில் உள்ள (அல்லது வரவிருக்கும்) மகப்பேறு நல உதவிகள் சட்டத்தின் முக்கியமான விதிகள் சிலவற்றை காண்பிக்கும் ஒரு விரிவான அறிக்கை அவையில் வைக்கப்பட்டுள்ளது. பம்பாயிலிருந்தும், சென்னையிலிருந்தும் சமீபத்தில் கிடைத்த தகவல்கள்படி அந்த மாகாணங்களிலுள்ள சில மில்கள்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 13, 1945, பக்கம் 1408-09.

தினசரி எட்டு அணாக்கள் என்றளவிலிருந்த சட்டபூர்வ மகப்பேறு நல உதவியை தினசரி 12 அணாக்கள் என்றளவுக்கு அதிகரித்துள்ளன.

கேள்வியின் இரண்டாவது பகுதியைப் பொறுத்தமட்டில் சுரங்க வேலைகளிலிருந்து பெண்களை முற்றிலும் அகற்றிவிடும் உத்தேசம் எதுவும் கிடையாது.

(உ) பொதுவாக தொழிலாளர் நல அதிகாரிகளின் பணி யாவது:

(1) தொழிலாளர் உறவுகளின் அனைத்து அம்சங்கள் குறித்தும், வேலை நிலைமைகள் குறித்தும் தொழிற்சாலை உரிமையாளர்கள் மற்றும் தொழிலாளிகளுக்கிடையே நெருக்கமான தொடர்பை ஏற்படுத்துதல்;

(2) தொழிற்சாலை உரிமையாளர்களுக்கும் தொழிலாளிகளுக்குமிடையே நல்லெண்ணத்தையும், நெருக்கமான கூட்டுறவையும், ஒருவர் சிரமத்தை மற்றவர் புரிந்து கொள்ளும் மனோபாவத்தையும் உருவாக்குதல்;

(3) தொழிலாளருடைய நலன் குறித்து ஆக்கபூர்வமான ஆலோசனைகளை வழங்குதல் மற்றும் நிறுவனத்தின் அனைத்து நல்வாழ்வு நடவடிக்கைகளையும் மேற்பார்வை செய்தல்;

(4) தொழிலாளர்களுடைய குறைகளை நன்றாக தெரிந்து கொள்ளுதல்; அத்தகைய குறைகளுக்கு தீர்வு காணுதல், உரசலுக்கான காரணங்களை அகற்ற முயற்சித்தல்.

தகுதிகள் சம்பந்தப்பட்டமட்டில், கல்வித் தகுதிகளுக்கு உரிய முக்கியத்துவம் அளிக்கப்படும்போதே, வேட்பாளர்களின் அத்தியாவசியத் தகுதியானது சமூகப் பணியில் அனுபவம் என்பதாகும்; கல்கத்தா பல்கலைக்கழகம் அல்லது பம்பாயின் சர் தோராப்ஜி டாட்டா சமூகப் பணி பட்டப் படிப்புக் கழகம் போன்றவற்றிலிருந்து ஓர் அங்கீகரிக்கப்பட்ட பயிற்சி பாடத்தை வெற்றிகரமாக முடித்துள்ளவர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.

**மாகாணங்களிலும், சுரங்கங்களிலும் தற்பொழுது அமுலில் உள்ள (அல்லது எதிர்பார்க்கப்படுகிற) மகப்பேறு நல உதவிகள் குறித்த சட்டத்தின் சில முக்கியமான அம்சங்களைக் காண்பிக்கும் ஒப்புநோக்கு அறிக்கை**

| மாகாணம் | நிறைவேற்றப் பட்ட வருடம் | தகுதிக் காலம் (மாதங்கள்) | மகப்பேறு நல உதவிகள் பெறும் அதிகபட்ச காலம் (வாரங்கள்) | மருத்துவ வசதிகள் விகிதம் | விதியை மீறும் உரிமை யாளருக்கு விதிக்கப்படும் அபராதம் |
|---|---|---|---|---|---|
| பம்பாய் | 1929 | 9 | 8 | ஒரு நாளுக்கு எட்டணா அல்லது சராசரி தினக்கூலி இவற்றில் எதுகுறைவோ அது. ஆனால் பம்பாய் மற்றும் அகமதாபாத் நகரங் களில் ஒரு நாளுக்கு எட்டணா | ரூபாய் 500 |
| மத்திய மாகாணம் மற்றும் பேரார் | 1930 | 9 | 8 | 8 அணா தினமும் அல்லது சராசரி தின ஊதியம் எது குறைவோ | ரூபாய் 500 |
| மெட்ராஸ் | 1934 | 240 நாட்கள் (8 மாதங்கள்) ஒரு வருட காலத்தில் | 7 | தினமும் 8 அணாக்கள் | ரூபாய் 250 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| ஐ.மா. | 1938 | 6 | 8 | தினமும் 8 அணாக்கள் அல்லது சராசரி தின ஊதியம் எது அதிகமோ | முதல் குற்றத்திற்கு ரூ. 500 இரண்டாவது மற்றும் அதைத் தொடர்ந்த குற்றங்களுக்கு ரூபாய் 1000 |
| வங்காளம் | 1939 | 9 | 8 | ,, | 500 ரூபாய் |
| பஞ்சாப் | 1943 | 9 | 60 நாட்கள் | நாளொன்றுக்கு 12 அணாக்கள் | 500 ரூபாய் |
| அசாம் | 1944 | 150 நாட்கள் | 8 | 1. தோட்டங்களில், கர்ப்பமாவதற்கு முன்பு வாரம் 1 ரூபாய். கர்ப்பமானபின் வாரமொன்றுக்கு ரூ. 1 1/4 ஆனால் மொத்த பணம் அளிக்கப்படுவது ரூ. 14<br>2. இதர வேலைகளில் வாரம் 2 ரூபாய் அல்லது சராசரி வார சம்பளம் அல்லது ஊதியம் எது அதிகமோ | ரூ. 500 |
| சுரங்கங்கள் (இந்திய சுரங்கங்கள் மகப்பேறு நல உதவிகள் சட்டம்) | 1941 | 6 | 8 | தினமும் 8 அணா | 500 |

# 302

## *இங்கிலாந்தில் தொழிலாளர் நலத்துறையில் இந்தியர்களுக்குப் பயிற்சி அளித்தல்

+939. திரு. அமரேந்திர நாத் சட்டோபாத்யாயா: தொழிலாளர் நலத்துறையில் பயிற்சி பெற கணிசமான அளவில் ஆண் ஊழியர்களைத் தொழிலாளர் நலத்துறை இங்கிலாந்துக்கு அனுப்பி வைக்கப் போவது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா? இது உண்மையானால் அரசாங்கம் அவர்களை இந்தியாவிலேயே பயிற்றுவிக்க முடியாமற் போனது ஏன்? அவர்களது பயிற்சித் திட்டச் செலவுத் தொகை எவ்வளவு? அத்தகைய பயிற்சி பெறுபவர்களுக்கு உரிய குறைந்த அளவு தகுதி என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இருபது அதிகாரிகளைக் கொண்ட மூன்று தொகுதியினரை அனுப்பிவைக்க முன்மொழியப்பட்டுள்ளது. அந்த இருபது அதிகாரிகளில் பன்னிரண்டு பேர் மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்தவர்களாகவும் மீதி எட்டு பேர் மாகாண அரசாங்கத்தைச் சேர்ந்தவர்களாகவும் இருப்பர். பன்னிரண்டு மத்திய அரசு அதிகாரிகள் உள்ளிட்ட முதல் தொகுதியினர் பயிற்சிக்கு அனுப்பி வைக்கப்படுவதற்கு நிதி வழங்கப்பட்டு விடும்.

யுத்தம் முடிந்த கையோடு, தொழிலாளர் நிர்வாகத் துறைக்குத் தேவைப்படும் பயிற்சியும் அனுபவமும் இந்தியாவில் உடனடியாகக் கிடைத்துவிடாது, அதற்கு நீண்ட காலம் பிடிக்கும். ஆகவே, இங்கிலாந்து போன்ற பெரிதும் தொழில் வளர்ச்சி அடைந்த பிற

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 13, 1945, பக். 1409-10.

\+ இக்கேள்விக்கான விடை அவையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது. கேள்வி கேட்டவர் அவையில் இல்லை.

நாடுகளின் அனுபவம் மற்றும் நடைமுறையின் அனுகூலங்களைத் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

முதல் தொகுதியில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளவர்களின் பயிற்சிக்கு ஒரு லட்ச ரூபாய் மத்திய அரசாங்கத்துக்குச் செலவாகும் என மதிப்பிடப்பட்டுள்ளது. மாகாண அரசுகளைச் சேர்ந்தவர்களுக்கான செலவுத் தொகையை அந்தந்த அரசுகள் ஏற்றுக்கொள்ளும்.

அவர்கள் அரசாங்க வேலையில் இருப்பவர்களாகவோ, அரசாங்கப் பதவிகளைப் பூர்த்தி செய்ய நியமிக்கப்பட்டவர்களாகவோ இருப்பதும் நலத்துறைப் பணியில் அல்லது தொழிலாளர் சட்ட மியற்றும் நிர்வாகத் துறையில் அனுபவம் பெற்றிருப்பதும் குறைந்த அளவுத் தகுதிகளாகும். உயர் கல்வித் தகுதி கொண்ட அதிகாரிகளுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.

# 303

## +டில்லி மாகாணத்தில் தொழிற்சாலை ஆய்வாளர்கள் மற்றும் தொழிலாளர் நல அதிகாரிகள்

964. **திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** பின்வரும் கேள்விகளுக்கு மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்பு கூர்ந்து பதிலளிப்பாரா?

(அ) டில்லி மாகாணத்தில் தொழிற்சாலை ஆய்வாளர்கள் மற்றும் தொழிலாளர் நல அலுவலர்கள் எத்தனை பேர் உள்ளனர்? அவர்களில் பெண்களும் இருக்கின்றனரா?

(ஆ) தொழிற்சாலைகளில் தொழிலாளர்களுக்கு முறையான குடியிருப்பு வசதிகளை வழங்குவதற்கான அவசரம் குறித்து இந்த

+ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 13, 1945, பக். 1422.

அதிகாரிகள் அறிக்கை அளித்துள்ளனரா? அவ்வாறானால், அரசாங்கம் என்னென்ன நடவடிக்கைகளை எடுத்துள்ளது அல்லது எத்தகைய நடவடிக்கை எடுக்க எண்ணியுள்ளது?

(இ) மேற்கண்ட (ஆ) கேள்விக்கானவிடை எதிர்மறையாக இருக்குமானால், இவ்விஷயத்தில் உடனடி அறிக்கை பெற அரசு உத்தேசித்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) தொழிற்சாலை ஆய்வாளர்கள் இருவர் முழுநேரப் பணியில் உள்ளனர். மேலும் இருவர் கூடுதல் பொறுப்பில் பகுதிநேரப் பணியில் ஈடுபட்டுள் ளனர். தொழிலாளர் நல மற்றும் மகப்பேறு மையம் அங்கில்லை. டில்லிக்கும் பொருந்துகிற 1929 ஆம் ஆண்டின் பம்பாய் மகப்பேறு நலச் சட்டத்தின்கீழ் ஓர் ஆய்வாளருக்குள்ள அதிகாரத்தை டில்லி நகராட்சி பயன்படுத்திக் கொள்கிறது.

(ஆ) இல்லை என்பதால் இதன் பின்பகுதியிலுள்ள கேள்விக் கான அவசியம் எழவில்லை.

(இ) தொழிற்சாலையில் பணிபுரியும் தொழிலாளர்களின் குடியிருப்பு வசதி பற்றிய பொதுவான பிரச்சினை காலப்போக்கில் கவனத்தில் கொள்ளப்படும். ஆகவே, இவ்விஷயத்தில் டில்லி மாகாணத்தில் மட்டும் விசேட அறிக்கை கோரும் யோசனை ஏதும் இல்லை.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** முழுநேரப் பணியில் பெண்கள் நல அலுவலர் ஒருவரை நியமிக்கும் யோசனையை அரசாங்கம் கருத்தில் கொள்ளுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆமாம். அது குறித்து கவனத்தில் கொள்வேன்.

**திரு. என்.எம். ஜோஷி:** வீட்டுவசதி குறித்த பதிலில் 'காலப் போக்கில்' என்றீர்களே, அதன் பொருள் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விளக்கம் தேவைப் படும் அளவுக்கு அவை ஒன்றும் வழக்கத்துக்கு மாறாகக் கூறப்பட்ட சொற்கள் அல்ல.

# 304

## *டில்லி தொழிற்சாலைகளில் தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துவதற்கான ஒப்பந்த முறை

965. திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்கு விடையளிக்க வேண்டுகிறேன்: டில்லி தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் ஒப்பந்த முறையில் வேலைக்கு அமர்த்தப்படுகிறார்களா? அவ்வாறானால் (i) அத்தகைய ஒப்பந்த முறை நடைமுறையில் உள்ள தொழிற்சாலைகளின் பெயர்கள் (ii) ஒப்பந்த முறையில் அவற்றில் வேலைபார்க்கும் ஆண்கள், பெண்களின் எண்ணிக்கை; (iii) அவர்களுடைய சராசரி தினக்கூலி மற்றும் கிராக்கிப்படி எவ்வளவு? மேலும் (iv) தொழிற்சாலைகள் சட்டத்தின்படியும், மகப்பேறு நலச் சட்டங்களின்படியும் தொழிலாளர்கள் பயன் அடைகிறார்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆமாம், சில தொழிற்சாலைகளில் ஒப்பந்த முறை உள்ளது. அத்தகைய சில தொழிற்சாலைகளின் பட்டியல் கைவசம் உள்ளது. ஒப்பந்தக்காரர்கள் மூலமாக எவ்வளவு தொழிலாளர்கள் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ளனர் என்ற விவரம் கிடைக்கவில்லை. ஆனால், அத்தகையோர் எண்ணிக்கை குறைவு. மேலும் நிலக்கரி அள்ளி, ஏற்றுகிற தொழிலில் ஒப்பந்தத் தொழிலாளர்கள் உள்ளனர். அவர்களுடைய சராசரி தினக்கூலி மற்றும் கிராக்கிப்படி பற்றிய தகவல் இப்போது கைவசம் இல்லை. ஆனால், கிராக்கிப்படி மாதம் ஒன்றுக்கு 10 முதல் 32 ரூபாய் என்ற அளவில் காணப்படுகிறது. கிராக்கிப்படி கொடுக்கப்படாத தொழிற்சாலைகளில் அடிப்படை சம்பளம் அதிகரிக்கப்பட்டுள்ளது. தொழிற்சாலைகள் மற்றும் பம்பாய் மகப்பேறு நலச் சட்டங்களின்படி தொழிற்சாலையில் பணிபுரியும் அனைவரும் பயனடைகிறார்கள்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 13, 1945, பக்கம் 1422-23.

***1945, மார்ச் 13 அன்று கேட்கப்பட்ட கேள்வி எண். 965ல் கேட்டுள்ள படி டில்லியில் எந்தெந்த தொழிற்சாலைகளில் ஒப்பந்தக்காரர்கள் மூலமாகத் தொழிலாளர்கள் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ளனர் என்ற பட்டியல் வருமாறு:***

1. பிர்லா காட்டன் ஸ்பின்னிங் அண்ட் வீவிங் மில்ஸ் லிமிடெட்.
2. மகாபீர் காட்டன் ஸ்பின்னிங், வீவிங் அண்ட் மேனுபேக்சரிங் கோ. லிமிடெட்.
3. டில்லி கிளாத் அண்ட் ஜெனரல் மில்ஸ் கோ. லிமிடெட்.
4. லத்தீப் பிரிண்டிங் பிரஸ்.
5. குவாலியர் பாட்டரீஸ் லிமிடெட்.
6. ஈஸ்வர் பாட்டரீஸ் லிமிடெட்.
7. டில்லி ஃபிளவர் மில்ஸ் கோ. லிமிடெட்.
8. டில்லி சென்ட்ரல் எலக்ட்ரிக் பவர் அத்தாரிட்டி லிமிடெட்.
9. டின் பிரிண்டிங் அண்ட் மெட்டல் ஒர்க்ஸ் லிமிடெட்.
10. கணேஷ் ஃபிளவர் மில்ஸ் (காய்கறி உற்பத்திப் பொருள்கள் தொழிற்சாலை).
11. அகர்வால் ஹோஷெரி மில்ஸ்.
12. ஆர்டெனன்ஸ் கிளாத்திங் ஃபேக்டரி.
13. மாலிக் அண்ட் க்யூரேசி.
14. ஹெச்.எஸ். சித்து, 26, தார்யாகஞ்ஜ், டில்லி.
15. கிர்தாரிலால் கௌரிசங்கர் டெக்ஸ்டைல் ஃபேக்டரி.
16. மெஸர்ஸ், பியாரிலால் அண்ட் சன்ஸ் (லாகூர்) லிமிடெட்.
17. தி பிரிமியர் டெக்ஸ்டைல் ஃபேக்டரி.
18. போனிக்ஸ் காட்டன் டேப் ஃபேக்டரி.
19. ஷர்மா டெக்ஸ்டைல் அண்ட் ஜெனரல் மேனுபாக்சரிங் கோ.
20. மெஸர்ஸ். அகர்லியாஸ் அண்ட் கோ. 50, காரிஸ்ட்டன், பேஷன் ரோடு, டில்லி.
21. மெஸர்ஸ். அகர்லியாஸ் அண்ட் கோ. 11 பி, ஃபெய்ஸ் பஜார், தார்யா கஞ்ஜ், டில்லி.
22. பிரிட்டிஷ் நிவார் ஃபேக்டரி.

23. யாதவ் நிவார் ஃபேக்டரி.
24. டில்லி-பிரஸ்.
25. சக்சாரியா பிரிண்டிங் ஒர்க்ஸ்.
26. பிரிட்டிஷ் மோட்டார் கார் ஒ.பி.எப். கோ, செக்ஷன்.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** புதுடில்லிக்கு வெகு அருகாமையில் டில்லி இருப்பதால் அரசாங்கம் வெகு விரைவில் இந்தத் தகவலைப் பெற்றுத் தருமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், உரிய நேரத்தில் பெற்றுத் தருவோம்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** தொழிலாளர்களைப் பணியில் அமர்த்திக் கொள்கிற இந்த ஒப்பந்த முறையிலுள்ள தீமைகளைக் கருத்தில் கொண்டு, அதற்கு முடிவுகட்ட உடனடி நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொள்ளுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது அரசாங்கம் தொடர்பான பிரச்சினை அல்ல.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** விசேட நடவடிக்கைகளை மேற்கொண்டு இந்த ஒப்பந்த முறையின் தீமைகளை ஒழித்துக் கட்டும்படி ராயல் கமிஷன் பரிந்துரைத்திருப்பது உண்மையா? இல்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசாங்கத் துறைகளில் ஒப்பந்தக்காரர்கள் மூலமாக தொழிலாளர்கள் அமர்த்தப்பட்டுள்ளனர் என்று ஏதேனும் தகவலை எனது மதிப்பிற்குரிய நண்பர் தெரிவிப்பாரானால் நிச்சயம் அவ்விஷயத்தில் கவனம் செலுத்தப்படும்.

**திரு. என்.எம். ஜோஷி:** ஒப்பந்த முறையின்கீழ் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ள தொழிலாளர்களின் நல்வாழ்வுப் பிரச்சினையைத் தொழிலாளர் நலத்துறை பிரச்சினை அல்ல என்று அரசாங்கம் கருதுகிறதா எனத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனது மரியாதைக் குரிய நண்பர் அவர் விரும்புகிற மாதிரி எப்படி வேண்டுமானாலும் அனுமானம் செய்து கொள்ள அவருக்கு உரிமை உண்டு.

# 305

## *டில்லி தொழிற்சாலைகளில் பெண்களின் சராசரிச் சம்பளம்

967. **திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வருவன பற்றி கருத்து தெரிவிக்க வேண்டுகிறேன்: (அ) டில்லி தொழிற்சாலைகளில் வேலை பார்க்கும் பெண்களின் சராசரி சம்பளம் என்ன? அவர்கள் தினக் கூலிகளா அல்லது மாதச் சம்பளக்காரர்களா?

(ஆ) அவர்களுக்கு வழங்கப்படும் கிராக்கிப்படி எவ்வளவு?

(இ) ஒரே மாதிரி வேலை பார்க்கும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் வழங்கப்படும் சம்பளம், கிராக்கிப்படி ஆகியவற்றில் வேறுபாடு நிலவுகிறதா? இருந்தால் அதற்கான காரணங்கள் என்ன?

(ஈ) நேரடியாகப் பணியில் அமர்த்தப்பட்ட பெண்களுக்கு வழங்கப்படுவது போல அதே சம்பளமும் கிராக்கிப்படியும் ஒப்பந்த முறை பெண்களுக்கும் வழங்கப்படுகிறதா? அதில் வேறுபாடு இருப்பின் அதற்கான காரணங்கள் என்ன?

(உ) தொழிற்சாலைகள் எவற்றிலேனும் மகப்பேறு மற்றும் குழந்தை நலவாழ்வு வசதிகள் வழங்கப்படுகின்றனவா? எந்த வகையில் வழங்கப்படுகின்றன?

(ஊ) இவற்றில் குழந்தைகள் காப்பகம் உள்ளதா? மேலும் தொழிலாளர்களது குழந்தைகளின் நலனுக்காக பிற வசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளனவா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 13, 1945, பக்கம் 1424-25.

(எ) (உ) (ஊ) ஆகிய கேள்விகளுக்கான பதில் எதிர்மறையாக இருக்குமானால், இதற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்யும்படி தொழிற்சாலை முதலாளிகளைக் கட்டாயப்படுத்த அரசாங்கம் உடனடி நடவடிக்கைகளை மேற்கொள்ளுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) டில்லி தொழிற்சாலைகளில் பணிபுரியும் பெண்களின் சராசரி சம்பளம் பற்றிய தகவல் உடனடியாகக் கிடைக்கவில்லை. சில தொழிற்சாலைகளில் பெண்கள் மாதச் சம்பளத்திற்கு வேலைபார்க்கிறார்கள். வேறு இடங்களில் வேலைக்கு ஏற்ப சம்பளம் பெறுகிறார்கள் அல்லது தினக்கூலியாக இருக்கிறார்கள்.

(ஆ) விரிவான தகவல்கள் இல்லை. ஆனால் பெண்களுக்குத் தரப்படும் கிராக்கிப்படி ரூ. 10 முதல் 32 என்ற அளவில் இருக்கிறது.

(இ) எங்களுக்குத் தெரிந்த வரையில் ஒரே மாதிரியான வேலை பார்க்கும் ஆண், பெண் தொழிலாளர் சம்பளம் மற்றும் கிராக்கிப்படி விஷயத்தில் வித்தியாசம் இருப்பதாகத் தெரியவில்லை.

(ஈ) இதுவரையில் பெண்கள் நேரடியாகவே தொழிற்சாலைகளில் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ளனர். ஒப்பந்தக்காரர்கள் மூலமாக அல்ல.

(உ) இரண்டு தொழிற்சாலைகளில் மகப்பேறு மற்றும் குழந்தை நல உதவிகள் வழங்கப்பட்டு வருகின்றன.

(ஊ) ஆம். இரண்டு தொழிற்சாலைகளில் குழந்தைகள் காப்பக வசதிகள் உள்ளன. ஒரு தொழிற்சாலையில் தினமும் தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு இலவசக் குளியல் வசதியும் சத்துணவும் தேவைப்படும் குழந்தைகளுக்கு தினமும் இலவசமாக 1/2 சேர் பாலும் வழங்கப்படுகிறது. மற்ற தொழிற்சாலைகள் நடத்துகிற பள்ளிகளில் தொழிலாளர் வீட்டு குழந்தைகளுக்கு இலவசக் கல்வி அளிக்கப்படுகிறது. மேலும் அங்கே எல்லா குழந்தைகளுக்கும் தினமும் அரை சேர் பால் இலவசமாக வழங்கப்படுகிறது.

(எ) இக்கேள்வியே எழவில்லை.

***சர் வித்தால் என். சந்தவர்க்கர்:*** *டில்லி மாகாண அரசாங்கம் தனக்கென ஒரு தொழிலளர் நலத்துறையைப் பெற்றிருக்கிறதா என்பதை நான் அறிந்து கொள்ளலாமா?*

***திருமதி ரேணுகா ரே:*** *நூல் நூற்பு ஆலைகளில் உள்ள 3500 பெண்களுக்குக் கிராக்கிப்படி வழங்கப்படவில்லை, மேலும் ஆண் களுக்குச் சமமான சம்பளமும் அவர்களுக்கு வழங்கப்படவில்லை என்ற விஷயம் தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்கு வியப்பாக இல்லையா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். மேலும் அவர் இதுகுறித்து விசாரணை நடத்திட ஆர்வம் கொண்டிருக் கிறாரா? இது உண்மை எனக் கண்டறிந்தால் அவர்களது குறை களை நிவர்த்திக்க உடனடி நடவடிக்கைகளில் ஈடுபடுவாரா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *மரியாதைக்குரிய சகோதரி கூறுவது எதுவும் எனக்கு வியப்பளிப்பதாக இருக்குமா என்றுதான் கூறினேன்.*

***திரு. என்.எம். ஜோஷி:*** *அவரது பதிலின் முதல் பகுதி (அ)யை வைத்துப் பார்த்தால், அவ்விஷயம் குறித்த தகவல் உடனடியாகக் கிடைக்கப் பெறவில்லை என்று தெரிகிறது; இத்தகைய தகவல் பெற அவர் தீவிர முயற்சி மேற்கொள்வாரா என்று அறிந்து கொள்ள விரும்புகிறேன்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *என்னால் முடிந் ததைச் செய்வேன்.*

***திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:*** *தொழிற்சாலை ஆய் வாளர்கள் அவ்வப்போது அளிக்க வேண்டிய தங்களது அறிக்கை களை அரசுக்கு அளித்திருக்கிறார்களா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன். தங்களுக்கு தகவல் இல்லை என்று அரசாங்கம் எப்படிச் சொல்லலாம்?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *டில்லி தலைமை ஆணையருக்கு இத்தகவல்கள் சென்றிருக்கக் கூடும்.*

***பேராசிரியர் என்.ஜி. ரங்கா:*** *ஐயா, மாண்புமிகு உறுப்பினர் கூறிய பதில் தொடர்பாக உங்களது வழிகாட்டலை எதிர்பார்க்*

கிறேன். அவரது பதில் ஒரு பெண்மணிக்கு இழைத்த அவதூறு போலத் தோன்றுகிறது.

*தலைவர் (மாண்புமிகு அப்துல் ரகீம்):* மாண்புமிகு உறுப்பினர் அப்படி ஏதும் அவதூறாகப் பேசி விட்டதாக நான் கருதவில்லை. இருப்பினும் கேள்வி கேட்ட அம்மணியிடமே இப்பிரச்சினையை விட்டுவிடலாம்.

*திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:* அவைத் தலைவர் அவர்களே, இன்றைக்கு அரசாங்கம் அளித்துள்ள பதில்களில் காணப்படும் தொனி வழக்கத்துக்கு மாறானதாய் இருக்கிறது. உணவுத்துறை உறுப்பினர் பதிலில் அந்தத் தொனி இருந்தது. இப்போது, மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அந்தப் பெண்மணிக்குத் தந்த பதிலிலும் அதே தொனி காணப்படுகிறது. விசாரணை மேற்கொள்வாரா என்றுதான் அவர் கேள்வி எழுப்பினார்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இல்லை, எனக்கு வியப்பளிக்குமா என்றுதான் கேட்டார்.

*திருமதி ரேணுகா ரே:* அந்த விஷயத்தைக் கவனிக்க விரும்புகிறாரா?

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):* அந்தக் கேள்விக்குப் பதில் அளித்த மாண்புமிகு உறுப்பினர் பதிலில் காணப்படும் தொனியிலிருந்து ஒரு முடிவுக்கு வர சிரமப்படுகிறேன். அதைப் பொறுத்தவரை அவையின் ஒரு பகுதியை மட்டும் சார்ந்ததாய் இல்லை என்பதால் தயக்கமாகவும் உள்ளது.

*(இந்தக் கட்டத்தில் மரியாதைக்குரிய உறுப்பினர் பலர் எழுந்து நின்று ஒரேசமயத்தில் பேசினர்).*

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):* அமைதி! அமைதி!

# 306

## *தண்டனைப் பெற்ற அரசு ஊழியருக்கு மறு வேலைவாய்ப்பு

972. திரு. முகமது உசேன் சௌதுரி: அரசு ஊழியர் ஒருவர் தண்டனைப் பெற்ற பிறகு அவருக்கு மறு வேலைவாய்ப்பு வழங்குவது தொடர்பாக, 1944-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 14-ஆம் தேதிய நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 407-க்கு அளிக்கப்பட்ட பதிலின் படி அத்தகைய அரசு ஊழியர் தொடர்பாக விசாரணை ஏதும் நடத்தப்பட்டதா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதில் அளிக்குமாறு வேண்டுகிறேன். அவ்வாறாயின், அந்த விசாரணையின் முடிவென்ன? அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆமாம், பஞ்சாப் அரசாங்கத்தால் ஒருவர் வேலை நீக்கம் செய்யப்பட்ட போதிலும் அரசாங்கம், மத்தியப் பொதுப்பணித் துறையிலோ வேறு துறையிலோ வேலைக்குச் செல்ல அவருக்கு அனுமதி அளித்துள்ளது. இதனாலும் 1942-பிப்ரவரியில் இருந்து அவர் தொடர்ந்து மத்தியப் பொதுப்பணித் துறையில் வேலை பார்த்து வருகிறார் என்பதாலும் மேற்கொண்டு நடவடிக்கை அவசியம் இல்லை என்று கருதப் பட்டது.

**மௌல்வி முகமது அப்துல் கனி:** பஞ்சாப் அரசாங்கத்தால் நீக்கப்பட்ட அந்தக் குறிப்பிட்ட நபர் மீது சுமத்தப்பட்ட குற்றம்தான் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** யாரையோ வலிந்து தாக்கினார் என்பதுதான்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 16, 1945, பக். 1428

# 307

## *தொழிலாளர் மேம்பாட்டுக்கான யுத்த பிற்காலத் திட்டங்கள்

*1043.* **திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்கு பதில் அளிக்க வேண்டுகிறேன்:

(அ) இந்த நாட்டில் தொழிலாளர் மேம்பாட்டுக்காக யுத்த-பிற்காலத் திட்டங்கள் எவையும் அரசாங்கத்திடம் இருக்கின்றனவா?

(ஆ) அந்தந்த தொழிற்சாலைகளில் வேலைபார்க்கும் தொழிலாளர்களுக்கு கல்வி அளிக்கவும், அவர்களது வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்தவும், எல்லா அமைப்பு ரீதியான தொழிற்சாலைகளின் இலாபத்திலிருந்து ஒரு பகுதியை ஒதுக்கீடு செய்யும் யோசனையை அரசாங்கம் பரிசீலிக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இது விஷய த்தில் அரசாங்கத்தின் இறுதித் திட்டங்கள் இன்னும் வடிவம் பெறவில்லை.

(ஆ) அரசாங்கத் திட்டங்களை நடைமுறைக்குக் கொண்டு வரும்போது, பிறவற்றுடன் சேர்த்து இதுவும் கருத்தில் கொள்ளப் படும்.

**திரு. அப்துல் கையூம்:** இத்திட்டங்கள் எப்போது வடிவம் பெறும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** புலனாய்வுக் குழுவின் அறிக்கை வந்தவுடன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 16, 1945, பக். 1598-99.

திரு. அப்துல் கையூம்: இந்தக் குழு அறிக்கையை அளிப்பதற்கான கால வரம்பு நிர்ணயிக்கப்பட்டிருக்குமானால், நான் அதைத் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். அடுத்த ஆகஸ்டுக்குள் அறிக்கை அளிப்பதாக அவர்கள் வாக்குறுதி தந்துள்ளனர்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: அரசாங்கம் தன்னுடைய திட்டங்களை விரைந்து செயல்படுத்த வேண்டும் என்ற ஆலோசனையைக் கவனத்தில் கொள்ளுமானால், தொழிற்சாலைகள் இந்த ஆண்டின் இலாபங்களை வீணடித்துவிடும் முன்பாக, அவை தொழிலாளர் நிலைமைகளை மேம்படுத்துவதற்காக இலாபத்தில் ஒரு பகுதியை ஒதுக்கீடு செய்யலாம் அல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த யோசனையை கவனத்தில் கொள்கிறேன்.

# 308

## *சுரங்கத் தொழிலாளர்களுக்கான குடியிருப்புகளுக்கு வழிவகை செய்தல்

1054. திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வருவனவற்றிற்குப் பதில் அளிக்க வேண்டுகிறேன்:

(அ) சுரங்கப் பகுதிகள் எல்லாவற்றிலும் சுரங்கத் தொழிலாளர்களுக்குக் குடியிருப்பு வீடுகள் வழங்கப்பட்டு இருக்கின்றனவா? இல்லையானால், அது ஏன்?

(ஆ) அவ்வாறு குடியிருப்புகள் வழங்கப்படவில்லையானால், அந்த சுரங்கத் தொழிலாளர்களுக்கு முறையான வீட்டு வசதியை, உறுதிப்படுத்த அரசாங்கம் எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ள உத்தேசித்துள்ளது?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 16, 1945, பக். 1604-05.

(இ) சுரங்கப் பகுதிகளில் சுகாதார வசதிகள் அவ்வளவு திருப்திகரமாக இல்லை என்பதையும் சரியான வீட்டுவசதி மற்றும் சுகாதார வசதிகள் இல்லாததால் சுரங்கத் தொழிலாளர்களின் உடல் நலம் பாதிக்கப்படுகிறது என்பதையும் அதன் மூலம் உற்பத்தி பாதிக்கப்படுகிறது என்பதையும் அரசு அறியுமா?

(ஈ) கேள்வி (இ) தொடர்பான விஷயம் குறித்து முத்தரப்பு மாநாட்டைக் கலந்தாலோசிக்கும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உள்ளதா? இல்லையென்றால் அது ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) முக்கியமான சுரங்கப் பகுதிகளில் சுரங்கத் தொழிலாளர்களுக்கு குடியிருப்பு வீடுகள் வழங்கப்பட்டுள்ளன.

(ஆ) இந்தப் பிரச்சினையே எழவில்லை.

(இ) இந்திய சுரங்கத் தொழில் சட்டத்தில் சுகாதார வசதிகள் தொடர்பாக குறிப்பிடப்பட்டுள்ளது. சுரங்கக் கண்காணிப்பு ஆய் வகம், சட்ட விதிமுறைகள் முறையாக அமலாக்கப்படுகிறதா என்று கவனித்து வருகிறது.

(ஈ) யோசனையை கருத்தில் கொள்கிறேன்.

**திருமதி ராதா பாய் சுப்பராயன்:** நிலக்கரிச் சுரங்க நிலைமை மிகவும் மோசமாக இருப்பதால் கேள்வி (இ)யில் உள்ள விஷயங்களை ஆராய மருத்துவ, பொறியியல் துறை வல்லு நர்களைக் கொண்ட குழு ஒன்றை அரசாங்கம் நியமிக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பிரச்சினை களையெல்லாம் கவனிக்கக் கூடிய, நிலக்கரிச் சுரங்க நலக்குழு ஒன்றை நியமித்துள்ளோம்.

**திரு. என்.எம். ஜோஷி:** சுரங்கப் பகுதிகளில் வழங்கப் பட்டுள்ள வீடுகளில் சுரங்கத் தொழிலாளர்கள் எந்த விகிதத்தில் குடியமர்த்தப்பட்டுள்ளனர்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்வி குறித்து எனக்கு முன் அறிவிப்பு தேவையெனக் கருதுகிறேன்.

**திரு. என்.எம். ஜோஷி:** மரியாதைக்குரிய உறுப்பினர் தவறான அறிவிப்பு செய்துள்ளார்.

# 309

## *சுரங்கத் தொழிலில் நிலத்துக்கடியில் பெண்கள் பணியாற்றுவதற்குள்ள தடையைப் புதுப்பித்தல்

1055. திருமதி ராதா பாய் சுப்பராயன்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்குப் பதில் அளிக்க வேண்டுகிறேன்:

(அ) சுரங்கத் தொழிலில் நிலத்துக்கடியில் பெண்கள் பணியாற்றுவது தொடர்பாக காமன்ஸ் சபையில் எழுப்பப்பட்ட கேள்வி-பதில்கள் அடங்கிய சமீபத்திய அறிக்கையை அரசாங்கம் படித்துப் பார்த்ததா? அப்படியெனில் அரசாங்கம் திரு. அமெரிக்கு அவர் கேட்ட தகவலை எப்போது அனுப்பியது? அந்தத் தகவல்தான் என்ன?

(ஆ) சுரங்கங்களில் பெண்கள் நிலத்துக்கடியில் பணியாற்றுவதைத் தடைசெய்யும் சட்டத்தைப் புதுப்பிப்பது பற்றிய யோசனையின் மீது அரசாங்கம் எப்போது முடிவெடுக்கும்?

(இ) பெண்களுக்கு இழைக்கப்படும் இத்தகைய சகிக்க முடியாத கொடுமைகளைத் தடுக்க அரசாங்கம் எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது? ''பெண்களுக்குத் தரப்படும் ஊதியம் குறைவானது, ஆனால் இந்தியாவின் மற்றத் தொழில் துறைகளில் தரப்படும் ஊதியத்துடன் ஒப்பிடும்போது பரவாயில்லை'' என்பது உண்மைகளை அடிப்படையாகக் கொண்டுள்ளதா?

(ஈ) 'ஆம்' என்பது கேள்வி (இ)க்கான பதிலாக இருக்குமானால், இந்தியாவின் பிற தொழில் துறைகளில் பெண் தொழிலாளர்களின் ஊதிய விகிதம் என்ன?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 16, 1945, பக். 1605.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) அரசாங்கம் அந்த அறிக்கையைப் படித்து பார்த்துள்ளது. இந்தியா அலுவலகத்திற்கு அனுப்பிவைத்த தங்களுடைய அறிக்கையின் உள்ளடக்கம் மற்றும் இயல்பை வெளியிடுவது பொது நலனுக்கு உகந்ததாக அவர்கள் கருதவில்லை.

(ஆ) சுரங்கங்களில் பெண்கள் நிலத்துக்கடியில் பணியாற்றுவதைத் தடுக்கும் சட்டத்தைப் புதுப்பித்தல் பற்றிய பிரச்சினை பரிசீலனையில் உள்ளது.

(இ) மற்றும் (ஈ) ஊதிய விகிதங்கள் ''இந்தியாவின் அந்த பகுதியிலுள்ள பிற தொழிற்சாலைகளுடன் ஒப்பிடுகையில் பரவாயில்லை'' என்றுதான் இந்தியா மந்திரி கூறினார். அக்கம் பக்கத்தில் கட்டுமானப் பணியில் வேலைபார்க்கும் பெண்களின் உழைப்புதான் குறிப்பிடத்தக்க அளவில் அமைந்து இருக்கிறது என்று கூறும் அந்த அறிக்கை உண்மைக்குப் புறம்பானது அல்ல என்று அரசாங்கம் கருதுகிறது.

(ஈ) ஜாரியா மற்றும் ராணிக்கஞ்ச் நிலக்கரி வயல்களில் சுரங்க சுகாதார வாரியம் மகப்பேற்றுக்கு முந்தைய, மகப்பேற்றுக்கு பிந்தைய நல உதவி ஏற்பாடுகளை செய்துள்ளது. சில மிகப் பெரிய சுரங்கங்கள் தாமே அவசியமான ஏற்பாடுகளைச் செய்துள்ளன.

(ஊ) சில பெரும் சுரங்கங்களில் பெண் மருத்துவர்களும் போதுமான ஊழியர்களும் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ளனர். பல சுரங்கங்களில் உள்ள மருத்துவமனைகளில் செவிலியர்களும், உதவியாளர்களும் உள்ளனர். ஆக கேள்வியின் இரண்டாவது பகுதி பற்றிய பிரச்சினை எழவில்லை.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** பெண்களின் நலன் கருதி எல்லா சுரங்கங்களிலும் ஒரே சீரான ஏற்பாடுகளை அரசாங்கம் மேற்கொள்ளுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த விஷயம் பரிசீலனையில் உள்ளது.

**திரு. என்.எம். ஜோஷி:** பெண்கள் நிலத்துக்கடியில் பணியாற்றுவதற்கு நாடாளுமன்றம் எதிர்ப்பு தெரிவித்திருக்கும் பகைப்புலனில் இந்திய அரசாங்கம் இந்த அவையின் விருப்பங்களுக்கு இசைவான முறையில் தடைச் சட்டத்தைக் கொண்டு வருமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவையின் முடிவானது, தகுதிகள் அடிப்படையிலான முடிவு என்பதைவிட அரசியல் ரீதியான நடவடிக்கை என்றே நினைக்கிறேன்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** அவையின் நோக்கத்தை இவர் வேண்டுமென்றே தவறாகப் புரிந்து கொண்டுள்ளார்.

**திரு. அப்துல் கையூம்:** ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்புகிறேன். அவையில் நன்கு ஆராய்ந்து மேற்கொள்ளப்பட்ட ஒரு முடிவுக்கு உள் அர்த்தம் கற்பிப்பது போன்று மாண்புமிகு உறுப்பினர் பேசலாமா? அவ்வாறாயின் அதனை நிறைவேற்றுவது மிகவும் கடினம். இது ஒரு பொறுப்பற்ற அரசாங்கமாக இருக்கிறது. அவர்கள் இவ்வாறாக பேசிக் கொண்டே சென்றால்...

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): நீங்கள் உரை நிகழ்த்துகிறீர்கள். விதிமுறைகளின்படிப் பார்த்தால் நீங்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருக்க முடியாது!

**திரு. அப்துல் கையூம்:** அவர் உள்நோக்கம் எதுவும் கற்பிக்கலாமா?

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறியதை நான் புரிந்து கொண்டுள்ளபடிப் பார்த்தால் இப்பிரச்சினை அரசியல் உள்ளிட்ட ஒன்றுக்கு மேற்பட்ட கோணங்களிலிருந்து பரிசீலிக்கப்பட்டிருப்பதை அவர் அவைக்குத் தெரிவிக்க விரும்பினார் என்றே நம்புகிறேன். எது எப்படியிருந்தபோதிலும் இந்தப் பிரச்சினை அரசியல் ரீதியில் கையாளப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டதன் மூலம் அவைக்கு அவர் எவ்விதத் தவறான உள்நோக்கமும் கற்பித்திருப்பதாக நான் கருதவில்லை.

**திரு. அப்துல் கையூம்:** இங்கு ஒன்றைக் கூற விரும்புகிறேன். இப்பிரச்சினை குறித்து மாண்புமிகு உறுப்பினர் என்ன சொன்னார் என்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். இது ஓர் அரசியல் நடவடிக்கை என்று அவர் கூறினார்.

**திரு. என்.எம். ஜோஷி:** இந்த அவையில் வாக்கெடுப்பு நடத்தப்பட்ட பின்னர் இந்திய அரசு இந்தப் பிரச்சினை பற்றி மறு பரிசீலனை செய்ததா என்பதை அறிய விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஏற்கனவே சொன்னதை விடக் கூடுதலாக எதுவும் சொல்வதற்கில்லை.

# 310

## *இந்தியாவின் கனிம வளங்கள் குறித்து டாக்டர் கிருஷ்ணனின் பரிந்துரைகள்

1773. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர், பின்வருவன பற்றித் தெரிவிக்க வேண்டுகிறேன்.

சென்னை ராஜதானிக் கல்லூரியின் மண்ணியல் ஆய்வுக் கழகத்தில் டாக்டர் எம்.எஸ். கிருஷ்ணன் ஆற்றிய விரிவுரை 'இந்து' நாளேட்டில் மார்ச் 14-ஆம் தேதி வெளியாகி உள்ளது. இது உங்கள் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டுள்ளதா?

(ஆ) தாமிரம், வெள்ளி, நிக்கல், பிளாட்டினம், தகரம், பாதரசம், காரீயகம் மற்றும் சாம்பரம் ஆகியவற்றைப் போதுமான அளவுக்கு பெறவும் சேமித்து வைக்கவும் எத்தகைய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன?

(இ) நிலக்கரிச் சுரங்கங்கள் அருகில் இல்லாத மாகாணங்களில் ஸ்தல தொழில்களை வளர்க்கும் பொருட்டு நீர்மின் சக்தி வளங்களைப் பெருக்குவதற்கு எத்தகைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன?

(ஈ) காற்றுவிசையாலைகள் மூலம் மின்சாரம் பெறவும் அவற்றைப் பிரபலப்படுத்தவும் நடவடிக்கைகள் எவையேனும் மேற்கொள்ளப்பட்டுள்ளனவா?

(உ) ''பல்வேறு கனிமங்களின் தரம் மற்றும் அளவு குறித்து மதிப்பீடு செய்வதற்கு சிறந்த உபகரணங்கள் கொண்ட ஆய்வு கூடங்களை'' அமைக்க வேண்டும் என்றும், இறக்குமதிக்குப் பதிலாக உள்ளூரில் கிடைக்கக்கூடிய கனிமங்களைப் பயன்படுத்த வேண்டும் என்றும் டாக்டர் கிருஷ்ணன் தெரிவித்துள்ள பரிந்துரைகள் முழுமையாக ஆராயப்படுமா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 12, 1946, பக்கம் 3899-3901.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) இந்தியாவில் சில முக்கியமான கனிமங்கள் மற்றும் கனிமப் பொருட்களின் கையிருப்பை அதிகப்படுத்தும் யோசனை யுத்தத்தின்போது அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்தது. ஆனால் அது கைகூடவில்லை. எனினும் இந்தியாவில் குறைவாகக் கிடைக்கும் கனிமங்கள் விஷயத்தில் இந்த யோசனையைப் பின்பற்றுவது பற்றி மறுபரிசீலனை செய்ய அரசு கருதியுள்ளது.

(இ) பொதுவாகச் சொல்லுமிடத்து, நீர்மின்சக்தி ஆதார வளங்களை மேம்படுத்துவதற்கும், பயன்படுத்துவதற்கும் தேவைப்படும் ஆய்வுகளுக்கு இப்போதைக்குக் கிடைக்கக்கூடிய தொழில் நுட்ப மனித சக்தியைப் பயன்படுத்த மாகாண அரசாங்கங்களும் சமஸ்தான அரசாங்கங்களும் நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றன. மத்திய தொழில்நுட்ப மின்விசை வாரியம் அதனுடைய இப்போதைய மனித சக்திக்கு ஏற்ப சில விஷயங்களில் ஒத்துழைப்பு நல்கி வருகிறது. தொழில்நுட்பவியலாளர்கள் போதுமான அளவில் கிட்டும்போது அது இன்னும் கூடுதலாக ஒத்துழைப்பு அளிக்க முடியும்.

நாடு முழுவதும் அதுவும் குறிப்பாக நிலக்கரிப் படிவங்கள் பெருமளவில் இருக்கும் பகுதியிலிருந்து தொலைதூரத்தில் இருக்கும் பகுதிகளில் நீர்மின் சக்தியை மேம்படுத்திட தற்போது விட மிகப் பெரிய அளவில் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டிய அவசியத்தை இந்திய அரசாங்கம் முழுமையாக உணர்ந்திருக்கிறது. ஆனால் இப்போதிருப்பதை விடவும் நன்கு அனுபவம் வாய்ந்த தொழில்நுட்ப நிபுணர்கள் இல்லாமல் இதனை நிறைவேற்ற முடியாது. எனவே தனித் தேர்ச்சிப் பெற்ற நிபுணர்களை ஒப்பந்த அடிப்படையில் நியமனம் செய்ய அரசாங்கம் எண்ணியுள்ளது.

(ஈ) காற்றிலிருந்து மின்சக்தி தயாரிக்கவோ அல்லது காற்று விசையாலைகளைப் பயன்படுத்துவதை பிரபலப்படுத்திடவோ இப்போதைக்கு இந்திய அரசாங்கம் எவ்வித தனிச் சிறப்பான நடவடிக்கைகளையும் எடுக்கவில்லை. வானிலையின் சாதக பாதக நிலைமைகளுக்கு ஏற்ப குறிப்பிட்ட சில பகுதிகளில் காற்று விசையாலைகள் பயனுள்ளவையாக இருக்கக்கூடும். ஆனால் அதே வேளையில் அவற்றிலிருந்து மிகச் சிறிய அளவிலேயே மின் சக்தி

பெற முடியும். மேலும் அவையும் கூட விட்டுவிட்டுத் தான் கிடைக்கும். இவ்வாறு அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறப்பட்டுள்ளது.

(உ) இந்திய மண்ணியல் ஆய்வுத்துறை அண்மையில் மறு சீரமைப்பு செய்யப்பட்டுள்ளது. அதனுடைய ஆய்வுக்கூட வசதிகள் கணிசமான அளவில் விரிவுபடுத்தப்பட்டுள்ளன. கனிமங்கள் மற்றும் சுரங்க விஷயங்கள் சம்பந்தமாக இலவச ஆலோசனையும் தகவல் களும் வழங்கும் திசையில் மேலும் விரிவாக்க நடவடிக்கை மேற் கொள்ளப்பட்டுள்ளது. அண்மையில் திட்டமிடப்பட்டுள்ள தேசிய உலோகவியல் மற்றும் தேசிய இரசாயன ஆய்வுக்கூடங்கள் முற்றி லும் ஆய்வக வசதிகள் நிறைந்தவையாக இருக்கும். இந்தியக் கனி மங்களின் தன்மையை ஆராய்வதற்கு ஏற்றவிதத்தில் அவை இருக் கும். மேலும் கனிமத் தொழில்துறைகளின் வளர்ச்சியில் மிகப் பெரிய உதவி செய்யக்கூடியவையாகவும் அவை விளங்கும். இந்தியாவின் கனிமங்களையும் உலோகக் கலவைகளையும் கச்சாப்பொருள் வடிவில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதைவிட அவற்றை உள்நாட்டிலேயே பயன்படுத்திக் கொள்ளும் விஷயத்தை அரசாங்கம் தீவிரமாகப் பரிசீலித்து வருகிறது. 1944 ஆம் ஆண்டிலிருந்து நிறுவப் பட்ட எண்ணற்ற தொழில்துறை குழுக்கள் இந்த விஷயம் குறித்து மதிப்பு மிகுந்த தகவல்களையும், விவரங்களையும் சேகரித்துள்ளன. ஒரு புதிய கனிமக் கொள்கையை உருவாக்குவதற்கு இவை ஆராயப் பட்டு வருகின்றன.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* மாண்புமிகு உறுப்பினர் அளித்த பதிலில் பகுதி (இ)-யைப் பொருத்தவரையில், நீர்மின் வளங் களை மேம்படுத்துவதற்கு ஏராளமான தனித் தேர்ச்சியாளர்கள் தேவை என்று குறிப்பிட்டுள்ளார். இந்தியர்கள் இத்துறைக்குத் தேவைப்படும் திறமைகளையும் தகுதிகளையும் அடையவும் அதன் மூலம் அவர்களது சேவை பயனுள்ளதாக இருந்திடவும் அரசாங்கம் எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இத்தகைய தனிச் தேர்ச்சிக்குரிய தொழில்களில் பயிற்சி பெற வெளிநாடுகளுக்கு எண்ணற்ற இந்தியர்கள் அனுப்பி வைக்கப்பட்டுள்ளனர்.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* தனித் தேர்ச்சிக்குரியவர்களை அனுப்பி வைக்கும் புதியத் திட்டத்தின் ஒரு பகுதியாகவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்களுடன் கூடுதலாகப் பிற துறையைச் சார்ந்த தனித் தேர்ச்சிக்குரியவர்களும் அனுப்பி வைக்கப்பட்டுள்ளனர்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** (ஈ) கேள்விக்கான பதிலின் ஒரு பகுதியில் எனது மாண்புமிகு நண்பர் காற்றிலிருந்து மின்சக்தி பெறுகிற யோசனை பற்றி கருத்துத் தெரிவிக்கையில், காற்று விசை யாலை மின்சக்தி விட்டுவிட்டு கிடைக்கக்கூடியதென்றும், அதிக மாகக் கிடைக்காது என்றும் கூறி இந்த நல்ல யோசனையைப் புறக்கணித்திருக்கிறார். காற்று விசையாலைகள்பால் ஆயிரக்கணக் கான விவசாயிகள் மிகுந்த ஆர்வங்காட்டி வருகின்ற சூழ்நிலை யில் அரசாங்கம் இப்பிரச்சினையில் இன்னும் சற்று கவனம் செலுத்தி, விவசாயிகளும் பிறரும் காற்றிலிருந்து சாத்தியமான அள விற்கு மின்சக்தியை பெறுவதற்கு அவர்களுக்கு உதவி செய்யுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல் ஒரு குறிப்பிட்ட பகுதியில் எந்த அளவுக்கு காற்று வீசுகிறது என்பதை இது பொறுத்துள்ளது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** வானிலை ஆராய்ச்சியாளர் கள் இருக்கிறார்கள்; நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் காற்றைப் பயன்படுத்தி எந்த அளவுக்கு மின்சக்தி பெற முடியும் என்பதை ஆராய்ந்து அவர்கள் சாத்தியமான திட்டத்தைத் தீட்ட முடியும் அல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆமாம், அதுபற்றி நாங்கள் பரிசீலித்து வருகிறோம்.

**திரு. என்.எம். ஜோஷி:** இந்த அவையில் வாக்கெடுப்பு முடிந்த பிறகு இந்திய அரசு இப்பிரச்சினையை மறுபரிசீலனை செய்யுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மேற்கொண்டு அதிகமாக நான் எதுவும் சொல்வதற்கில்லை.

# 311

## *சுரங்கத் தொழிலாளர்களது குழந்தைகளின் நல்வாழ்வுக்கான ஏற்பாடுகள்

*1057.* **திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரைப் பின்வரும் விவரங்கள் தருமாறு வேண்டுகிறேன்.

(அ) 1945 பிப்ரவரி 21 ஆம் தேதி நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 436க்கு பதில் அளிக்கப்பட்ட பிறகு சுரங்கத் தொழிலாளர்களின் கைக்குழந்தைகள் மற்றும் சிறுவர்களின் நலனுக்காக செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகள் பற்றி அரசாங்கத்துக்குக் கிடைத்துள்ள தகவல்கள்;

(ஆ) அந்தக் கேள்விக்கு எழுப்பப்பட்ட துணை கேள்விகளில் காணப்படும் விஷயங்கள் பற்றி அரசாங்கத்துக்குக் கிடைத்துள்ள தகவல்கள்.

(இ) சுரங்கத் தொழிலாளர்களின் கைக்குழந்தைகளுக்கும், சிறுவர்களுக்கும் பால் வழங்கப்படுகிறதா? வழங்கப்படுமானால், வயது வாரியாக, ஒவ்வொரு குழந்தைக்கும் வழங்கப்படும் பாலின் அளவு எவ்வளவு? பால் வழங்கப்படவில்லையானால் ஏன் வழங்கப்படவில்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) (ஆ) ஆகிய கேள்விகளைப் பொருத்தவரை இந்த விஷயங்கள் குறித்து எனக்கு அறிக்கை கிடைக்கவில்லை. எனினும் எந்த நேரமாயினும் பெண்கள் நிலத்துக்கடியில் குழந்தைகளைத் தூக்கிச் செல்வது முற்றிலுமாக

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2006.

தடை செய்யப்பட்டுள்ளது என்பதையும், குழந்தை பிறந்து நான்கு வாரங்களுக்கு தாய்மார்கள் நிலத்துக்கடியில் பணியாற்றுவதும் தடை செய்யப்பட்டுள்ளது என்பதையும் முதலில் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

மகப்பேறு நெருங்கி வருகிற காலத்தில் பொதுவாக பெண்கள் யாரும் நிலத்துக்கடியில் வேலைக்கு செல்வதில்லை என்பதை சில மாதங்களுக்கு முன்னர் தொழிலாளர் நலப்பெண் அலுவலர் நடத்திய விசாரணை அறிக்கை தெரியப்படுத்துகிறது. மேலும் குழந்தை பிறக்கும் தேதிக்கு முன்பாக 10 வாரங்கள் பெண் தொழிலாளர்கள் சுரங்க வேலையில் ஈடுபடுவதைத் தடுக்கக்கூடியதும், அதன் மூலம் அவர்களுக்கு மிகுந்த ஆதாயம் கிடைக்கக் கூடியதுமான ஒரு மசோதாவை நான் கொண்டுவந்துள்ளேன்.

சுரங்கத்தில் வேலை செய்யும் தாய்மார்கள் குறிப்பிட்ட இடைவேளைகளில் மேல் தளத்திற்கு வந்து தங்கள் கைக்குழந்தைகளுக்கு பால் புகட்டுவதற்கான எத்தகைய ஒழுங்கமைக்கப்பட்ட ஏற்பாடுகளும் இல்லை என்று இதுவரை தெரிவித்து வந்துள்ளேன். ஆனால், வீட்டில் குழந்தைகளை விட்டுவிட்டு வரும் தாய்மார்கள் சுரங்க வேலையிலிருந்து மாலையில் சீக்கிரமாகவே வீடு திரும்பி விட ஆர்வம் கொண்டிருக்கிறார்கள் என்று பெண் நல ஆய்வாளர் தெரிவித்துள்ளார்.

(இ) சுரங்கப் பகுதிகளில் தாய்-சேய் நல மேம்பாட்டுக்கு மேலும் சாத்தியமான வாய்ப்புகள் குறித்து ஒருசில சுரங்கங்களில் மட்டுமே அரசாங்கம் ஆராய்ந்து செய்து வருகிறது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** குழந்தைகளை வீடுகளில் விட்டு விட்டுச் சுரங்க வேலைக்குச் செல்லும் தாய்மார்கள் சிறிது நேரம் முன்னதாகவே வீடு திரும்புவதற்கு ஆர்வம் கொண்டிருப்பதாகத் தெரிவித்துள்ளீர்கள், அப்படி சிறிது நேரம் சீக்கிரமாகவே அவர்கள் வீடு திரும்புவதால் சம்பள இழப்பு ஏதேனும் ஏற்படுகிறதா? அல்லது சம்பளப் பிடித்தம் இன்றி சீக்கிரம் அவர்கள் வீடு திரும்புவதற்கு ஊக்கமளிக்கப்படுகிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வேலை செய்த அளவுக்கு ஊதியம் தருகிற முறைப்படி அவர்கள் ஊதியம் பெறு கிறார்கள்.

**திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்:** தொடர்ந்து எத்தனை மணி நேரம் அவர்கள் வேலை செய்கிறார்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வேலை செய்த அளவுக்கு ஊதியம் என்றிருப்பதால் எந்த நேரத்திலும் அவர்கள் வீட்டுக்குப் போகலாம், எந்த நேரத்திலும் வேலைக்கு வரலாம்.

# 312

## *அசாம் திட்டப் பணிகளுக்குத் தேயிலை தோட்டத் தொழிலாளர்களை அனுப்பிவைத்தல்

1313. **திவான் அப்துல் பாஷித் சௌதுரி:** (அ) அசாம் திட்டப் பணிகளுக்குப் பெரும் எண்ணிக்கையிலான தொழிலாளர்களைத் தேயிலைத் தோட்ட மேலாளர்கள் அனுப்பி வைத்துள்ள விவரம் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஆ) இந்தத் திட்டப் பணியில் ஈடுபட்டிருக்கையில் தங்கள் உயிரை இழந்த பல தொழிலாளர்களின் குடும்பத்தினருக்கு எவ்வித இழப்பீடும் இதுவரை வழங்கப்படவில்லை என்பதையும் மாண்பு மிகு உறுப்பினர் அறிவாரா?

(இ) அப்படி உயிரிழந்தவர்களின் குடும்பத்தினருக்கு வழங்கப் பட்ட இழப்பீட்டுத் தொகை ரூ. 200 அல்லது ரூ. 300 என்பது உண்மை தானா? இந்தத் தொகை போதுமானதுதானா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2007.

(ஈ) இந்த இழப்பீட்டுத் தொகையைப் பெறுவதில் துரதிர்ஷ்டம் பிறந்த தொழிலாளர்களின் குடும்பத்தினர் படாதபாடு பட்டுள்ளனர் என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(உ) இந்தத் திட்டப்பணிகளில் உயிரிழந்த அனைவரையும் சார்ந்தவர்களுக்குப் போதுமான இழப்பீடு வழங்க வேண்டிய அவசியம் குறித்து ஆராய மாண்புமிகு உறுப்பினர் உத்தேசித்திருக்கிறாரா?

(ஊ) அந்த இழப்பீட்டுத் தொகையைத் தேயிலைத் தோட்ட அலுவலகம் மூலமாக வழங்குவதற்குப் பதிலாக, சப்டிவிஷனல் அலுவலகம் மூலமாக வழங்கும் எண்ணம் மாண்புமிகு உறுப்பினருக்கு உண்டா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆமாம்.

(ஆ) தகவல் சரியல்ல. அசாமில் யுத்த திட்டப் பணிகளில் வேலைபார்த்து காயம் அடைந்துள்ள அல்லது உயிர் இழந்துள்ள இந்தியத் தேயிலை சங்கத்தால் அமர்த்தப்பட்ட எல்லா தொழிலாளர்களுக்கும் அத்துடன் வேறு சிலவகை தொழிலாளர்களுக்கும் இழப்பீட்டுத் தொகை வழங்குவதற்கு இந்திய அரசாங்கம் போர் நடவடிக்கைகள் துறையின் மூலம் ஏற்பாடு செய்துள்ளது. கட்டுப்பாட்டு அதிகாரி தொழிலாளர்களின் இழப்பீட்டுத் தொகையைப் பட்டுவாடா செய்யும் ஆணையராக நியமிக்கப்பட்டுள்ளார். கடந்த இரண்டு ஆண்டுகளில் அவர் 4,000 பேருக்கு இழப்பீடு வழங்கியுள்ளார். 1945, பிப்ரவரி 28 வரையில் இந்தியத் தேயிலை சங்கத்தின் தொழிலாளர்கள் சார்பில் மட்டும் அவர் இழப்பீடு கோரும் 2612 விண்ணப்பங்களைப் பெற்றுள்ளார். இதில் 2309 பேருக்கு இழப்பீட்டுத் தொகை வழங்கப்பட்டுள்ளது. 217 பேர் விஷயத்தில் விண்ணப்பங்கள் நிரா கரிக்கப்பட்டுள்ளன. 86 விண்ணப்பங்கள் விசாரணையில் உள்ளன.

(இ) தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தின் கீழ் வரும் எல்லோருக்கும் அந்தச் சட்டத்தின்படி இழப்பீட்டுத் தொகை வழங்கப்பட்டு வருகிறது. மற்றவர்களுக்குக் கருணைத் தொகையாக, மரணம் அடைந்தவர்களுக்கு 900 ரூபாயும், நிரந்தரமாக ஊனமுற்றவர்

களுக்கு 1200 ரூபாயும் வழங்கப்பட்டுள்ளது. முதல் தவணையாக ரூ. 300 வழங்கப்பட்டுள்ளது. இதைத்தான் மரியாதைக்குரிய உறுப் பினர் இங்கே குறிப்பிட்டுள்ளார் என்று தோன்றுகிறது.

(ஈ) மரணமடைந்த தொழிலாளர்களைச் சார்ந்திருப்பவர் கள் தேயிலைத் தோட்டங்களில் இருப்பார்களானால் தேயிலைத் தோட்ட நிர்வாகிகளின் துணை ஆணையர் மூலம் மொத்த தொகை யும் வழங்குவதற்கு உத்தரவிடப்பட்டு, வழங்கப்பட்டுள்ளது. பெருந் தொகையைப் பெற்றுக் கொள்ள வேண்டியவர்கள் வயது வராத வர்களாகவோ, பெருந்தொகையை பத்திரப்படுத்த முடியாத நபர் களாகவோ இருந்தால் அசாம் தொழிலாளர் நல ஆணையரால் அஞ்சல் அலுவலகத்தில் அந்தத் தொகை சேமிப்பில் போடப்பட்டு, அவ்வப்போது தவணைகளில் அஞ்சல் பணவிடை மூலம் அனுப்பப் படுகிறது.

அஞ்சல் துறை, இம்மாதிரி பெருந்தொகையை முதலீடாகப் பெறுவது, அதிலிருந்து உரியவர்களுக்கு அனுப்பி வைப்பது போன்ற பணிகளைக் கையாளுவதில் ஆரம்பக் கட்டங்களில் சிரமப்பட்ட தால், இது விஷயத்தில் ஓரளவு தாமதம் ஏற்பட்டது, ஆனால் இப்போது முறையாக பணம் அனுப்பப்பட்டு வருகிறது.

(உ) (இ) கேள்விக்கான எனது பதிலில் குறிப்பிட்டுள்ளபடி, தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தின் கீழ் வருபவர்களுக்கு அதன் படி இழப்பீட்டுத் தொகை வழங்கப்பட்டுள்ளது. பிறர் விஷயத் தில், மரண இழப்பீட்டுத் தொகை 900 ரூபாயும், நிரந்தர ஊன இழப்பீட்டுத் தொகையாக 1200 ரூபாயும் அந்தச் சட்டம் அனுமதிக் கத்தக்க விகிதத்தின் அடிப்படையில் நிர்ணயிக்கப்பட்டு வழங்கப் படுகிறது. இந்த இழப்பீட்டுத் தொகைகள் போதுமானவையாகக் கருதப்படுகின்றன.

(ஊ) பெரும்பாலான சந்தர்ப்பங்களில் இழப்பீட்டுத் தொகையை பெற்றுக் கொள்ள வேண்டியவர்கள் சிறுவர்களாக அல்லது பெருந்தொகையை பத்திரப்படுத்தும் திறனற்றவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் விஷயத்தில் இத்தொகை தவணை முறை யில் அஞ்சல் பணவிடை மூலம் அனுப்பப்பட்டு வருகிறது. பூர்

வாங்கத் தொகைகளும், பெருந்தொகைகளும் மட்டுமே தேயிலைத் தோட்ட நிர்வாகிகளின் துணை ஆணையர்களால் வழங்கப்பட்டு வருகின்றன. மரணமடைந்தோரைச் சார்ந்திருப்போர் தேயிலைத் தோட்டங்களில் வசித்து வந்தால் மட்டுமே அவர்களுக்கு வழங்கப் பட வேண்டிய உரிய தொகை தேயிலைத் தோட்ட நிர்வாகிகளுக்கு அனுப்பி வைக்கப்படுகிறது. நிர்வாகிகள் உரியவர்களை அடை யாளம் கண்டு பணத்தை முறையாகத் தருவதற்கும், இதற்கான ரசீது களைத் தொழிலாளர் இழப்பீட்டு ஆணையருக்கு அனுப்பி வைப்ப தற்கும் வசதியாக இருக்கும் பொருட்டே இவ்வாறு செய்யப்படு கிறது. இந்த ஏற்பாடு இதுவரை திருப்திகரமாகவே உள்ளது.

# 313

## *அசாம் திட்டப்பணிகளிலிருந்து திரும்பிய தொழிலாளர்களின் மோசமான உடல்நிலை

*1314. திவான் அப்துல் பாஷித் சௌதுரி: (அ)* அசாம் திட்டப் பணிகளிலிருந்து வீடு திரும்பிய பல நூறு தொழிலாளர்கள் மிக மோசமாக உடல் நலம் பாதிக்கப்பட்டுள்ளனர் என்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(ஆ) அவர்களில் பெரும் எண்ணிக்கையிலானோர் இப் போதும் பல்வேறு நோய்களால் பாதிக்கப்பட்டுள்ளனர் என்பதை யும் அவர் அறிவாரா?

(இ) அவர்களுடைய சிகிச்சைக்கு முறையான ஏற்பாடுகள் செய்யப்படவில்லை என்பது உண்மையா?

(ஈ) (அ) முதல் (இ) வரையிலான எனது கேள்விகளுக்கான பதில் 'ஆம்' என்பதாக இருந்தால் இந்தப் பரிதாபத்துக்குரிய தொழி லாளர்களின் சிரமங்களை சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் கவனத்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2010.

துக்குக் கொண்டு வருவது குறித்து மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பரிசீலிப்பாரா?

(ஈ) மேற்கண்ட கேள்விகளுக்கான பதில் எதிர்மறையாக இருக்குமானால் விசாரணை நடத்தி, விசாரணை முடிவுகளை இந்த மன்றத்தில் சமர்ப்பிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) யுத்த நடவடிக்கைகள் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிற அசாமில் உள்ள ஆரோக்கியமற்ற காட்டுப் பகுதியில் நடைபெற்றுவரும் பணியின்போது கொடிய மலேரியா நோயும் பிற நோய்களும் தொழிலாளர்களைத் தாக்குவது இயல்பானதே. ஆகவே தொழிலாளர்கள் சிலர் இந்தத் திட்டப்பணியில் இருந்து விடுபட்டு, உடல் நலம் கெட்டு திரும்பியுள்ளனர். தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தின் கீழ் நோயால் மரணம் அடைந்தவர்களுக்கு இழப்பீடு வழங்க சட்ட விதிகள் இல்லாததால் நோய்களால் இறந்து போனவர்களுக்கு கருணைத் தொகை வழங்கிட இந்திய அரசாங்கம் விசேட ஆணைப் பிறப்பித்துள்ளது. திட்டப் பணிகளில் இருந்து விடுபட்டு வந்து நோய்வாய்ப்பட்டு இறந்த தொழிலாளர்களுக்கும் கூட இழப்பீடு வழங்கப்பட்டுள்ளது.

(ஆ) அரசாங்கத்துக்கு எவ்விதத் தகவலும் இல்லை.

(இ) பிற தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள் விஷயத்தில் கடைப்பிடிப்பது போல தேயிலைத் தோட்டங்களுக்கு திரும்பி வருகிற தொழிலாளர்கள் தோட்ட மருத்துவமனைகளில் சிகிச்சை பெற்றுள்ளனர். கிராமங்களுக்கு திரும்புகிறவர்கள் உள்ளூர் மருத்துவ மனைகளில் சிகிச்சை பெறுவார்கள். தங்களது தோட்டங்களுக்கும் கிராமங்களுக்கும் தனிப்பட்ட முறையில் திரும்பி வருகிற தொழிலாளர்கள் விஷயத்தில் இதைத் தவிர வேறு மருத்துவ ஏற்பாடுகள் நடைமுறையில் இல்லை.

(ஈ) (அ), (ஆ) மற்றும் (இ) ஆகிய கேள்விகளுக்கு அளிக்கப் பட்டுள்ள பதில்களின் அடிப்படையில் பார்க்கையில் இந்தப் பிரச்சினையே எழவில்லை.

(உ) விசாரித்தறிந்த உண்மைகள்தான் மேலே குறிப்பிடப் பட்டவை.

# 314

## *கல்கத்தாவிலுள்ள இந்திய அரசு அச்சக ஊழியர்களின் குறைகள்

1315. **திரு. அப்துல் கையூம்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்குப் பதில் அளிக்க வேண்டுகிறேன்:

(அ) 1944, டிசம்பர் 20-ஆம் தேதியும், 1945 ஜனவரி 24-ஆம் தேதியும் கல்கத்தா அரசாங்க அச்சக ஊழியர்கள் மனுக்கள் சமர்ப் பித்துள்ளாரா?

(ஆ) அவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள கோரிக்கைகளின் தன்மை என்ன?

(இ) இது விஷயத்தில் அரசாங்கம் எத்தகைய நடவடிக்கை கள் எடுத்துள்ளது அல்லது எடுக்க உத்தேசித்துள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) ஊழியர்கள் பின்வரும் கோரிக்கைகளை முன் வைத் துள்ளனர்: (1) அடிப்படை ஊதியத்தை அதிகப்படுத்த வேண்டும், குறைந்தபட்ச மாத ஊதியம் பத்து ரூபாய் என்று நிர்ணயிக்க வேண்டும்; (2) கிராக்கிப்படியை உயர்த்த வேண்டும்; (3) சலுகை விலையில் தானியங்கள் வழங்க வேண்டும்; (4) வேலை நேரத்தைக் குறைக்க வேண்டும்; (5) வேலைக்குத் தகுந்த கூலி என்ற அடிப்படை யில் வேலை செய்பவர்களுக்கு விடுமுறையை அதிகப்படுத்த வேண் டும்; (6) வேலைக்குத் தகுந்த கூலி என்ற வேலை முறையையே ஒழித்துக்கட்ட வேண்டும்; (7) ஊழியர்களை, மேல் நிலையில் உள்ள வர்களாகவும், கீழ்நிலையில் உள்ளவர்களாகவும் வகைப்படுத்து கின்ற முறையை ஒழித்துக்கட்ட வேண்டும். மேலும் மேல்நிலை ஊழியர்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ள சலுகைகளை கீழ்நிலை ஊழியர்களுக்கும் வழங்க வேண்டும்.

(இ) (2), (3), (5) மற்றும் (7) கோரிக்கைகள் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இன்றைய நெருக்கடியான கால கட்டத்தில் மற்ற கோரிக்கைகளை ஏற்பது சாத்தியம் அல்ல.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2010.

# 315

## *கல்கத்தாவிலுள்ள இந்திய அரசாங்க அச்சக ஊழியர்களின் வேலை நேரம்

1316. திரு. அப்துல் கையூம்: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்வருவனவற்றிற்கு பதில் அளிக்க வேண்டு கிறேன்:

(அ) கல்கத்தாவிலுள்ள இந்திய அரசாங்க அச்சக ஊழியர் கள் ஒரு வாரத்திற்கு மொத்தம் எத்தனை மணி நேரம் வேலை செய் கின்றனர்?

(இ) வங்க அரசாங்க அச்சக வேலை நேரத்தை போனஸ் இழப்பின்றி வாரத்திற்கு 40 மணி நேரமாக வங்க அரசு. குறைத் துள்ளதா?

(இ) அரசாங்கம் அதனுடைய அச்சகங்களில் வேலை நேரத்தைக் குறைக்கும் எண்ணம் கொண்டுள்ளதா? அப்படி இல்லை யானால் ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) 48 மணி நேரம்.

(ஆ) வாரத்திற்கு 40 மணி நேரமாக குறைக்கப்பட்டுள்ளது. ஆனால் போனஸ் அனுமதிக்கப்படவில்லை.

(இ) இன்றுள்ள நெருக்கடியான காலகட்டத்தில் வேலை நேரத்தைக் குறைக்கிற உத்தேசமில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2010.

# 316

## *கல்கத்தா இந்திய அச்சக ஊழியர்களின் சம்பளத் விகிதத்தைத் திருத்தியமைத்தல்

1317. திரு. அப்துல் கையூம்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வருவனவற்றிற்கு பதில் அளிக்க வேண்டு கிறேன்:

(அ) அசாதாரணமாக வாழ்க்கைச் செலவு உயர்ந்திருப் பதற்கு இணையாக அச்சக ஊழியர்களுக்குக் கிராக்கிப்படி வழங்கப்பட்டதா?

(ஆ) கல்கத்தாவிலுள்ள அச்சக ஊழியர்களின் ஊதிய விகிதம் கடைசியாகத் திருத்தி அமைக்கப்பட்டது எப்போது?

(இ) பங்கீட்டுப் பொருள்கள் மற்றும் பங்கீடல்லாதப் பொருள்களுக்கு இரயில்வே ஊழியர்களும் பிற ஊழியர்களும் கொடுப்பதை விட கல்கத்தா அரசாங்க அச்சக ஊழியர்கள் அதிக மாகக் கொடுக்கிறார்களா?

(ஈ) அரசாங்கம் ஊதிய விகிதத்தை திருத்த உத்தேசம் கொண்டுள்ளதா? இல்லையென்றால் ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) விலைவாசி உயர்வுக்கு ஏற்பவே இப்போதைய கிராக்கிப்படி நிர்ணயிக்கப் பட்டுள்ளது. இதை திருத்தியமைக்கும் யோசனையும் இருக்கிறது.

(ஆ) 1924 ஆம் ஆண்டில். புதிதாகச் சேர்ந்தவர்களுக்கு திருத்தப்பட்ட ஊதிய விகிதம் 1933, 1934 ஆம் ஆண்டுகளில் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது.

(இ) ஆம். ரயில்வே தொழிலாளர்களுடன் ஒப்பிடுகையில் அவர்கள் அதிக விலை தர வேண்டியிருக்கிறது. ஆனால் ரயில்வே

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2010.

தொழிலாளர்களுக்கு அளிக்கப்படும் சலுகைகள் யாவும் பிற மத்திய அரசாங்க ஊழியர்களுக்கும் வழங்கப்படுகின்றன.

*(ஈ) இன்றைய நெருக்கடியான வேளையில் எவ்வித பொது வான ஊதியவிகிதத் திருத்தமும் மேற்கொள்ளும் உத்தேசம் அர சாங்கத்துக்கு இல்லை.*

# 317

## *கல்கத்தா இந்திய அரசாங்க அச்சகத்தில் கூலி பெறும் தொழிலாளர்களின் விடுமுறைக் கால ஆதாயங்கள்

*1318. திரு. அப்துல் கையூம்: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்வருவனவற்றுக்குப் பதிலளிக்க வேண்டு கிறேன்:*

*(அ) கல்கத்தா மத்திய அரசாங்க அச்சகத்தில், பணியாற்றும் அளவு சார் கூலி பெறும் தொழிலாளர்களுக்கு சம்பளம் வாங்கும் ஊழியர்களுக்குக் கிட்டும் அதே மாதிரி விடுமுறைக் கால ஆதாயங் கள் கிடைக்கின்றனவா?*

*(ஆ) டில்லி, கல்கத்தா ஆகிய நகரங்களில் வேலை பார்த்து வரும் சம்பளக்காரர்களுக்கு ஒரே மாதிரியான நேர்வு விடுப்பு வழங்கப் படுகிறதா?*

*(இ) இல்லையெனில், டில்லி, கல்கத்தா ஊழியர்களின் நிலைமைகளைச் சமநிலைப்படுத்தும் உத்தேசம் அரசுக்கு இருக் கிறதா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *(அ) இல்லை.*

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2010.

(ஆ) இல்லை

(இ) இந்திய அரசாங்க அச்சகங்களில் பணிபுரியும் சம்பளத் தொழிலாளர்கள் அனைவருக்கும் ஆண்டுக்கு 15 நாட்கள் வரை நேர்வு விடுப்பு அனுமதிக்கப்பட்டு வருகிறது. தட்பவெப்ப நிலை மற்றும் இதர சூழ்நிலைகளைக் கருத்திற்கொண்டு புதுடில்லி அச்சக ஊழியர்கள் உள்ளிட்ட டில்லி மத்திய அரசாங்க ஊழியர்கள் அனைவருக்கும் ஆண்டுக்கு 20 நாட்கள் வரை நேர்வு விடுப்பு எடுத்துக் கொள்ள இந்திய அரசாங்கம் அனுமதிக்கிறது. கல்கத்தா அச்சக ஊழியர்களுக்கு மட்டுமே இந்த நேர்வு விடுப்பு உச்ச வரம்பு நீட்டிக்கப்படவில்லை.

# 318

## *கல்கத்தா இந்திய அரசாங்க அச்சகத்தின் கீழ்மட்ட ஊழியர்களுக்கு சில குறிப்பிட்ட அனுகூலங்களை வழங்குதல்

1319. திரு. அப்துல் கையூம்: (அ) கல்கத்தா அரசாங்க அச்சகத்தின் மேல்மட்ட ஊழியர்கள் அனுபவித்துவரும் வைப்பு நிதி, பணி நிரந்தரம், வீட்டுவசதி உதவித் தொகை, மருத்துவ விடுப்பு முதலான அனுகூலங்களை கீழ்மட்ட ஊழியர்கள் பெறவில்லை என்பது உண்மையா?

(ஆ) அது உண்மை எனில், மேல்மட்ட ஊழியர்கள் பெறும் எல்லா சலுகைகளையும் கீழ்மட்ட ஊழியர்களும் பெறுவதை அனுமதிக்கும் யோசனை ஏதும் உண்டா?

(ஆ) 1928 ஆம் ஆண்டுக்குப் பிறகு நியமிக்கப்பட்ட கல்கத்தா இந்திய அரசாங்க அச்சக ஊழியர்களுக்கு அவர்கள் விடுமுறை

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2010.

நாட்களில் வேலை பார்த்தால் அதற்கு ஈடுசெய்யும் விடுமுறை வழங்கப்படுவதில்லை என்பது உண்மையா?

(ஈ) அரசாங்க விடுமுறை அறிவிக்கப்பட்ட பொது விடுமுறை நாட்களில் வேலைபார்க்கும் ஊழியர்களுக்கு 25 சதவிகித உதவித் தொகை மட்டுமே வழங்கப்படுவதும், பொது விடுமுறை யாக அறிவிக்கப்படாத விடுமுறை நாட்களில் வேலை பார்க் கும் ஊழியர்களுக்கு எவ்வித பண உதவி வழங்கப்படாததும் உண்மையா?

(உ) அவ்வாறானால் 1928க்குப் பிறகு நியமிக்கப்பட்டவர் களுக்கு ஈட்டு விடுப்பு தரப்படாததற்கு என்ன சூழ்நிலைகள் காரண மாயின?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ), (ஆ) ஆகிய இரண்டு கேள்விகளுக்கும் இல்லை என்பதுதான் பதில். அவர்கள் மருத்துவ விடுப்புக்கு தகுதி பெற்றவர்கள். நிரந்தரமாக உள்ள கீழ்மட்ட ஊழியர்களுக்கும் பணி நிரந்தரம் செய்யப்பட்டோருக் கான அனுகூலங்கள் வழங்கப்படுகின்றன. அதாவது ஓய்வூதியம், சராசரி சம்பளத்துடன் கூடிய விடுப்பு அல்லது அசாதாரண சம்பள விடுப்பு மற்றும் விடுப்பு எடுத்துக் கொள்ளாமல் அதற்குரிய ஊதியத்தைப் பெறுதல் முதலான சலுகைகள் வழங்கப்படு கின்றன. அவர்களுக்கு வீட்டு வாடகைப்படி மற்றும் பிற சலுகை கள் வழங்குவது குறித்த யோசனையும் பரிசீலனையில் உள்ளது.

(இ) ஆம்.

(ஈ) ஈட்டு விடுப்பை பொறுத்தவரையில், அறிவிக்கப் பட்ட விடுமுறை தினங்களில் அவர்கள் வேலை பார்ப்பதற்காக மிகைநேர உழைப்பூதியமாக 25 சதவிகிதம் கூடுதலாக சம்பளம் வழங்கப்படுகிறது.

(உ) நிர்வாகக் காரணங்கள்.

# 319

## *மாணவர்கள் வெளிநாடு சென்று தொழில்நுட்பக் கல்வி பெறுவதற்கானத் திட்டங்கள்

1320. திவான் அப்துல் பாவித் சௌதுரி: (அ) உயர் தொழில் நுட்பக் கல்வி பெற வெளிநாடுகளுக்கு மாணவர்களை அனுப்பி வைக்க அரசாங்கத்திடம் இரண்டு வெவ்வேறு திட்டங்கள் இருக் கின்றனவா? அவ்வாறானால் அந்த இரண்டு திட்டங்களின் முக்கிய அம்சங்கள் யாவை?

(ஆ) தொழிலாளர் நலத் துறை ஏற்பாடு செய்திருக்கும் இத் திட்டமானது பிற கல்வி, சுகாதார, நிலம் தொடர்பான துறை களின் திட்டங்களில் இருந்து மாறுபட்டதா?

(இ) இந்த உத்தேச திட்டம் பெவின் பயிற்சி திட்டத்தை போன்றதா?

(ஈ) வெளிநாடு சென்று படிக்கும் மாணவர்கள் எத்தகைய தொழில்நுட்பப் பாடங்களை எடுத்து படிக்க வேண்டும் என்பது குறித்து அரசாங்கம் ஏதேனும் உத்தேசம் கொண்டுள்ளதா? ஒவ் வொரு பாடத்துக்கான பயிற்சிக் காலம் எவ்வளவு என்று சொல்ல முடியுமா?

(உ) மாணவர்கள் வெற்றிகரமாக பயிற்சி முடித்து வெளி நாட்டில் இருந்து திரும்பியதும் அவர்களுக்கு எந்த மாதிரியான வேலைகளை வழங்க அரசாங்கம் உத்தேசித்து உள்ளது?

(ஊ) மாகாணங்கள் ஒவ்வொன்றிலிருந்தும் நிர்ணயிக்கப் பட்ட ஒதுக்கீடு அடிப்படையில் மாணவர்களை அரசாங்கம் தேர்வு

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2010.

செய்கிறதா? மேலும் பல்வேறு வகுப்பினர்களுக்குரிய விகிதாச் சாரத்தையும் கடைப்பிடிக்கிறதா? அவ்வாறானால் அசாமிலிருந்தும், வங்காளத்திலிருந்தும் எத்தனை மாணவர்கள் அனுப்பப் படுவார்கள்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) மற்றும் (ஆ). இரண்டு வெவ்வேறான திட்டங்கள் உள்ளன. தொழில்நுட்ப மற்றும் விஞ்ஞானப் பாடங்களில் உயர் கல்வி பெற மாணவர்களை வெளிநாட்டுக்கு அனுப்பி வைப்பது ஒரு திட்டமாகும். தொழிற் சாலைகளில் ஏற்கெனவே வேலை பார்த்து வருபவர்கள் மேலும் பயிற்சி பெற அல்லது அவர்களுடைய தொழில்துறையில் மற்றும் இதர தொழிலில் அவர்களுக்கு இருக்கும் அனுபவங்களை விரிவு படுத்த அவர்களை வெளிநாட்டுக்கு அனுப்புவது மற்றொரு திட்ட மாகும். முன்னர் குறிப்பிட்ட திட்டத்தை ஏற்பாடு செய்வது கல்வி, சுகாதார மற்றும் நிலத்துறையாகும். மற்றொரு திட்டத்தை தொழி லாளர் நலத்துறை ஏற்பாடு செய்கிறது.

(இ) இந்த உத்தேசத் திட்டமானது பெவின் பயிற்சி திட்டத் தின் விரிவாக்கம் ஆகும். தொழில் துறையில் உள்ள மிக முக்கிய மேற்பார்வையாளர் பதவிக்கான உயர் தொழில்நுட்பப் பயிற்சியை வழங்குவதே இத்திட்டத்தின் நோக்கமாகும்.

(ஈ) தொழிலாளர் நலத்துறையின் திட்டத்தில் பின்கண்டவை இடம்பெற்றுள்ளன இயந்திரப் பொறியியல், மின் பொறியியல், வானொலிப் பெட்டிகள் தயாரிப்பு, கப்பல் கட்டுமானம், விமானப் பொறியியல், கப்பல் படைப் பொறியியல், கட்டடப் பொறியியல் கட்டமைப்புப் பொறியியல், உலோகவியல், மின் உற்பத்தி, இரயில் இஞ்சின் தயாரிப்பு, இரசாயனப் பொறியியல், உரங்கள், பிளாஸ்டிக் பொருட்கள், கண்ணாடி மற்றும் உருக்கு தயாரிப்பு இத்யாதி.

இந்தப் பட்டியல் இதோடு முடிந்து விடவில்லை. அவசிய மானால் இன்னும் பிறவகைப் பயிற்சிகள் அளிப்பது குறித்தும் யோசிக்கப்படும்.

பயிற்சிக் காலம் சாதாரணமாக ஒரு வருடம் ஆகும். சிலவற் றிற்கு இரண்டு வருடமாக்கப்படலாம்.

(ஊ) எத்தகைய ஒதுக்கீடும் நிர்ணயிக்கப்படவில்லை. மாகாண அரசாங்கங்கள் பயிற்சிக்கு அனுப்புகிறவர்களின் பட்டியலை முடிவு செய்து கொள்ளும்படிக் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. செலவுத் தொகையை அவை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கின்றன. தனிப்பட்ட முதலாளி களும் தங்களுடைய சொந்த பயிற்சியாளர் பட்டியலை அனுப்பி வைக்கலாம். இவற்றிலிருந்து இந்திய அரசாங்கம் இறுதித் தேர்வு செய்யும்.

# 320

## *கூடூர் பிரிவில் மைக்காச் சுரங்கங்களில் பணியாற்றும் தொழிலாளர்கள்

1327. திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட தகவல்களை அளிக்க வேண்டுகிறேன்:

(அ) கூடூர் பிரிவில் உள்ள மைக்கா சுரங்கங்களில் நிலத்தடியிலும் மேல் தளத்திலும் பணிபுரியும் ஆண், பெண்களின் எண்ணிக்கை;

(ஆ) அவர்களுடைய சராசரி தினக்கூலி மற்றும் கிராக்கிப்படி;

(இ) அவர்கள் ஒப்பந்தக்காரர்கள் மூலமாக வேலையில் அமர்த்தப்படுகிறார்கள் என்பதும், அந்த ஒப்பந்தக்காரர்கள் அவர்களது சம்பளத்தில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தை எடுத்துக் கொள்கிறார்கள் என்பதும் உண்மையா? இது உண்மையானால், இந்த முறைமையை அனுமதிப்பதற்கான காரணங்கள்;

(ஈ) இந்தச் சுரங்கங்களில் காணப்படும் நிலைமைகள் குறித்து விசாரணை நடத்த அரசாங்கம் உத்தேசித்துள்ளது என்றால் இந்த சபைக்கு அறிக்கை சமர்ப்பிக்குமா? அவ்வாறானால் எப்போது?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2014.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) கூடூர் பகுதியில் பணியாற்றும் சுரங்கத் தொழிலாளர்களில் ஆண்கள் 7000 பேர், பெண்கள் 4000 பேர் என்று உத்தேசமாகச் சொல்ல முடியும். நிலத்தடியில் பெண்கள் யாரும் வேலை செய்யவில்லை.

(ஆ) சராசரி தினக்கூலி ஆண்களுக்கு ரூபாய் 12, பெண்களுக்கு ரூபாய் 7, அவர்களது ஊதியங்கள் அண்மையில் உயர்த்தப் பட்டுள்ளதால் கிராக்கிப்படி வழங்கப்படவில்லை.

(இ) நாங்கள் அறிந்தவரையில் தொழிலாளர்கள் நேரடியாகவே வேலைக்கு அமர்த்தப்பட்டு ஊதியமும் நேரடியாகவே வழங்கப்படுகிறது, ஒப்பந்தக்காரர்கள் மூலமாக அல்ல.

(ஈ) இல்லை. அதனால் கேள்வியின் இரண்டாவது பகுதி இங்கு எழவில்லை.

# 321

## *கூடூர் பிரிவில் மைக்காவை பிளக்கும் தொழிற்சாலைகளில் தொழிற்சாலைச் சட்டம் போன்றவற்றை நடைமுறைப்படுத்துதல்

1328. திருமதி கே. ராதா பாய் சுப்பராயன்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிக்க வேண்டுகிறேன்:

(அ) (i) கூடூர் பிரிவில் உள்ள மைக்கா பிளப்புத் தொழிற்சாலைகளில் தொழிற்சாலைச் சட்டம் நடைமுறைப்படுத்தப்படவில்லை என்பது உண்மையா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2014.

(ii) இங்கே பணியாற்றும் பெரும்பாலானோர் பெண்கள் என்பதும், அவர்களுக்கு மகப்பேறு நல உதவிகள் எவையும் வழங்கப்படவில்லை என்பதும்,

(iii) பெண் தொழிலாளர்களின் கைக்குழந்தைகள் மற்றும் சிறுவர்களுக்கான கவனிப்பு ஏற்பாடுகள் எதுவும் இல்லை என்பதும்,

(iv) தொழிற்சாலையும் அதனைச் சார்ந்த சுற்றுப்புறங் களும் போதுமான காற்றோட்ட வசதிகள் இல்லாமலும், சுகாதார வசதிகள் இல்லாமலும் இருக்கின்றன என்பதும் உண்மைதானா?

(ஆ) இந்தத் தொழிற்சாலைகளில் தொழிற்சாலைச் சட்டம் மற்றும் மகப்பேறு நல உதவிச் சட்டம் ஆகியவற்றைச் செயல் படுத்தும் உத்தேசம் அரசுக்கு உண்டா? அவ்வாறே பெண் தொழி லாளர்களின் கைக்குழந்தைகள் மற்றும் சிறுவர்களை கவனித்துக் கொள்வதற்குப் போதுமான வசதிகள் செய்து தரவும், தொழி லாளர்களின் வேலை நிலைமைகளில் மேம்பாடு கொண்டு வரவும், அரசாங்கத்துக்கு யோசனை ஏதும் இருக்கிறதா? இது விஷயம் குறித்து இம்மன்றத்திற்கு அரசாங்கம் அறிக்கை அளிக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மற்றும் (ஆ): தொழிற்சாலைகள் சட்டம் மற்றும் மெட்ராஸ் மகப்பேறு நல உதவிச் சட்டங்கள் ஆகியவற்றை நடைமுறைப்படுத்துகின்ற பொறுப்பு மாகாண அரசுக்குரியது. கூடூர் பிரிவில் மைக்கா பிளப்பு தொழிற் சாலைகளில் உள்ள தொழிலாளர்களின் வேலை நிலைமை கள் பற்றிய ஆய்வு மேற்கொள்ளும் பணியில் தொழிலாளர் புல னாய்வுக்குழு ஈடுபட்டுள்ளது. இந்த ஆய்வுப் பணி முடிந்ததும் அரசாங்கம் ஏற்படுத்தப்போகிற தொழிலாளர் திட்டக் குழுவால் முன்வைக்கப்படும் யோசனைகளை அரசாங்கம் உரிய காலத்தில் கவனிக்கும்.

# 322

## *அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவர்களையும், சரிபார்ப்பவர்களையும் இளம் நிலை பிழை திருத்துநர்களாக நியமனம் செய்வது சம்பந்தமான விதிமுறை

திரு. பத்ரி தத் பாண்டே: (அ) அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவர்களையும், சரிபார்ப்பவர்களையும் இளநிலை பிழை திருத்துநர் பதவியில் நியமனம் செய்வது சம்பந்தமாக இன்றுள்ள கடுமையான விதிமுறைகளால் தங்களுக்கு ஏற்பட்டுள்ள அசாதாரணமான சிரமங்கள் குறித்து இந்திய அரசாங்க அச்சகங்களில் எவற்றையேனும் சேர்ந்த தொழிலாளர்கள் அண்மையில் அரசாங்கத்திற்கு கோரிக்கை மனு கொடுத்திருக்கிறார்களா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரிடமிருந்து தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

(ஆ) இந்திய அரசாங்க அச்சுத் தொழிலாளர்கள் சங்கம், (புதுடில்லி), அதன் தலைவர் திரு. ஆசப் அலி எம்.எல்.ஏ.வால் (மத்திய) முற்றிலும் ஏற்கப்பட்ட ஒரு முறையீட்டை 1940, மே மாதத்தில் தொழிலாளர் நலத்துறை செயலாளருக்கு அனுப்பி வைத்தது என்பதும், பின்னதாகத் தேர்ச்சி பெற்றவர்களை விட முன்னதாகத் தேர்ச்சி பெற்றவர்களுக்கு முன்னுரிமை வழங்கக்கூடிய வகையில் சட்ட விதிகளைத் திருத்தம் செய்ய அக்கோரிக்கை மனுவில் கோரப்பட்டிருந்தது என்பதும் உண்மையா?

(இ) இந்த மனுக்களின் அடிப்படையில் இப்போதிருக்கிற விதியைத் திருத்தம் செய்யும் பரிந்துரை குறித்துப் பரிசீலிக்கும் யோசனை அரசிடம் உள்ளதா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2020.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தில் அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவும் மூவரிடமிருந்து மனுக்கள் பெறப்பட்டுள்ளன. ஆனால் பிழைதிருத்துநர் பதவிக்கு நியமனம் செய்வதில் இப் போதைய விதிமுறைகளில் சிரமமோ சிக்கலோ இருப்பதாகப் புகார் ஏதுமில்லை.

(ஆ) ஆம்.

(இ) தகுதி அடிப்படையில் மனுக்கள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

# 323

## *மத்திய பொதுப்பணித் துறையின் சில கிளைகளில் ஒழுங்கற்ற நியமனங்கள்

1351. சையது குலாம் பிக்நைரங்: (அ) அரசாங்கப் பணி களில் வகுப்புவாரி பிரதிநிதித்துவ விதிமுறைகளுக்கு மாறாக, நியமனம் செய்யப்பட்டிருந்தால், அது ரத்து செய்யப்படுமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

(ஆ) மத்தியப் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த தோட்ட வேளாண்மைத் துறையில் ஒரு சீக்கியர் முறைகேடாக நியமனம் செய்யப்பட்டது கண்டறியப்பட்டது உண்மையா?

(இ) அந்த நியமனம் ரத்து செய்யப்படவில்லை என்பதும், ஆனால் அந்தக் காலி இடத்துக்கு நியமனம் செய்யப்படவிருந்த முஸ்லீம், பணிமூப்பு பட்டியலில் உள்ளபடி சரியான இடத்தில் அமர்த்தப்பட்டிருக்கிறார் என்பதும் உண்மையா?

(ஈ) மின் பொறியியலார் நியமனத்திலும் சில முறைகேடு கள் நடந்திருப்பது உண்மையா?

(உ) இம்மாதிரி நியமனங்களை ரத்து செய்யாமல் அதே

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2025.

சமயம் பணிமூப்பு பட்டியலில் முஸ்லீம்களை உரிய இடத்தில் அமர்த்த முடிவு எடுக்கப்பட்டிருப்பது உண்மையா?

(ஊ) பணி மூப்பு குறித்த ஆணைகள் பின்னர் ரத்து செய்யப் பட்டது என்பதும், முஸ்லீம் அல்லாதோரின் ஒழுங்கற்ற நியமனத் தேதிகளுக்கு ஏற்ப பணிமூப்பு நிர்ணயிக்கப்பட்டது என்பதும் உண்மைதானா? அவ்வாறாயின் ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்

(ஆ) இல்லை

(இ) தோட்டக்கலை உதவியாளர் பணிக்கு ஒரே சமயத்தில் இரண்டு காலியிடங்கள் ஏற்பட்டன. முதலாவது பணியிடம் ஒரு முஸ்லீமுக்கு ஒதுக்கப்பட்டது. மற்றொன்று பொதுவானது. அதன்படி முஸ்லீமுக்கான ஒதுக்கீட்டுப்படி முஸ்லீம் ஒருவரும், மற்றொன்றுக்கு ஒரு சீக்கியரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். முஸ்லீம் தனது பணியில் சேருவதற்கு முன்னதாக சீக்கியர் தனது பணியில் சேர்ந்து விட்டார். முஸ்லீம் வேறொரு இடத்தில் பணியில் இருந்ததால் அங்கிருந்து அவர் விடுபட்டு வருவதற்கு காலதாமதமாகி விட்டது. இரண்டு நியமனங்களில் முதலாவது நியமனத்தைப் பொறுத்தவரையில் சீக்கியரை விட பணிமூப்பு பட்டியலில் மேலான இடத்தில் தான் அந்த முஸ்லீம் வைக்கப்பட்டிருந்தார்.

(ஈ), (உ), (ஊ). அரசாங்கப் பணிகளில் சிறுபான்மை சமூகத்தினரின் பிரதிநிதித்துவம் பற்றிய ஆணைகளில் குறிப்பிட்டுள்ளபடி வகுப்புவாரி ஒதுக்கீட்டு விதிகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற கறாரான ஆணையைப் புறக்கணித்துவிட்டு மின் பொறியாளர் பதவிக்கான அதிகாரபூர்வமான மிகச் சில நியமனங்கள் செய்யப் பட்டுள்ளன. கிழக்கு இந்தியாவில் அவசரமான போர் பணிகள் தொடர்பாக குறைந்தகால முன்னறிவிப்புடன் இந்த நியமனங்கள் செய்யப்பட வேண்டியிருந்தன. இவற்றை மேற்கொள்வதில் வகுப்பு வாரி ஒதுக்கீட்டு விதிகளைப் பின்பற்றுவது நிர்வாக ரீதியில் சாத்தியமற்றதாய் இருந்தது. ஆகவே அந்த நியமனங்கள் ரத்து செய்யப் படவில்லை. சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் நியமனத் தேதிக்கு ஏற்ப அவர்களது பணி மூப்பும் நிர்ணயிக்கப்பட்டது. மின் பொறியாளர் பதவிக்கு முஸ்லீம் எவரின் பணிமூப்பை நிர்ணயிக்கும் ஆணைகள் எவையும் பிறப்பிக்கப்படவும் இல்லை; ரத்து செய்யப் படவும் இல்லை.

# 324

## *சுரங்கங்களில் பணிபுரியும் பெண் தொழிலாளிகளுக்கு மகப்பேறு நல உதவிகள் வழங்குதல்

*1358. திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டுகிறேன்:

(அ) 1945, பிப்ரவரி 21ந் தேதி கேட்கப்பட்ட நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண். 437க்கான பதிலில் குறிப்பிட்டுள்ளபடி மகப்பேற்றுக்கு முன்னரும் பின்னரும் பெண்கள் சுரங்கத்தில் வேலைக்குச் செல்லாதிருக்கும் கால அளவை நீட்டிப்பது பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்ததா?

(ஆ) ஒவ்வொரு சுரங்கத்திலும் உழைக்கும் தாய்மார்களின் குழந்தைகளுக்கான காப்பகங்கள் அமைப்பது குறித்து அரசாங்கம் கவனித்து வருகிறதா?

(இ) இந்த அவையில் உறுப்பினர்கள் தங்கள் சொந்த அனுபவத்தின்படி வெளியிட்டுள்ள அறிக்கைகளின்படி இந்த காப்பகங்கள் முறையாகச் செயல்படுவதில்லை என்று தெரிகிறது. இதன்பேரில் அரசாங்கம் காப்பகங்களின் முறையான செயல்பாட்டுக்கு நடவடிக்கை எடுத்துள்ளதா? எடுத்து வருகிறதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) இதற்கான சட்டம் ஏற்கனவே இந்த மன்றத்தில் முன்வைக்கப்பட்டுள்ளது.

(ஆ) (இ) எல்லாச் சுரங்கங்களிலும் கட்டாயமாக குழந்தைகள் காப்பகம் இருக்கும்படி செய்வது குறித்த யோசனை அரசாங்கத்தின் பரிசீலனையில் உள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2028.

325

# *வெளிநாட்டில் தொழில்நுட்ப தொழில் துறைகளில் பயிற்சிக்கான திட்டம்

*1359. திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட கேள்விகளுக்கு பதிலளிக்க வேண்டுகிறேன்.

(அ) பத்திரிகை செய்தியில் குறிப்பிட்டுள்ளபடி கல்வி, சுகாதாரம் மற்றும் நிலங்கள் பற்றிய துறையில் மாணவர்களுக்குப் பல்கலைக் கழகங்கள் அளித்துவரும் பயிற்சி தவிர, தொழில்நுட்பத் தொழில்களில் பயிற்சி பெறுவதற்குத் தொழிலாளர்களை அயல் நாடுகளுக்கு அனுப்பும் திட்டம் ஏதும் அரசிடம் உள்ளதா? அப்படி பயிற்சி அளிக்கப்பட்டால் யுத்தப் பிற்காலத்தில் தொழிற்சாலைகளைத் தொடங்க அவர்களைப் பயன்படுத்திக் கொள்ள முடியும் அல்லவா?

(ஆ) அத்தகைய பயிற்சிக்காக பிரிட்டிஷ் அல்லது அமெரிக்க அரசாங்கத்துடனோ, அந்நாடுகளின் தொழில் முதலாளிகளுடனோ இந்திய அரசு பேச்சுவார்த்தை நடத்தி வருகிறதா?

(இ) அவ்வாறானால் எந்தெந்த தொழில்களில்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

1944 டிசம்பர் 12-ந் தேதியிட்ட தொழிலாளர் நலத்துறையின் டி.ஆர்.சி.- II-1140ஆம் எண் கடிதத்தை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன். அவரது 198-ஆம் எண் கேள்விக்குப் பதிலளிக்கும் வகையில் இதன் நகல் 1945 பிப்ரவரி 14-ஆம் தேதி இம்மன்றத்தில் முன்வைக்கப்பட்டது.

(ஆ) அரசாங்கங்களுடன்.

(இ) பொதுவான அடிப்படையில் பேச்சுவார்த்தை நடைபெறுகின்றன. எந்தக் குறிப்பிட்ட தொழில்களைப் பற்றியும் அல்ல.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 26, 1945, பக்கம் 2029.

# 326

## *மட்கரி தீர்வை வசூல் செய்யப்பட்ட டன்கள் விவரம்

104. திரு. கே.சி. நியோகி: 1941-44-ஆம் ஆண்டுகளில் அனுப்பி வைக்கப்பட்ட மட்கரிக்கு மட்கரித் தீர்வைக் குழு எத்தனை டன்களுக்கு தீர்வை வசூலித்தது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது சம்பந்தமாக கிடைத்துள்ள தகவல் வருமாறு:

1941. 957,553 டன்கள்
1942. 431,858 டன்கள்
1943. 354,835 டன்கள்
1944. 445,721 டன்கள்

# 327

## +பல்வேறு இலாகாக்கள்

மாண்புமிகு சர். ஜெர்மி ரெய்ஸ்மான்: பின்வரும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்:

''1945 மார்ச் 31-ஆம் தேதியுடன் முடிவடையும் ஆண்டில் பல்வேறு இலாகாக்களுக்கு ஆகும் செலவினங்களை ஈடு செய்யும் பொருட்டு ரூபாய் 10 லட்சத்துக்கு மிகாமல் கூடுதல் தொகை கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபைக்கு அனுமதிக்கப் படுகிறது.''

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, மார்ச் 28, 1945, பக்கம் 2219.

+ மேற்படி அதே தொகுதி, பக். 2219.

திரு. தலைவர் (மாண்புமிகு சர். அப்துல் ரகீம்): பின்வரும் தீர்மானம் முன்மொழியப்படுகிறது:

> ''1945 மார்ச் 31-ஆம் தேதியுடன் முடிவடையும் ஆண்டில் பல்வேறு இலாகாக்களுக்கு ஆகும் செலவினங்களை ஈடு செய்யும் பொருட்டு ரூபாய் 10 லட்சத்துக்கு மிகாமல் கூடுதல் தொகை கவர்னர்-ஜெனரலின் நிர்வாக சபைக்கு அனுமதிக்கப் படுகிறது.''

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: 27 ஆம் பக்கத்தில் பின்வரும் விளக்கம் தரப்பட்டுள்ளது: ''மாகாண மற்றும் பிராந்திய தொழிலாளர் வழங்கீடு குழுக்கள், தொழிலாளர் வழங்கீடு நிலையங்கள் மற்றும் தொழிலாளர் வழங்கீடு அலுவலகங்கள் ஆகியவைக் கூடுதலாக உருவாக்கப்படுவதன் காரணமாக'' தொழிலாளர் மானியக் கோரிக்கையின் கீழ் 12 ஆம் பக்கத்தில் பின்வருமாறு காணப்படுகிறது: ''மாகாண மற்றும் பிராந்திய தொழிலாளர் வழங்கீடு குழுக்கள் மற்றும் தொழிலாளர் வழங்கீடு நிலையங்கள் ஆகியவற்றின் பணிகளை ஒருங்கிணைப்பதற்காக தேர்ச்சித் திறனற்ற தொழிலாளர் வழங்கீடு இயக்கத்தை உருவாக்குதல்.

சொன்னதையே திரும்பச் சொல்லுவதாக இது இருக்கிறது. இவ்விரண்டுக்கும் உள்ள வித்தியாசங்கள்தான் என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): அந்தக் கோரிக்கை முற்றிலும் வேறானது. அது அலுவலர்களின் சம்பளம் சம்பந்தப்பட்டது. அது அவர்களது சம்பளங்களைக் குறிக்கிறது. அதேவேளையில் இதுவோ முற்றிலும் வேறான விஷயம். இது தொழிலாளர் வழங்கீடுக் குழுக்கள், தொழிலாளர் வழங்கீடு அலுவலகங்கள், தொழிலாளர் வழங்கீடு நிலையங்கள் சிலவற்றை தொடங்கி வைக்கும் கணக்கு பற்றியது. மற்றதோ தலைமைச் செயலகத்தில் உள்ள அலுவலர்களின் சம்பளங்களை மட்டும் குறிக்கிறது.

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: நான் மீண்டும் படிக்கிறேன்:

''மாகாண மற்றும் பிராந்திய தொழிலாளர் வழங்கீடு குழுக்கள்....''

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது ஒருங்கிணைப்பிற்கானது. தலைமைச் செயலகத்தில் செய்யப்படுவது. 12 ஆம் பக்கத்தில் உள்ள விஷயம், செயலகத்தில் வேலைபார்க்கும் அலுவலர்களின் சம்பளத்தைக் குறிக்கிறது. அதேசமயம் இந்தக் கோரிக்கையானது தலைமைச் செயலகத்திற்கு வெளியே மேற்கொள்ளப்பட்ட பணி சம்பந்தப்பட்டதாகும்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்): ''1945 மார்ச் 31 ஆம் தேதியுடன் முடிவடையும் ஆண்டில் பல்வேறு இலாகாக்களுக்கு ஆகும் செலவினங்களை ஈடுசெய்யும் பொருட்டு ரூபாய் 10 லட்சத்துக்கு மிகாமல் கூடுதல் தொகை கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபைக்கு அனுமதிக்கப்படுகிறது.''

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# 328

## *தன்பாத் துணை-பிரிவில் கட்டுப்படுத்தப்பட்ட விலையில் அரிசி

1464. திரு. கே.சி. நியோகி: (அ) பீகார் மாகாணத்தில் தன்பாத் துணை-பிரிவில் பல்வேறு வகையான அரிசியின் நிர்ணயிக்கப்பட்ட உள்ளூர் விலை மணங்கிற்கு என்ன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) நிலக்கரித் தொழிலாளர்கள் பயனடைய வழங்கப்படும் அரிசிக்கு, மாகாண அரசாங்கம் இரண்டு நிலக்கரி தொழில் ஸ்தாபனங்களிடம் என்ன விலை நிர்ணயித்துள்ளது? தன்பாத் - துணைப் பிரிவில் நிர்ணயிக்கப்பட்டுள்ள விலையோடு சேர்த்து இவ்விரண்டு

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 29, 1945, பக்கம் 2235.

ஸ்தாபனங்களிடமிருந்து வேறு ஏதேனும் தொகை வசூலிக்கப் படுகிறதா? அவ்வாறாயின் அத்தொகை எவ்வளவு? இத்தொகை வசூலிக்கப்படுவதற்கான காரணங்கள் என்ன?

(இ) நிர்ணயிக்கப்பட்ட விலையை விட ஒரு மணங்கு அரிசிக்கு சுமார் 4 ரூபாய் கூடுதலாக வாணிகக் கூட்டிணைப்பு அதனுடைய உறுப்பினர்களிடம் வசூலிப்பதாக, இந்திய நிலக்கரிச் சுரங்க உரிமையாளர் சங்கத்திடமிருந்து அண்மையில் புகார் எதுவும் வந்ததா?

(ஈ) இதுபற்றி, அல்லது இதே போன்ற இதர விஷயங்கள் தொடர்பாக தன்பாத்திலுள்ள நல ஆணையரிடமிருந்து விரிவான அறிக்கை எதுவும் அரசுக்குக் கிடைத்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) தன்பாத் பிரிவில் சாதாரண மற்றும் நடுத்தரமான அரிசிக்கு ஒரு மணங்கு ரூ. 11, ரூ. 12 என மொத்த விற்பனை விலை நிர்ணயிக்கப்பட்டுள் ளது. அதே ரகங்கள் சில்லறை விற்பனையின் போது ஒரு சேர் அரிசியின் விலை $4/7_{1/2}$* மற்றும் -15/* என நிர்ணயிக்கப்பட் டுள்ளது.

(ஆ) இரண்டு நிலக்கரி தொழில் ஸ்தாபனங்களுக்கும் மாகாண அரசாங்கம் வழங்கும் சாதாரண அரிசிக்கும் நடுத்தர அரிசிக்கும் முறையே மணங்கு ஒன்றுக்கு ரூ. 9, ரூ. 10 என்று மொத்த விலை நிர்ணயிக்கப்பட்டுள்ளதோடு, நிர்வாக செலவினங்களுக்காக ஒரு மணங்கிற்கு 4 அணா கூடுதலாகவும் வசூலிக்கப்படுகிறது. அத்துடன் அரிசி சாக்குப்பை செலவுகளையும், அரிசியை எடுத்து, நுகர்வோர் மையங்களுக்கு அனுப்பி வைக்க ஆகும் செலவுகளை யும் அவை செலுத்த வேண்டியுள்ளது.

(இ) ஆம்

(ஈ) இல்லை

---

★ அணா பைசாவில் நிலை நிலவரம் எடுத்துக் காண்பிக்கப்பட்டுள்ளது.

*திரு. கே.சி. நியோகி: (ஆ) கேள்விக்கான பதிலைப் பொறுத்த வரை, நிர்ணயிக்கப்பட்ட உள்ளூர் விலையை விட, நிலக்கரிச் சுரங்கங்களுக்கு வழங்கப்படும் அரிசியின் விலை வெவ்வேறு கட்டண விதிப்பின் காரணமாக அதிகமாக இருக்கும் நிலையில் அதன் முடிவான விலை எவ்வளவு என்று மாண்புமிகு உறுப்பினர் இதர அவைக்குத் தெரியப்படுத்தும் நிலையில் இருக்கிறாரா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது சம்பந்தமாக நான் கணக்கிட்டுப் பார்க்கவில்லை.*

*திரு. கே.சி. நியோகி: இதுதான் முறையீட்டிலுள்ள முக்கிய அம்சம்.*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மரியாதைக்குரிய என்னுடைய நண்பர் கணக்கிட்டுப் பார்த்துக் கொள்ளலாம்.*

*திரு. கே.சி. நியோகி: (ஈ) கேள்விக்கான பதிலைப் பொறுத்த வரை இந்த அதிகாரி இந்திய அரசாங்கத்தின் அதிகாரி என்று எடுத்துக் கொள்ளலாமா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம்.*

*திரு. கே.சி. நியோகி: இது சம்பந்தமாக அடிக்கடி முறையீடு கள் வந்தவண்ணம் இருப்பதால் இவை பற்றி இந்த அதிகாரியிட மிருந்து ஓர் அறிக்கை பெறுவது உசிதம் என்று மாண்புமிகு உறுப் பினருக்குத் தோன்றவில்லையா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தப் பணி யானது அந்த அதிகாரியின் அதிகார வரம்புக்குள் வரவில்லை. இது மாகாண அரசாங்கங்களின் விஷயமாகும்.*

*திரு. கே.சி. நியோகி: முறையீடுகள் இத்தகையவை என்பதை யும், நிலக்கரிச் சுரங்கங்களுக்கு மலிவுவிலை அரிசி வழங்கும் விஷயத்தில் மத்திய அரசாங்கத்துடன் மாகாண அரசாங்கம் முற்றி லும் ஒத்துழைக்கவில்லை என்பதையும் மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மாகாண அரசாங்கத்துடன் தொடர்பு கொள்வேன்; ஆனால் இவ்விஷயத்தைக் கையாளும்படி நிலக்கரி நல ஆணையரை நான் வற்புறுத்த இயலாது.

# 329

## *பலுசிஸ்தானத்தில் பாசனப்பகுதி

1469. **திரு. அப்துல் கையூம்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் விஷயங்கள் குறித்து தகவல் தெரிவிக்க வேண்டுகிறேன்:

(அ) போர் தொடங்கியதிலிருந்து பலுசிஸ்தானத்தில் பாசனத்துக்குக் கொண்டு வரப்பட்ட மொத்தப் பரப்பளவு எவ்வளவு?

(ஆ) அதில் அரசாங்கத்தால் பாசனத்துக்குக் கொண்டு வரப்பட்ட பகுதி எவ்வளவு? தனியார் நிறுவனங்களால் கொண்டு வரப்பட்ட பகுதி எவ்வளவு?

(இ) இத்தகைய திட்டப்பணிகளுக்கு அரசாங்கம் செலவிட்ட மொத்தத் தொகை எவ்வளவு?

(ஈ) நிலத்தை பாசனத்துக்கு கொண்டு வருவதற்காக ஜமீன்தார்களுக்கு முன்பணம் ஏதும் கொடுக்கப்பட்டதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ), (ஆ), (இ) போர் தொடங்கியதிலிருந்து கணிசமான பகுதிகள் எவையும் பலுசிஸ்தானத்தில் பாசனத்துக்குக் கொண்டு வரப்படவில்லை. ஆனால் இரண்டு வெள்ளத் தடுப்பு திட்டங்களை அரசாங்கம் அனுமதித்தது. திட்ட மதிப்பீடு 68,000 ரூபாய். இத்திட்டப் பணியில் சுமார் 1000 ஏக்கர்கள் கூடுதலாகச் சேரும். நிர்வாகத் துறையின் கொள்முதல் நடவடிக்கைகளோடு இணைந்து தரிசு நிலத்தில் நீர்ப்பாசன வசதி செய்து விவசாயத்தை மேம்படுத்துகிற திட்டத்தின் படி அதிதீவிர சாகுபடியில் ஈடுபட்டதன் காரணமாக பலுசிஸ்தான் மாகாணம் பிற மாகாணங்களுக்கு கோதுமை, நெல் மற்றும் சோளம் ஆகியவற்றை ஏற்றுமதி செய்கிற அளவுக்கு உபரி உற்பத்தியுள்ள மாகாணமாகத் திகழ்கிறது.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 29, 1945, பக்கம் 2239.

# 330

## *இரயில்வே நிலக்கரி சுரங்கத்தின் அருகாமையில் மதுக்கடைகள்

*1470.* திருமதி கே. ராதாபாய் சுப்பராயன்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரைப் பின்கண்ட கேள்வி களுக்குப் பதிலளிக்குமாறு வேண்டுகிறேன்.

(அ) இரயில்வே நிலக்கரி சுரங்கத்தின் அருகாமையில் மதுக் கடைகள் இருப்பது உண்மையா? அவ்வாறாயின் அவை எவ் வளவு நாட்கள் திறந்திருக்கின்றன. எவ்வளவு மணி நேரம் திறந்திருக் கின்றன?

(ஆ) இந்த மதுக்கடைகள் சுரங்கத் தொழிலாளர்கள் குடித்துப் பணத்தை விரயம் செய்யவும் அவர்களது உடல் நலம் பாதிக்கப் படவும் தூண்டுகோலாக இருக்கின்றன என்பதையும், மேலும் அதன் விளைவாக சம்பள தினத்தை அடுத்த மறுநாள் சுரங்கங் களில் தொழிலாளர்கள் வேலைக்கு வருவது குறைகிறது என்பதை யும் உற்பத்தியும் மோசமாக பாதிக்கப்படுகிறது என்பதையும் சுரங்க நிர்வாகம் அறியுமா?

(இ) மேற்கண்ட கேள்வி (ஆ)-வுக்குரிய பதில் எதிர்மறை யாக இருந்தால் இது விஷயம் குறித்து அறிக்கை அளிக்கும்படி யாகக் கேட்டுக்கொள்ளும் யோசனை அரசாங்கத்திடம் உள்ளதா?

(ஈ) சுரங்கப் பகுதிகளில் உள்ள மதுக்கடைகளில் மதுபான விற்பனையை தடை செய்வதற்கும் அல்லது கடை திறந்திருக்கும் நேரத்தையும் தனி நபருக்கு விற்கக்கூடிய மதுவின் அளவையும் கட்டுப்படுத்துவதற்கும், சம்பள நாட்களில் கடையை மூடி வைப் பதற்கும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளைக் கேட்டுக் கொள்ளும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உண்டா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 29, 1945, பக்கம் 2239.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) ஆம். நிலக்கரி சுரங்கத்துக்கு அருகாமையில் இரயில்வே மற்றும் பிறருக்குச் சொந்த மான மதுக்கடைகள் இருக்கின்றன. எவ்வளவு நாட்கள், எவ்வளவு மணி நேரம் அந்தக் கடைகள் திறந்திருக்கின்றன என்பதைப் பற்றிய தகவல் இப்போதைக்கு என்னிடம் இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் அந்த விவ ரத்தைப் பெற்று இந்த அவையில் முன்வைப்பேன்.

(ஆ) இல்லை.

(இ) சுரங்கத் தொழிலாளர்கள் குடிப்பழக்கத்துக்கும் உடல் நலத்துக்கும், உற்பத்திக்கும் உள்ள உறவுகள் பற்றிய பொதுவான அறிக்கை தரும்படி அரசாங்கம் கேட்டுக் கொள்ளும்.

நான் மேலும் ஒரு விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். 1944 டிசம்பரில் பீகார் நிலக்கரிச் சுரங்கப் பகுதிகளில் மதுபானங் களின் சில்லறை விற்பனை விலை அதிகரிக்கப்பட்டது. மதுபான உபயோகத்தை கட்டுப்படுத்தும் எந்த ஒரு நடவடிக்கையும் மேற் கொள்ளும் முன்னர் இந்த விலை உயர்வு பயனுள்ளதாக இருக் கிறதா என்று மாகாண அரசாங்கம் கண்காணிக்கிறது. வங்காளத்தில் இருந்து சென்றாண்டு கிடைத்த அறிக்கையில், வங்காள நிலக்கரிச் சுரங்கப் பகுதியில் அதிக அளவில் மதுபானம் உபயோகிக்கப்பட்ட தற்கான சான்று ஏதும் இல்லை.

*திருமதி கே. ராதாபாய் சுப்பராயன்:* இந்த நாட்டில் நிலக்கரி உற்பத்தி பெரிதும் மோசம் அடைந்து இருப்பதையும், நிலக்கரிச் சுரங்கங்களில் இருந்து மிக அதிகமான உற்பத்தி பெறுவது அவசியம் என்பதையும் கருத்திற் கொண்டு பார்க்கும்போது, சுரங்கப் பகுதிகளில் மதுக்கடைகளை மூடுவது மாகாண விஷயம் என்றா லும் கூட இது சம்பந்தமாக உடனடி நடவடிக்கைகளை மேற்கொள் வதன் அவசியத்தை அரசாங்கம் கவனத்தில் கொள்ளுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மரியாதைக்குரிய உறுப்பினர் தெரிவித்துள்ள யோசனையின்படி நாங்கள் நட வடிக்கை எடுக்க முடியாத நிலையில் இருக்கிறோம்.

*திரு. ஜி. ரெங்கையா நாயுடு:* ஸ்தல அரசாங்கத்தின் சம்மதத்

துடன் மதுபானக் கடைகள் சுரங்கப் பகுதிகளில் உள்ளனவா என்று தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது மாகாண அரசாங்கம் தொடர்புடைய விஷயம் என்று ஏற்கெனவே கூறியிருக்கிறேன்.

# 331

## *இரயில்வே நிலக்கரிச் சுரங்க தொழிலாளர்களின் குழந்தைகளுக்கான ஆரம்பப் பள்ளிகள்

1471. திருமதி ராதாபாய் சுப்பராயன்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்கு தயவு செய்து பதில் அளிக்க வேண்டுகிறேன்:

(அ) இரயில்வேக்குச் சொந்தமான நிலக்கரிச் சுரங்கங்களில் வேலைபார்க்கும் தொழிலாளர்களின் குழந்தைகளுக்கான ஆரம்பப் பள்ளிகள் ஏதும் அங்கு இருக்கின்றனவா? அவ்வாறு இருக்குமானால் அப்பள்ளிகளின் எண்ணிக்கை, ஒவ்வொன்றிலும் வருகைதரும் மாணவர்களின் (ஆண், பெண்) எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) 1939 ஜுன் மாதத்தில் இருந்து பள்ளிகள் மற்றும் மாணவர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளதா, குறைந்துள்ளதா? இப்போதுள்ள வித்தியாசம் என்ன?

(இ) இந்தப் பள்ளிகள் ஆண், பெண் இருசாராரும் படிக்கும் பள்ளிகளா? அவற்றில் ஆசிரியைகள் இருக்கின்றனரா?

(ஈ) இந்தப் பள்ளிகளில் மதிய உணவு வழங்கப்படுகிறதா? இல்லையானால் ஏன் அவ்வாறு வழங்கப்படவில்லை.

(உ) இந்தப் பள்ளிகள் நிலக்கரிச் சுரங்க முழுமையான

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 29, 1945, பக்கம் 2239.

அல்லது ஓரளவிலான நிர்வாகத்தின்கீழ் வருகின்றனவா? அல்லது வேறு உள்ளூர் நிர்வாகப் பொறுப்பில் உள்ளனவா?

(ஊ) சுரங்கத் தொழிலாளர்கள் மத்தியில் ஆரம்பக் கல்வியை மேம்படுத்த அரசாங்கம் எத்தகைய நடவடிக்கைகளை எடுத்து வருகிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம். பள்ளி எண்ணிக்கைகள் குறித்த விரிவான தகவல் என்வசம் இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். எனினும் இத்தகவலைப் பெற்றுவிட முடியும் என்று நம்புகிறேன். இந்த பள்ளி களில் பிற குழந்தைகளும் படித்து வருவதால் பள்ளிக்கு வருகை தரும் சுரங்கத் தொழிலாளர் வீட்டுக் குழந்தைகளின் எண்ணிக்கை பற்றிய தகவல் பெறுவது அவ்வளவு எளிது அல்ல.

(ஆ) (இ) மற்றும் (ஈ). என்னிடம் தகவல் இல்லை. ஆயினும் அதனைப் பெற்று இந்த மன்றத்தில் சமர்ப்பிப்பேன்.

(உ) ஹஜாரிபாக் சுரங்க வாரிய நிர்வாகத்தின்கீழ் இந்தப் பள்ளிகள் இயங்குகின்றன. அவற்றிற்கு இரயில்வே சுரங்கங்கள் நிதி உதவி செய்கின்றன.

(ஊ) கல்வி வசதிகளை அளிக்கின்ற பொறுப்பு முக்கியமாக மாகாண அரசுகளை சேர்ந்ததாக இருக்கிறது.

**திருமதி கே. ராதாபாய் சுப்பராயன்:** சேம நலக்குழு ஒன்று இருப்பதாக ஏற்கனவே ஒருசமயம் மாண்புமிகு உறுப்பினர் தெரி வித்துள்ளார். இதுவிஷயத்தில் நான் தெரிவித்த யோசனைகளை அக்குழுவின் கவனத்திற்கு கொண்டு செல்ல முடியுமா? அந்தப் பள்ளிகளில் படிக்கும் சுரங்கத் தொழிலாளர்களின் குழந்தைகள் பற்றிய விவரங்களைப் பெற்றுத்தர இயலுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவ்விஷயத்தில் சேம நலக்குழுக்கள் அக்கறை எடுத்துக் கொள்ளவும் நடவடிக்கை யில் இறங்கவும் எவ்வித தடையும் இல்லை.

திருமதி கே. ராதாபாய் சுப்பராயன்: இந்த விஷயங்களில் கவனம் செலுத்தும்படி சேமநலக் குழுவுக்கு அரசாங்கம் ஏதேனும் வழிகாட்டல்கள் கொடுக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். நிச்சயமாகக் கொடுக்கும். இத்தகைய நடவடிக்கைகளை குழு மேற்கொள்ளத் தடை ஏதும் இல்லை.

# 332

## [1]அத்தியாவசியப் பணிகள் சட்டத்தை அரசுப் பணியாளர்களுக்குப் பயன்படுத்துதல்

1485. திரு. என்.எம். ஜோஷி: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டுகிறேன்:

(அ) அத்தியாவசியப் பணிகள் சட்டம் அரசு ஊழியர்கள் அனைவருக்கும் பொருந்துமா?

(ஆ) சரியான காரணமின்றி மன்னர்பிரான் அரசின் பணியாளர்களை வேலையிலிருந்து நீக்காமலிருக்க மன்னர்பிரான் அரசுக்குள்ள கடமைப் பொறுப்பு சம்பந்தமாகவும், அவர்களது சம்பளம், வேலை நிலைகளை ஒழுங்குபடுத்த ஒரு குறிப்பிட்ட அமைப்புக்கு அதிகாரம் அளித்தல் அல்லது உத்தரவு பிறப்பித்தல் ஆகியவை சம்பந்தமாகவும் 1941 ஆம் வருட அத்தியாவசியப் பணிகள் (பராமரிப்பு) சட்டத்தின் பிரிவுகள் 5 மற்றும் 6-ல் உள்ள விதிமுறைகளை அமல்படுத்தாதிருப்பது குறித்து அரசுக்கு ஏதேனும் ஆட்சேபங்கள் வந்தனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம். (ஆ) இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, மார்ச் 29, 1945, பக்கம் 2245.

**திரு. என்.எம். ஜோஷி:** அத்தியாவசியப் பணிகள் சட்டப்படி மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ளா திருப்பது ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசுக்கு ஆட்சே பங்கள் வந்தனவா என்பதுதான் மதிப்பிற்குரிய எனது நண்பரின் கேள்வி.

***திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** 3 ஆவது விஷயத்தில்...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): மதிப்பிற்குரிய என் நண்பர் அவினாசி லிங்கம் செட்டியார் எழுப்பிய கேள்விகளை நானிங்கு இல்லாத தால் கேட்க முடியாமற் போனதற்கு வருந்துகிறேன். ஆயினும் இந்த குடியிருப்புகள் எல்லாம் நிரந்தரமானவை என்று அவருக்குச் சொல்ல விரும்புகிறேன்.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** அவை அனைத் துமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். இந்தக் கட்டுமானப் பணியை மேற்கொள்ளும் அவசியம் எங்களுக்கு ஏற்பட்டுள்ளது.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** அதை அறிவேன். அதுபற்றி எனது மாண்புமிகு நண்பர் ஒரு விரிவுரையே நிகழ்த்த முடியும் என்றும் அறிவேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏராளமாய் பணம் செலவழித்து தற்காலிகக் கட்டிடங்களைக் கட்டுவதை விட இவ்வாறு செய்திருப்பதின் மூலம் குறைந்தபட்சம் நிரந்தர வீடு களைப் பெறுவதில் வெற்றி பெற்றுள்ளோம். அவை தலைமைச் செயலகத்தில் பணியாற்றிவரும் பெரும் எண்ணிக்கையிலான அலுவலர்களுக்கு குடியிருப்பு வசதி செய்து தரப் பயன்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 29, 1945, பக்கம் 2261.

# 333

## *டில்லி கரோல்பாக்கில் ஒரு மசூதியைச் சுற்றிலும் சுவர் எழுப்புதல்

மௌல்வி முகம்மது அப்துல் கனி: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்குப் பதில் அளிக்க வேண்டுகிறேன்:

(அ) டில்லி முஸ்லீம் வக்ப்கள் சட்டப்படி (1943 ஆம் ஆண்டின் XIII) ஒரு சன்னி மஜ்லிஸ்-இ-ஆவ்காப் இருந்து வருகிறது என்பதை அவர் அறிவாரா? அவ்வாறு அறிவாராயின், மேற்சொன்ன சன்னி மஜ்லிஸ்-இ-ஆவ்காப் தான் டில்லி மாகாணம் முழுமைக்கும் எல்லா வக்ப் அமைப்புகளையும் நிர்வகித்து வருகிறதா?

(ஆ) புதுடில்லி கரோல்பாக்கில் அண்மையில் அரசு கட்டியுள்ள குடியிருப்புகளுக்கு அருகில் ஒரு தொன்மையான மசூதியும் இடுகாடும் இருப்பதையும், மசூதியில் தொழுகை நடைபெற்று வருகிறது என்பதையும் அவர் அறிவாரா?

(இ) அந்த மசூதியைச் சுற்றிலும் சுவர் எழுப்பி முஸ்லீம்கள் அந்த மசூதிக்குச் சென்று தொழுகை நடத்தாமல் தடுக்கும் நோக்கத்தில் மத்திய பொதுப்பணித்துறை செயல்படுவது உண்மையா?

(ஈ) அப்படி ஒரு சுவர் எழுப்ப அவரது துறையானது, சன்னி மஜ்லிஸ்-இ-ஆவ்காப் நிர்வாகத்தின் அனுமதியை நாடியுள்ளதா?

(2) முஸ்லீம் பெருமக்கள் தொழுகை நடத்துவதற்கு எதிர்ப்பு தெரிவித்த ஒப்பந்தக்காரரும் பொதுப்பணித்துறை அலுவலர்களும்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, ஏப்ரல் 2, 1945, பக்கம் 2304.

இப்போது மத்திய பொதுப்பணித் துறையில் இருக்கின்றனர் என்பது உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம். (ஆ) கரோல்பாக் பகுதியில் அண்மையில் கட்டப்பட்டுள்ள அரசு குடியிருப்பின் அருகில் பயன்படுத்தப்படாத ஒரு பழைய இடுகாடு இருப்பதற்கான ஆதாரம் இருந்த போதிலும் பழைய மசூதி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் இந்தப் பகுதியில் குடியிருக்கும் முஸ்லீம்கள் சிலர் அண்மையில் ஓர் உறுதியான மேடை எழுப்பி, அதன் மீது கூரைவேய்ந்து, வேலி அமைத்து அதில் தான் தாங்கள் தொழுகை நடத்தி வருவதாய் கூறி வருவதை நான் அறிவேன்.

(இ) அரசாங்கத்துக்குச் சொந்தமான இந்த இடத்தில் முஸ்லீம் களோ இந்துக்களோ ஆக்கிரமிப்பு செய்வதைத் தடுக்கும் பொருட்டு சுவர் எழுப்பிட உள்ளூர் நிர்வாகத்துடன் கலந்து ஆலோசித்த பின்னர் அரசாங்கம் முஸ்லீம் சமூகப் பிரதிநிதிகளின் விருப்பப்படி, சட்ட ஆலோசனையை எதிர்பார்த்து, சுவரெழுப்பும் யோசனை தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. கேள்வி (ஆ)வுக்கு அளித்த பதிலின்படி (ஈ) கேள்வி எழவில்லை.

(உ) கேள்வி (இ)க்கு நான் அளித்த பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்.

**சர் முகம்மது யாமின் கான்:** அரசாங்கத்துக்குச் சொந்தமான இந்த இடத்தை மக்கள் பயன்படுத்துவதைத் தடுத்திட ஒரு சுவ ரெழுப்பலாம் என அரசாங்கம் முடிவு செய்துள்ளதாக மாண்பு மிகு உறுப்பினர் கூறுகிறார். அது எப்படி அரசு நிலமானது என்பதைக் கூறும்படி கேட்டுக் கொள்கிறேன். அது இடுகாடு என்ற நிலையில், அதை அரசு நிலம் என்று மாண்புமிகு உறுப்பினர் எப்படிச் சொன்னார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்போதைக்கு அரசு நிலம் என்று அரசுக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளது. ஆனால் நான் இவ்விஷயத்தில் சட்ட ஆலோசனை கேட்டுள்ளேன்.

**சர் முகம்மது யாமின் கான்:** ஆங்கிலேயர்களின் கல்லறைகளையும் இந்துக்களின் மயான பூமியையும் அரசாங்கத்துக்குச் சொந்தமானவை என்று மாண்புமிகு உறுப்பினர் சொல்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சட்ட வல்லுனர்களின் ஆலோசனையை நாடியுள்ளேன் என்று ஏற்கனவே கூறியுள்ளேன்.

**சர் முகம்மது யாமின் கான்:** ஆனால், இங்கே இடுகாடு இருக்கிறது என்று கூறிய மாண்புமிகு உறுப்பினர், அப்படிச் சொன்ன அதேவேளையில், அதை அரசு நிலமென்று எப்படிச் சொல்லலாம்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்போதைக்கு அரசுக்கு வழங்கப்பட்டுள்ள ஆலோசனைபடி, நிலவரம் அதுதான்.

**சர் முகம்மது யாமின் கான்:** யாரால்?

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):** சட்ட ஆலோசனை கேட்டுள்ளதாக மாண்புமிகு உறுப்பினர் ஏற்கனவே கூறியுள்ளார்.

**சர் முகம்மது யாமின்கான்:** அவருக்கு அறிவுரை சொன்னது யார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசாங்கத்துக்கு இப்படி ஆலோசனை கூற தகுதியானவர்கள் யாரோ, அவர்கள் தான்.

**மௌல்வி முகம்மது அப்துல் கனி:** இடுகாடு என்றும் மசூதி என்றும் மாண்புமிகு உறுப்பினர் கூறிய இடத்தை அரசாங்கம் கையகப்படுத்தியுள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கையகப்படுத்துவதற்கு அவசியம் இல்லை.

# 334

## *இந்தியரல்லாதோர் அமைத்துள்ள பொதுநலத்துறை நிறுவனங்கள்

*1591. திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:* பின்வருவனவற்றிற்கு மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதிலளிக்க வேண்டுகிறேன்:

(அ) பிரிட்டிஷ் மற்றும் இந்தியரல்லாதோர் இந்தியாவில் அமைத்துள்ள பொதுநலத்துறை நிறுவனங்கள் எத்தனை?

(ஆ) இந்தப் பொதுநலத்துறை நிறுவனங்களைக் கையகப் படுத்த முயற்சியேதும் மேற்கொள்ளப்பட்டதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) மற்றும் (ஆ) இந்த விவரங்கள் சேகரிக்கப்பட்டு இம்மன்றத்தில் வைக்கப்படும்.

# 335

## +இந்திய அரசு அச்சகங்களின் கணக்குகள் தணிக்கை

*1596. திரு. கே.பி. ஜீனராஜ ஹெக்டே:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்குப் பதில் அளிக்க வேண்டுகிறேன்:

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 4, 1945, பக்கம் 2428.

+ மேற்படி அதே தொகுதி, பக்கம் 2431

(அ) இந்திய அரசு அச்சகங்களின் கணக்குகள் ஆண்டு தோறும், புதுடில்லியிலுள்ள மத்திய வருவாய்த் துறையைச் சேர்ந்த தலைமைக் கணக்குத் தணிக்கை அதிகாரிகளால் தணிக்கை செய்யப் படுகின்றனவா?

(ஆ) தணிக்கை அறிக்கைகளின் நகல்கள் கவனமாகப் பரிசீலிப்பதற்கும், நடவடிக்கை எடுப்பதற்கும் அவருடைய துறைக்கு அனுப்பி வைக்கப்படுகின்றனவா? அத்தகைய நகல்கள் கடந்த இரண்டு ஆண்டுகளில் கிடைக்கப் பெற்றனவா? அவ்வாறாயின் அவற்றின் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

(இ) கடந்த இரண்டு அறிக்கைகளில் காகிதம் சம்பந்தப் பட்ட கணக்குகளில் கடுமையான முரண்பாடுகள் இருந்தன என்பது உண்மையா? அவ்வாறாயின் அதற்கான காரணங்கள் யாவை?

(ஈ) புதுடில்லி அச்சகத்தின் கடந்த இரண்டாண்டுக் கால தணிக்கை அறிக்கைகளின் நகல் ஒவ்வொன்றையும் இந்த அவை யின் முன்வைக்க அரசு உத்தேசித்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மத்திய வருவாய்த் துறையைச் சேர்ந்த தலைமை கணக்குத் தணிக்கை அதிகாரியாலும் அவர் சார்பில் செயல்படும் பிற தலைமைக் கணக்குத் தணிக்கை அதிகாரிகளாலும் அச்சகங்களின் கணக்கு கள் தணிக்கை செய்யப்படுகின்றன.

(ஆ) தணிக்கை செய்யப்பட்ட கணக்குகள் குறித்த அறிக்கை கள் சம்பந்தப்பட்டத் துறைத் தலைவர்களிடம் சமர்ப்பிக்கப்படு கின்றன. முக்கியமான விஷயங்கள் அல்லது தீர்வுகிட்டாத விஷ யங்கள் ஆகியவை மட்டும் அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வரப்படுகின்றன.

(இ) பெரும்பாலும் பதிவேடுகளில் தவறாகப் பதிவு செய்யப்

பட்டதன் காரணமாக சில முரண்பாடுகள் இருந்ததை 1942-43 அறிக்கை வெளிப்படுத்தியுள்ளது. இவ்விஷயம் குறித்து இன்னும் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. 1943-44 ஆம் ஆண்டு அறிக்கை அண்மையில் கிடைக்கப் பெற்றது. அச்சு மற்றும் எழுதுபொருள் கட்டுப்பாட்டு அதிகாரி அந்த அறிக்கையை பரிசீலித்து வருகிறார்.

(ஈ) இல்லை. மத்திய வருவாய்த் துறையைச் சேர்ந்த தலைமை கணக்குத் தணிக்கை அதிகாரியால் மிக முக்கியமான விஷயங்கள் ஆண்டின் பண ஒதுக்கீட்டுக் கணக்குகளில் சேர்க்கப் படுகின்றன. இந்தக் கணக்குகள் யாவும் பொதுக் கணக்குத் தணிக்கை குழுவால் பரிசீலிக்கப்பட்டு அவர்களுடைய அறிக்கைகள் சட்ட மன்றத்தில் முன்வைக்கப்படுகின்றன.

திரு. கே.பி. ஜீனராஜ ஹெக்டே: கேள்வி(ஈ)-ன் ஒரு பகுதி யாக நான் தெரிந்து கொள்ள விரும்புவதெல்லாம் அந்தத் தணிக்கை அறிக்கைகளை மாண்புமிகு உறுப்பினர் இந்த அவையில் தாக்கல் செய்வாரா என்பதுதான்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை. அதற் கான அவசியம் இல்லை. பொது கணக்குத் தணிக்கை குழுவின் அறிக்கைகளில் அவை சேர்க்கப்பட்டுள்ளன.

திரு. கே.பி. ஜீனராஜ ஹெக்டே: பொதுக் கணக்குத் தணிக்கைக் குழுவின் அறிக்கைகளில் இந்தத் தணிக்கை அறிக்கைகள் முழு அளவில் சேர்க்கப்பட்டுள்ளனவா என்று தெரிந்து கொள்ள விரும்பு கிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: பொதுக் கணக்குத் தணிக்கைக் குழுவின் நோக்கங்களுக்கு எந்தெந்தப் பகுதிகள் அவசியமோ அவை மட்டும் சேர்க்கப்பட்டுள்ளன.

# 336

## *மத்திய அரசு ஊழியர்களுக்கு குடியிருப்புகள் வழங்கப்படாதது குறித்து

1606. *சர்தார் சாந்த் சிங்:* (அ) டில்லி மற்றும் புதுடில்லியில் ரூபாய் 600க்கும் குறைவாக மாதச் சம்பளம் பெறுகிற, இன்னும் அரசாங்கத்தால் குடியிருப்பு வசதிகள் கிடைக்கப் பெறாத மத்திய அரசு ஊழியர்களுடைய எண்ணிக்கை எத்தனை சதவிகிதம் என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

(ஆ) மாதம் 600 ரூபாய்க்குக் குறைவாக சம்பளம் பெறும் ஓர் அரசு ஊழியர் பதவி உயர்வு பெறும்போது, உயர்ரக குடியிருப்பு அவருக்கு ஒதுக்கப்படும் வரை இப்போதுள்ள குடியிருப்பிலிருந்து அவர் வெளியேற்றப்பட மாட்டார் என்பது உண்மையா?

(இ) அரசு குடியிருப்புகளில் வசிக்கும் டில்லி மற்றும் புது டில்லியில் உள்ள அரசு ஊழியர்களில் எத்தனை பேர் புசா வேளாண் ஆராய்ச்சி நிலையம், புதுடில்லியிலுள்ள இந்திய அரசு அச்சகம், ஏ.ஜி.பி. & டி போன்ற அலுவலகங்களிலிருந்து இந்திய அரசின் பிரதான தலைமைச் செயலகத்தின் பல்வேறு துறைகளுக்கு பணி மாற்றம் செய்யப்பட்டதன் காரணமாக தங்கள் குடியிருப்புகளை இழந்துவிட்டனர் என்பதை அரசாங்கம் தெரிவிக்குமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) 65%. (ஆ) ஆம்.

(இ) தேவைப்படும் தகவல் கைவசம் இல்லை. மற்றும் இந்தத் தருணத்தில் சேகரிக்கப்படும் தகவல்கள் அதற்காக மேற்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 4, 1945, பக்கம் 2439.

கொண்ட சிரமத்திற்குப் பலனளிக்கக் கூடியவையாக இருக்க மாட்டா. ஆனால் மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு ஒன்றைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்திய அரசு அச்சகம், வேளாண் ஆராய்ச்சி நிலையம், ஏ.ஜி.பி & டி அலுவலகம் ஆகியவற்றைச் சேர்ந்தவர்களுக்கு தனியாக குடியிருப்பு பகுதி இருப்பதால் அந்த ஊழியர்கள் தவிர வேற எந்த அலுவலரும் ஓர் அரசு அலுவலகத்தில் இருந்து புதுடில்லியிலுள்ள மற்றொன்றுக்கு பணிமாற்றம் செய்யப்படுவதனால் தங்களுடைய குடியிருப்பை இழக்க வேண்டிய தேவையில்லை.

# 337

## *புதுடில்லியிலுள்ள ஓர் அலுவலகத்திலிருந்து மற்றொன்றுக்கு பணி மாற்றம் செய்யப்படுவதன் மூலம் குடியிருப்பு வசதிகளை இழக்கும் மத்திய அரசு ஊழியர்களின் பரிதாபகரமான நிலைமை

*1607. சர்தார் சாந்த் சிங்: (அ)* கணிசமான எண்ணிக்கையிலான மத்திய அரசு ஊழியர்கள் தங்கள் குடியிருப்புகளை இழந்துள்ளார்கள் என்பதும், அவர்கள் டில்லியிலும், புதுடில்லியிலுள்ள மத்திய அரசு அலுவலகங்களில் சுமார் 15 ஆண்டுகளுக்கும் மேலாக நிரந்தரப் பணியில் இருந்தார்கள் என்பதும் உண்மை தானா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) இன்றுள்ள சூழ்நிலையில் இவர்களில் சிலர் அரசு குடியிருப்பு பெறுவதற்கு ஆரம்பத்தில் பல ஆண்டுகள் காத்திருந்தார்கள் என்பதையும், அவர்கள் தங்கள் பணிக் காலத்தில் இன்னொரு முறை அரசு குடியிருப்பு வசதி பெற வாய்ப்பில்லை என்பதையும் அரசு அறியுமா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 4, 1945, பக்கம் 2439.

(இ) டில்லி மற்றும் புதுடில்லியில் அரசு ஊழியர் குடியிருப்பைப் பெறுகின்ற வசதி வாய்ப்பை விரிவுபடுத்துகின்ற நோக்கத்தில் பழம் பாணி மற்றும் புதுபாணி குடியிருப்புகளுக்கிடையேயான வேறுபாடுகள் களையப்பட்டுள்ளன என்பது உண்மையா?

(ஈ) கேள்வி எண் (அ) மற்றும் (ஆ)வில் குறிப்பிடப்பட்டுள்ள அரசு ஊழியர்கள் சிலரது விஷயத்தில் கவனம் செலுத்தி அவர்கள் டில்லியிலும், புதுடில்லியிலும் மத்திய அரசுப் பணியில் நீண்ட காலம் பணியாற்றியதைக் கணக்கில் கொண்டு குடியிருப்பு வசதியைப் பொறுத்தவரை அவர்களுக்கு சில நிவாரணங்களை வழங்கும் யோசனை அரசிடம் உள்ளதா? இல்லையெனில் அது ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண். 1606ல் பகுதி (இ)க்கு அளிக்கப்பட்ட பதிலை இச்சந்தர்ப்பத்தில் மதிப்புக்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

(ஆ) கடைசிக் கேள்விக்கு நான் அளித்த பதிலில் குறிப்பிட்டுள்ள அதிகாரிகள் பொதுக் குடியிருப்புத் தொகுதியில் தங்களது குடியிருப்பைப் பெறுவதற்காக காத்திருக்க வேண்டியிருக்கும். ஆனால் அவர்கள் எவ்வளவு காலம் காத்திருக்க வேண்டும் என்பதை என்னால் கூற இயலாது.

(இ) ஆம்.

(ஈ) பொது குடியிருப்புத் தொகுதியில் குடியிருப்புப் பெறுவதில் பணிக்காலம் என்பது ஒரு தீர்மானகரமான அம்சமாகும். அரசு ஊழியர்களில் எந்த ஒரு குறிப்பிட்ட பகுதியினருக்கும் சாதகமாக இந்த விதிமுறையை மாற்றுவது நியாயம் என்று அரசு கருதவில்லை.

# 338

## *டில்லி, புதுடில்லி அரசுக் குடியிருப்புகளில் வசிப்பவர்களிடமிருந்து கஸ் கஸ் தட்டிகளுக்கான விண்ணப்பங்கள்

131. திரு.கே.சி.நியோகி: 1945-ல் கோடைக்காலம் வருவதை ஒட்டி டில்லி மற்றும் புதுடில்லியில் அரசாங்க அலுவலர்கள் வசிக்கும் வீடுகளில் கஸ் கஸ் தட்டிகள் வழங்குவது தொடர்பாக, 1945, மார்ச் 20க்குள் விண்ணப்பங்கள் வந்து சேரவேண்டும் என்ற விஷயம் குறித்து தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா? இவ்விஷயமாக மத்திய பொதுப்பணித்துறை(மேற்கு மண்டல) கூடுதல் தலைமைப் பொறியாளர் அனுப்பிய சுற்றறிக்கை எண் WII/ 3708, தேதி 20 பிப்ரவரி 1945 மற்றும் எண் WII/3708 தேதி 13 மார்ச்1945 ஆகியவற்றைப் பார்க்கும்படி அவரை வேண்டுகிறேன்.

(ஆ) கோடைக்கால ஒதுக்கீடு (1945) இன்னும் வெளியிடப் படவில்லை என்பதை அவர் அறிவாரா?

(இ) கேள்வி (ஆ)வுக்கான பதில் 'ஆம்' என்பதாக இருப்பதானால் 1945, ஏப்ரலில் குடியிருப்புகள் பெறப்போகிற (இப்போதைக்கு ஒன்றும் பெற்றிருக்கவில்லை) அரசு ஊழியர்கள் விஷயத்தில் கஸ் கஸ் தட்டிகளுக்கான விண்ணப்பத் தேதியை நீட்டிக்கும் யோசனை அரசாங்கத்துக்கு உள்ளதா? இல்லையெனில் அது ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) பருவக்கால ஒதுக்கீடுகள் சமீபத்திய விதிமுறைகளின் படி விநியோகிக்கப்பட்டிருப்பதால், இந்தக் கேள்வியே எழவில்லை.

இ. அதிகாரபூர்வமான குடியிருப்புகள் இல்லாத அரசு ஊழியர்களுக்கு அதிகாரபூர்வமாக ஏப்ரலில் குடியிருப்புகள் வழங்கப் படும். தாமதமானாலும் தட்டிகள் அவசியம் என்பதால் ஏப்ரல் இறுதிவரை கஸ் கஸ் தட்டிகள் பெற விண்ணப்பிக்கும் காலம் நீடிக்கப்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 4, 1945, பக்கம் 2611.

# 339

## *தொழிலாளர் நலத்துறை ஆரம்பித்துள்ள தொழில்நுட்ப மையங்கள்

1697. டாக்டர் சர் ஜியா வுத்தீன் அகமது: (அ) (i) முஸ்லீம் நிறுவனங்களுடனும் (ii) முஸ்லீம் அல்லாத நிறுவனங்களுடனும் (iii) எந்த ஒரு பொறியியல் நிறுவனங்களுடன் தொடர்பில்லாத சுயேச்சையான நிறுவனங்களுடனும் சேர்ந்து எத்தனை தொழில் நுட்ப மையங்களைத் தொழிலாளர்நலத்துறை திறந்துள்ளது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரி விப்பாரா?

(ஆ) இவற்றில் (iii) முஸ்லீம் நிர்வாகத்தின் கீழ் உள்ளவை எத்தனை? முஸ்லீம் அல்லாத நிர்வாகத்தின்கீழ் உள்ளவை எத்தனை?

(இ) பிரிவுகள் (i), (ii), (iii) ஆகியவற்றில் குறிப்பிடப்பட் டுள்ள எல்லாத் தொழில்நுட்ப மையங்களின் பெயர்களை இந்த அவையில் சமர்ப்பிக்கும் யோசனை மாண்புமிகு உறுப்பினருக்கு உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (அ) (i) - 5, (ii)-74, (iii) 'சுயேச்சை நிறுவனங்கள்' என்றால் 'தனியார் நிறுவனங்கள்' என்று பொருள்படும். அவை 36.

(ஆ) இந்த 36 நிறுவனங்களில் 2 முற்றிலும் முஸ்லீம் நிர்வாகத்தின் கீழ் வருகின்றன.

(இ) தகவல் அறிக்கை ஒன்று இங்கே முன்வைக்கப்பட் டுள்ளது.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2611.

## தகவல் அறிக்கை

I. முஸ்லீம் நிறுவனங்களுடன் சம்பந்தப்பட்ட தொழில்நுட்பப் பயிற்சி மையங்கள்

(அ) பொறியியல் :

1. அப்துல்லா பஸல்பாய் தொழில்நுட்பக்கழகம், புனித சவேரியார் கல்லூரி, பம்பாய்.
2. ஆங்கிலோ - அராபிக் கல்லூரி தொழில்நுட்பக்கழகம், டில்லி.
3. முஸ்லீம் பல்கலைக்கழகப் பொறியியல் கல்லூரி, அலிகார்.

ஆ. பொறியியல் அல்லாதவை:

4. அஞ்சுமான் தொழில்துறைப்பள்ளி, சென்னை.
5. ஷியா இடைநிலைக் கல்லூரி, லக்னோ.

II. முஸ்லீம் அல்லாத நிறுவனங்களுடன் சம்பந்தப்பட்ட தொழில்நுட்ப பயிற்சிமையங்கள் (மாகாண அரசுகள், சமஸ்தானங்கள் மற்றும் ரயில்வே பணிமனைகள் ஆகியவற்றுடன் சம்பந்தப்பட்ட மையங்கள் நீங்கலாக)

(அ) பொறியியல்:

1. பி.பி.சிடி தொழில்நுட்பப் பள்ளி, கிருஷ்ணாகர்.
2. பொறியியல், தொழில்நுட்பக் கல்லூரி, வங்காளம்.
3. டி.ஜே. தொழில்துறைப்பள்ளி, ராஜ்ஷாகி.
4. டான்பாஸ்கோ, தொழில்நுட்பப்பள்ளி, கிருஷ்ணாகர்.
5. ஐ.ஜி.என்.கோ.லிமிடெட் சொனாச்சாரா பணிமனை, நாராயண்கஞ்ச்.
6. கே.கே. தொழில்நுட்பப் பள்ளி, மைமென்சிங்.

**திரு. அவினாசிலிங்கம் செட்டியார்:** இந்தத் தொழில்நுட்பப் பயிற்சி மையங்களின் தன்மை என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவை தொழில் நுட்பப் பயிற்சி தரும் மையங்களாகும்.

திரு. அவினாசிலிங்கம் செட்டியார்: எந்தத் தொழில்களுக்காக?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: பலவகையான தொழில்களுக்காக.

சர் முகம்மது யாமின் கான்: அவற்றில் அலிகாரும் உண்டா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். நிச்சயமாக.

# 340

## *யுத்தத் தொழில்நுட்ப நிபுணர்கள் நிலையம் அல்லது வரவேற்பு மையம் திறத்தல்

1698. டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: யுத்தத் தொழில் நுட்ப நிபுணர்கள் நிலையம் அல்லது வரவேற்புமையங்களைத் திறக்க மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் திட்டமிட்டுள்ளாரா? அவ்வாறாயின் எந்த எந்த இடங்களில்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஒவ்வொரு சரகத்திலும் ஒரு வரவேற்பு நிலையத்தைத் திறக்க இந்திய அரசாங்கம் உத்தேசம் கொண்டுள்ளது. படைக்குப் புதிதாக சேர்க்கப் படுபவர்கள் பயிற்சி மையத்துக்கு அனுப்பப்படுவதற்கு முன்னர் இங்கு சிறிது காலம் தங்க வைக்கப்படுவர். வரவேற்பு நிலையங்களைப் பற்றிக் குறிப்பிடும் அறிக்கை ஏற்கனவே அனுமதிக்கப் பட்டுள்ளது. அவற்றின் திறன், அமையும் இடம் ஆகிய விவரங்கள் அதில் இடம்பெற்றுள்ளன.

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2614.

டாக்டர் ஜியாவுத்தீன் அகமது: பல பயிற்சி மையங்கள் உள்ளனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினர் அந்த அறிக்கையைப் பார்த்து தானே தெரிந்து கொள்ளலாம். இங்கே அறிக்கையை சமர்ப்பித்துவிட்டேன்.

மௌல்வி முகம்மது அப்துல்கனி: வரவேற்பு மையங்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அதன் எண்ணிக் கையை இங்கு கூறுவதற்கில்லை.

தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்) : மதிப்பிற்குரிய உறுப்பினர் அட்டவணையைப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: அது ஒரு பெரிய பட்டி யல் இல்லை அல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது ஒரு பெரிய பட்டியல்தான் ஐயா, தாங்கள் அனுமதிக்காதவரை அந்தப் பட்டி யல் முழுவதையும் நான் வாசிக்கமுடியாது. இந்தியா பல சரகங் களாக, வடக்கு சரகம், மத்தியசரகம், வடகிழக்கு சரகம், மேற்குச் சரகம், தெற்குச் சரகம் எனப் பிரிக்கப்பட்டுள்ளது.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: அவற்றின் தலைமை யகங்கள் எங்கெங்கே அமைந்துள்ளன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தலைமை யகங்கள் அல்லது பயிற்சிமையங்கள் அமைந்துள்ள இடங்கள் வருமாறு: வடக்கு சரகம் - லில்பூர் மற்றும் சோனேபாட்; மத்திய சரகம் - டில்லி, அகோலா அல்லது நாக்பூர்; வடகிழக்குச்சரகம் - அலிகார்; தென் கிழக்குச் சரகம் - குல்சார்பாக் (பாட்னா) மற்றும் கட்டாக்; கிழக்குச் சரகம் - ஹூக்ளி, மேற்குச் சரகம் - வோர்லி (பம்பாய்); தெற்குச் சரகம் - சென்னை, பெஜவாடா, திருவனந்தபுரம் மற்றும் கோயம்புத்தூர்.

# 341

## *ஐ.மா. தொழில்நுட்பப் பயிற்சி மையங்களை பாலிடெக்னிக்குகள் ஆக்குதல்

*1699. டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: ஐக்கிய மாகாணங்களில் பாலிடெக்னிக்குகளாக மாற்றுவதற்கு அரசாங்கம் உத்தேசித்துள்ள தொழில்நுட்பப்பயிற்சி மையங்களைக் குறிப்பிடும்படி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரைக் கேட்டுக் கொள்கிறேன். மேலும் தயாள் பாக் மற்றும் பனாரஸ் பல்கலைக் கழகம் ஆகிய இரு இடங்களை மட்டும் பாலிடெக்னிக்குகளாக மாற்றுவதற்கு அரசாங்கம் தேர்ந் தெடுத்துள்ளதா? இத்தகைய மையங்களின் பட்டியலில் அலிகார் முஸ்லீம் பல்கலைக்கழகப் பொறியியல் கல்லூரி சேர்க்கப்படவில்லை என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?*

*(ஆ) முஸ்லீம்லீக் கட்சியின் பிரத்தியேக வேண்டுகோளின்படி இந்தப் பட்டியலில் அலிகார் மையம் சேர்க்கப்பட்டிருப்பது உண்மையா? யுத்த-தொழில்நுட்ப நிபுணர்களின் விவகாரங்களைக் கையாளுகிற ஆய்வாளர்கள் மற்றும் ஆலோசகர்களில் ஒருவர் முஸ்லீம் என்பது உண்மையா? இல்லை என்றால் முஸ்லீம் ஆய்வாளர்களின் எண்ணிக்கை என்ன?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐக்கிய மாகாணங்களிலோ, வேறு எங்கணுமோ எந்த ஒரு பயிற்சி மையத்தையும் பாலிடெக்னிக்காக மேம்படுத்துவதற்கு இப்போதைக்கு தொழிலாளர் நலத்துறை எந்த ஒரு திட்டத்தையும் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டிருக்கவில்லை. ஆகவே இந்த நோக்கத்துக்காக எந்த ஒரு மையத்தையும் தேர்ந்தெடுக்கிற கேள்விக்கே இங்கு இடமில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2614.

(ஆ), (அ) கேள்விக்கு மேலே கூறியவாறு அளித்த பதிலின் படி (ஆ) கேள்வியின் முதல் பகுதி இங்கு எழவில்லை. இதன் இதர பகுதியைப் பொறுத்தவரையில் தொழில்நுட்பப் பயிற்சி திட்டத்தின்கீழ் முஸ்லீம் எவரும் பிராந்திய ஆய்வாளராக இல்லை. மேலும் 'ஆலோசகர்கள்'' என்ற பெயரில் அதிகாரிகள் யாரும் இல்லை.

# 342

## *தொழிற்சாலைகள் உள்ள இடங்களில் சிற்றுண்டிச்சாலைகள் மற்றும் தாமே பரிமாறிக் கொள்ளும் உணவகங்களை ஏற்படுத்துதல்

1700. திரு. கே.பி. ஜீனராஜ ஹெக்டே: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டுகிறேன்:

(அ) தொழிற்சாலைகள் இருக்கும் எல்லா இடங்களிலும் மலிவான விலையில் உணவுப்பொருட்கள் கிடைக்கும் வகையில் சிற்றுண்டிச்சாலைகள் மற்றும் தாமே உணவு பரிமாறிக் கொள்ளும் உணவகங்களை முதலாளிகள் ஆரம்பிப்பதை அரசாங்கம் ஊக்குவிக்கிறதா?

(ஆ) 1944- 45 ஆம் ஆண்டுகளில் நம்நாட்டில் இத்தகைய எத்தனை (i) சிற்றுண்டிச்சாலைகளும், (ii) உணகவங்களும் ஆரம்பிக்கப்பட்டன?

(இ) நாட்டிலுள்ள படைக்கலத் தொழிற்சாலைகளைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கு இத்தகைய அனுகூலங்கள் எதையும் அரசாங்கம் வழங்கியுள்ளதா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2615.

*(ஈ)* அரவங்காடு தொழிற்சாலையைச் சேர்ந்த தொழிலாளர்கள் அரசாங்கத்திடமிருந்து இத்தகைய அனுகூலங்களைக் கோரியிருக்கிறார்கள் என்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

*(உ)* அரவங்காடு தொழிலாளர்களுக்கு இத்தகைய ஆதாயங்களை வழங்கும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *(அ)* ஆம்.

*(ஆ)* உணவகங்கள் எத்தனை, சிற்றுண்டிச்சாலைகள் எத்தனை என்பதைப் பாகுபடுத்திக் காட்டும் புள்ளி விவரங்கள் எவையும் பராமரிக்கப்படவில்லை. கிடைத்துள்ள தகவல்களின்படி 1944 ஆம் ஆண்டின் இறுதியில் 315 நிறுவனங்கள் சமைத்த உணவையும் மற்றவை சிற்றுண்டிகளையும் வழங்கின.

*(இ)* ஆம்.

*(ஈ)* இல்லை.

*(உ)* தொழிற்சாலையில் தேநீர் மற்றும் பிற சிற்றுண்டிகளையும் விற்பனை செய்ய ஏற்கனவே விதிமுறைகள் உள்ளன. போதுமான அளவில் தொழிலாளர்கள் கேட்டுக்கொண்டால் தொழிற்சாலையில் உணவு வழங்குகிற பிரச்சினையை அரசாங்கம் கவனத்தில் எடுத்துக் கொள்ளும்.

**திரு. கே.பி. ஜீனராஜ ஹெக்டே:** இத்தகைய அனுகூலங்கள் தங்களுக்கு வேண்டுமென்று எத்தனை தொழிலாளர்கள் விண்ணப்பிக்கலாம்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிச்சயமாக அவர்கள் விருப்பத்தை வெளிப்படுத்தினால், கவனிக்கப்படும்.

**திரு. கே.பி. ஜீனராஜ ஹெக்டே:** எத்தனை தொழிலாளர்கள் விண்ணப்பிக்க வேண்டும்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இம்மாதிரி கோரிக்கைக்கு குறைந்தபட்சம் இவ்வளவு பேர் விண்ணப்பிக்க வேண்டும் என இதுவரை எதுவும் நிர்ணயிக்கப்படவில்லை.

பேராசிரியர் என்.ஜி.ரங்கா: தங்களுடைய தொழிலாளர் களுக்கு இத்தகைய வசதிகளை வழங்குவதற்கு முதலாளிகளை ஊக்குவிப்பது தொழிலாளர் நல அதிகாரிகளின் கடமைகளில் ஒன்றல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அதுபற்றி யோசித்து வருகிறோம்.

# 343

## *இந்திய அரசாங்க அச்சக ஊழியர்களின் ஊதிய விகிதங்களையும் கிராக்கிப்படியையும் அதிகரித்தல்

1706. குவாசி முகம்மது அகமது காஸ்மி: (அ) பின்வரும் விவரங்கள் அரசுக்குத் தெரியுமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க வேண்டுகிறேன்:

(i) இந்திய அரசாங்க அச்சக சங்கங்கள் ஒன்று சேர்ந்து ஒரு சம்மேளனத்தை உருவாக்கியுள்ளனவா?

(ii) இந்திய அரசாங்க அச்சகங்களின் சம்மேளன நிர்வாகக் குழு வெளியிட்டுள்ள அறிக்கையில் அச்சக ஊழியர் களின் அவல நிலை எடுத்துரைக்கப்பட்டிருப்பதும், அவர்களுக்கு கிராக்கிப்படி மற்றும் ஊதியத்தை அதிகரிக்கவேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருப்பதும் தெரியுமா?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2619.

(ஆ) கேள்வி (அ) விற்குரிய பதில் 'ஆம்' என்பதாக இருந்தால் அந்த அறிக்கை வெளிவந்தபின்னர் ஏதேனும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளனவா? இல்லையெனில் எப்போது எந்த மாதிரி நடவடிக்கை எடுப்பீர்கள்? இல்லையெனில், ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) (i) மற்றும் (ii) ஆம்.

(ஆ) இவ்விஷயம் குறித்து அரசு பரிசீலித்து வருகிறது.

# 344

## *மைக்காச் சுரங்கங்களில் இந்திய நலன்களைப் பாதுகாத்தல்

1709. **பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** (அ) 1945, மார்ச் 16 ஆம் தேதிய ஃபிரீபிரஸ் ஜர்னலில், 'மைக்கா உற்பத்தியில் முதன்மையான இடம் இந்தியாவுக்கு' எனும் தலைப்பிட்டக் கட்டுரையில், இந்தியாவில் உள்ள மைக்கா சுரங்கங்களை தங்களுடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர பிரிட்டிஷ், அமெரிக்க நலன்களை நாடும் சக்திகள் முயற்சி செய்கின்றன என எழுதப்பட்டிருந்தது. இது மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்துக்கு கொண்டு வரப்பட்டதா என்று அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

(ஆ) இது உண்மையானால் தற்போது மைக்கா தொழில் துறையில் ஈடுபட்டுள்ளவர்களின் நலன்களைக் காக்கவும், மைக்கா உரிமைகளைப் பெற்றுள்ள இந்தியக் கூட்டுப்பங்கு நிறுவனங்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2619.

களின் நலன் காக்கவும் அரசாங்கம் எத்தகைய முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எடுத்துள்ளன?

(இ) இந்தியாவிலுள்ள மைக்காச் சுரங்கங்களில் அக்கறை கொண்ட இந்திய கூட்டுப் பங்கு நிறுவனங்கள் எத்தனை?

(ஈ) மூலதன வெளியீடுகளின் கட்டுப்பாட்டு அதிகாரியிடம் மைக்காவைப் பொறுத்தவரை புதிய நிறுவனங்கள் எவையும் தங்களைப் பதிவு செய்து கொள்ள விண்ணப்பம் செய்துள்ளனவா? அவற்றிற்கு அனுமதி அளிக்கப்பட்டுள்ளதா? அவ்வாறாயின் எவற்றிற்கு?

(உ) இந்தியர் வசமுள்ள மைக்கா நலன்கள் அவர்களைவிட மிகவும் சக்திவாய்ந்த பிரிட்டிஷ் மற்றும் அமெரிக்க நலன்களால் அச்சுறுத்தலுக்கு ஆளாகாமல் இருக்கவும், இப்போதுள்ள உரிமைகளை அவை இழந்து விடாதிருக்கவும் உறுதிமொழி அளிக்கும் உத்தேசம் அரசுக்கு உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 1945 மார்ச் 16 ஆம் தேதி இட்ட ஃபிரீ பிரஸ் ஜர்னலில் அந்தக் கட்டுரையைக் காணமுடியவில்லை.

(ஆ) இப்பிரச்சினை எழவில்லை.

(இ) 1943 மார்ச் 31 அன்று முடிவடைந்த ஓராண்டுக்கான அறிக்கையில் உள்ள தகவலின்படி அவற்றின் எண்ணிக்கை இருபது. இதற்குப் பிந்தைய தகவல்கள் கிடைக்கவில்லை.

(ஈ)மூலதன வெளியீடுகளின் ஆய்வாளர் பல விண்ணப்பங்கள் கிடைக்கப் பெற்றுள்ளார். அவற்றில் சிலவற்றிற்கு அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. சம்பந்தப்பட்ட துறையானது அது கையாளுகின்ற நிறுவனங்களின் பெயர்களை வெளியிடும் நடைமுறை இல்லை.

(உ) இந்திய மைக்கா தொழில்துறை வலுவாகக் காலூன்ற

வேண்டிய அவசியத்தை அரசாங்கம் நன்குணர்ந்துள்ளது. அதனால் இந்திய மைக்கா உற்பத்தியாளர் நலன்களைப் பாதுகாக்க சாத்திய மான எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ளும் எண்ணத்தை அது கொண்டுள்ளது.

திரு. மனுசுபேதார்: சிறு மைக்கா உற்பத்தியாளர்கள் அனைவரையும் அரசாங்கம் ஒன்று திரட்டி தனது மேற்பார்வை யில் கொண்டுவர முயற்சி எடுக்காமல் அந்நிய நலன்களுக்கு வழி திறந்து விடுவது ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நாங்கள் நிய மித்துள்ள குழுவின் அறிக்கை வரும்வரை இப்பிரச்சினையில் முன்கூட்டி எத்தகைய நடவடிக்கைகளும் எடுக்கும் உத்தேசம் எங்களுக்கு இல்லை.

திரு. மனு சுபேதார்: சிறிய இந்திய மைக்கா நிறுவனங் களை அந்நிய நிறுவனங்கள் விலைபேசி வாங்குவதை அரசாங்கம் அனுமதிக்குமா?

மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்: இப்பிரச்சினையில் முன்கூட்டியே எந்த முடிவுக்கும் வர நான் விரும்பவில்லை.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: இதற்கிடையில் இந்தத் தொழில்துறைக்கு ஏதேனும் அபாயம் நேரிடுமோ?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இவ்விஷயத் தில் மிகவும் அஞ்ச வேண்டிய அவசியம் இல்லை.

திரு. மனு சுபேதார்: அரசாங்கம் இது சம்பந்தமாக இந்த அவையில் உறுதிமொழி அளிக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அறிக்கை கிடைத்ததும் வெகு விரைவில் எல்லா நடவடிக்கைகளையும் மேற் கொள்ளும்.

# 345

## *டில்லியைச் சேர்ந்த திமார்பூர் குடியிருப்புகளின் மோசமான நிலைமை

1722. திரு. பத்ரி தத்பாண்டே: (அ) திமார்பூர் அரசுக் குடியிருப்பு தற்காலிகமானதாகக் கட்டப்பட்டுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா?

(ஆ) இந்தக் குடியிருப்புகள் இப்போது மிகமோசமான நிலைமையில் உள்ளன. பழுதுபார்த்தாலும் நீண்டகாலத்துக்குப் பயன்படாது. சில குடியிருப்புகள் எந்த நேரத்திலும் இடிந்து விழும் நிலையில் இருக்கின்றன. இவற்றை அவர் அறிவாரா?

(இ) திமார்பூர் குடியிருப்புகளை விட புதுடில்லி அரசுக் குடியிருப்புகள் நூறு சதவீதம் சிறப்பாக இருக்கின்றன என்பது அவருக்குத் தெரியுமா?

(ஈ) 'சி' வகைக் குடியிருப்புகளில் ஒரே ஒரு தண்ணீர்க் குழாய்தான் இருக்கிறது என்பதையும், அதேசமயம் புதுடில்லி குடியிருப்புகளில் 3 அல்லது 4 தண்ணீர்க் குழாய்கள் இருக்கின்றன என்பதையும் அவர் அறிவாரா?

(உ) இவை ஒவ்வொன்றும் முறையாகப் பழுது பார்க்கப் பட்டிருக்கிறதா எனப் பார்வையிட செயற்பொறியாளரோ உயர் அதிகாரியோ எவரும் அங்கே செல்வதில்லை என்பதையும், அங்கே குடியிருப்பவர்களின் வசதிகள் குறித்து எவரும் கண்டுகொள்வதில்லை என்பதையும் அவர் அறிவாரா?

(ஊ) புதுடில்லி குடியிருப்புகளுடன் ஒப்பிடுகையில் குறைந்த வசதிகளைக் கொண்ட, பெரிதும் தாழ்ந்தவகை குடியிருப்புகளில்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2630.

·11

வசிப்பவர்களிடம் அதே வாடகையை அரசாங்கம் வசூலிப்பது ஏன்? இதனைப் பரிசீலித்து வாடகையைக் குறைக்கும் எண்ணம் அரசாங்கத்துக்கு உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம். (ஆ) இல்லை. ஆனால் அடிக்கடி பழுதுபார்க்க வேண்டியுள்ளது என்பதை அறிவேன்.

(இ) திமார்பூர் குடியிருப்புகளை விட புதுடில்லி குடியிருப்புகள் பெரிதும் மேம்பட்டவை.

(ஈ) ஆம்.

(உ) இல்லை. மறுபுறம் எனக்குக் கிடைத்த தகவலின்படி சம்பந்தப்பட்ட துறையைச் சேர்ந்த பொறுப்பான அதிகாரிகள் அன்றாடம் அந்தக் குடியிருப்புகளை ஆய்வுசெய்து வருகின்றனர். குடியிருப்போர் தங்கள் புகார்களைப் பதிவுசெய்ய அவர்கள் இருக்குமிடத்திலேயே விசாரணை அலுவலகம் ஒன்றுள்ளது.

(ஊ) குடியிருப்பு வசதிகள் குறைவாக இருந்தாலும் ஒரே மாதிரியான வகைகொண்ட குடியிருப்புகளுக்காக அரசாங்க ஊழியர்களிடமிருந்து வேறுபட்ட கட்டணங்களை வசூலிப்பது சாத்தியமல்ல. திமார்பூர் குடியிருப்புகளின் வாடகையானது, அதேவகை குடியிருப்புகளுக்கு புதுடில்லி குடியிருப்புகளில் வசூலிக்கப்படும் வாடகையை விடக் குறைவானதாகும். ஆகையால் இதில் குடியிருக்கும் ஏராளமானோர் தங்கள் சம்பளத்தொகையிலிருந்து 10 சதவீதத்துக்கும் குறைவான தொகையையே வாடகையாக வழங்குகின்றனர். எனவே வாடகையைக் குறைக்கும் பிரச்சினைக்கே இடமில்லை.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** பழைய குடியிருப்புகளில் வசதிகளை மேம்படுத்த நடவடிக்கைகள் ஏதும் எடுக்கப்பட்டுள்ளனவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏற்கனவே அவற்றுக்கு வசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன.

**பேராசிரியர் என்.ஜி.ரங்கா:** மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் தனது கேள்வியின்போது குடிநீர் குழாய்கள் மற்ற பிற வசதிகள் சரியாக இல்லை என்றார். அவை மேம்படுத்தப்படுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவ்விஷயத்தை கவனிப்பேன்.

# 346

## *புதுடில்லியில் நிலையாகத் தங்கியுள்ள சிம்லா அலுவலர்களுக்குக் குடியிருப்பு வசதிகள் செய்து தருவது தொடர்பான சிரமங்கள்

*1723. திரு.பத்ரி தத் பாண்டே:* (அ) சிம்லாவிலிருந்து புது டில்லிக்கு வந்து அங்கு நிலையாகத் தங்கியிருக்கும் அலுவலர்களின் எண்ணிக்கை எவ்வளவு என்று மாண்புமிகு உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) பல்வேறு துறைகள் அல்லது அலுவலகங்களின் முக்கிய கிளைகளிலிருந்து விலகி நெடுந்தொலைவில் தங்களைத் தங்கச் செய்திருப்பதால் தங்களுக்கு மிகுந்த சௌகரியக் குறைவு ஏற்பட்டதாக இந்த ஊழியர்கள் கருதுகிறார்கள் என்பதை உறுப்பினர் அறிவாரா?

(இ) ஒவ்வொரு துறையைச் சேர்ந்தவர்களையும் ஒரே கட்டடத்தில் தங்கவைக்கும் யோசனை எதுவும் அவருக்கு உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) தகவல்கள் கைவசம் இல்லை.

(ஆ) ஆம்

(இ) இப்போதைய சூழ்நிலையில் குறிப்பிட்ட அலுவலகத்தைச் சேர்ந்த அலுவலர் அனைவரையும் ஒரே கட்டடத்தில் தங்க வைப்பது சாத்தியமல்ல. எனினும் இந்தக் கொள்கையை சாத்தியமான அளவில் பின்பற்ற முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2731.

# 347

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு அரசாங்கப் பங்களிப்பு

1800. திரு. பத்ரி நாத் பாண்டே: (அ) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தின் செயலாளர் எம்.என்.ராய்க்கு தொழிலாளர் நலத் துறை, 13,000 ரூபாய் மானியம் வழங்கியதை 'அருவருக்கத்தக்க ...'' என்ற தலைப்பில் கண்பத் ராஜ் என்பவர் வெளியிட்டுள்ள நூல் அரசாங்கத்தின் கவனத்துக்கு வந்ததா என்பதை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) அந்தத் தொகை எவ்வாறு செலவிடப்பட்டது என்பதைக் காண்பிக்கும் அறிக்கையை அரசு இங்கே முன்வைக்குமா?

(இ) மாதத்துக்கு 13000 ரூபாய் மானியமானது நடப்பு ஆண்டில் வரவு-செலவு திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ளதா? அவ்வா றாயின் எந்த மானிய கோரிக்கையின் கீழ் அது வருகிறது என்பதை அரசாங்கம் தயவுசெய்து தெரிவிக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) அந்த நூலை நான் பார்க்கவில்லை.

(ஆ) 1944 ஆம் ஆண்டு நவம்பர் 2ஆம் தேதி திரு.லால்சந்த் நாவல்ராய் எழுப்பிய துணைக்கேள்வி எண் 31க்கு என்னால் தெரி விக்கப்பட்ட பதிலையே மதிப்பிற்குரிய நண்பரது துணைக்கேள்விக் கும் தெரிவிக்க வேண்டியுள்ளது.

(இ) ஆம்; ''யுத்தம் - சி - 5 - போர்ப் பிரச்சாரச் செலவு - தொழிலாளர் பிரச்சாரம் என்பதுடன் தொடர்புடைய இதர செல

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2631.

வினங்கள்'' என்ற தலைப்பின் கீழ் 1945 - 46 ஆம் ஆண்டுக்கான மானியக் கோரிக்கையில் சேர்க்கப்பட்டுள்ளது.

**திரு. பத்ரி தத் பாண்டே:** கணக்குகள் குறித்த அறிக்கையை இந்தச் சபையில் தாக்கல் செய்யப் போவதாக மாண்புமிகு உறுப்பினர் ஏற்கனவே ஒருசமயம் சொல்லியிருந்தாரே, அதை எப்போது செய்யப் போகிறார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதற்கும் இதற்கும் எந்த சம்பந்தமும் இல்லை.

**திரு. லால்சந்த் நவல்ராய்:** மாண்புமிகு உறுப்பினர் அந்த நூலைப் படிக்கவில்லையானால், ஒன்றுக்கொன்று எதிரான இரு நூல்கள் இருக்கின்றன என்பதை அவருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். திரு. ஜம்னாதாஸ் மேத்தா எழுதியது ஒன்று, திரு. ராய் எழுதியது மற்றொன்று. மாண்புமிகு உறுப்பினர் இவ்விரண்டு நூல்களையும் வாங்கிப் படித்து அவை இரண்டுக்கும் இடையிலான முரண்பாட்டைக் கண்டறிவாரா? அதன் பின்னர் மாண்புமிகு உறுப்பினர் இந்தக் கேள்விக்கான பதிலை ஆராய்ந்து இந்தப் பணம் எவ்வாறு செலவிடப்பட்டுள்ளது. அவர்களுக்கிடையே பாதிப் பாதியாக பிரித்துக் கொள்ளப்பட்டதா அல்லது வேறென்ன என்பதைக் கண்டறிந்து சொல்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவற்றை வாங்குவதற்கு நான் எனது பணத்தைச் செலவிடப்போவதில்லை. அவர்கள் அவற்றை அனுப்பி வைத்தால், படிப்பேன்.

**திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்:** கேள்வி (இ)ன் ஒரு பகுதிக்கு அளிக்கப்பட்ட பதிலை என்னால் புரிந்துகொள்ள இயலவில்லை. மாண்புமிகு உறுப்பினர் மறுபடியும் அதனைத் தெரிவிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த மானியமானது மானியக்கோரிக்கையின் கீழ் வழங்கப்பட்டுள்ளது என்று சொன்னேன்.

திரு. அவினாசிலிங்கம் செட்டியார்: அந்த மானியம் உயர்த்தப்பட்டுள்ளதா? அதே தொகையாக உள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அதே தொகை தான்.

திரு. லால்சந்த் நாவல்ராய்: என்னிடமுள்ள அந்த நூல் களைத் தந்தால் மாண்புமிகு உறுப்பினர் படித்துப் பார்ப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நேரமிருந்தால் படித்துப் பார்ப்பேன்.

திரு. பத்ரிதத் பாண்டே: அந்தத் தொகை எவ்வளவு செல விடப்பட்டுள்ளது என்பது குறித்து கணக்கு அறிக்கை முன் வைக்கப் படுமா என்று எனது கேள்வியில் திட்டவட்டமாகக் கேட்டிருக் கும்போது இந்த அவையில் கணக்கு அறிக்கையை தாக்கல் செய்யும் கேள்விக்கே இடமில்லை என்று எனது துணைக் கேள்விக்கு மாண்புமிகு உறுப்பினர் எவ்வாறு கூறினார்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தக் கேள்வியை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

திரு. பத்ரி தத் பாண்டே: கணக்கு அறிக்கையை இங்கே சமர்ப்பிக்கும் பிரச்சினையே எழவில்லை என்று சற்றுமுன்னர் நீங்கள் கூறினீர்கள். ஆனால் அது கேள்வி (ஆ) வின் திட்டவட்ட மான பகுதியாக உள்ளது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மன்னிக்கவும். அத்தகைய தகவல் எனக்குக் கிடைத்ததும் இந்த அவைக்குத் தெரிவிக்கிறேன்.

# 348

## *மைக்கா விசாரணைக்குழுவை நியமிக்கும் அதிகாரம்

1801. திரு. ராம் நாராயண் சிங்: 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின், மாகாண சட்டமன்ற பட்டியலின் 7வது அட்டவணையில், 27 ஆவது விஷயமாக சொல்லப்பட்டிருப்பதன் படி, மைக்கா தொழில்துறை மாகாண அதிகார வரம்புக்கு உட்பட்டதா? அவ்வாறாயின் இந்திய அரசு மைக்கா விசாரணைக் குழுவை இப்போது உருவாக்கியிருப்பது அந்தச் சட்டத்தின்படி அதனுடைய அதிகார வரம்புக்குட்பட்டதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதே விஷயம் குறித்து திரு.சத்ய நாராயணன் சின்கா குறுகிய கால அவகாசத்துடன் 1944, நவம்பர் 20 ஆம் தேதி கேட்டிருந்த கேள்விக்கு நான் அளித்த பதிலை விடக் கூடுதலாக சொல்ல எதுவுமில்லை.

**திரு. ராம் நாராயண் சிங்:** மாகாண அரசாங்கத்தின் உரிமைகளை இந்திய அரசாங்கம் ஆக்கிரமித்துக் கொள்கிறதா என்று கேட்க விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சொன்னதற்கு மேலாகக் கூடுதலாக எதுவும் சொல்வதற்கில்லை என்று ஏற்கனவே சொல்லி இருக்கிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2631.

# 349

## *பிரிட்டிஷ் - அமெரிக்க மைக்கா மிஷன்

*1802. திரு. ராம் நாராயணன் சிங்:* (அ) தற்பொழுதைய கூட்டு பிரிட்டிஷ் அமெரிக்க மைக்கா மிஷன் யாருடைய கோரிக்கையின் பேரில் அமைக்கப்பட்டது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) இந்த மிஷனில் பிரிட்டிஷ் மற்றும் அமெரிக்கப் பிரதிநிதிகளின் எண்ணிக்கை எவ்வளவு?

(இ) மிஷனின் நோக்கங்களும் செயல்பாடுகளும் என்ன?

(ஈ) இது போர்க்காலத் தேவையா அல்லது போருக்குப் பிறகும் தொடர்ந்து இருக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இந்திய அரசிற்கும் மன்னர்பிரான் அரசிற்கும் இடையே ஏற்பட்ட பேச்சு வார்த்தைகளின் மூலமாகவும், தொடர்ந்து மன்னர்பிரான் அரசின் மூலம் அமெரிக்க அரசுடனும் ஏற்பட்ட ஒப்பந்தப்படியும் கூட்டு மைக்கா மிஷன் அமைக்கப்பட்டது.

(ஆ) மூன்று பிரிட்டிஷ் மற்றும் மூன்று அமெரிக்கப் பிரதி நிதிகள் உள்ளனர்.

(இ) இந்த மிஷன் அதன் தலைமைச் செயலகத்தின் உத்தர விற்கேற்ப ஐக்கிய நாடுகளுக்குத் தேவையான மைக்காவை வாங்கவும், ஆய்வு செய்யவும், பெற்றுக் கொள்ளவும், அதற்காகப் பணம் செலுத்தவும், அதை அனுப்பவுமான அனைத்துப் பணி களையும் செய்யும்.

ஈ. இது போர்க்காலத் தேவைக்காக மட்டுமே.

**திரு. ராம் நாராயண் சிங்:** இந்த மிஷனில் இந்திய அரசின் மற்றும் மைக்காத் தொழிலைச்சார்ந்த பிரதிநிதிகள் ஏன் ஒருவரும் இல்லை?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2799.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது தேவையில்லை. இந்த மிஷன் மைக்கா வாங்குவதற்காக மட்டுமே உள்ளது.

திரு. என்.எம். ஜோஷி: இந்திய மைக்கா சுரங்க உரிமையாளர்களுக்குக் கொடுக்கப்படும் விலையை விட அதிக விலைக்கு மைக்கா அமெரிக்காவிற்கு கொடுக்கப்படுகிறதா? அப்படியெனில் அதில் லாபம் உள்ளதா? அது அதிகமான லாபம் எனில் அது யாருக்குச் சேருகிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தக் கேள்வியைத் தனியாகக் கேட்கவும்.

# 350

## *இந்து பிற்படுத்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த தொழிலாளர் நலத்துறை அதிகாரிகள் ஏனையோர் நியமனம்

1803. திரு. எம்.என். கியாசுத்தீன்: இந்து பிற்படுத்தப்பட்ட வகுப்பினரைச் சார்ந்த, இந்நாட்டின் 16முதல் 17 கோடி வரை எண்ணிக்கையுள்ள அகிர், கடாரியர், டெலி, தம்போலி, கஹார், லோஹர், பர்ஹாஸ் மற்றும் கும்ஹார் ஆகியோரில் யாராவது தொழிலாளர் நலத்துறை அதிகாரி, ஆய்வாளர், சட்ட ஆலோசகர் மற்றும் தொழிலாளர் நல சங்க அலுவலர் ஆகிய பணிகளில் நியமனம் செய்யப்பட்டுள்ளாரா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? அவர்கள் பரம்பரையான கைவினைத் தொழிலாளரும்கூட. அப்படி யாரும் நியமிக்கப்படவில்லையெனில், ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தற்போது என் வசம் உள்ள தகவலின்படி குறிப்பிட்ட அச்சமூகங்களிலிருந்து யாரும் நியமிக்கப்படவில்லை.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 9, 1945, பக்கம் 2799.

# 351

## *பெவின் மற்றும் இதரத் தொழில்நுட்பத் திட்டங்களின்கீழ் இந்து பிற்படுத்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்கான வசதிகள்

*1804. திரு. எம். கியாசுத்தீன்:* அடிக்கடி அறிவிக்கப்படும் பெவின் பயிற்சித் திட்டம் மற்றும் இதர தொழில்நுட்பத் திட்டங்களில் பரம்பரையாக அப்பகுதியைச் சேர்ந்த கைவினைத் தொழிலாளர்களான லோஹர், பர்ஹையர், கடாரியர், கும்ஹார் மற்றும் கோலி இனத்தவர்களுக்கு அதிகாரபூர்வமான அரசின் வசதிகள் அளிக்கப்படுகின்றனவா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? இல்லையெனில், ஏன் இல்லை?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* பெவின் பயிற்சித் திட்டத்தின் கீழ் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் நியமனம் செய்யப் படுவதற்கு அரசு ஏற்கனவே சிறப்பு நடவடிக்கைகளை எடுத்துள் ளது. தேர்வு செய்யும் உரிமை பெற்ற தேசியத் தொழிலாளர் வேலைவாய்ப்பு தீர்ப்பாயகள், பல்வேறு மாகாணங்களில் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ விதிமுறைகளை அனுசரித்து எல்லாச் சாதிகள் மற்றும் வகுப்பினரும் தகுதியான முறையில் பிரதிநிதித் துவம் பெறும் வகையில் செயல்படுமாறு அறிவுறுத்தப்பட்டுள் ளது. மேலும், இம்மன்றங்கள், தாழ்த்தப்பட்ட மற்றும் இதர பிற்படுத்தப்பட்ட வகுப்பினரைச் சார்ந்தவர்கள் போதுமான அளவு தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு சார்பற்ற தாழ்த்தப்பட்ட வகுப்பினைச் சார்ந்த, தேவையெனில் ஒரு முஸ்லீமைத் துணையாகக் கொண்டு இணைந்து பணியாற்றுமாறு கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஜனவரி 9, 1945, பக்கம் 2619.

# 352

## *மாகாண தேசியத் தொழிலாளர் வேலைவாய்ப்பு தீர்பாயத்தில் இந்து பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் பிரதிநிதி

1805. திரு. எம். கியாசுத்தீன்: மாகாண தேசியத் தொழிலாளர் வேலைவாய்ப்பு தீர்ப்பாயத்தில் இந்து பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சார்ந்த பிரதிநிதி யாராவது இருக்கிறாரா? இல்லையெனில், ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தேசிய தொழிலாளர் வேலைவாய்ப்புத் தீர்ப்பாயங்களில் இந்து பிற்படுத்தப்பட்ட சமூகத்தினர் உறுப்பினராக உள்ளனரா என்பது இந்திய அரசிற்குத் தெரியாது. சாதி அடிப்படையில் தீர்ப்பாயங்களில் பிரதிநிதித்துவம் என்பது தேவையற்றது; மற்றும் இது நடைமுறைச் சாத்தியமுமல்ல.

# 353

## +தொழிலாளர் நிலைக்குழுவின் ஐந்தாவது கூட்ட நிகழ்ச்சிகளின் சுருக்கம்

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): 1944 - ஆம் ஆண்டு ஜுன் 27- ஆம் நாளன்று புதுடில்லியில் நடைபெற்ற தொழிலாளர் நிலைக்குழுவின் நடவடிக்கைகளது சுருக்கத்தின் நகல் அவையில் சமர்ப்பிக்கப்படுகிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 20, 1945, பக்கம் 1001.

+ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 20, 1945, பக்கம் 61.

# 354

## *ஆறாவது தொழிலாளர் மாநாட்டு நிகழ்ச்சிகளின் சுருக்கம்:

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): 1944- ஆம் ஆண்டு அக்டோபர் 27, 28 ஆகிய நாட்களில் புதுடில்லியில் நடைபெற்ற ஆறாவது தொழிலாளர் மாநாட்டு நிகழ்ச்சிகளின் சுருக்க நகலை அவையில் சமர்ப்பிக்கிறேன்.

# 355

## +தொழிலாளர் நிலைக்குழுவின் ஆறாவது கூட்ட நிகழ்ச்சிகளின் சுருக்கம்

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): 1945 மார்ச் 17-ஆம் நாளன்று புதுடில்லியில் நடைபெற்ற தொழிலாளர் நிலைக்குழு ஆறாவது கூட்ட நிகழ்ச்சிகளது சுருக்கத்தின்# நகலை அவையில் சமர்ப்பிக்கிறேன்:

திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: (மெட்ராசில் இருந்து மாற்றப்பட்ட மாவட்டம் மற்றும் முகம்மதியரல்லா கிராமம்: சித்தூர்): எனக்கு ஒரு தகவல் தெரிய வேண்டும். 1944 ஜூன் 27 மற்றும் 1944 அக்டோபர் 27, 28 ஆகிய தேதிகளிலேயே தயாரா யிருந்த இந்த அறிக்கைகள் இத்துணை நீண்ட நாட்களாய் ஏன் சபையில் சமர்ப்பிக்கப்படவில்லை? ஏன் கடந்த சட்டமன்றத் தொடரிலேயே சமர்ப்பிக்கப்படவில்லை?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, ஜனவரி 21, 1946, பக்கம் 61.

\+ மேற்படி தொகுதி, பக். 61

\# இந்த விவாதங்களில் அச்சிடப்படவில்லை; ஆனால் நகல்கள் அவையின் நூலகத்தில் வைக்கப்பட்டுள்ளன.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என்னால் இதற்குப் பதில்கூற இயலாது; ஆனால் இவ்விஷயத்தைப் பற்றிக் கவனிக்கிறேன்.

# 356

## *இந்திய சுரங்கங்கள் (திருத்த) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, 1923 ஆம் வருட இந்தியச் சுரங்கங்கள் சட்டத்தில் மேலும் திருத்தம் செய்ய ஒரு மசோதாவை சமர்ப்பிக்க அனுமதி கோருகிறேன்.

திரு. தலைவர்: தீர்மானம் வருமாறு:

''1923 ஆம் வருட இந்தியச் சுரங்கங்கள் சட்டத்தில் மேலும் திருத்தம்கோரி ஒரு மசோதா சமர்ப்பிக்கக் கோரப்படுகிறது.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் மசோதாவை அறிமுகம் செய்கிறேன்.

# 357

## +அரசு ஊழியர்களுக்கு போதிய வீட்டு வசதி இல்லாமை

+24. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பின்கண்ட தகவல்களைத் தெரிவிப்பாரா?

(அ) புதுடில்லியில் குடியிருப்புக்கோரி விண்ணப்பம் செய்து, அவை இன்னும் ஒதுக்கப்படாத அரசுத்துறை எழுத்தர்கள் மற்றும் உதவியாளர் ஆகியோரின் எண்ணிக்கை;

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, ஜனவரி 30, 1946, பக்கம் 247.

+ மேற்படி அதே தொகுதி, பக்கம் 477.

*(ஆ) குடியிருப்புகள் கோரி விண்ணப்பம் செய்து அரசினால் இன்னும் அவை ஒதுக்கீடு செய்யப்படாத கண்காணிப்பாளர்களின் எண்ணிக்கை;*

*(இ) போர்க்காலத்தின்பொழுது மேற்கூறப்பட்ட (அ) மற்றும் (ஆ) நபர்களுக்காக புதுடில்லி மற்றும் கரோல் பாக் பகுதிகளில் கோரப்பட்ட வீடுகள் மற்றும் அடுக்குக் குடியிருப்புகளின் எண்ணிக்கைகள்;*

*(ஈ) 1946 ஜனவரி 1 - ஆம் தேதியன்று அல்லது அந்தத் தேதியிலிருந்து வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு அளிக்கப்பட்ட அல்லது அளிக்கப்பட உள்ள புதுடில்லி மற்றும் கரோல் பாக் பகுதியில் உள்ள வீடுகள் மற்றும் அடுக்குக் குடியிருப்புகளின் எண்ணிக்கைகள்;*

*(உ) 1945 ஜனவரி 1- ஆம் தேதிக்கு முன்னர் குடியிருப்புகள் கோரி விண்ணப்பித்தவர்களுக்கு அரசு வீட்டுவசதி எப்பொழுது அளிக்கப்படும் என்று மாண்புமிகு உறுப்பினர் எதிர்பார்க்கிறார்?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *(அ) மற்றும் ஆ குடியிருப்புக்கான விண்ணப்பதாரர்கள் இரு வகைப்படுவர். அவர்கள் (1 ) ரூ.600க்கும் குறைவாக சம்பளம் பெறும் அலுவலர்கள் (2) ரூ.600 அல்லது அதற்குமேல் சம்பளம் பெறும் அலுவலர்கள். எல்லா எழுத்தர்களும், உதவியாளர்களும், கண்காணிப்பாளர்களும் முதல் பிரிவின் கீழ் வருகின்றனர். இந்தப்பிரிவின் கீழ்வரும் குடியிருப்பு வழங்கப்படாத விண்ணப்பதாரர்கள் எண்ணிக்கை 16,256. குடியிருப்புகளுக்கு விண்ணப்பித்த, ஆனால் குடியிருப்புகள் ஒதுக்கப்படாத எழுத்தர்கள், உதவியாளர்கள் அல்லது கண்காணிப்பாளர்கள் எண்ணிக்கை பற்றிய தகவல் தற்பொழுது கைவசம் இல்லை.*

*(இ) ரூ. 600க்கு கீழ் சம்பளம் வாங்குவோருக்காக புதுடில்லி மற்றும் கரோல் பாக் பகுதிகளில் கோரப்பட்டுள்ள அடுக்குக் குடியிருப்புகளின் எண்ணிக்கை 188.*

*(ஈ) 3.*

*(உ) இந்தத் தகவலைத் தெரிவிக்க இயலாது; ஏனெனில் ஒரு விண்ணப்பதாரருக்குத் தேவையான குடியிருப்பு ஒதுக்கீடு*

பல அம்சங்களை அடிப்படையாகக் கொண்டது. அவை எல்லா வற்றையும் முன்கூட்டியே தீர்மானிக்கமுடியாது. அது அவர் புதுடில்லியில் பணிக்குச் சேர்ந்த நாள், அவர் வாங்கும் சம்பளம், அவர் தனியாளா, மணமானவரா அல்லது குடும்பத்துடன் உள்ள வரா? எத்தகைய குடியிருப்பை அவர் நாடுகிறார் ஆகியவற்றைச் சார்ந்தது.

# 358

## *டில்லியில் உள்ள அதிகப்படியான அரசுக் கட்டிடங்கள்

25. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிக்க வேண்டுகிறேன்:

(அ) அமெரிக்க, பிரிட்டிஷ் மற்றும் இந்திய அலுவலர் களுக்காக புதுடில்லியில் தலைமைச் செயலகக் கட்டிடங்களுக்கு வடக்குப் பகுதியிலும் மேற்குப் பகுதிகளிலும் பிற இடங்களிலும், கட்டப்பட்ட கட்டிடங்கள் மற்றும் படைவீரர் குடியிருப்புகள் ஆகியவற்றில் தற்பொழுது உபயோகிக்கத் தகுதியில்லாதவற்றின் எண்ணிக்கை;

(ஆ) மேலே (அ)-ல் கூறப்பட்டுள்ள கட்டிடங்களில் உள்ள அறைகளின் மொத்த எண்ணிக்கை;

(இ) தற்பொழுது அங்கே ஏதாவது அலுவலகங்கள் இயங்கு கின்றனவா அல்லது இல்லையெனில் அவற்றை என்ன செய்ய உத்தேசம்;

(ஈ) அந்தக் கட்டிடங்களை தற்பொழுதோ அல்லது வரும் காலத்திலோ தேவைப்பட்ட இடத்தில் சமையலறை மற்றும் குளிய லறை ஆகியவற்றைக் கட்டி (1) அலுவலகம் மற்றும் (2) குடி யிருப்புப் பகுதியாக ஒதுக்கத் திட்டமுள்ளதா;

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 5, 1946, பக்கம் 478-79.

(உ) மேற்குறிப்பிட்ட (ஈ) கேள்விக்கு பதில் ஆம் எனில், இதுவரை ஏதேனும் கட்டிடங்கள் ஒதுக்கப்பட்டுள்ளனவா, அப்படி ஒதுக்கப்பட்டுள்ளதெனில் அவை எத்தனை?

(ஊ) குறிப்பாக, தல்கதோரா சாலை, குருத்வாரா சாலை, குயின்ஸ்வே மற்றும் கன்னாட்பிளேசில் உள்ள அமெரிக்க ராணுவக் கட்டிடங்களை என்ன செய்ய உத்தேசம்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) வைப் பொறுத்தவரையில் இந்திய அரசுச் சாராத மற்ற அலுவலர்கள் இதுவரை உபயோகித்துக்கொண்டு இருந்த தற்காலிகக் கட்டிடங்களைப் பற்றியே மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிடுகிறார் என்று நினைக்கிறேன்.

அரசிடம் ஒப்படைக்கப்பட்ட அல்லது தற்பொழுதைய தகவலின்படி அரசிடம் அடுத்த மூன்று மாதங்களுக்குள் ஒப்படைக்கப்பட உள்ள கட்டிடங்களைப் பற்றிய தேவையான தகவல்கள் அடங்கிய ஓர் அறிக்கை அவையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

(இ) இந்தக் கேள்வியைப் பொறுத்தவரை அரசிடம் ஒப்படைக்கப்பட்ட கட்டிடங்களைப் பற்றி மட்டும் இங்கு எடுத்துக் கொள்கிறேன். அரசிற்குத் தேவையான மற்றும் இனித் தேவைப் படுகின்ற அண்மையில் ஒப்படைக்கப்பட்ட கட்டிடங்களைத் தவிர மற்றவை அரசின் உபயோகத்திற்காகத்தான் என்பது என் பதிலாகும்;

(ஈ) இந்தக் கேள்விக்கான பதிலை பொறுத்தவரையில் வரும் மூன்று மாதங்களில் ஒப்படைக்க உள்ள கட்டிடங்களைப் பற்றி மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன். இந்தக் கட்டிடங்களும் அரசிற்குத் தேவையானவை மற்றும் ஏதாவது ஒருவகையில் உபயோகப் படுத்தக்கூடியவையேயாகும்.

(உ) இல்லை. கேள்வியின் பிற்பகுதி இங்கு எழவில்லை.

(ஊ) தல்கதோரா சாலை மற்றும் குருத்வாரா சாலையில் உள்ள கட்டிடங்கள் அரசு அலுவலகங்களாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. அரசிற்குத் தேவை உள்ளவரை அவை அலுவலகங் களாக இருக்கும். கன்னாட்பிளேஸ் மற்றும் குயின்ஸ்வேயில் உள்ள

அமெரிக்கக் கட்டிடங்களைப் பொறுத்தவரை அவை சம்பந்தமான முடிவு பரிசீலனையில் இருந்தாலும் அரசுத் தேவைகளுக்காக அவை உபயோகத்தப்படுத்தப்படலாம்.

### புதுடில்லியில் அரசிடம் ஒப்படைக்கப்பட்ட அல்லது வரும் மூன்று மாதங்களுக்குள் ஒப்படைக்கப்பட உள்ள கட்டிடங்களைப் பற்றிய அறிக்கை

| கட்டிடத்தின் பெயர் | அங்குள்ள அறைகள் முதலியவற்றின் எண்ணிக்கை | |
|---|---|---|
| எல் தொகுதி | | 74 |
| எம் தொகுதி | | 107 |
| குருத்வாரா சாலை | | 106 |
| தல்கதோரா படைவீரர் குடியிருப்புகள் | 14 குடியிருப்புகள் | 49,000 ச.அடி |
| | 1 குடியிருப்பு | 2,890 ச.அடி |
| | அலுவலக அறைகள் (18) | 4,446 ச.அடி. |
| | பொழுதுபோக்கு அரங்கமும் கிட்டங்கி மற்றும் 4 அறைகளும் | 5000 ச.அடி |
| | சமையலறை மற்றும் உணவுக்கூடம் | 2893 ச.அடி. |
| சென்ட்ரல் விஸ்டாவில் அலுவலர்கள் குடியிருப்பு | 288 அறைகள் | |
| ஜோத்பூர் மெஸ் (ஏப்ரல் 1946-ல் ஒப்படைக்கப் பட உள்ளது) | 120 | |
| கேணிங்சாலை குடியிருப்புகள் - 'பி' தொகுதி (21.2.46-ல் ஒப்படைக்கப்பட உள்ளது) | 6 குடியிருப்புகள் (இரட்டை) | 62406 ச.அடி |
| | 1 குடியிருப்பு | 4598 ச.அடி |
| | 10 அலுவலக அறைகள் | 4566 ச.அடி. |

# 359

## *டில்லி மற்றும் புதுடில்லி நகரத் திட்ட அதிகாரியாக திரு. ஹார்க்னஸ் நியமனம்

*26. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா?

*(அ) அண்மையில் டில்லி மற்றம் புதுடில்லி நகரத் திட்ட அதிகாரியாக திரு. ஹார்க்கன்ஸ் நியமிக்கப்பட்டது உண்மையா?*

*(ஆ) அவரது நியமனம் எந்த விதிகளின்படி அமைந்தது?*

*(இ) இந்தப் பதவிக்காக இந்தியாவில் விளம்பரம் செய்யப் பட்டதா, அதற்காக தகுதியும் திறமையும் வாய்ந்தவர்களிட மிருந்து விண்ணப்பங்கள் கோரப்பட்டதா, அவ்வாறு கோரப்பட்ட தெனில் ஏதேனும் விண்ணப்பங்கள் பெறப்பட்டனவா?*

*(ஈ) இந்த நியமனம் மத்திய அரசுப்பணிகள் தேர்வாணை யத்தின் மூலம் நடைபெற்றதா? இல்லையெனில், ஏன் அவ்வாறு செய்யப்படவில்லை?*

*(உ) திரு. ஹார்க்கன்சுக்குப் பதவி கொடுப்பதற்கு முன் தேவையான தகுதி பெற்ற ஒரு இந்தியர் வேறுயாரும் கிட்ட வில்லை என்று அரசால் திருப்தியுடன் ஏற்றுக்கொள்ளப்பட்டதா?*

*(ஊ) திரு. ஹார்க்கன்ஸ் நகரத் திட்டத்தில் இந்தியாவைப் போன்ற நாடுகளில் முன் அனுபவம் பெற்றவரா அல்லது அவரது அனுபவம் ஐரோப்பா மற்றும் ஏனைய நாடுகளுக்கு மட்டும் உட் பட்டதா?*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 5, 1946, பக்கம் 479.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) பதவி மூன்று ஆண்டுகளுக்கு அனுமதிக்கப்பட்டது; ஓய்வூதியத்திற்குட்படாதது. மாதச் சம்பளமாக ரூ.2000/-

(இ) கேள்வியின் இரு பகுதிகளுக்கும் பதில் 'ஆம்' என்பதே.

(ஈ) பதவி முதலில் மத்திய அரசுப்பணிகள் தேர்வாணையத்தால் விளம்பரப்படுத்தப்பட்டது. ஆனால் தகுதியான நபர் இந்தியாவில் கிடைக்கவில்லை.

(உ) ஆம்.

(ஊ) திரு. ஹார்க்கன்சின் அனுபவம் ஐரோப்பா மற்றும் இந்தியா அல்லாத மற்றைய நாடுகளுடன் சம்பந்தப்பட்டது.

# 360

## *சட்டமன்ற உறுப்பினர்களுக்கு கையினால் தயாரிக்கப்பட்ட காகிதம்

31. சேத் கோவிந்த தாஸ்: கூட்டுறவு அடிப்படையில் உருவாக்கப்பட்டுள்ள நிலையங்களில் கிராமத் தொழிலாகத் தயாரிக்கப்படும் கையினால் செய்யப்பட்ட காகிதத்தை மட்டுமே வருங்கால உபயோகத்திற்கும் விற்பனைக்கும் இந்த மன்ற உறுப்பினர்களுக்கு கொடுப்பதற்காக வாங்கும் உத்தேசம் உண்டா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினரால் குறிப்பிடப்பட்ட கையினால் செய்யப்பட்ட காகிதத்தை இம்மன்றத்தின் அனைத்து உறுப்பினர்களும் உபயோகிக்க ஒத்துக் கொண்டால், அத்தகைய காகிதம் ஏற்றுக்கொள்ளக்கூடிய தரத்தில் கிடைக்குமெனில் அவர்களுக்கு விற்பனை செய்வதற்காக வாங்கப்படும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 5, 1946, பக்கம் 481.

# 361

## *சட்டமன்ற உறுப்பினர்களுக்கு கிணறுகளும் கூடுதல் குடியிருப்பும்

*33. சேத் கோவிந்த் தாஸ்:* (அ) மத்திய சட்டமன்றத்தின் இரு அவைகளிலும் உள்ள உறுப்பினர்கள் குடியிருக்க பங்களாக்கள் போதிய அளவு இல்லை என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) இந்தப் பகுதிகளில் கிணறுகள் இல்லாததால் குழாய்த் தண்ணீரை உபயோகிக்காத சட்டமன்ற உறுப்பினர்களின் வைதீகக் குடும்பத்தினர் பெரிதும் துன்பப்படுகிறார்கள் என்பது அரசுக்குத் தெரியுமா?

(இ) அடுத்தக் கூட்டத்தொடருக்கு உறுப்பினர்கள் தங்கள் குடியிருப்புகளை வரித்துக் கொள்ளும் முன் இந்தப் பகுதிகளில் தேவையான தூரத்திலும், இடங்களிலும் கிணறுகள் வெட்ட அரசு உத்தேசித்துள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* (அ) இக்கூட்டத் தொடரின் தொடக்கம்வரை குடியிருப்புகள் பற்றாக்குறை பற்றி அரசுக்கு எந்த முறையீடும் வரவில்லை; இது சம்பந்தமாக எத்தகைய புகார்களையும் அவர்கள் பெறவில்லை. பங்களா மாதிரியான குடியிருப்புகள் சம்பந்தமாக ஓரளவு பற்றாக்குறை இருப்பதாக அரசின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டது. அது தற்பொழுது அரசின் பரிசீலனையில் உள்ளது.

(ஆ) இல்லை.

(இ) இத்தகைய யோசனை எதுவும் தற்சமயம் அரசின் பரிசீலனையில் இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற ,விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 5, 1946, பக்கம் 481.

# 362

## *இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையை மறுசீரமைத்தல்

36. திரு.கே.சி. நியோகி: i) ''அரசின் கனிமக்கொள்கையினை மேம்படுத்தும் நோக்கத்துடன் '' இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையை மறுசீரமைக்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது அல்லது எடுக்கப்பட உள்ளது'' என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

ii) இந்தியாவின் வளங்கள் சம்பந்தமாக அரசின் கொள்கைகளைக் கடந்த 1945 மார்ச் 12-ஆம் நாள் சட்டமன்றத்தில் விளக்கி வெளியிட்ட அறிக்கையின் அடிப்படையில் கனிமங்களின் மீது கட்டுப்பாடு கொண்டுவரச்சட்டம் இயற்றப்போவதாக மாண்புமிகு உறுப்பினர் கூறியது என்ன ஆயிற்று?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: i) மண்ணியல் ஆய்வுத்துறையை மத்திய அரசு பெரிய அளவுக்கு விரிவாக்கம் செய்துள்ளது. இந்தத் துறையைச்சேர்ந்த அரசிதழ் பதிவு பெற்ற உயர் அதிகாரிகள் எண்ணிக்கை போருக்கு முன்னால் 27 பேர் என்று இருந்தது. தற்போது அது 102 ஆக உயர்ந்துள்ளது. அதில் பல்வேறு நிபுணர்கள், சுரங்கப் பொறியாளர்கள், புவி இயற்பியலாளர்கள் போன்றோரும் அடங்குவர்.

இந்திய மண்ணியல் துறையின் அமைப்பு மற்றும் செயல்பாடுகள் குறித்த ஒரு துண்டுப்பிரசுரத்தின் நகல் மன்ற நூலகத்தில் வைக்கப்பட்டு உள்ளது.

ii) இந்த விஷயத்தில் மாகாண அரசுகள் கலந்தாலோசிக்கப்பட்டு அவற்றின் பதில்கள் பரிசீலனையில் உள்ளன.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 5, 1946, பக்கம் 482 - 483.

# 363

## *இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையின் பயன்பாட்டுப் பிரிவு ரத்து

37. திரு.கே.சி. நியோகி: (அ) இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையின் பயன்பாட்டுப் பிரிவு மூடப்பட்டதற்கான காரணங் களை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப் பாரா?

(ஆ) மேலே குறிப்பிட்ட கிளையுடன் இணைந்த ஆலோ சனைக்குழு கனிமங்கள் சம்பந்தமான போர்க்காலத்திற்குப் பிந்தைய திட்டக்குழுவாக செயல்படவேண்டுமென்று ஒரு கட்டத்தில் எதிர் பார்க்கப்பட்டதா?

(இ) இத்தகைய குழு தற்போது இருக்கிறதா, அவ்வாறு இருக்குமானால் கனிமங்களைப் பற்றிய போர்க்காலத்திற்குப் பிந்தைய பிரச்சினைகளை அந்தக் குழு தற்பொழுது பரிசீலித்து வருகிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இன்னமும் தோண்டியெடுக்கப்படாத நாட்டின் கனிம வளங்களை போர்க் கால நடவடிக்கைகளின் மேம்பாட்டுக்காக உபயோகப்படுத்தும் நோக்கத்தோடு இந்தப் பயன்பாட்டுக்கிளை உருவாக்கப்பட்டது. யுத்தம் முடிந்தவுடன், அதன் முக்கியத்துவம் போர்க்கால உற்பத்தி என்ற நிலையிலிருந்து நாட்டின் கனிம வளர்ச்சிக்கான திட்ட மிட்ட கொள்கையாக மாறியது. இத்தகைய திட்டமிட்ட கொள்கை யின் வளர்ச்சி இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையின் ஓர் ஒருங் கிணைந்த செயல்பாடாக அமைந்துள்ளது. அது முன்னுக்குக் கொண்டு வரப்பட்டதால் உற்பத்திக்கெனத் தனிக் கிளையைத் தோற்றுவிக்கும் தேவை தற்பொழுது எழவில்லை.

(ஆ) ஆமாம். ஆனால் அதன் செயல்பாட்டின் மாற்றம் ஆலோசனைக் குழுவின் இயைபிலும் மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 5, 1946, பக்கம் 483.

(இ) இந்தியஅரசு, நாட்டின் கனிம வளர்ச்சி குறித்த பிரச்சினைகளில் தனக்கு ஆலோசனை கூற நிபுணர்கள் அடங்கிய ஓர் ஆலோசனைக் குழுவை அண்மையில் அமைத்துள்ளது. இந்தக் குழுவை அமைப்பது குறித்து தொழிலாளர் நலத்துறை இயற்றிய எண். M102 (4) ஜனவரி 9, 1946 தேதியிட்ட தீர்மானத்தின் நகல் நூலகத்தில் உள்ளது.

# 364

## *இந்திய பெவின் இளைஞர்கள்

40. திரு.கே.சி.நியோகி: (அ) பெவின் பயிற்சித் திட்டத்தின் கீழ் இங்கிலாந்தில் எத்தனை இளைஞர்கள் பயிற்சி பெற்றார்கள் என்று தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) போர்த் தளவாடங்கள் தயாரிப்பில் ஈடுபட்ட தொழிற்சாலைகளில் அவர்கள் எத்தனை பேர் பணியில் அமர்த்தப்பட்டார்கள்?

(இ) பயிற்சி பெற்றவர்களில் எத்தனை பேர் நீக்கப்பட்டார்கள்?

(ஈ) பெவின் பயிற்சித் திட்டத்தில் பயிற்சி பெற்ற சில இந்தியத் தொழிலாளர்கள் அவர்கள் பயிற்சி பெற்ற தொழிலுக்கு மாறான தொழில்களை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று இந்திய அரசினால் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள் என்பது உண்மையா? இது உண்மையானால் இதற்குக் காரணம் என்ன? இத்தகைய பயிற்சியாளர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(உ) வேலைவாய்ப்பு உறுதியில்லை எனக் கூறப்பட்டாலும், இங்கிலாந்தில் தங்கியிருக்கும்பொழுது இந்திய பெவின் இளைஞர்களுக்கு இந்தியாவின் தொழில் வளர்ச்சிக்காக அவர்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 5, 1946, பக்கம் 484-85.

களுடைய சேவை பயன்படுத்தப்படும் என்று வாக்குறுதி அளிக்கப் பட்டதா? இக்கேள்விக்குப் ஆம் எனில், இப்பயிற்சியாளர்களுக்கு உரிய வேலைவாய்ப்புக்காக என்ன நடவடிக்கை எடுக்கப்ப்ட்டுள் ளது, அல்லது எடுக்கப்பட உள்ளது?

(ஊ) இந்தப் பயிற்சியாளர்களிடமிருந்து தங்களின் குறை களைக் குறிப்பிட்டு ஏதாவது கோரிக்கை பெறப்பட்டதா? அவ்வாறு பெறப்பட்டதெனில் அந்தக் குறைகள் எந்த வகையைச் சேர்ந் தவை? அவற்றிக்குத் தீர்வு என்ன?

(எ) இந்தியப் பயிற்சியாளர்களைப் பொறுத்தவரையில், பெவின் பயிற்சித் திட்டத்தின் குறிக்கோள்களில் ஒன்று இங்கி லாந்தில் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்குமிடையே நிலவும் கூட்டுறவைப் பற்றி அவர்கள் தெரிந்து கொள்ள உதவுவதும், சிறந்த தொழிற்சங்கக் கோட்பாடுகளை அவர்களிடம் ஊட்டி வளர்ப்பதுமாகும் என்பது உண்மையா? அப்படியெனில், இந்தப் பயிற்சியாளர்கள் இங்கிலாந்தில் பெற்ற அனுபவத்தை இந்தியா வில் தொழிற் சங்க இயக்கத்தில் எப்படிப் பயன்படுத்த அரசு உத்தேசித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) 712. தற்பொழுது 75 பேர் கொண்ட குழு பயிற்சியில் ஈடுபட்டுள்ளது.

(ஆ) 414. மேலும் 168 பயிற்சியாளர்கள் ரயில்வே உட்பட இந்தியப் பாதுகாப்புத் துறையைச் சேர்ந்த (மத்திய, மாகாண, இந்திய சமஸ்தானங்களில்) பல்வேறு நிறுவனங்களில் முக்கியப் பணிகளில் ஈடுபட்டுள்ளனர்.

இ. போர்த்தளவாடத் தயாரிப்புத் தொழிற்சாலைகளில் 111 பேரும் மற்றைய சார்புத் துறைகளில் 9 பேரும்

ஈ. தேசீயப் பணிதுறை (தொழில்நுட்பப் பணியாளர்கள்) சட்டத்தின்கீழ் இந்திய அரசினால் வேலை வாய்ப்புக்கான ஆணை கள் இங்கிலாந்திலிருந்து திரும்பும் பெவின் பயிற்சியாளர்களுக்கு அளிக்கப்பட்டன. பெரும்பாலான சந்தர்ப்பங்களில், பெவின் பயிற்சி

யாளர்கள் அவர்கள் இங்கிலாந்தில் பெற்ற பயிற்சியைச் சார்ந்தே பணியில் அமர்த்தப்பட்டனர். சில சந்தர்ப்பங்களில் அவர்கள் எந்தத் துறைகளில் பயிற்சி பெற்றவர்களோ அத்துறைகளில் அவர்களை பணியிலமர்த்த முடியவில்லை; அதற்கு மாறாக அவர்கள் பெற்ற பொதுப் பயிற்சியின் தகுதியை அடிப்படையாகக் கொண்டு அவர்கள் செய்யக்கூடிய மற்ற பணிகளில் அவர்கள் அமர்த்தப்பட்டனர். இவையனைத்தையும் அரசு பரிசீலித்து உரிய வேலைவாய்ப்பு அளிக்க எல்லா முயற்சியும் மேற்கொண்டு வருகிறது.

(உ) இந்திய அரசுக்குத் தெரிந்தவரை இப்படிப்பட்ட எந்த வாக்குறுதியும் அளிக்கப்படவில்லை. வேலைவாய்ப்புக்கான உறுதி அளிக்கப்பட மாட்டாது என்றும், ஆனால் பயிற்சியாளர்களை உரிய பணியில் அமர்த்த தேவையான முயற்சி எடுக்கப்படும் என்றும் பயிற்சித் திட்ட விளக்க அறிக்கையில் தெளிவாகக் கூறப் பட்டுள்ளது.

(ஊ) ஆமாம். போர்க்காலத்திற்குப் பின் தகுந்த பணியிடங்களில் தாங்கள் அமர்த்தப்படும் வாய்ப்புகள் பற்றியதே அவர்களுடைய முக்கியமான முறையீடாகும். வேலை வாய்ப்பற்ற பெவின் பயிற்சியாளர்களுக்கு அரசிலும் மற்றும் தனியார் நிறுவனங்களிலும் பணியிடங்களைப் பெற்றுத்தர எல்லா முயற்சிகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. வேலைவாய்ப்புக்காகப் பதிவு செய்யப் பட்டுள்ள பெவின் பயிற்சியாளர்ளுக்கு முடிந்த அளவு உதவி செய்யுமாறு எல்லா வேலைவாய்ப்பு அலுவலகங்களின் மேலாளர்களும் அறிவுறுத்தப்பட்டுள்ளார்கள். பெவின் பயிற்சியாளர்களிடையே நிலவும் வேலைவாய்ப்பின்மையின் நிலைமையை அடிக்கடி பரிசீலித்து, முடிந்தவரை, அவர்களுடைய நியாயமான குறைகளைத் தீர்க்க நடவடிக்கை எடுக்கப்படும்.

(எ) ஆமாம். இங்கிலாந்தின் தொழிற்சங்க இயக்கத்தின் செயல்பாட்டினை அறிய பெவின் பயிற்சியாளர்களுக்கு வசதி செய்து கொடுக்கப்பட்டது. பெவின் பயிற்சியாளர்கள் பெற்ற அனுபவம் இந்தியாவில் தொழிற்சங்க இயக்கம் சிறந்த முறையில் வளர்ச்சியுற நடைமுறையில் உதவும் என நம்பப்படுகிறது.

# 365

## *தாமோதர் திட்ட செயல்பாட்டிற்காக கிராமங்களை காலி செய்யும் யோசனை

*திரு. தலைவர்:* எப்பொழுது இந்தத் திட்டம் துவக்கப் பட்டது? எந்த அளவு முன்னேற்றம் பெற்றுள்ளது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* இந்தத் தருணத்தில் இதைப் பற்றி விவாதிக்க ஒன்றுமேயில்லை என்று கூறவிரும்புகிறேன். பீகார் மற்றும் வங்காளம் வழியாக ஓடும் தாமோதர் நதியில் சில இடங்களில் அணைகளைக் கட்ட அரசு உத்தேசித்துள்ளது என்பதில் ஐயம் ஒன்றுமில்லை. ஆனால் இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தில் கட்டாய வெளியேற்றம் பற்றி எழுப்பப்பட்டுள்ள கேள்விகளுக்கு நான் கூறுவதெல்லாம் இதுதான்: நாம் மிகவும் ஆரம்பக் கட்டத்தில் இருக்கிறோம். இந்தத் தண்ணீரைத் தேக்கி அணைகள் கட்டுவதால் எவ்வளவு நிலம் மூழ்கடிக்கப்படும், இதனால் எவ்வளவு பரப்பு நிலம் பாதிக்கப்படும் என்பதைச் சாதாரணமாக ஆராய்ந்து கொண்டிருக்கிறோம். மேலும் இத்திட்டத்தால் எவ்வளவு பேர்களை வெளியேற்றப்பட வேண்டியிருக்கும், அவர்களுக்குச் சொந்தமான நிலங்கள் எவ்வளவு, அவர்கள் உரிமைகள் என்ன என்பதையும் கண்டறிய உள்ளோம். இத்தருணத்தில் குறிப்பிடும்படியாக ஒன்றுமில்லை என்பதுடன், விவாதத்திற்குரிய எந்த நடவடிக்கையும் அரசு இதுவரை எடுக்கவில்லை. எனவே, நான் கூற விரும்புவதெல்லாம் இதுதான். அரசு இவ்விஷயத்தில் ஓர் உறுதியான முடிவு எடுத்தவுடன் அம்முடிவுகளை விளக்கி அரசால் ஓர் அறிக்கை அப்பொழுது எந்த வகையில் வேண்டுமானாலும் இந்த விஷயம் குறித்து உறுப்பினர்கள் விவாதிக்கலாம்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1946, பக்கம் 605-06.

# 366

## *மின்விசை (வழங்கீடு) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, மின்விசை உற்பத்தியையும் வழங்கீட்டையும் சீரமைப்பதற்காகவும் இந்தியாவில் மின்விசைத் துறையின் முன்னேற்றத்திற்கு உகந்த பொதுவான நடவடிக்கைகள் எடுப்பதற்காகவும் இந்த மசோதாவை அறிமுகப்படுத்துகிறேன்.

தலைவர்: தீர்மானம் இதுதான்:

'மின்விசை உற்பத்தியையும் வழங்கீட்டையும் சீரமைப்பதற்காகவும், பொதுவாக இந்தியாவில் மின்விசைத்துறையின் முன்னேற்றத்திற்கு உகந்த பொதுவான நடவடிக்கைகள் எடுப்பதற்காகவும் ஒரு மசோதாவை அறிமுகப்படுத்தப் படுகிறது.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, இம் மசோதாவை அறிமுகப்படுத்துகிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1946, பக் 616.

# 367

## *தற்காலிகக் கட்டிடங்களை இந்திய அரசு வாங்குவது சம்பந்தமாக

திரு. ஆர். வெங்கடசுப்பா ரெட்டியார்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) பிப்ரவரி 4, 1946 தேதியிட்ட ஹிந்துஸ்தான் டைம்ஸின் முதல் பக்கத்தில் கடைசிப் பத்தியில் 'கொள்ளையை நிறுத்துங்கள்'' என்ற தலைப்பில் வந்த கட்டுரை அவர் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா?

(ஆ) அ கேள்விக்கான பதில் 'ஆம்' எனில், அந்தக் கட்டுரையில் குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு கட்டிடங்களை வாங்கும்படி மன்னர் பிரான் அரசு இந்திய அரசை வலியுறுத்திக் கொண்டிருக்கிறதா; அப்படியென்றால் இந்திய அரசு இதுகுறித்து ஒரு முடிவு எடுத்துள்ளதா?

(இ) கட்டிடங்களின் தற்பொழுதைய மதிப்பு என்ன?

(ஈ) இக்கட்டிடங்களுக்காக மன்னர்பிரான் அரசுக்கு என்ன செலவாகும்?

(உ) இக்கட்டிடங்கள் என்ன விலை சொல்லப்பட்டுள்ளன?

(ஊ) இவ்விரு கட்டிடங்களும் இடித்துத் தள்ளப்பட வேண்டியவைதானா? அவை எந்த விதத்திலும் உபயோகப்பட முடியாதவையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 7, 1946, பக் 616.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) இல்லை. இந்திய அரசே அதன் அதிகாரிகளைக் குடியமர்த்துவதற்காக அந்தக் கட்டிடங்களை வாங்க முடிவு செய்துள்ளது. வாங்குவதற்கான பேரம் தற்பொழுது நடைபெற்று வருகிறது.

(இ) கட்டிடங்களின் தற்பொழுதைய மதிப்பீடு, பல்வேறு காரணங்களினால் வேறுபடுவதால், ஒரு நிச்சயமான மதிப்பைக் கூற முடியாது.

(ஈ) ரூ.25,58,000

(உ) ரூ.21,31,667

(ஊ) இந்தக் கட்டிடங்கள் தூரக்கிழக்கு நிறுவனங்கள் மற்றும் இந்திய அரசு அதிகாரிகளால் உபயோகப்படுத்தப் பட்டு வருகின்றன. இவை உபயோகத்திற்கு ஏற்றவை அல்ல என்று கூறமுடியாது. எனினும் அவை தற்காலிகக் கட்டிடங்கள்; அரசுக்குத் தேவையில்லையெனில் அவை இடிக்கப்படும்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: எத்தனை ஆண்டுகளுக்கு அவை நீடிக்கும்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எனக்குத் தெரியாது. எட்டு அல்லது பத்து ஆண்டுகள் மதிப்பிடலாம்.

திரு. சசாங்க சேகர் சன்யால்: அவை விரும்பி வாங்கப் பட்டவையா அல்லது கட்டாயப்படுத்தப்பட்டு வாங்கப்பட் டவையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விரும்பி வாங்கப்பட்டவைதான். ஏன் கட்டாயப்படுத்தப்பட வேண்டும்? அரசுக்குத் தேவையெனில் வாங்கித்தான் ஆக வேண்டும்.

திரு. மனு சுபேதார்: எந்த அடிப்படையில் அவற்றின் விலை மதிப்பு நிர்ணயிக்கப்பட்டது? குறைக்கப்பட்ட விலை மதிப்பா அல்லது அடிமட்ட விலைமதிப்பா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விலைமதிப்பு நிர்ணயிக்கப்படவில்லை. விஷயம் பேச்சுவார்த்தையில் உள்ளது.

திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: போர்க்காலத்தில் அவை கட்டப்பட்டு எத்தனை ஆண்டுகள் ஆகின்றன? ஏற்கனவே எட்டு முதல் பத்து ஆண்டுகள் கழிந்துவிட்டன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவை போர்க் காலத்தின்பொழுது கட்டப்பட்டவை; எந்தத் தேதியில் அவை கட்டப்பட்டன என்பதை துல்லியமாகக் கூறுவதற்கில்லை.

திரு. மோகன்லால் சாக்சேனா: இந்தக் கட்டிடங்களை வாங்குவதற்கான கோரிக்கை அவை முன் வருமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஏன்? அது ஒரு நிர்வாக சம்பந்தமான விஷயம்.

திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: அவை போரின் துவக்கத்தில் கட்டப்பட்டவை என்றால் அதன் ஆயுள் எட்டு முதல் பத்து ஆண்டுகள்தான் இருக்கும். மேலும் அவை இன்னும் மூன்றாண்டுகளுக்குத்தான் நீடிக்கும். இவ்வாறிருக்கும்போது மாண்புமிகு உறுப்பினர் ரூ.25 லட்சம் செலவு செய்வது தேவை என்று ஏன் நினைக்கிறார்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விஷயம் பரிசீலனையில் இருக்கிறது என்று ஏற்கனவே கூறிவிட்டேன். எந்தத் தொகையும் நிர்ணயிக்கப்படவில்லை.

திரு. எம். ஆசப் அலி: மாண்புமிகு உறுப்பினரின் கடைசிப் பதிலுக்கு முந்தைய பதில் எனக்குப் புரியவில்லை. இந்த

அவையின் அனுமதி தேவையில்லை என்றும் அது ஏதோ நிர்வாக விஷயம் என்றும் அவர் கூறினார்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் அப்படிக் கூறவில்லை. அது ஒரு நிர்வாக விஷயம்; அதற்கு அவையைக் கலந்தாலோசிக்க வேண்டியதில்லை என்றுதான் கூறினேன். இதற்கான தொகை நிதிநிலை அறிக்கையில் ஒதுக்கப்படும்.

திரு. எம். ஆசப் அலி: அந்தத் தொகை அனுமதிக்கப் பட்டதா என்று அறிய விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது அனுமதிக் காகக் கொண்டு வரப்படும்.

திரு. எம். ஆசப் அலி: எந்த வடிவில் அதைக் கொண்டு வரப் போகிறீர்கள்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது நிதித் துறை உறுப்பினர் சம்பந்தப்பட்டது.

திரு. எம். ஆசப் அலி: அவர் அதற்கான பதிலைக் கூற வேண்டுமென்று விரும்புகிறேன். இது ஒரு நிர்வாக விஷயம் என்று ஒரு துடுக்குத்தனமான போக்கை மாண்புமிகு உறுப்பினர் மேற்கொள்வது சரியல்ல. அவர் எங்களுக்குப் பதில் சொல்லித் தான் ஆக வேண்டும்.

திரு. சசாங்க சேகர் சன்யால்: பதில் கூறுங்கள்.

(பதில் கூறவேண்டாம் - குறுக்கீடுகள்).

திரு. தலைவர்: ஒழுங்கு, ஒழுங்கு. நாம் இப்பொழுது ஒத்திவைப்புத் தீர்மானத்தை எடுத்துக் கொள்வோம்.

# 368

## டில்லி மற்றும் புதுடில்லியில் வீட்டுவசதிப் பற்றாக்குறை

*155. சர். ஹசன் சுராவர்த்தி:* (அ) போர் முடிந்த பின்பும் கூட டில்லியிலும், புதுடில்லியிலும் குடியிருப்புகளுக்குப் பெரும் பற்றாக்குறை நிலவுகிறது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(ஆ) புதுடில்லி வாடகைக் கட்டுப்பாடு உத்தரவு மற்றும் டில்லி வாடகைக் கட்டுப்பாடு அவசரச் சட்டம் ஆகியவை பிரகடனப்படுத்தப்பட்ட பின்பும்கூட கட்டிடச் சொந்தக்காரர்கள் வாடகைக்குக் குடியிருப்போரை தொந்தரவு செய்கிறார்கள் என்பதும், சட்டத்தில் உள்ள எல்லா ஓட்டை உடைசல்களையும் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் என்பதும் அவருக்குத் தெரியுமா?

(இ) குறைந்தபட்சம் சகஜநிலை திரும்பும் வரையிலும், டில்லி மாகாணத்தில் வீட்டுச் சொந்தக்காரர்களுக்கும் வாடகைதாரர்களுக்கும் இடையேயான உறவை ஒழுங்குபடுத்தும் சட்டங்கள் இந்த அவையில் கொண்டு வரப்படும் வரையிலுமாவது மேலே கூறிய சட்டங்களைச் செயல்படுத்துவது உசிதமானது என்பதை அரசு பரிசீலிக்குமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) ஆம்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 11, 1946, பக் 753.

(ஆ) அண்மையில் எந்தவிதமான முறையீடும் எனக்கு வரவில்லை.

(இ) சகஜநிலைமை திரும்பும் வரை டில்லியிலும், புது டில்லியிலும் வாடகைகள் கட்டுப்படுத்தப்படுவது தொடர வேண்டும் என்பது இந்திய அரசின் நோக்கமாகும்.

# 369

## *பிரிட்டிஷ் மற்றும் இந்தியரல்லாதோரின் பொதுநலத்துறை நிறுவனங்கள்

172. திரு. கே.சி. நியோகி: இந்தியாவில் பிரிட்டிஷ் மற்றும் இந்தியரல்லாதோருக்குச் சொந்தமாக உள்ள பொதுநலத்துறை நிறுவனங்களின் எண்ணிக்கை எவ்வளவு? அந்நிறுவனங்களில் முதலீடு செய்யப்பட்டுள்ள தொகை எவ்வளவு? மற்றும் இந்நிறுவனங்களை மாகாண, நகர அல்லது ஏனைய அரசமைப்புகள் சார்பாக வாங்குவதற்கான அரசின் கொள்கை என்ன? இவ்விவரங்களை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக்கு மாண்புமிகு திட்டம் மற்றும் வளர்ச்சிப் பணித்துறை உறுப்பினர் பிப்ரவரி 18, 1946 அன்று பதிலளிப்பார்.

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 11, 1946, பக். 769.

# 370

## *வெளிநாட்டில் தொழில்நுட்ப ஊழியர்களைப் பயிற்றுவிக்கும் திட்டத்தின் செயல்பாடு

173. திரு.கே.சி. நியோகி: (அ) வெளிநாடுகளின் தொழிற்சாலைகளில் ஏற்கனவே பணிபுரியும் தொழில்நுட்பப் பணியாளர்களை மேலும் அவர்களது தொழில் மற்றும் பணி அனுபவத்தினை விரிவுபடுத்துவதற்காக இதர வெளிநாடுகளுக்கு அனுப்புவதற்காக சென்ற ஆண்டு அறிவிக்கப்பட்ட திட்டத்தின் செயல்பாடுகளைப் பற்றிய ஓர் ஒருங்கிணைந்த அறிக்கையை தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் இந்த அவையில் வெளியிடுவாரா? மேலும் ஏற்கனவே பல்வேறு நாடுகளுக்குச் சென்றுவிட்ட தொழில்நுட்பப் பணியாளர்களின் எண்ணிக்கையின் விவரத்தையும் அவர்கள் மேற்கொள்ளவிருக்கும் பல்வேறு பயிற்சிப் பிரிவுகள், அவர்களைத் தேர்ந்தெடுக்கப் பின்பற்றப்பட்ட முறைகள், மற்றும் அந்தத் தேர்விற்கான அடிப்படை முதலியவை பற்றிய விவரங்களையும் அவர் வெளியிடுவாரா?

(ஆ) ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில், யாரேனும் இருந்தால், எத்தனை பேர் இவர்களில் அனுப்பப்படப் போகிறார்கள்? மேலும் தொழில்நுட்பப்பணியாளர்கள் யாரேனும் இருப்பின் அதேபோல் இந்த ஆண்டு எத்தனைபேர் அனுப்பப்பட இருக்கிறார்கள்? மற்றும் இந்தத் தொழில் நுட்பப்பணியாளர்கள் எந்த நாடுகளில், எந்தத் துறையில் பயிற்சி பெற இருக்கிறார்கள்?

(இ) இத்தொழில்நுட்பப் பணியாளர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்காக மத்திய அரசிற்கு ஏற்படக்கூடிய மதிப்பீட்டுச் செலவு எவ்வளவு? அவசியமானால் இதுவிஷயத்தில் மாகாண அரசுகளுக்கு, ஏற்படக்கூடிய மதிப்பீட்டுச் செலவு எவ்வளவு?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 11, 1946, பக். 769.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இது சம்பந்தமாக அவையில் ஒரு அறிக்கை வைக்கப்பட்டுள்ளது.*

*(ஆ) ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் 152 பேர் இன்னும் அனுப்பப்பட உள்ளனர். ஒவ்வொரு நியமனதாரருக்கும் தேவையான பயிற்சி வசதிகளைப் பற்றிய விவரங்கள் குறிப்பிட்ட அதிகாரிகளுக்கு அனுப்பப்பட்டுள்ளன. அவர்களுக்குத் தேவையான பயிற்சி வசதிகள் உள்ளன என்ற செய்தி கிடைத்ததும் நியமன தாரர்களை அனுப்புவதற்கான ஏற்பாடுகள் செய்யப்படும். ஏற் கனவே தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு மேல் எவ்வளவு நியமன தாரர்கள் இந்த ஆண்டில் அனுப்பப்படுவார்கள் என்பதையோ அல்லது எந்தத் துறையில் அவர்கள் பயிற்சி பெறப்போகிறார்கள் என்பதையோ இந்தக் கட்டத்தில் தெரிவிக்க இயலாது. அது வெளிநாட்டில் கிடைக்கக்கூடிய பயிற்சி வசதிகளைப் பொறுத்தது.*

*(இ) இந்தத் திட்டத்தின் கீழ், பயிற்சிக்கு ஆகும் செலவுகளை யும் நியமனதாரர்களின் ஏனைய செலவுகளையும் சம்பந்தப்பட்ட தனியார் தொழிற்சாலைகள், மத்திய, மாகாண அரசுகளும் மற்றும் இந்திய சமஸ்தானங்களும் ஏற்றுக்கொள்ளும். தனியார் தொழிற் சாலையிலிருந்து நியமனம் செய்யப்பட்டவர் புதுத்தொழிலில் அல்லது நாட்டின் நலனுக்கு உதகந்ததெனக் கருதப்படும் ஒரு தொழிலில் பயிற்சி பெற வேண்டுமென்றாலோ, அதன் உரிமை யாளரால் முழுச் செலவு ஏற்றுக்கொள்ளப்பட முடியவில்லை யென்றாலோ அப்போது மத்திய அரசு நிதி உதவி செய்ய இத் திட்டம் வழிவகை செய்கிறது.*

*மத்திய அரசு ஊழியர்களுக்கிடையே இருந்தும் மற்றும் சில தனியார் தொழில் நிறுவனங்களிலிருந்தும் தேர்ந்தெடுக்கப் பட்ட நியமனதாரர்களுக்காக மத்திய அரசு 1946-47 -ல் உதவி செய்ய உள்ள மதிப்பீட்டுச் செலவு ரூ.1,01,680.*

*மாகாண அரசுகளின் ஊழியர்களுக்கிடையே தேர்ந்தெடுக் கப்பட்ட நியமனதாரர்களுக்காக மாகாண அரசுகளுக்கு ஏற்படக் கூடிய மதிப்பீட்டுச் செலவு 1946-47 - ல் சுமார் ரூ.3,60,000.*

# 371

## *நிலக்கரிச் சுரங்கங்களில் கோரக்பூர் தொழிலாளர்களை வேலைக்கமர்த்தியது சம்பந்தமான செலவுகள்

31. திரு.கே.சி. நியோகி: (அ) நிலக்கரிச் சுரங்கங்களில் உள்ள கோரக்பூர் தொழிலாளர் வேலைவாய்ப்பு மற்றும் நியமனத்திற்கான எல்லாச் செலவுகளும் முறையாக தணிக்கை செய்யப்பட்டனவா? மற்றும் தணிக்கையாளர்களால் அது முழுவதும் முறையாக உள்ளது என்று கண்டறியப்பட்டதா? எந்தத் தேதி வரை அந்தக் கணக்குகள் தணிக்கை செய்யப்பட்டுள்ளன?

(ஆ) தொழிலாளர் பிரிவின் பொறுப்பு அதிகாரியாக உள்ளவரின் பெயர் என்ன? அவர் வகிக்கும் பதவியின் பெயர் யாது? அவருடைய செயலாளரின் பெயர் என்ன? அவர்கள் பெறும் சம்பளம் எவ்வளவு? பொறுப்பு அதிகாரி என்ற முறையில் எந்த அளவுக்கு நிதி அதிகாரம் அவருக்கு உள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) முதல் பகுதி, ஆம். கணக்குகள் முறையாக உள்ளதாக அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

(ஆ) முதல் பகுதி - திரு. எச்.ஜே. வால்ஷ், துணை இயக்குனர், தொழிலாளர் வழங்கீடு பிரிவு (நிலக்கரி). அவருக்கு செயலாளர் எவரும் இல்லை.

இரண்டாம் பகுதி - அவரது சம்பள விகிதம் 1925 - 50 - 2075. மாதம் ஒன்றுக்கு ஒரு தொழிலாளிக்கு ரூ.60க்கு மிகாமல் மொத்தத்தில் செலவு செய்யும் அதிகாரம் அவருக்கு உள்ளது. அது தொழிலாளர்களின் சம்பளம், எழுத்தர்கள், கடைநிலை ஊழியர், மருத்துவப் பணியாளர் சம்பளம், ரேஷன் செலவு, போக்குவரத்து மற்றும் அவசர காலச் செலவு ஆகியவற்றை உள்ளடக்கியது. எல்லா சந்தர்ப்பங்களிலும் செய்யப்படும் செலவுகள் அரசு அனுமதித்த விகிதத்துக்கேற்ப இருக்க வேண்டும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 11, 1946, பக். 773.

# 372

## *நிலக்கரிச் சுரங்கங்களில் கோரக்பூர் தொழிலாளர்களுக்கான செலவுகள்

32. திரு.கே.சி.நியோகி: தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) நிலக்கரிச் சுரங்கங்களில் பணிபுரியும் கோரக்பூர் தொழிலாளர்களுக்காக இதுவரை ஆன செலவுத் தொகை;

(ஆ) கோரக்பூர் தொழிலாளர்களைப் பணிக்கு அமர்த்திக் கொண்ட சுரங்க உரிமையாளர்களிடமிருந்து இதுவரை வசூலிக்கப் பட்ட தொகை;

(இ) 1. ரயில்வேக்குச் சொந்தமான நிலக்கரிச் சுரங்கங் கள் மற்றும்

2. தனியார், பொது நிறுவனங்களுக்குச் சொந்தமான நிலக் கரிச் சுரங்கங்கள் ஆகியவற்றில் பணிபுரியும் கோரக்பூர் தொழி லாளர்களின் எண்ணிக்கை;

(ஈ) கோரக்பூர் தொழிலாளர்கள் பணியில் அமர்த்தப்பட் டுள்ள நிலக்கரிச் சுரங்கங்களின் பெயர்கள்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) 1946 ஜனவரி இறுதி வரை ரூ. 1,91,05,386/-

1945 டிசம்பர் இறுதிவரை திருப்பிப் பெறப்பட்ட தொகை ரூ.22,52,311. டிசம்பர் முடியும் காலத்தில் இன்னும் வரவேண்டிய தொகை ரூ. 29,48,302. 1946 ஜனவரிக்காக தரப்பட வேண்டிய தொகை ரூ. 16 லட்சம்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 11, 1946, பக். 773.

(இ) பணியில் உள்ளவர்களின் எண்ணிக்கை -

1. ரயில்வே நிலக்கரிச் சுரங்கங்களில் 7 சதவீதம்.
2. பொது நிறுவனங்களுக்குச் சொந்தமான நிலக்கரிச் சுரங்கங்கள் 83 சதவீதம்.
3. தனியாருக்குச் சொந்தமான நிலக்கரிச் சுரங்கங்கள் 10 சதவீதம்.

1946 ஜனவரி 19-ஆம் நாள் வரையிலான மொத்தத் தொழிலாளர் எண்ணிக்கை - 17,391.

எந்த ஒரு மாதத்திலும் அதிகபட்சமாகப் பணியமர்த்தப் பட்டவர்கள் - 30,600

ஈ) ஓர் அறிக்கை அவையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

## அறிக்கை

மேற்பரப்பு சுரங்கங்கள் பட்டியல்

1. மதுபந்த்
2. டயமோன் டிஸ்ரா
3. மாடல் ஜாரியா
4. ஏ.ஜி.டிஸ்ரா
5. லோவர் அப்பர்ஜாரியா
6. இந்தியன் ஜாரியா
7. பாக்டிகி குஜாமா
8. கே.பி'ஸ் டோபாரி
9. பால்கோரா
10. கானு யாதிஹ்
11. பாகீசிஸ் டோபார்
12. பண்டல்பெர்ரா
13. காஸ் ஜாரியா டோபாரி
14. தெற்கு டிஸ்ரா
15. கிழக்கு பராரீ
16. ப்யூர் ஜோய்ராம்பூர்
17. வடக்கு பராரீ
18. ஜீ.பி. சீஸ் ஜினகோரா
19. பாசுதேவ் 'ஏ' பிளாட் கோலியிரி
20. பதார்தி சுதாம்தி
21. ப்யூர் டஸ்ரா
22. நியூ டஸ்ரா
23. மத்திய போவ்ரா
24. போவ்ரா
25. மொஹல்போனி
26. கிழக்கு எக்ரா
27. புஸ்ஸேரியா
28. வடக்கு எக்ரா
29. கன்காணீ
30. சேன்த்ரா பன்ஸ்ஜோரா
31. ஏக்ரா காஸ்
32. ஏக்ரா காஸ் நம்பர் 12 குவாரி

33. முட்டீஸ்
34. டெடுல் மாரி
35. டாடாஸ் சிஜுவா
36. அங்கர்பத்ரா
37. ஜாரியா காஸ் அஸ்கர்பத்ரா
38. கோய்லுடீ
39. அகர்டி
40. வடக்கு தமூதா
41. இசபெல்லா
42. ஷாம்பூர
43. ப்யூர் லைக்டி
44. சாங் டோரியா
45. சப்பூயி காஸ்
46. காஸ் ஜாம்சாரி
47. ஜோடே தெமோ
48. சிர்க்கா
49. ரேலிகரா
50. ஜுன்குண்டா
51. ஜாம்பாத்
52. தான்சார்
53. பிரைட் குசுந்தா
54. வடக்கு புக்கத்டி
55. கோதூர்
56. ப்யூர் குஸ்தோரே
57. அல்குசா நயாதி
58. ஜய்ரந்தி
59. ஸ்வாங்
60. பர்பேலியா

நிலத்தடிச் சுரங்கங்கள்

1. பர்பேலியா
2. சோடேபூர்
3. சீதல்பூர்
4. பன்கிசிமுல்லா 11 மற்றும் 12 சுரங்கக்குழிகள்
5. பன்கிசிமுல்லா 7 மற்றும் 8 சுரங்கக்குழிகள்
6. தம்ரா
7. அட்ஜய் II நிலக்கரிச் சுரங்கம்
8.. ஷீப்பூர்
9. சப்பூயி காஸ்
10. எஸ்.ஈ.பர்போனி
11. டிக்வாடி
12. ஜீட்பூர்
13. ப்யூர் ஜோய்ராம்பூர்
14. பட்தீ
15. காஸ்லிட்டான்ட்
16. ஸ்டாண்டர்ட்
17. எக்ரா காஸ்
18. ஸ்வாங்
19. ஜய்ரன்டீ
20. தெமோ மெயின்
21. மாடல் ஜாரியா

## 373

## *சி.பி.டபிள்யூ.டி. அதிகாரிகளின் பணி நீடிப்பு

44. திரு.ஸ்ரீ. பிரகாசா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) ஓய்வுபெற்ற, ஆனால் திரும்பவும் மத்தியப் பொதுப் பணித் துறையில், 1939-ல் இருந்து கண்காணிப்பு பொறியாளர், நிர்வாகப் பொறியாளர், துணைப் பொறியாளர்களாகப் பணியமர்த்தப்பட்டவர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) இத்தகைய பணிநீட்டிப்புகள் ஒவ்வொரு நீட்டிப்புக் காலத்துக்கான பகுதிகளையும் அவர்கள் மொத்தப் பணிக் காலத்துக்கான நீட்டிப்பையும் சேர்த்துப் பெற்றவர்களின் எண்ணிக்கை என்ன?

(இ) அவர்களது மொத்தப் பணிக்காலத்திற்கும் மேல் நீட்டிப்பு வழங்குவதை மத்திய அரசின் நிதித்துறை எதிர்த்துக் கருத்துக் கூறியது என்பது உண்மையா? அது உண்மையெனில், நிதித்துறையின் கருத்துக்களுக்கெதிராக இவ்விஷயத்தில் நடந்து கொண்ட செயல்பாட்டிற்கான காரணங்கள் யாவை?

(ஈ) இளம் அதிகாரிகளின் முன்னேற்றத்திற்கும் புதியவர்களின் வேலைவாய்ப்பிற்கும் இந்த நீட்டிப்புக்கள் இடையூறா? அப்படியெனில் முன்னேற்றம் பாதிக்கப்பட்டோரின் இழப்பினை ஈடுசெய்ய ஏதாவது வழிவகை செய்யப்பட்டுள்ளதா?

(உ) இந்த நீட்டிப்புக்களைத் தடுத்து நிறுத்தவும் இளம்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 20, 1946, பக். 1214.

அதிகாரிகளின் எதிர்காலத்தை மேம்படுத்தவும் அரசு ஏதாவது நடவடிக்கை எடுக்க உத்தேசத்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மூன்று.

(ஆ) 1939 முதல் அடிப்படை விதி 56-ன் கீழ் பணி நீட்டிப்பு மூன்று சந்தர்ப்பங்களில் அனுமதிக்கப்பட்டுள்ளது. அந்த நீட்டிப்புக் காலம் முறையே ஆறு மாதம், மூன்றுநாள், ஒரு மாதம் ஆகும்.

(இ) கேள்வியின் முதல் பகுதிக்கான பதில் இல்லை என்பதாகும்; இரண்டாவது பகுதி இங்கு எழவில்லை.

(ஈ) மற்றும் (உ) இல்லை.

# 374

## *சர்வதேசத் தொழிலாளர் அமைப்பின் சட்ட திட்டங்களைத் திருத்துவதற்கான தீர்மானம்

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்** (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, 1945 - ஆம் ஆண்டு நவம்பர் 5 -ஆம் நாள் பாரிசில் நடைபெற்ற சர்வதேசத் தொழிலாளர் அமைப்பின் இருபத்தேழாவது கூட்டத் தொடரில் மேற்கொள்ளப்பட்ட சட்ட திட்டங்களைத் திருத்துவதற்கான தீர்மானத்தின் நகலை அதன்பின் எடுக்கவிருக்கிற நடவடிக்கைளுக்கான அறிக்கையுடன் சேர்த்துச் சமர்ப்பிக்கிறேன்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 20, 1946, பக். 1214.

# 375

## *இந்தியத் தொழிற்சங்கங்கள் (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):*

ஐயா, 1926 ஆம் வருட இந்தியத் தொழிற் சங்கங்கள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான ஒரு மசோதாவை முன்மொழிகிறேன்.

திரு. தலைவர்: தீர்மானம் வருமாறு:

> '1926 ஆம் வருட இந்தியத் தொழிற்சங்கங்கள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான ஒரு மசோதாவை அறிமுகப்படுத்த அனுமதி கோரப்படுகிறது.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, நான் மசோதாவை அறிமுகப்படுத்துகிறேன்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 20, 1946, பக். 1214.

# 376

## *நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்கள் வேலை செய்வதைத் தடைசெய்தல்

406. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) தற்பொழுது போர் முடிந்துவிட்டதால், நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்கள் வேலை செய்வதை அரசு எப்போது தடை செய்ய உத்தேசித்துள்ளது?

(ஆ) தங்கள் கிராமங்களில் இருந்து அழைத்து வரப்பட்ட இந்தப் பெண்களுக்கு மாற்றுவேலை வாய்ப்பு அளிக்கும் திட்டங்கள் ஏதேனும் உள்ளதா அல்லது அவர்கள் திரும்பிச் செல்லும் பயணம் இலவசமாக அளிக்கப்படுமா மற்றும் சுரங்கங்களில் பணம் சேமித்துத் திருப்பி அளித்துவிடலாமென்று அவர்கள் வேலையின் பொழுது வாங்கிய கடனிலிருந்து விலக்கு அளிக்கப் படுவார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) நிலக்கரிச் சுரங்கங்களில் பெண் தொழிலாளர்கள் வேலைக்கமர்த்தப்படுவதை முற்றிலுமாக தடை செய்யும் எண்ணம் எதுவும் அரசுக்கு இல்லை. எனினும், 1946, பிப்ரவரி முதல் நாளிலிருந்து நிலத்தடியில் அவர்கள் பணிபுரிவது தடை செய்யப்பட்டுள்ளது.

(ஆ) நிலக்கரி வயல்களில் காய்கறிப் பண்ணைகள் துவங்க மத்திய அரசின் சேமநல நிதியம் முடிவு செய்துள்ளது. சுரங்கப் பணி யில் விடுவிக்கப்பட்ட பெண்களுக்கு மாற்று வேலைவாய்ப்பினை உடனடியாக அளிக்க முடிந்த எல்லாவற்றையும் செய்யுமாறு வங்காளம், பீகார் மாகாண அரசுகளும் மற்றும் பல்வேறு சுரங்க உரிமையாளர் சங்கங்களும் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளன. பெரும் பாலான பெண்களுக்கு ஏற்கனவே நிலக்கரிச் சுரங்கங்களின் மேற் பரப்புப் பணிகள் அளிக்கப்பட்டுள்ளன.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1946, பிப்ரவரி 25, பக்.1427.

/

# 377

## *இந்தியத் தொழிலாளர் மாநாட்டின் பரிந்துரைகள்

467. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரிடமிருந்து பின்கண்ட தகவல்களை எதிர்பார்க்கிறேன்:

(அ) 1945 நவம்பரில் கூடிய இந்தியத் தொழிலாளர் மாநாட்டில் கூறப்பட்ட பரிந்துரைகள்;

(ஆ) அவற்றின் மேல் அரசு எடுத்த முடிவுகள் அல்லது தீர்மானங்கள்;

(இ) இந்திய அரசு அவற்றைச் செயல்படுத்த என்ன நடவடிக்கைகள் எடுக்க உத்தேசித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஒன்றுமில்லை.

(ஆ) மற்றும் (இ) எழவில்லை.

# 378

## +பெரிய நகரங்களுக்கான அரசின் வீடு கட்டும் திட்டம்

469. திரு. மனு சுபேதார்: ''கடந்த ஆறு ஆண்டுகளில் அநேகமாக எந்த இந்திய நகரத்திலும் இன்னும் ஒரு குடியிருப்புக்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1946, பிப்ரவரி 25, பக்.1427.

+ மேற்படி அதே தொகுதி, பக். 1428.

கூடக் கட்டப்படவில்லை என்பதை நினைவு கொள்ள வேண்டும்'' என்று ஸ்டேட்ஸ்மன் பத்திரிகை 1946, ஜனவரி 23 ஆம் தேதிய தனது தலையங்கத்தில் குறிப்பிட்டிருப்பது மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்திற்கு கொண்டு வரப்பட்டதா? இந்தக் கூற்றை அவர் மறுக்கிறாரா?

(ஆ) பம்பாய், கல்கத்தா போன்ற மக்கட்தொகை அதிகமுள்ள நகரங்களில் கட்டிடங்கள் கட்டுவதை ஊக்குவிக்கும் நடவடிக்கைகள் ஏதாவது அரசு எடுத்துள்ளதா?

(இ) கட்டிடங்கள் கட்டுவதற்கு விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் இன்னும் இருக்கின்றனவா? அல்லது கட்டிடங்கள் கட்டுபவர்களின் கஷ்டங்களைப் போக்க வழிவகை செய்யப்பட்டுள்ளதா?

(ஈ) இந்தியாவில் கட்டிடங்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்த ஏதாவது நிலையான திட்டத்தை மத்திய அரசு மாகாண அரசுகளுக்கு அனுப்பியுள்ளதா அல்லது அவற்றிடம் இருந்து பெற்றுள்ளதா?

(உ) அரசுப் பணியிலிருந்து நீக்கம் செய்யப்பட்டவர்களுக்கு கட்டிடத் தொழில் நல்ல எதிர்காலம் அளிக்கக்கூடிய ஒன்று என்பதை அரசு அறியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம். கடந்த ஆறு ஆண்டுகளில் தனியார்களால் கட்டப்பட்ட கட்டிடங்களின் எண்ணிக்கை பற்றிய தகவல் அரசிடம் இல்லை. எனவே, அந்தத் தலையங்கத்தில் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்தை ஆதரிக்கவோ மறுக்கவோ முடியாது. ஆனால் 1941-ன் பிற்பகுதி வரை கட்டிடப் பொருட்கள் உபயோகிப்பதற்கு எத்தகைய கட்டுப்பாடுகளும் விதிக்கப்படவில்லை என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

(ஆ) ஒருவேளை மதிப்பிற்குரிய உறுப்பினர் தனியார் கட்டிடங்களை மனதில் எண்ணியிருக்கலாம். இந்திய அரசு அண்மையில், பம்பாய், கல்கத்தா மட்டுமல்லாமல் இந்தியா முழுவதும்

தனியார் கட்டுமானத்தை ஊக்குவிக்கும் பொதுவான சில நடவடிக்கைகளை எடுத்திருக்கிறது. கட்டிடங்கள் கட்டுவதின் மீது கட்டுப்பாடுகள் வேண்டுமென்று மாகாண அரசுகளுக்கு அனுப்பியிருந்த சுற்றறிக்கையையும் அது திரும்பப் பெற்றுக்கொண்டது. எல்லா வழியிலும் தனியார் கட்டுமானத்தை பொதுவாக ஊக்குவிக்குமாறு மாகாண அரசுகள் அறிவுறுத்தப்பட்டுள்ளன. செங்கற்கள் வழங்குவதற்கான குறிப்பிட்ட உத்தரவுகள் வழங்கப்பட்டுள்ளன; தனியார் கட்டுமானத் தொழிலுக்கு, தற்பொழுது இந்திய அரசின் கட்டுப்பாட்டின் கீழ்உள்ள கட்டுமானப்பொருட்களான சிமெண்ட், உருக்கு, மரம் போன்றவற்றின் வழங்குதலை அதிகப்படுத்தவும் கூறியுள்ளோம்.

இந்நாட்டின் தனியார் கட்டுமானத்தொழில் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ள அம்சங்களைப் பற்றி விவாதிக்க கட்டுமானத்தொழில் பிரதிநிதிகளை அழைத்து 1946 மார்ச் முதல் வாரத்தில் டில்லியில் ஒரு கூட்டத்தைக் கூட்ட இந்திய அரசு முடிவு செய்துள்ளது.

(இ) வருங்காலத்தில், கட்டுமானத் தொழிலுக்கு அளிக்கப்படும் சலுகைகள் அத்தொழிலை மேம்படுத்த உறுதுணையாக இருக்கும் என இந்திய அரசு நம்புகிறது.

(ஈ) நகர்ப்புறத்தில் வசிக்கும் குறைந்த வாடகை கொடுக்க முடியாத தொழிலாளர்களும் தொழிற்சாலைப் பணியாளர்களும் வீடுகட்டுவதை ஊக்குவிப்பதற்கு ஒரு குறுகிய காலத்திட்டத்தை மாகாணங்களுக்கு இந்திய அரசு அனுப்பியுள்ளது. மாகாணங்கள் அளிக்கும் மானியத்துக்கு ஈடாக மத்திய அரசும் மானியம் வழங்கும் முறை இத்திட்டத்தில் அடங்கி உள்ளது. இத்திட்டம் நிதித்துறை உறுப்பினர் நிதிநிலை அறிக்கைச் சமர்ப்பித்துப் பேசும்போது குறிப்பிடப்படும்.

# 379

## * போர்க்காலத்தில் தற்காலிகமாகக் கட்டப்பட்ட கட்டிடங்களை குடியிருப்புக்கு உபயோகப்படுத்துவது சம்பந்தமாக அரசின் கொள்கை

470. திரு.மனு சுபேதார்: (அ) இங்கிலாந்தில் வீடுகட்டும் செயல்பாடுகளை அதிகப்படுத்த உருவாக்கப்பட்டிருக்கும் சிறப்புத் திட்டங்களைப் பற்றி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா? அப்படியெனில், அச்சிறப்புத் திட்டங்கள் யாவை?

(ஆ) 1946 ஜனவரி 23-ஆம் நாளிட்ட ஸ்டேட்ஸ்மன் நாளேட்டில் கூறப்பட்டிருக்கும் கீழ்க்கண்ட யோசனை சம்பந்தமாக என்ன கொள்கைகளை அரசு கடைப்பிடிக்க உத்தேசிக்கிறது:

> 'ஆகவே, வழங்குதல் மற்றும் தேவை விதி நிலைபெறும் வரை, போர்க்காலத்தில் தற்காலிகமாகக் கட்டப்பட்ட அமைப்புகளை குடியிருப்புகளாக உபயோகிக்க முடியுமா என்று அரசு பரிசீலனை செய்வது உசிதமானது.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம். பிரிட்டிஷ் செய்தித்துறை அமைச்சகத்தின் பரசுர எண் ஆர் 520 - ல் இத்திட்டங்கள் முழுமையாக விளக்கப்பட்டுள்ளன; அதன் நகலை அவையின் நூலகத்தில் காணலாம்.

ஆ. 1946, ஜனவரி 23 ஆம் தேதியிட்ட ஸ்டேட்ஸ்மனில் கூறப்பட்ட பரிந்துரை கல்கத்தாவில் கட்டப்பட்டுள்ள தற்காலிகக் கட்டிடங்களைப் பற்றியதாகும். மதிப்பிற்குரிய உறுப்பினர் அக் கட்டிடங் களைப் பற்றிய அரசின் கொள்கை என்ன என்பதை அறிய விரும்புகிறார் என்று எண்ணுகிறேன். மத்திய அரசின் சிவில் அலுவலகங்களுக்காகக் கட்டப்பட்ட கட்டிடங்களுக்குத்தான் நான் பொறுப்பு. அவை தேவைக்கு அதிகமானவை என்ற நிலை ஏற் படும் வரை உபயோகப்படுத்தப்படும்.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1946, பக். 1427.

# 380

## *இந்தியத் தொழிற்சாலைப் பணியாளர்களின் வேலை நேரங்கள்

481. **திரு. வாதிலால் லல்லுபாய்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) நிலக்கரிச் சுரங்கங்கள் மற்றும் மலைத்தோட்டங்கள் உள்ளிட்ட பல்வேறு தொழில்களில் இந்தியத் தொழிலாளர்கள் தினசரி பணிபுரியும் நேரங்கள்;

(ஆ) 1934 ஆம் வருட இந்தியத் தொழிற்சாலைகள் சட்ட வரம்புக்குள் வரும் மொத்தத் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை;

(இ) இவர்களில் எத்தனை பேர் ஒரு ஷிப்டிலும், எத்தனை பேர் இரண்டு ஷிப்டுகளிலும், எத்தனை பேர் மூன்று ஷிப்டுகளிலும் வேலை செய்கிறார்கள்?

(ஈ) ஒவ்வொரு ஷிப்டிலும் வேலை நேரம் எவ்வளவு?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) தொழிற்சாலைகளிலும் மலைத் தோட்டங்களிலும் வேலை நேரங்களைப் பற்றிக் குறிப்பிடும் இரு அறிக்கைகள் அவையில் வைக்கப்பட்டுள்ளன. நிலக்கரிச் சுரங்கங்களில் வேலைநேரங்களைப் பற்றிய விரிவான தகவல் கிடைக்கப்பெறவில்லை.

(ஆ) தொழிற்சாலைகள் சட்டத்தின் கீழ்வரும் தொழிற்சாலைகள் சென்ற 1944 ஆம் ஆண்டு கிடைத்த புள்ளிவிவரங்களின்படி மொத்தம் 14,922.

(இ) மற்றும் (ஈ) தகவல் கிடைக்கப் பெறவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1946, பக். 1428.

## தொழிற்சாலைகளில் தினசரி வேலை நேரங்களைத் தெரிவிக்கும் அறிக்கை.

| | | |
|---|---|---|
| 1. | பருத்தி | - 7 1/2 - 10 |
| 2. | சணல் | - 9 - 12 |
| 3. | பட்டு | - 7 1/2 - 9 |
| 4. | கம்பளி | - 9 - 10 |
| 5. | பொறியியல் (ரயில்வே பணிமனைகள் உட்பட) | - 7 1/2 - 12 ஷிப்டுத் தொழிலாளர்களுக்கு (சில சமயங்களில் இரவு ஷிப்டுத் தொழிலாளர்கள் 7 மணி நேரம் பணி செய்வார்கள்). |
| 6. | தீப்பெட்டி | - 8 1/2 - 10 |
| 7. | மண்பாண்டத் தொழில் | - 8 ஷிப்டுத் தொழிலாளர்களுக்கு |
| 8. | அச்சகத்தொழில் | - 7 1/2 - 8 1/2 |
| 9. | கண்ணாடி | - 7 1/2 - 9 ஷிப்டுத் தொழிலாளர்களுக்கு<br>10 பொதுத் தொழிலாளருக்கு |
| 10. | இராசாயனம் மற்றும் மருந்துப் பொருட்கள் | - 7 - 10<br>8 தயாரிப்புப் பிரிவிற்கு |
| 11. | சர்க்கரை | - 8 - 9 பொறியியல் பிரிவிற்கு |
| 12. | பஞ்சிலிருந்து பருத்திக்கொட்டைகளை அகற்றுதல் மற்றும் சிப்பம் கட்டுதல் | - 9 - 10 |
| 13. | அரிசி ஆலைகள் | - 7 - 10 |
| 14. | சிமெண்டு | - 7 1/2 - 8 - ஷிப்டுத் தொழிலாளர்களுக்கு<br>8 - 9 - பொதுத் தொழி லாளர்களுக்கு |

| | | |
|---|---|---|
| 15. | காகிதம் | - 7 - 8 - தொடர்ந்து ஷிப்டு வேலை |
| 16. | மைக்கா தொழிற்சாலைகள் | - 9 |
| 17. | அவலரக்கு தயாரிப்பு | - 8 - 10 |
| 18. | பீடி, சுருட்டு, சிகரெட் | - 11-12 பீடி மற்றும் சுருட்டு<br>8 - 9 சிகரெட் |
| 19. | தரைவிரிப்பு நெய்தல் | - 9 - 10 |
| 20. | தோல் தொழிற்சாலைகள் மற்றும் தோல் பொருட்கள் தயாரிப்பு | - ஐ.மா. மெட்ராஸ் - 8 1/2<br>9 - பகல் ஷிப்டு<br>8-9 இரவு ஷிப்டு |
| 21. | கயிற்றுப் பாய்கள் | - 9 ஆண்களுக்கு<br>6 பெண்களுக்கு<br>5 குழந்தைகளுக்கு |

## மலைத்தோட்டங்களில் வேலை நேரங்களைக் குறிக்கும் அறிக்கை

தேயிலைத் தோட்டங்கள் —

அசாம் மற்றும் வங்காளம் தேயிலைத் தோட்டங்கள்

| | |
|---|---|
| ஹசாரியா அடிப்படை (சாதாரண வேலை நேரம்) | - 5 -6 |
| டிக்கா அடிப்படை (ஓவர்டைம்) | - 3 - 4 |
| தேயிலைப் பறிப்பவர்கள் | - 10 - 11 |
| காங்ரா பள்ளத்தாக்கு | - 8 - 9 |
| டேராடூன் | - 8 |
| அல்மோரா | - 6 |
| தென்னிந்திய தேயிலை, காபித் தோட்டங்கள் | - 8 - 9 |
| ரப்பர் தோட்டங்கள் | - 5 - 7 |

# 381

## *புது டில்லியில் தற்காலிகக் கட்டிடங்களைப் பயன்படுத்திக் கொள்ளுதல்

*495. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:*

*(அ)* குயின்ஸ்வேயிலும் மற்ற இடங்களிலும் திருப்பிக் கொடுக்கப்பட்ட அமெரிக்கக் கட்டிடங்கள் உள்ளிட்ட போர்த் துறைக்காகக் கட்டப்பட்ட தற்காலிகக் கட்டிடங்கள் முற்றிலும் அலுவலகப் பயன்பாட்டிற்காக மட்டுமே உபயோகப்படுத்தப் பட உள்ளனவா?

*(ஆ)* குறைந்தபட்சம் இந்தக் கட்டிடங்களில் சிலவற்றை யேனும் சிறுமாற்றங்கள் செய்துகுடியிருக்கும் வகையில் மாற்றி தனியாய் உள்ள மற்றும் இதர இந்திய அரசு அலுவலர்களின் குடியிருப்புத் தேவைகளைப் பூர்த்தி செய்து டில்லியில் நிலவும் குடியிருப்புப் பற்றாக்குறையைப் போக்க மாண்புமிகு உறுப்பினர் முன்வருவாரா?

*(இ)* இதற்காகும் செலவுகளை ஏற்க அரசு தயாராய் இல்லையென்றால், முக்கியமாக அரசு அலுவலர்களுக்கு முன் னுரிமை அளிக்கும் அடிப்படையில் அந்தக் கட்டிடங்களைக் குத் தகைக்கு விட மாண்புமிகு உறுப்பினர் முன்வருவாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ)* இல்லை.

*(ஆ)* ஆம் - அலுவலக உபயோகத்திற்காகக் கட்டப்பட்ட தற்காலிகக் கட்டிடங்கள் அலுவலகங்களுக்கு இனிமேல் தேவை

---

★ மத்திய சட்டமன்ற விவதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1946, பக்.1446.

யில்லை எனும் பொழுது, அவை கட்டப்பட்டிருக்கும் மனைகள் இனி வேறு காரணங்களுக்குத் தேவைப்படாது எனும்பொழுது, அவற்றை இந்திய அரசு ஊழியர்களின் குடியிருப்புகளாக மாற்று வதற்கு ஆட்சேபம் ஏதுமில்லை.

(இ) இது கருத்தில் கொள்ளப்படும். ஆனால் இக் கட்டி டங்கள் அரசு அலுவலர்களுக்குத் தேவைப்படலாம் என்பதால் அவை அரசின் கட்டுப்பாட்டிலேயே இருக்கும்.

# 382

## *மைக்கா வணிகம் குறித்து அரசின் கொள்கை

499. பாபு ராம் நாராயண் சிங்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட தகவல்களைத் தெரிவிப்பாரா?

(அ) மைக்காத் தொழில் மற்றும் வணிகத்தை ஒழுங்கு படுத்தும் அரசின் கொள்கையும் இலக்கும் யாது?

(ஆ) மைக்கா விசாரணைக்குழுவின் அறிக்கை அச்சிட்டு தோராயமாக எப்போது வெளியிடப்படும்?

(இ) மைக்கா விற்பனையின் மீதான தடையினை முழுவது மாக நீக்குவது அல்லது குறைந்தபட்சம் மாற்றம் செய்வது குறித்துப் பரிசீலக்க அரசு எடுத்துக்கொள்ளவிருக்கும் கால அவகாசம் எவ் வளவு?

(ஈ) மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இந்திய அரசுத் தொழில் துறையில் வேலை நிலைமைகளை மேம்படுத்த விரும்புகிறது. உலகச் சந்தையில் இந்திய மைக்காவிற்கு நியாய மான விலை கிடைக்கும் வகையில் சிறந்த வாணிகரீதியில் இத் தொழிலை ஒழுங்கமைக்க அது ஆர்வம் கொண்டுள்ளது.

* மத்திய சட்டமன்ற விவதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1946, பக்.1447.

(ஆ) அறிக்கை அச்சில் உள்ளது. அச்சிடும் பணி முடிந்த உடன் வெளியிடப்படும்.

(இ) மைக்கா விசாரணைக்குழுவின் பரிந்துரைகளின் பேரில் அரசு எப்போது நடவடிக்கை எடுக்கும் என்பதைத் திட்ட வட்டமாகக் கூறுவது சாத்தியமல்ல. வெகுவிரைவில் இதைச் செய்ய எல்லா முயற்சிகளும் மேற்கொள்ளப்படும்.

# 383

## *மைக்கா கட்டுப்பாட்டு உத்தரவால் வேலையில்லாத் திண்டாட்டம்

500. பாபு ராம நாராயண் சிங்: (அ) மைக்கா கட்டுப்பாட்டு சட்டத்தின் விளைவாக ஹசாரிபாக் மாவட்டத்தில் பல லட்சம் மக்கள் வேலையிழந்து தவிக்கின்றனர் என்பது அரசுக்குத் தெரியுமா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரி விப்பாரா?

(ஆ) ஹசாரிபாக் மாவட்டத்தைச் சேர்ந்த பல லட்சம் மக்க ளுக்கு மைக்காத் தொழில் ஒன்றுதான் அவர்கள் வாழ வழி செய்வது என்று அரசுக்குத் தெரியுமா? அப்படியெனில், அவர்கள் நலனைப் பாதுகாக்க மைக்காத் தொழிலையும் மைக்கா வாணி கத்தையும் ஒழுங்குபடுத்த அரசு உத்தேசித்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மைக்கா கட்டுப்பாடு சட்டத்தை அறிமுகப்படுத்தியதால் ஹசாரிபாக் மாவட்டத்தில் பல லட்சம் மக்கள் வேலையிழந்துள்ளார்கள் என்று இந்திய அரசுக்குத் தகவல் இல்லை.

(ஆ) ஏராளமான மக்கள் மைக்காத் தொழிலில் ஈடுபட் டுள்ளார்கள் என்பது அரசுக்குத் தெரியும்; அத்தொழிலின் முன் னேற்றத் திற்கான எந்தத் திட்டத்திலும் அவர்களது நலன்கள் புறக்கணிக்கப்பட மாட்டா என அரசு நம்புகிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி 25, 1946, பக்கம் 1447.

# 384

## தலைமை அலுவலகத்தில் கண்காணிப்புப் பொறியாளர்கள்

599. திரு. முகமது ரகம்மத்துல்லா: (அ) தலைமை அலுவலகத்தில் கண்காணிப்புப் பொறியாளராகப் பணியாற்றும் பொறுப்பு ராய் சாகிப் சி.பி. மாலிக்குக் கொடுக்கப்பட்டுள்ளது என்பது உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

ஆ. அவரைவிட மூத்த பல முஸ்லீம் கண்காணிப்புப் பொறியாளர்கள் இருந்தும் ஒருவருக்கும் அந்த வாய்ப்பு அளிக்கப் படவில்லை என்பது உண்மையல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இல்லை. நிர்வாக வசதிக்காகவும் தற்போதைய பணிகளுக்காகவும், டில்லி, இரண்டாம் வட்டத்தின் கண்காணிப்புப் பொறியாளர் பதவிக்கு ராய்சாகிப் சி.பி. மாலிக் தற்காலிகமாக நியமிக்கப்பட்டுள்ளார்.

ஆ. ஆம். ஆனால் அவர்கள் கண்காணிப்புப் பொறியாளர் பதவி பெறும் நிலையை இன்னும் அடையவில்லை.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: கண்காணிப்புப் பொறியாளர்கள் பதின்மூன்று பேரில் ஒருவர் மட்டுமே முஸ்லீம். அப்படியிருக்கும்போது ஏன் ஒரு முஸ்லீம் இந்தக் குறிப்பிட்ட பதவிக்கு அமர்த்தப்படவில்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினர் என் பதிலைக் கவனித்திருந்தால், அந்தப் பதவி நியமன

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்வரி 28, 1946, பக் 1668.

அடிப்படையில் அல்ல என்பது தெரியும். அவர் இப்போதைய பணி களை நிறைவேற்ற மட்டுமே கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளார்.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** கண்காணிப்புப் பொறி யாளர் என்று அழைக்கப்படாமலும் அப்பதவிக்குரிய சம்பளமும் இல்லாமலா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** நேற்று நான் குறிப்பிட்ட திறமை, மூப்பு ஆகிய இரண்டுடன் முஸ்லீம்கள் நியமனத்தைத் தவிர்க்கும் மூன்றாவது வழியாகும் இது. இப்பதவிக்குரிய பெயரை நீங்கள் கூறமாட்டீர்கள். அவரை அப்பதவிக்கான பணிகளை நிறை வேற்ற மட்டுமே கூறுவீர்கள், அப்படித்தானே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்மதிப்பிற் குரிய நண்பர் அவர் விரும்பும் எந்தமுடிவையும் எடுத்துக்கொள்ள லாம்.

**மௌலானா ஜாபர் அலிகான்:** முஸ்லீம்களின் நியமனத் தைப் பொறுத்தவரை அரசு மாற்றாந்தாய் மனப்பான்மையுடன் நடந்துகொள்வதாக ஓர் எண்ணம் வெளிநாட்டில் இருப்பதை மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** அ. கேள்விக்கான பதிலில் மாண்புமிகு உறுப்பினர் 'நிர்வாக வசதிக்காக'' என்று கூறினார். முஸ்லீம்களின் நியமனத்தைத் தவிர்ப்பதற்காக 'நிர்வாக வசதி' என்பதை மாண்புமிகு உறுப்பினர் வசதியாகப் பயன்படுத்திக் கொண்டாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது ஒவ்வொரு வரும் புரிந்துகொள்ளக்கூடிய மிகச் சாதாரணமான சொற்றொடர் என்று நினைக்கிறேன்.

**திரு. தலைவர் :** அமைதி, அமைதி, அடுத்த கேள்வி.

# 385

## *தொழிலாளர் நலத்துறைச் செயலகத்தில் அரசிதழ் பதிவுபெற்ற முஸ்லீம் அதிகாரிகள்

600. **திரு. முகம்மது ரகமத்துல்லா:** தொழிலாளர் நலத்துறைச் செயலகத்தில் அரசிதழ் பதிவு பெற்ற முஸ்லீம் அதிகாரிகள் விகிதத்தினை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தொழிலாளர் நலத்துறையில் அரசிதழ் பதிவு பெற்ற அலுவலர்கள் மொத்தம் 49 பேர் உள்ளனர். இவர்களில் முஸ்லீம்கள் 9 பேர்.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** 25 சதவிகிதம் என்னும் விதிமுறைப்படி முஸ்லீம்களுக்கான விகிதம் கடைப்பிடிக்கப்படவில்லை என்று இதற்குப் பொருளா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த விதிமுறை இங்கு பொருந்துமா என்பது எனக்குத் தெரியாது.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** 49 பேரில் 9 பேர் - இவ்வளவு குறைந்த சதவீதம் முஸ்லீம் சமுதாயத்தினர் பெற்றிருப்பது நியாயமானதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ விகிதத்தை அடிப்படையாகக் கொண்டது அல்ல என்று நினைக்கிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, பிப்வரி 28, 1946, பக் 1668.

# 386

## *மத்திய பொதுப்பணித்துறையில் முஸ்லீம் நிர்வாக அதிகாரிகள்

*601. திரு. முகம்மது ரகமத்துல்லா:* (அ) மத்திய பொதுப் பணித் துறையில் முஸ்லீம் நிர்வாக அதிகாரிகள் நியமனம் பற்றி 1946, ஜனவரி, 26 ஆம் தேதிய டான் இதழில் வெளியான கட்டுரை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா?

(ஆ) இந்தத் துறையைப் பற்றி அதில் குறிப்பிடப்பட்டுள் ளவை சரியா?

(இ) நிர்வாக அதிகாரியின் மூன்று உதவியாளர்கள், மற்றும் நிதிஆலோசகர் ஆகிய அனைவரும் இந்துக்கள் என்பது உண்மையா?

(ஈ) ஒரு முஸ்லீம் அல்லாத நிர்வாக அதிகாரியை நியமிக்க தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் எண்ணிக்கொண்டிருக்கிறார் என்பது உண்மைதானே? அப்படியெனில் மத்திய பொதுப்பணித் துறையின் இந்தக் கிளையில் முசல்மான்கள் ஏன் தவிர்க்கப்பட வேண்டும்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) இல்லை

(இ) ஆம்.

(ஈ) மத்திய பொதுப்பணித்துறையில் நிர்வாக அதிகாரிப் பதவியைப் பூர்த்தி செய்வது இன்னமும் பரிசீலனையில் உள்ளது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, பிப்வரி 28, 1946, பக் 1670.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: பன்முறை அவரது கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டு விட்டதால், எத்தனை காலம் பரிசீலனையில் இருக்கும்? சட்டமன்றக் கூட்டத்தொடர் முடிந்தவுடன் அவர் நியமனம் செய்வாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவர் உரிய நேரத்தில் நியமிக்கப்படுவார்.

டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது: உள்ளதை உள்ளபடியே சொல்ல வேண்டியது தானே? ஏன் இதை நீங்கள் இந்து தொழிலாளர் நலத்துறை அல்லது ஷெட்யூல்டு வகுப்பினர் நலத்துறை என்று அழைக்கக்கூடாது?

(எந்த பதிலும் அளிக்கப்படவில்லை.)

# 387

## இந்தியாவில் உள்ள தொழிற்சங்கங்கள்

54. வாதிலால் லல்லுபாய்: (அ) இந்தியாவில் உள்ள தொழிற்சங்கங்களின் எண்ணிக்கை எவ்வளவு என்பதையும், மாகாண வாரியாக 1939 முதல் இன்றுவரை ஒவ்வொரு ஆண்டும் மொத்த உறுப்பினர் பற்றியும் மாண்புமிகு உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) மாகாணவாரியாக இச்சங்கங்களின் மொத்த நிதி எவ்வளவு? அதில் சந்தா மூலம் பெறும் தொகை எவ்வளவு? மற்றும் 1939-ல் இருந்து ஒவ்வொர் ஆண்டும் நன்கொடை மூலம் பெற்றது எவ்வளவு?

(இ) மாகாணவாரியாக மொத்த உறுப்பினர்களில் எவ்வளவு பேர் சந்தா செலுத்தவில்லை? அப்படி எத்தனை பேர் 1939-லிருந்து ஒவ்வொரு ஆண்டும் உறுப்பினராய்த் தொடர்ந்து உள்ளார்கள்?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, பிப்ரவரி 28, 1946, பக்கம் 1670.

(ஈ) 1939-லிருந்து ஒவ்வொரு ஆண்டும் தொழிற்சங்கப் பதவிகளில் வெளியார்கள் விகிதாசாரம் எவ்வளவு? அண்மையில் இவ்விகிதாசாரம் இறங்குமுகமாக உள்ளது என்பது உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (அ) பதிவு செய்யப் பட்ட தொழிற்சங்கங்களின் எண்ணிக்கை, அவற்றின் உறுப்பினர் கள் எண்ணிக்கை ஆகியவை பற்றிய 1939 முதல் 1944 வரையி லான ஓர் அறிக்கை அவையில் வைக்கப்பட்டுள்ளது. 1944-45ற்கான புள்ளிவிவரம் இன்னும் கிடைக்கவில்லை.

ஆ. 1939-44 ஆம் ஆண்டுகளில் தொழிற்சங்கங்களின் வரவு செலவு, ஆரம்பக் கையிருப்பு, கடைசியாக இருந்த கையிருப்பு ஆகியவற்றைத் தெரிவிக்கும் ஓர் அறிக்கை அவையில் வைக்கப் பட்டுள்ளது. கேள்வியின் இரண்டாவது பகுதிக்கான தகவல் அரசிடம் இல்லை.

(இ) மற்றும் (ஈ) தகவல் இல்லை.

# 388

## *இந்தியாவில் உள்ள தொழில்துறைத் தொழிலாளர்கள்

55. **திரு. வாதிலால் லல்லுபாய்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) இந்தியாவில் உள்ள தொழில்துறைத் தொழிலாளர் களின் எண்ணிக்கை என்ன? 1939 முதல் இன்றுவரை ஒவ்வொரு ஆண்டும் நிலக்கரிச் சுரங்கங்கள், மலைத்தோட்டங்கள் உள்ளிட்ட ஒவ்வொரு தொழிலிலும் அவர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) 1939 முதல் இன்றுவரை இந்தியாவின் பல்வேறு தொழில்களில் உள்ள தொழிலாளர்களின் அகவிலைப்படி, போனஸ் தவிர்த்த மாதாந்திர வருவாய் எவ்வளவு?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, பிப்ரவரி 28, 1946, பக்கம் 1670.

(இ) 1. பல்வேறு தொழில்கள் மற்றும் 2. பல்வேறு தொழில் மையங்களைப் பொறுத்தவரை 1939 முதல் இன்று வரை ஆண்டு வாரியாக இந்தியாவில் உள்ள தொழில்துறைத் தொழிலாளர்களுக்கு அளிக்கப்பட்ட அகவிலைப்படி மற்றும் போனஸ் தொகை எவ்வளவு?

(ஈ) யுத்த காலத்தில் தொழில்துறைத் தொழிலாளர்களின் ஊதியம், உயர்ந்ததன் விளைவாக தொழிற்சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கையும் அவற்றின் நிதி வளங்களும் ஏதேனும் அதிகரித்தனவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:**(அ) இது சம்பந்தமாக ஓர் அறிக்கை அவையில் வைக்கப்பட்டுள்ளது. 1945 ஆம் ஆண்டுக்கான புள்ளிவிவரம் இன்னும் கிடைக்கவில்லை.

(ஆ) 1939, 1940, 1941 மற்றும் 1943 ஆம் ஆண்டுகளில் தொழில்துறைத் தொழிலாளர்களின் மாதாந்திர சராசரி வருவாயைத் தெரிவிக்கும் ஓர் அறிக்கை அவையில் வைக்கப்பட்டுள்ளது. இவை பணமாகக் கொடுக்கப்பட்ட அகவிலைப்படியை உள்ளிட்டது. இவை இல்லாத புள்ளி விவரங்கள் கிடைக்கவில்லை. இந்தத் தொகை, மொத்தப் பட்டுவாடா புள்ளிவிவரத்திலிருந்து தொகுக்கப்பட்டதால், தோராயமானதுதான். ஓர் ஆண்டில் வேலை செய்த நாட்கள், வேலை செய்த நேரங்கள் ஆகியவற்றைக் கொண்டதல்ல.

எவை அகவிலைப்படியை உள்ளிட்டவை எவை இதில் சேராதவை என்ற தகவல் கிடைக்காததால் 1942ற்கான புள்ளி விவரங்கள் அளிக்கப்படவில்லை.

(இ) முழுத்தகவல் இல்லை; இத்தகவல்களைச் சேகரித்தும் பட்டியிலிடுவதற்குச் செலவிடப்படும் நேரத்தால் உரிய பலன் கிட்டும் என்று அரசு கருதவில்லை.

(ஈ) இக்கேள்வியின் (அ) பகுதி சம்பந்தமாக சராசரி வருவாய் பற்றிய புள்ளி விவரங்கள் அளிக்கப்பட்டுள்ளன. தொழிற்சங்கங்களின் உறுப்பினர்கள் மற்றும் அவற்றின் நிதிவசதிகளைத் தெரிவிக்கும் அறிக்கைகள் அவையில் வைக்கப்பட்டுள்ளன. ஊதிய உயர்வாலும் வேறு காரணங்களாலும் தொழிற்சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கையும் நிதிவசதியும் அதிகரித்திருக்கலாம் என்று திட்டவட்டமாக கூற முடியாத நிலைமையில் அரசு உள்ளது.

# 389

## * மத்திய பொதுப்பணித்துறையில் முஸ்லீம் நிர்வாக அதிகாரி

715. திரு. அகமது ஈ.எச். ஜாபர்: தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) மத்திய பொதுப்பணித்துறையில் உள்ள உதவிநிர்வாக அதிகாரி பணியிடங்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) இந்தப் பணியிடங்களில், எத்தனை முஸ்லீம்களால் நிரப்பப்பட்டுள்ளன?

(இ) (ஆ) விற்கான பதில் இல்லை என்பதாக இருந்தால் காலியாக உள்ள அதிகாரி பதவிக்கான காலியிடத்தை ஒரு தகுதி யான முஸ்லீமைக் கொண்டு நிரப்ப அவர் என்ன நடவடிக்கை எடுத்துள்ளார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மூன்று

(ஆ) எதுவும் இல்லை.

(இ) மத்திய பொதுப்பணித்துறை ஒரே அமைப்பாதலால் இந்தக் கேள்வியில் தொக்கியுள்ள அனுமானம் (அ) மற்றும் (ஆ) விலிருந்து தோன்ற வேண்டும் என்று அவசியம் இல்லை; எனினும் இந்த விஷயம் பரிசிலனையில் உள்ளது.

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: (ஆ) விற்கான பதில் எதுவும்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1929.

இல்லை என்றிருப்பதால், ஒரு முஸ்லீமை நிர்வாக அதிகாரி பதவிக்கு ஏன் நியமிக்கக்கூடாது என்று மாண்புமிகு உறுப்பினரைக் கேட்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உங்கள் கேள்வி எனக்குச் சரியாகப் புரியவில்லை.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** முஸ்லீம் உதவி நிர்வாக அதிகாரி ஒருவரும் இல்லாததால், நிர்வாக அதிகாரி பதவி ஏன் ஒரு முகம்மதியரால் நிரப்பப்படக்கூடாது என்று மாண்புமிகு உறுப்பினரைக் கேட்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது பரிசீலனைக்குட்பட வேண்டிய விஷயம். அந்தப் பதவி ஒரு குறிப்பிட்ட சாதிக்கு ஒதுக்கப்படும் என்று நான் உறுதி கூற முடியாது.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** அந்தப் பதவிக்கு விண்ணப்பங்கள் பெறப்பட்டனவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த பதவிக்கு விண்ணப்பங்கள் கோரப்பட மாட்டாது.

**மௌலானா ஜாபர் அலிகான்:** இது சம்பந்தமாக விளம்பரம் செய்யப்பட்டதா?

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தேவையில்லை.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** ஏன் ஒரு முஸ்லீம் நியமிக்கப் படக் கூடாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது சம்பந்தமாக எந்த உறுதியும் அளிக்க இயலாது என்று கூறினேன். அதுவன்றி, ஒவ்வொரு சாதிக்கும் ஒரு குறிப்பிட்ட பதவியில் தனி உரிமை உள்ளது என்பதை இந்திய அரசு ஏற்றுக் கொள்ளவில்லை.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** முக்கியமாக, இந்திய அரசில், மாண்புமிகு உறுப்பினரின் துறைதான் மிக மோசமானது என்ற கருத்து நிலவுவதால்...

**திரு. தலைவர்:** அமைதி, அமைதி, மதிப்பிற்குரிய உறுப் பினர் கேள்வியைக் கேட்கவும்.

**திரு. அகமது ஈ.எச்.ஜாபர்:** தொழிலாளர் நலத்துறை யில் போதுமான அளவு முஸ்லீம் பிரதிநிதித்துவம் இல்லாததால் ஒரு முஸ்லீம் அப்பதவிக்கு அமர்த்தும் விஷயத்தைப் பரிசீலிக்க வேண்டும் என்று மாண்புமிகு உறுப்பினரைக் கேட்டுக் கொள் கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினரின் அனுமானத்தை நான் மறுக்கிறேன்.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** நான்....

**திரு. தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் தவறாகப் புரிந்து கொண்டு இந்தக் கேள்வியைக் கேட்கிறார் என்று நினைக்கிறேன். அவர் இருக்கையில் அமர்வாரா? அரசின் மாண்புமிகு உறுப் பினர், ஒரு குறிப்பிட்ட பணியிடத்துக்கும் இலாகா பணியிடங் களுக்கான ஒதுக்கீட்டுக்கும் இடையே வேறுபாடு உள்ளது என்கிறார். நான் கூறுவது சரியா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், ஐயா,

**திரு. தலைவர்:** ஒரு குறிப்பிட்ட பணியிடம் ஒரு குறிப்பிட்ட சாதியினரால் நிரப்பப்படும் என்று உறுதிகூற முடியாது என்று அவர் கூறுகிறார். இது ஒதுக்கீட்டிலிருந்து மாறுபட்டது.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** என்னுடைய கோரிக்கை என்ன வென்றால், அவருடைய துறையில் முஸ்லீம்களுக்கு 25 சதவீத ஒதுக்கீடு இல்லையென்பதால், குறைந்தபட்ச ஒதுக்கீடு அள விற்கு முஸ்லீம்கள் நியமிக்கப்படுவதை அவர் பரிசீலிப்பாரா?

**திரு. தலைவர்:** ஆம். அது சரியானதுதான்:

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது ஒன்றுதான் வழி என்ற கோட்பாட்டை நான் ஏற்றுக்கொள்ள இயலாது.

**திரு. அகமது.ஈ.எச். ஜாபர்:** அவருடைய துறையில் பணியில் முஸ்லீம்களுக்கு 25 சதவீதம் ஒதுக்கீடு உள்ளது என்பதை மாண்புமிகு உறுப்பினர் மறுக்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அதை மறுக்கிறேன்.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** எந்த முடிவுடன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** போதிய எண்ணிக்கையில் முஸ்லீம்கள் இல்லையென்றால் நான் அதற்கொன்றும் முடிவு சொல்ல முடியாது. அது என்னுடைய தவறல்ல.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** 'போதிய முஸ்லீம் விண்ணப்பதாரர்கள்' இல்லை என்பது மாண்புமிகு உறுப்பினரின் ஒரு நொண்டிச் சமாதானம்தான் என்றும், உண்மையில் அவர்கள் போதிய எண்ணிக்கையில் உள்ளார்கள் என்றும் மாண்புமிகு உறுப்பினருக்குக் கூறிக்கொள்கிறேன்.

**திரு. தலைவர்:** அமைதி. அமைதி. சர்ச்சை வேண்டாம். மதிப்பிற்குரிய உறுப்பினர் அவரது கேள்வியைக் கேட்கலாம்.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** போதுமான முஸ்லீம்கள் முன்வருகிறார்கள். ஆனால் அவர்கள் கோரிக்கைகள் வேண்டுமென்றே நிராகரிக்கப்படுகின்றன என்று மாண்புமிகு உறுப்பினருக்குக் கூறிக்கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் கூறியதற்கு மேல் எதுவும் கூறுவதற்கில்லை.

# 390

## *தொழிலாளர் நலத்துறையில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்

718. திரு. அகமது ஈ.எச். ஜாபர்: (அ) தொழிலாளர் நலத் துறை (தலைமைச் செயலகம்) பணியாளர் கிளையில் பணி புரியும் இணைச் செயலாளர்கள், துணைச் செயலாளர்கள், உதவிச் செயலாளர்கள், கண்காணிப்பாளர்கள், உதவியாளர்கள், எழுத் தர்கள் முதலியோரின் சரியான எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) ஒவ்வொரு பிரிவிலும் எத்தனை முஸ்லீம்கள், முஸ்லீம் அல்லாதோர் இருக்கின்றனர்?

(இ) முஸ்லீம்கள் பற்றிய (ஆ) கேள்விக்கான பதில் இல்லை என்பதாக இருந்தால் அதற்கான காரணங்கள் என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மற்றும் (ஆ) கேள்வி சம்பந்தப்பட்ட தகவல்கள் அடங்கிய ஒரு அறிக்கை அவையில் வைக்கப்பட்டுள்ளது.

(இ) எழவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1933-35.

அறிக்கை

| | மொத்தம் | முஸ்லீம் கள் | முஸ்லீமல்லாதோர் |
|---|---|---|---|
| இணைச் செயலாளர்கள் | 3 | 1 | 2 |
| துணைச் செயலாளர்கள் | 4 | 1 | 3 |
| உதவிச் செயலாளர்கள், சார்புச் செயலாளர்கள் | 13 | 2 | 11 (ஐரோப்பியர் 1, ஆங்கிலோ இந்தியர் 1, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் 1 உட்பட) |
| கண்காணிப்பாளர்கள் | 21 | 6 | 15 (சீக்கியர் 1, இந்தியக் கிறித்தவர் 1 உட்பட) |
| பணியாளர் கிளையில் உள்ள உதவியாளர்கள் | 9 | 2 | 7 |
| பணியாளர்கள் கிளையில் உள்ள எழுத்தர்கள் | 9 | - | 9 (தாழ்த்தப்பட்ட வகுப்பினர் 1 உட்பட) |

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** ஐயா, நான் ஓர் அறிக்கையை அவையில் வைக்கும்படி கேட்கவில்லை. ஆனால் நான் துணைக் கேள்விகள் கேட்க விரும்புவதால் அவையில் அந்த எண்ணிக்கை யைக் குறிப்பிட வேண்டுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் அந்தப் புள்ளிவிவரங்களை அளிக்கலாமா?

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** கொடுப்பதற்கு புள்ளி விவரம் ஒன்றுமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இருக்கின்றன. என் படித்த நண்பர் மிரட்டும் போக்கைக் கைக்கொள்ள வேண்டாம்.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** மாண்புமிகு உறுப்பினர் காட்டும் அதே மிரட்டல் போக்கைத்தான் நான் பிரதிபலிக்கிறேன்.

திரு. தலைவர்: பட்டியல் மிகப் பெரியதாய் இல்லையென்றால் மாண்புமிகு உறுப்பினர் படிக்கலாம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:

| | மொத்தம் | முஸ்லீம்கள் |
|---|---|---|
| இணைச் செயலாளர்கள் | 3 | 1 |
| துணைச் செயலாளர்கள் | 4 | 1 |
| உதவி மற்றும் சார்புச் செயலாளர்கள் | 13 | 2 |
| கண்காணிப்பாளர்கள் | 21 | 6 |
| பணியாளர் குழாமில் உள்ள உதவியாளர்கள் | 9 | 2 |
| ,, ,, எழுத்தர்கள் | 9 | - |

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: இந்த விவரங்கள், மறுசீரமைவு மற்றும் வேலை வாய்ப்பு இயக்கத்தில் முஸ்லீம்களின் பிரதிநிதித்துவத்தை உள்ளடக்கியவையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்புக்குத் தேவை.

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: பிரதான செயலகத்தின் தொழிலாளர் துறை பற்றிய விவரங்களையே கேட்பேன். மறுசீரமைவு மற்றும் வேலைவாய்ப்பு இயக்ககத்தில் முஸ்லீம்களின் பிரதிநிதித்துவம் பற்றிய விவரங்களையும் உள்ளடக்கியவையா இந்த விவரங்கள் என்பதை மாண்புமிகு உறுப்பினர் 'ஆம்' அல்லது 'இல்லை' என்று கூற இயலுமா, இயலாதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்பு தேவை.

*ஹாஜி அப்துஸ் சத்தார் ஹாஜி இஷாக் சேத்:* தொழிலாளர் நலத்துறையின் பணியாளர் கிளை என்பது எது என்று மாண்புமிகு உறுப்பினர் கூறுவாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அது தலைமைச் செயலகத்தில் உள்ளது. நான் கூறியது போல் சரியான தகவல் அளிக்க வசதியாக முன்னறிவிப்புத் தேவை.

*திரு. அகமது ஈ.எச். ஜாபர்:* மறுசீரமைவு மற்றும் வேலை வாய்ப்பு இயக்ககம் தலைமைச் செயலகத்திலிருந்து வேறுபட்டது என்பது மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம், அது எனக்குத் தெரியும்.

*திரு. மனு சுபேதார்:* தொழிலாளர் நலத்துறைக்கு இவ்வளவு பெரும் எண்ணிக்கையில் இணைச் செயலாளர்கள், துணைச் செயலாளர்கள், உதவிச் செயலாளர்கள் மற்றும் சார்புச் செயலாளர்கள் என்று ஒரு பெரும்படை தேவையா? முஸ்லீம்கள் விரும்புவது போல் அவர்கள் விகிதத்தைச் சரிசெய்ய வேறுசில சாதியினரின் பிரதிநிதித்துவத்தைக் குறைத்து எனது முஸ்லீம் நண்பர்களை மாண்புமிகு உறுப்பினர் திருப்திப்படுத்துவாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மதிப்பிற்குரிய உறுப்பினரின் இக்கேள்வி சம்பந்தமாக நான் எந்தக் கருத்தையும் கூறவிரும்பவில்லை.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* தொழிலாளர் நலத்துறை முழுவதையும் முஸ்லீம்மயமாக்கி விடுங்கள்.

*திரு. ஸ்ரீ பிரகாசா:* பெரும்பான்மையான கேள்விகளைத் தவிர்க்கவும். உணர்ச்சிக்களைக் கட்டுப்படுத்தவும் கூட்டத் தொடரின் துவக்கத்திற்கு முன் பல்வேறு துறைகளில் உள்ள பல்வேறு வகுப் பினரைப் பற்றிய ஒரு முழுப் பட்டியலை அரசு அவையில் வைத்துவிடுவது நலம் என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** முஸ்லீம்களுக்கு 25 சதவிகித இட ஒதுக்கீடு செய்து, 1934 - ஆம் ஆண்டில் இந்திய அரசாங்கத்தின் உள்துறை அரசுத் தீர்மானம் ஒன்றை இயற்றியிருப்பதாலும், இந்தத் தீர்மானத்தின்படி முஸ்லீம்களுக்கு தொழிலாளர் நலத் துறையில் உரிய பிரதிநிதித்துவம் அளிக்காமல் குறைவாக அளித்திருப்பதாலும் மாண்புமிகு உறுப்பினர் இந்தத்தவற்றை சரிசெய்து முஸ்லீம்களுக்கு அதிக வேலைவாய்ப்பு அளிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னுடைய பதிலின்போது நான் குறிப்பிட்ட பணியிடங்கள் வகுப்புப் பிரதிநிதித்துவத்தை அடிப்படையாகக் கொண்டவை அல்ல. அவை பதவி உயர்வின் அடிப்படையின் பாற்பட்டது.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** அப்படியெனில் அந்தத் தீர்மானம் இவரது துறைக்குப் பொருந்தாது என்று எடுத்துக்கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் அரசுத் தீர்மானத்தை இன்னும் மிகக் கவனமாக படித்திருக்க வேண்டும்.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமதுவிற்கு மாண்புமிகு உள்துறை உறுப்பினர் பதிலளிக்கும்பொழுது இந்த அரசுத்தீர்மானம் தொழிலாளர் நலத்துறைக்கும் பொருந்தும் என்று கூறியதால் அவர் அந்தத் தீர்மானத்தை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்கு அனுப்பி வைப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்தத் தீர்மானத்தை நான் நன்கு அறிவேன்.

**திரு. தலைவர்:** அடுத்த கேள்வி.

**திரு.அகமது ஈ.எச்.ஜாபர்:** ஒரே ஒரு கேள்வி, ஐயா. துணைச் செயலாளர் பதவி முதல்நிலைப் பதவியா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** முதல்நிலைப் பதவி என்று எதுவும் அங்கு இல்லை.

# 391

## *டில்லி பண்டகசாலைத் துணைப்பிரிவு கையாடல் வழக்கில் ஏற்பட்ட பொதுமக்கள் பண இழப்பு

*719. திரு. அகமது ஈ.எச். ஜாபர்: (அ) டில்லி பண்டகசாலைத் துணைப்பிரிவு கையாடல் வழக்கில் ஏற்பட்ட பொதுமக்கள் பண இழப்பு சுமார் எவ்வளவு என்று மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?*

*(ஆ) இதில் சம்பந்தப்பட்ட குற்றவாளிகள் யார், அவர்களை சட்டத்தின் பிடியில் கொண்டுவர இதுவரை என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) 'டில்லி பண்டகசாலை துணைப்பிரிவு கையாடல் வழக்கு' என்று எந்த ஒரு வழக்கும் இல்லை. கட்டுமானப் பிரிவு எண்: 1-ன் கீழ் உள்ள பண்டக சாலைத் துணைப் பிரிவில் சிமெண்டிற்கான வண்டி வாடகையில் அதிகமாகப் பணம் பட்டுவாடா செய்ததாகக் கூறப்படும் வழக்கையே மதிப்பிற்குரிய உறுப்பினர் இங்கு குறிப்பிடுவதானால், அது பரிசீலனையில் உள்ளது என்றுதெரிவிக்க விரும்புகிறேன்.*

*(ஆ) எழவில்லை.*

*திரு.அகமது ஈ.எச்.ஜாபர்: இரண்டு லட்சம் கையாடல் செய்த குறிப்பிட்ட அந்தத் துணைப் பிரிவு அதிகாரி இன்னும் பணியில் இருக்கிறாரா?*

---

★ *மத்திய சட்டமன்ற விவாதங்கள்,* தொகுதி III, *மார்ச் 6, 1946, பக்கம் 1935-36.*

திரு.தலைவர்: அமைதி. அமைதி. கையாடல் ஒன்றுமில்லை என்று ஏற்கனவே மாண்புமிகு உறுப்பினர் கூறிவிட்டார்.

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: நான் மாண்புமிகு உறுப் பினரின் பதிலை முழுமையாக ஏற்றுக்கொள்கிறேன். அவர் குறிப் பிடும் அதிகமாகப் பட்டுவாடா செய்யப்பட்ட ரூபாய் இரண்டு லட்சம்தானே இதுவும்.

திரு. தலைவர்: மாண்புமிகு உறுப்பினர் அது கையாடல் அல்ல, அதிகப்படியான பட்டுவாடாதான் என்று பதிலளித்து விட்டார். மதிப்பிற்குரிய உறுப்பினர் அடுத்த கேள்வியில் மீண்டும் கையாடல் பிரச்சினையை எழுப்ப வேண்டாம். அதிகப்படி பட்டு வாடாவைப் பற்றிக் கேள்வி கேட்கவும்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விஷயம் பரிசீலனையில் உள்ளது. அந்த விசாரணையின் முடிவு தெரிந்தா லொழிய அரசு அந்த அதிகாரி மீது எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாது.

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: குறிப்பிட்ட ரூ. இரண்டு லட்சம் அதிகப்படி பட்டுவாடா செய்த அந்தத் துணைப் பிரிவு அலுவலர் இன்னும் பணியில் இருக்கிறாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆமாம்.

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஏனென்றால் அவருக்கு எதிரான வழக்கு இன்னமும் நிரூபிக்கப்படவில்லை.

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: விசாரணையில் இருக்கும் இதுமாதிரி விஷயங்களில் குறிப்பிட்ட அலுவலரைப் பதவி நீக்கம் செய்வது வழக்கமில்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விசாரணையின் அறிக்கை கிடைத்தாலொழிய அது முடியாது.

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: அவர் ஷெட்யூல்டு வகுப் பினர் என்பதாலா?

*ஹாஜி அப்துஸ் சத்தார் ஹாஜி சேத் :* கேள்வி (அ) சம்பந்தப் பட்ட தொகையைப் பொறுத்தவரை அது எவ்வளவு என்று என் நண்பர் தெரிவிக்கலாமல்லவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* இதற்கு எனக்கு முன்னறிவிப்பு தேவை. திரு. ஜாபரின் கேள்வியைப் பொறுத்த வரை மதிப்புக்குரிய உறுப்பினருக்குக் கூற விரும்புவதெல்லாம் அந்த நபர் ஷெட்யூல்டு வகுப்பைச் சார்ந்தவரல்ல என்பதுதான்.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா :* அவர் ஷெட்யூல்டு வகுப்பின ராய் இருந்தாலும் அவர் மீது வழக்கு உள்ள பொழுது அவரைப் பதவி நீக்கம் செய்வது தவறா?

*திரு. தலைவர் :* அமைதி அமைதி, விவாதம் வேண்டாம்.

*திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார் :* இது எவ்வளவு காலமாக விசாரணையில் உள்ளது? இது இலாகா விசாரணையா அல்லது காவல் துறையால் நடத்தப்படும் விசாரணையா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* எனக்கு ஞாபகம் இல்லை; நான் உறுதியாகக் கூற முடியாது. இவ்விஷயம் குற்றப் பிரிவுத் துறையால் விசாரிக்கப்பட்டு வரக்கூடும்.

# 392

## *கண்காணிப்புப் பொறியாளர்கள் நியமனம் சம்பந்தமாக முஸ்லீம்களின் மனக்குறைகள்

720. *திரு. முகம்மது ரகமத்துல்லா :* (அ) 1945 அக்டோபர் 27, நவம்பர் 12 மற்றும் டிசம்பர் 19ஆம் தேதிய 'டான்' இதழில் வெளியான கட்டுரைகள் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்துக்கு வந்தனவா? முஸ்லீம்களின் மனக் குறைகளைக் களைய என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது? இல்லையெனில், ஏன்?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1936.

(ஆ) மொத்தம் உள்ள பதினான்கு கண்காணிப்புப் பொறியாளர்களில் முஸ்லீம் ஒருவர்தான் என்பது உண்மையா?

(இ) தலைமையகத்தில் தகுதி வாய்ந்த, கண்காணிப்புப் பொறியாளர் பதவியை ஏற்கும் தகுதி படைத்த திறமை வாய்ந்த மூன்று செயற்பொறியாளர்கள் இருப்பது அரசுக்குத் தெரியுமா?

(ஈ) குறைந்த திறமையும் தகுதியும் பெற்ற ஏனைய வகுப்பினர்கள் கண்காணிப்புப் பொறியாளர்களாக நியமிக்கப்பட்டிருப்பது அரசுக்குத் தெரியுமா? தெரியும் என்றால் முஸ்லீம்களின் கோரிக்கைகள் ஏன் புறக்கணிக்கப்பட்டன?

(உ) ஒரு ஐ.எஸ்.ஈ. முஸ்லீம் செயற்பொறியாளர் புறக்கணிக்கப்பட்டு, தலைமையகத்தில் ஒரு கண்காணிப்புப் பொறியாளர் ஆகும் வாய்ப்பு, வெகு விரைவில் ஓய்வு பெறப்போகிற கீழிருந்து பதவி உயர்வுகளின் மூலம் மேலே வந்த ஒரு அதிகாரிக்குக் கொடுக்கப்பட்டது அரசுக்குத் தெரியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) நான் அந்தக் கட்டுரைகளைப் பார்த்தேன். மத்திய பொதுப் பணித் துறைப் பணியிடங்கள் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ விதிகளின்படி நிரப்பப்பட்டன. ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கு அதிகாரிகளுக்கான பணியிடங்களைத் தனிப்பட்ட முறையில் ஒதுக்கீடு செய்வது என்பது இயலாத காரியம்.

(ஆ) ஆம்.

(இ) மதிப்பிற்குரிய உறுப்பினர் எந்தச் செயற்பொறியாளர்களைக் குறிப்பிடுகிறார் என்பது தெளிவாகத் தெரியவில்லை. டில்லியில் பதவியிலுள்ள கண்காணிப்புப் பொறியாளராகப் பதவி உயர்வு பெறக்கூடிய பொதுப்பணித் துறையின் செயற்பொறியாளர்கள் யாரும் இல்லை.

(ஈ) மற்றும் (உ) கண்காணிப்புப் பொறியாளர்களுக்கான பணியிடங்கள் தேர்வு நிலைப் பணியிடங்களாகும்; அவைகள் தகுதியின் அடிப்படையில்தான் அளிக்கப்படுகின்றன. பணியிடங்களை நிரப்பும் பொழுது எல்லாத் தகுதிகளும் பெற்ற செயற்பொறியாளர்களின் உரிமைகளும் கருத்தில் கொள்ளப்பட்டு மிகத் தகுதி வாய்ந்த அதிகாரி மட்டுமே நியமனம் செய்யப்படுகிறார். மதிப்பிற்குரிய உறுப்பினரால் குறிப்பிடப்பட்ட ஐ.எஸ்.ஈ. முஸ்லீம் அதிகாரி விஷயமும் முறையாகப் பரிசீலிக்கப்பட்டது.

# 393

## *பீகார் கோசி நதியைக் கட்டுப்படுத்த நிதி உதவி

734. திரு. சத்திய நாராயண சின்ஹா : (அ) சென்ற பீகார் பயணத்தின் பொழுது கவர்னர் ஜெனரல், கோசி நதியினால் பாதிக்கப்பட்ட பகுதிகளை விமானத்தில் சென்று பார்வையிட்டார் என்பதும், அங்குள்ள துயர நிலையினைத் தெரிந்து, அந்நதியினைக் கட்டுப்படுத்தி பாதிக்கப்பட்ட லட்சக் கணக்கான மக்களின் உயிரையும் உடைமைகளையும் பாதுகாக்கப் போதிய நிதியினை அளிக்க மத்திய அரசிடம் எடுத்துரைக்க முடிவு செய்தார் என்பதும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா? தெரியுமென்றால், அந்த விஷயத்தில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

(ஆ) ஏதாவது திட்டம் தயாராக உள்ளதா? இல்லையெனில், லட்சக்கணக்கான மக்களின் வாழ்வா சாவா என்ற பிரச்சினை சம்பந்தமாக எத்தகைய துரித நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) சமீபத்திய பயணத்தின் பொழுது கவர்னர் ஜெனரல் கோசி வெள்ளத்தினால் பாதிக்கப்பட்ட பகுதிகளை விமானத்தில் சென்று பார்த்துவிட்டு, கூடிய விரைவில் நதியினைக் கட்டுப்படுத்துவதின் முக்கியத்துவத்தை வலியுறுத்தித் தொழிலாளர் நலத் துறைக்கு ஒரு செய்தி அனுப்பியுள்ளார்.

(ஆ) மத்திய நீர்வள, பாசன, போக்குவரத்து ஆணையம்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1949.

விசாரணை மேற்கொண்டிருக்கிறது. நேபாள அரசின் அனுமதியுடன் அவர்கள் ஆகாய மற்றும் தரை வழி ஆய்வுகளையும் நிலம் மற்றும் நீர் சம்பந்தமான ஆராய்ச்சிகளையும் துவக்கியிருக்கிறார்கள். நேபாள இமாலயத்தில் ஒரு நீர்த் தேக்க அணை கட்டுவதின் மூலம் கோசி நதியைக் கட்டுப்படுத்துவதற்கு ஆய்வுகள் நடைபெற்று வருகின்றன. அந்த அணைக்கட்டு மிகுதியான வெள்ள நீரையும் பெருமள விலான அடி வண்டலையும் சேகரித்து வைப்பது மட்டுமன்றி, கோசி வெள்ளத்தினால் ஏற்படக்கூடிய பாதிப்பையும் தடுத்து நிறுத்தும்; மேலும் நேபாளம் மற்றும் பீகாரைச் சேர்ந்த சுமார் 30 லட்சம் ஏக்கர் பரப்பளவிற்கு பாசன வசதியை அளிக்கும். அதுமட்டுமன்றி, மிக மலிவான நீர் மின்சார உற்பத்தி செய்யும் வாய்ப்பையும் அளிக்கும். மிக உயர்ந்த முன்னுரிமை கொடுத்து இங்கு ஆய்வுகள் மேற் கொள்ளப்பட்டு வருகின்றன.

# 394

## *புதுடில்லி அரசு அச்சகத்தில் அச்சுத்திருத்துபவருக்கு உடனிருந்து வாசித்து உதவும் இளநிலை பணியாளர்களுக்கு இழப்புகள்

740. மௌலானா ஜாபர் அலி கான் : (அ) புது டில்லி அரசு அச்சகத்தில் அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவும் இளநிலை பதவியிலிருந்து இளநிலை அச்சுத் திருத்துவோர் பதவிக்கு உயர்த்தப்பட்ட பலருக்கு மாதம் ஒன்றுக்கு ரூ. 10 அல்லது ரூ. 5 இழப்பு ஏற்படுகிறது என்பது உண்மையா என்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா? மேலும் அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவருக்கு ஆண்டு ஊதிய உயர்வு ரூ. 5 என்பதும் இளநிலை அச்சுத் திருத்து வோருக்கு ரூ. 3 என்பதும் உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1949.

(ஆ) அவர்களுடைய பண இழப்பை ஈடு செய்ய அரசு என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறது? மற்றும் அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவருக்கும் இளம் நிலை அச்சுத் திருத்துவோருக்கும் சம்பள விகிதத்தில் உள்ள வித்தியாசத்தை அரசு எப்படிச் சரிசெய்யப் போகிறது?

(இ) அச்சுத் திருத்துபவருக்கு உடனிருந்து வாசித்து உதவு பவருக்கு 1945 ஜூலை மாதம் அனுமதிக்கப்பட்ட இணைந்த விகி தத்துடன் கூடிய சம்பள பாக்கி பல முறை கோரிக்கை விடுத்தும் இன்னும் அளிக்கப்படவில்லை என்பது உண்மையா?

(ஈ) இதற்கான காரணங்கள் என்ன? இந்தக் கால தாமதத் திற்காக சம்பளப் பட்டுவாடா சட்டத்தின் படி ஏதாவது நஷ்டஈடு அளிக்க அரசு உத்தேசித்துள்ளதா? இல்லையெனில் ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) ஆம் - இணைந்த விகிதத்துடன் கூடிய சம்பளத்தைத் தேர்ந்தெடுத்துப் பின் இளநிலை அச்சுத் திருத்துவோராக உயர்த்தப்பட்ட அச்சுத் திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுபவர் விஷயத்தில் இது நடைபெற்றது.

(ஆ) இந்த விஷயம் பரிசீலனையில் உள்ளது.

(இ) ஆம்.

(ஈ) 1945 ஜூலையில் பிறப்பிக்கப்பட்டிருந்தாலும் அந்த உத்தரவு 1944 செப்டம்பர் முதல் தேதியிலிருந்தே அமலுக்கு வரும். பணியாளர்கள் ஒருங்கிணைந்த விகிதத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள கால அவகாசம் அளிக்கப்பட வேண்டும். பின்பு மூன்று ஆண்டு அளவுக்கு கடந்தகால சேவை அனுகூலத்தைக் கணக்கி லெடுத்துக் கொண்டு, இணைந்த சம்பள விகிதத்தைத் தேர்ந்தெடுத்த பணியாளர்களுக்கு ஊதியம் முடிவு செய்யப்பட வேண்டும். கணக்கு அதிகாரிகள் சம்பளப் பட்டியலை முன்தணிக்கை செய்து வருகிறார் கள். விரைவில் பணம் வழங்கப்படும். கேள்வியின் பிற்பகுதிக்கான பதில் ''இல்லை'' என்பதாகும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1949.

# 395

## *எஸ்டேட் அலுவலகத்தில் அரசிதழ் பதிவுபெற்ற முஸ்லீம் அதிகாரிகள்

741. கான் பகதூர் மக்தும் அல்-ஹஜ் சையத் ஷேர் ஷா ஜீலானி : (அ) புதுடில்லி, எஸ்டேட் அலுவலகத்தில் தற்பொழுது உள்ள அரசிதழ் பதிவு பெற்ற பணியிடங்களின் எண்ணிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(அ) அவற்றில் எத்தனை பணியிடங்கள் முஸ்லீம்களால் வகிக்கப்படுகின்றன?

(இ) 1943-ல் தொழிலாளர் நலத்துறை, உள்துறையுடன் கலந்தாலோசித்து, உதவி எஸ்டேட் அதிகாரிகளின் பணியிடங்கள் மத்திய பொதுப்பணித் துறையில் உள்ள சிறந்த தகுதி வாய்ந்த கண்காணிப்பாளர்களைக் கொண்டு நிரப்பப்படும் என்று முடிவு எடுக்கப்பட்டது மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பின ருக்குத் தெரியுமா? அப்படியெனில், அவ்வாறு முடிவெடுக்கப் பட்ட கொள்கை நிறைவேற்றப்படுகிறதா என்பதை மாண்புமிகு உறுப்பினர் கவனிக்க உத்தேசித்துள்ளாரா?

(ஈ) ஒரு முஸ்லீமுக்காக ஒதுக்கப்பட்ட பணியிடம் தற் பொழுது காலியாக இருக்கும் நிலையில் விதிகளின்படி, அது இன்னொரு முஸ்லீமால் நிரப்பப்படும்படியாக அரசு பார்த்துக் கொள்ளுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) ஐந்து.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1949.

(ஆ) தற்பொழுது எதுவும் இல்லை.

(இ) மத்திய பொதுப் பணித்துறையிலிருந்து எஸ்டேட் அலுவலகத்தைப் பிரிப்பதற்கு முன்னால் தலைமைப் பொறியாளர் அலுவலகத்தில் உள்ள உதவி எஸ்டேட் அதிகாரி பதவிக்கான நியமனம் என்பது சாதாரணமாக தேர்வு அடிப்படையிலோ அல்லது அந்த அலுவலகத்தில் உள்ள கண்காணிப்பாளர்களுக்குப் பதவி உயர்வு என்ற அடிப்படையிலோதான் நடைபெற்று வந்தது. தற்பொழுது மாறியுள்ளது. இப்பொழுது எஸ்டேட் அலுவலகம் மத்திய பொதுப் பணித் துறையின் ஒரு பகுதி அல்ல; அது தொழிலாளர் நலத்துறையின் கீழ் நேரடியாக உள்ளது. ஆகவே தலைமைப் பொறியாளர் அலுவலகத்தைச் சார்ந்த கண்காணிப்பாளர்களுக்கு எஸ்டேட் அலுவலக உதவி எஸ்டேட் அதிகாரி பதவி உயர்வுக் கான உரிமை தற்பொழுது கிடையாது. ஆனால் இப்பணியிடங்கள் நிரப்பப்படும் பொழுது தகுதியின் அடிப்படையில் அவர்கள் விஷயத்தையும் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளலாம்.

(ஈ) தற்பொழுது காலியாக உள்ள பணியிடத்தை எப்படி நிரப்புவது என்பது இன்னும் பரிசீலனையில் உள்ளது.

**திரு. முகம்மது நெளமான்:** (அ) கேள்விக்கான பதிலைப் பொறுத்தவரை இந்த ஐந்து பதவிகளும் எப்படி நிரப்பப்பட்டன? இந்தப் பதவிகளை வகிக்கப் பொருத்தமான முஸ்லீம்கள் எவரும் கிடைக்கவில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்புத் தேவை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி 3, மார்ச் 6, 1946, பக்கம் 1952.

# 396

## *கட்டாய உழைப்பைத் தடைசெய்தல்

743. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார் : மாண்புமிகு உறுப்பினர் பின்வரும் விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) நாட்டில் எந்த அளவுக்குக் கட்டாய உழைப்பு நிலவுகிறது?

(ஆ) இந்நாட்டில் கட்டாய உழைப்பைத் தடுத்து நிறுத்த அரசு என்ன நடவடிக்கைகள் எடுக்க உத்தேசித்துள்ளது?

(இ) இந்நாட்டின் பல்வேறு பகுதிகளில் உள்ள விவசாயத் தொழிலாளர்கள் மற்றும் தொழில் துறைத் தொழிலாளர்களின் குறைந்தபட்சக் கூலியை நிர்ணயிக்க அரசு என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளது?

(ஈ) தொழிலாளர்களுக்குப் போதிய அளவும் ஒழுங்காகவும் ஊதியம் அளிக்கப்படுகிறதா என்பதைக் கண்காணிக்க அரசு சட்டபூர்வமாகவோ அல்லது வேறு வழியிலோ ஏதாவது நடவடிக்கைகள் எடுக்க உத்தேசித்துள்ளதா? ஆம், எனில் என்ன நடவடிக்கைகள்? இல்லையெனில் ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) விரிவான தகவல் கிடைக்கவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, , மார்ச் 6, 1946, பக்கம் 1955.

(ஆ) 1946 பிப்ரவரி 20-ஆம் தேதி பேராசிரியர் என்.ஜி. ரங்காவின் நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் : 381-க்கு அளித்த பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

(இ) விவசாயத் தொழிலாளர்கள் மற்றும் தொழில் துறைத் தொழிலாளர்களுக்குக் குறைந்த பட்சக் கூலியை நிர்ணயிப்பதற்கு சட்டம் கொண்டுவர பரிசீலித்து வருகிறோம்.

(ஈ) உத்தேச குறைந்தபட்சக் கூலிச் சட்டம் குறைந்தபட்சக் கூலியை நிர்ணயிப்பதுடன், நிர்ணயம் செய்யப்பட்ட கூலிக்குக் குறையாமல் பட்டுவாடா செய்வதையும் உறுதி செய்யும்.

# 397

## *மின் பொறியியலில் முஸ்லீம்களுக்கு மேம்பட்ட பயிற்சி

747. சேத் யூசுப் அப்துல்லா ஹருன் : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) தொழிலாளர் நலத் துறையின் சார்பாக மின்சார ஆணையரால் தேர்ந்தெடுக்கப்பட்டு சென்ற ஆண்டு மின்சாரப் பொறியியலில் வெளிநாட்டில் மேம்பட்ட பயிற்சிக்காக தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்ட மின்சாரப் பொறியாளர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1957.

*(ஆ) அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவர்களில் முஸ்லீம் களின் எண்ணிக்கை எவ்வளவு?*

*(இ) பத்திரிகையில் விளம்பரம் வெளியிடாமல் இந்தத் தேர்வு செய்யப்பட்டது என்பது உண்மையா? அப்படியெனில், ஏன்?*

*(ஈ) சென்ற குழுவில் முஸ்லீம்களுக்கான ஒதுக்கீடு அளிக்கப் படவில்லையெனில், அடுத்த குழுவில் அதிக அளவிலான முஸ்லீம் கள் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்ற உறுதி அளிக்க மாண்பு மிகு உறுப்பினர் முன்வருவாரா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *(அ) தேர்ந் தெடுக்கப்பட்டவர்கள் - 10; வெளிநாடு அனுப்பப்பட்டவர்கள் - 9.*

*(ஆ) ஒன்று.*

*(இ) வெளிநாட்டிற்குப் பயிற்சிக்காக இந்தியர்களை அனுப்பும் திட்டத்திற்குத் தகுதியான நபர்களை முன்தேர்வு செய்யும்படி மாகாணங்களும் பெரிய சமஸ்தானங்களும் கேட்டுக் கொள்ளப் பட்டிருந்தன. 24 பெயர்கள் அவர்களால் முன்வைக்கப் பட்டு அவர்களில் 22 பேர் நேர்காணலுக்கு வந்தார்கள். அவர் களில் 10 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.*

*ஆகவே பத்திரிகையில் இந்தத் திட்டத்திற்கு விளம்பரம் கொடுக்க வேண்டிய தேவை இல்லாமல் போயிற்று.*

# 398

## *மத்திய பொதுப்பணித்துறை நிர்வாக அதிகாரி பதவிக்கு நியமனங்கள்

752. சர்தார் மங்கள் சிங் : மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்கண்ட தகவல்களைத் தெரிவிப்பாரா:

(அ) இதுவரை, மத்திய பொதுப் பணித் துறையில் நிர்வாக அதிகாரி பதவியைத் தொடர்ந்து வகித்துவந்துள்ள நபர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) இவர்களில் ஒவ்வொருவரும் எந்த வகுப்பினைச் சார்ந்தவர்கள்?

(இ) இந்தப் பதவிக்கு இதுவரை எந்த சீக்கியரோ அல்லது இந்துவோ நியமிக்கப்படவில்லை என்பது உண்மையா? அப்படியெனில், ஏன்?

(ஈ) தற்பொழுது காலியாக உள்ள பணி இடத்திற்கு ஒரு சீக்கியரை நியமிக்க ஆலோசனை வழங்கும் எண்ணம் உள்ளதா? இல்லையெனில், ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) நான்கு.

(ஆ) இந்த அதிகாரிகள் சார்ந்த வகுப்புகள்:

1. ஆங்கிலோ-இந்தியர்

2. முஸ்லீம்

3. ஆங்கிலோ-இந்தியன்

4. முஸ்லீம்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1959.

(இ) ஆம். பொது அரசுப் பணிகளுக்கான வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ உத்தரவுகள் நிர்வாக அதிகாரி பதவிக்காக மட்டுமே பொருந்தக் கூடியதல்ல; அவை மத்திய பொதுப்பணித் துறையின் முதல்நிலைப் பணியிடங்கள் அனைத்திற்கும் பொருந்தும். ஆகவே ஒரு குறிப்பிட்ட வகுப்பினைச் சார்ந்த உறுப்பினரால் தான் நிர்வாக அதிகாரி பணியிடம் நிரப்பப்படவேண்டும் என்று உறுதிப்படுத்த முடியாது.

(ஈ) இப்பதவி நிரப்பப்படுவது இன்னும் பரிசீலனையில் உள்ளது.

# 399

## *ஜோத்பூர் ரயில்வேக்கு சம்பளப் பட்டுவாடா சட்டத்தை செயற்படுத்தல்

756. சேத் சுக்தேவ்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா?

(அ) பிரிட்டிஷ் இந்தியாவின் வழியாகச் செல்லும் ஜோத்பூர் ரயில்வேக்கு 1936-ஆம் வருட சம்பளப் பட்டுவாடா சட்டம் IV-ன் விதிகள் செயல்படுத்தக்கூடியவை என்பது உண்மையா? அப்படியெனில் ரயில்வே சமரசஅதிகாரி மற்றும் ரயில்வே தொழிலாளர் மேற்பார்வையாளர் ஆகியோரால் 1941 முதல் 1944 வரையிலான மூன்றாண்டுகளில் இந்தியத் தொழிலாளர் அரசிதழில் வெளியிடப்பட்ட ஆண்டு அறிக்கைகளில் ஏன் ஜோத்பூர் ரயில்வேயைப் பற்றிய குறிப்பு ஏதும் இல்லை?

(ஆ) ஜோத்பூர் ரயில்வேயின் பிரிட்டிஷ் பகுதிக்கான ஆய்வுகள் சம்பந்தப்பட்ட தகவல்கள் இந்த ஆண்டுகளுக்கு இருந்தால்,

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1959.

மாண்புமிகு உறுப்பினர், ஜோத்பூர் ரயில்வேயைப் பற்றிய கீழ்க் கண்ட தகவல்களுடன் கூடிய ஒரு அறிக்கையை அவையில் வைக்க உத்தேசித்துள்ளாரா -

(1) பணியாளர் எண்ணிக்கை

i. ஆடவர்,

ii. சிறுவர்கள்,

iii. மாற்றுப் பணியாளர்கள்,

iv. அவர்களுக்கு அளிக்கப்பட்ட மொத்த சம்பளம்.

(2) அபராதம் விதிக்கப்பட்ட பணியாளர்கள் மற்றும் அவர்களிடம் இருந்து வசூலிக்கப்பட்ட அபராதத் தொகை,

(3) சரக்குகள் இழக்கப்படுவதற்கும் சேதப்படுவதற்கும் காரணமாக இருந்த பணியாளர்களின் எண்ணிக்கையும் இது சம்பந்தமாகப் பெறப்பட்ட தொகையும்:

(4) நடத்தப்பட்ட சோதனைகள் மற்றும் கண்டுபிடிக்கப் பட்ட ஒழுங்கீனங்களின் எண்ணிக்கை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கேள்வியின் முதல் பகுதிக்கு 'ஆம்' என்பதே பதிலாகும். இந்தியத் தொழிலாளர் பதிவிதழில் வெளியிடப்பட்ட குறிப்பில் இந்திய ரயில்வேக்களின் ஊதிய பட்டுவாடாச் சட்டம் அடங்கியுள்ளது.

(ஆ) (1) முதல் (3) கிடைக்கப்பெற்ற தகவல்கள் அடங்கிய ஓர் அறிக்கை அவையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

(4) இது சம்பந்தப்பட்ட தகவல்கள் கைவசம் இல்லை.

(சமஷ்டி ரயில்வேயின்) 1938 ஆம் வருட ஊதியப் பட்டுவாடா விதிகளில் 17 ஆம் விதிக்கு இணங்க ஜோத்பூர் ரயில்வே நிர்வாகம் பிரிட்டிஷ் பகுதியிலுள்ள தனது ரயில்வேயைச் சேர்ந்த தொழிற் சாலைகளில் வேலைக்கமர்த்தப்பட்டிருப்போரையும் அவர்கள் சம்பந்தப்பட்ட ஊதியம் முதலியவற்றையும் பற்றிச் சமர்ப்பித்துள்ள அறிக்கை வருமாறு:

| | 1941-42 | 1942-43 | 19430-44 |
|---|---|---|---|
| மொத்தம் வேலைக்கமர்த்தப் பட்டவர்கள் | | | |
| வயது வந்தவர்கள் | 901 | 1933 | 2024 |
| சிறுவர் சிறுமியர் | இல்லை | இல்லை | இல்லை |
| மொத்தம் அளிக்கப்பட்ட ஊதியம் | ரூ. 5,82,379 | ரூ. 6,35,938 | ரூ. 6,21,433 |
| அபராதம் விதிக்கப்பட்ட ஊழியர்கள் | 128 | 102 | 140 |
| அவர்களிடமிருந்து வசூலிக்கப் பட்ட அபராதம் | ரூ. 41 | ரூ. 31 | ரூ. 48 |
| சரக்குகள் காணாமற் போன தற்கும் சேதமடைந்ததற்கும் பொறுப்பானவர்கள் | 1,102 | 1,127 | 1,303 |
| சேதாரத்துக்காக வசூலிக்கப்பட்ட தொகை | ரூ. 1,287 | ரூ. 1,129 | ரூ. 1,985 |

# 400

## *புதுடில்லியில் அமெரிக்க ராணுவ தேவாலயத்தை மாற்றிக் கொடுப்பது பற்றி

764. திரு. டி.எஸ். ஆதித்தன்: புதுடில்லி, நாடாளுமன்ற சாலையிலுள்ள அமெரிக்க ராணுவத்தின் தேவாலயம் அரசிடம் ஒப்படைக்கப்பட விருக்கிறதா, அப்படியெனில் அரசு அது சம்பந்த மாக என்ன செய்யப் போகிறது என்பதை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை அமைச்சர் தயவுசெய்து கூறுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், இந்த விஷயம் பரிசீலனையில் இருக்கிறது.

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1971.

# 401

## *அரசு இலாகாக்களிலிருந்து ஊழியர்களைப் பணிவிடுப்பு செய்வது பற்றி

769. திரு. மனுசுபேதார்: (அ) i. ராணுவம், கப்பற்படை, விமானப் படை உள்ளிட்டு போர் இலாக்காவிலிருந்தும் ii. ரயில்வே மற்றும் iii. அரசின் இதர துறைகளிலிருந்தும் 1946 ல் விடுவிக்கப் படவிருக்கும் தற்காலிக மற்றும் நிரந்தர ஊழியர்களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு என்று மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

(ஆ) சிறந்த சேவை புரிந்துள்ள சிலரும் தற்பொழுது வேலையிலிருந்து நீக்கப்படுவது உண்மையா?

(இ) அவர்களை இதர இலாக்காக்களில் மீண்டும் வேலைக்கு சேர்த்துக்கொள்வதற்கு அரசு என்ன முயற்சிகளை மேற்கொண்டு வருகிறது?

(ஈ) இந்த ஊழியர்களுக்கு மறு வேலை கொடுப்பதற்கு அரசு என்ன விசேடப் பணியிடங்களை ஏற்படுத்துவதற்கு அரசு உத்தேசித்துள்ளது?

(உ) பல்வேறு ராணுவச் சேவைகளிலிருந்து இந்தியர்கள் வெளியேற்றப்படும் அதேபொழுதில், பிற சேவைகளுக்கு பிரிட்டிஷ்காரர்கள் சேர்க்கப்பட்டு வருவது உண்மையா?

(ஊ) அவ்வாறு (பிரிட்டிஷ்காரர்கள்) வேலைக்கு சேர்க்கப் படுவதை நிறுத்துவதும், புதிதாக வேலைக்கு சேர்க்கப்படும் பிற

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1972.

பணிகளுக்கு தங்களைத் தக அமைத்துக் கொள்வதற்கு ஒரு வாய்ப்புக் கொடுப்பதற்கு இந்தியர்களை வேலைக்கு எடுத்துக் கொள்வதும் விரும்பத்தக்கது என்று அரசு கருதுகிறதா?

(எ) மத்திய அரசிலும் பல்வேறு மாநில அரசுகளிலும் 70 சதவீதப் பதவிகள் சாதாரணமாக நேரடி நியமனம் மூலம் நிரப்பப் படுகின்றன; இதற்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்வதற்கு அரசு என்ன ஏற்பாட்டை வகுத்துள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இந்தத் தகவல் உடனடியாகக் கிடைக்கவில்லை. இது சேகரிக்கப்பட்டு வருகிறது. உரியகாலத்தில் அது அவையில் சமர்ப்பிக்கப்படும்.

(ஆ) ஆம்.

(இ) பணியிலிருந்து விடுவிக்கப்படும் ஊழியர்கள் வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்யப்படுவதற்கு இலாக்காக் கள் ஏற்பாடு செய்யும்படி ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. சாத்தியமானவரை வேலைவாய்ப்பு அலுவலகங்கள் வாயிலாகவே, காலி இடங்களை நிரப்புவதற்கும் ஆணையிடப்பட்டுள்ளது.

(ஈ) ஐந்தாண்டுத் திட்டங்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட வேலைத் திட்டங்களை - நிதி நெருக்கடி, வேலையில்லாத் திண் டாட்டப் போக்குகளை அகற்றும் சிறப்பு நோக்கத்துடன் - மத்திய, மாநில அரசுகள் மேற்கொண்டுவருகின்றன. இவற்றில் உற்பத்தித் திட்டங்களும், பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்த திட்டங்களும் உட்படும். சுய-நிதிவசதி செய்துகொள்ள முடியாதவையாக அவை இருக்கக்கூடும். உதாரணமாக சிறுபாசனத் திட்டங்கள், சாலைகள், மண் அரிப்புத் தடுப்புத் திட்டங்கள், விவசாய நடவடிக்கைகள், காடு வளர்ப்பு முதலியன. இந்த இருவகைத் திட்டங்கள் கட்டட நிர்மாணம், பயிற்சி, ஆராய்ச்சி, முன்னாள் படைவீரர்களைக் குடி யமர்த்துவது (மறுவேலை அளிப்பது) ஆகியவற்றுக்குப் பெருமளவு வாய்ப்பு ஏற்படுத்தும் ஐந்தாண்டு திட்டத்துக்கு அப்பாற்பட்ட வேறு சில திட்டங்கள் - உதாரணமாகப் பொது சுகாதாரத் திட்டங் கள், குறிப்பாக, மலேரியா தடுப்பு நடவடிக்கைகள், குடிநீர் சப்ளை,

கழிவுநீர் அகற்றுத் திட்டங்கள் போன்றவையும் பெருமளவு வேலை வாய்ப்பு அளிக்கக்கூடியவை - மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

(உ) இல்லை. குறிப்பிட்ட வேலைகளுக்கு தனித் தேர்ச்சி யாளர்கள் தேவைப்படும் இடங்களில் தவிர, அல்லது, எண்ணிக்கை குறைவாக இருந்து, பொதுநலனுக்குத் தேவையாயிருப்பவை விஷயத்தில் தவிர.

(ஊ) இது எழவில்லை.

(எ) 1942 ஜுன் 20க்கும் 1945 டிசம்பர் 31க்கும் இடையில் ஏற்படுகின்ற, வழக்கமாக நேரடியாக வேலைக்கு எடுத்துக் கொள் வதன் மூலம் நிரப்பப்படுகின்ற பதவிகளில் 70 சதவீதம் 'போர் சேவை' வேட்பாளர்களுக்கு ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளன. பல்வேறு மாகாண அரசுகளினால் ஒதுக்கிவைக்கப்படும் பணி இடங்களின் வீதாசாரம் பற்றிய தகவல் உடனே கிடைக்கவில்லை. உயர் சேவைகளில் போர் சேவையாளர்களுக்கு ஒதுக்கப்படும் பணியிடங் களுக்கான வேலைகோரும் விண்ணப்பங்கள் வேட்பாளர்களிட மிருந்து கோரப்பட்டுள்ளன; தொழில்நுட்பம் அல்லாத சேவைப் பணியிடங்கள் சம்பந்தமான விண்ணப்பங்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி 1946, பிப்ரவரி 15 என்றும், தொழில்நுட்பப் பணிகளுக்கு விண்ணப்பங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி 1946, ஏப்ரல் 1 என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. தொழில்நுட்பப் பணிகளுக்கான வேட்பாளர்களுக்கு மத்திய அரசுப் பணிகள் தேர் வாணையத்தால் நேர்காணல் நடத்தப்பட்டு, இறுதித் தர்வு செய்யப் படும். தொழில்நுட்பமல்லாத சேவைகளுக்கான மனுதாரர்கள், கமிஷன்களுக்கு அதிகாரிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு போர் இலாகா பயன்படுத்தும் வகைப்பட்ட தேர்வு வாரியங்களால் முதலில் சோதிக்கப்படுவார்கள், பின்னர் மத்திய அரசுப் பணிகள் தேர் வாணையத்தால் நேர்காணல் நடத்தப்படும். அவர்கள் இறுதியாகத் தேர்வு செய்வார்கள். துணைநிலை மற்றும் கீழ்நிலை சேவைத் துறைகளில் காலியாகவுள்ள பணியிடங்கள் சம்பந்தமாக, முன்னாள் படைவீரர்களிடமிருந்து, அவர்கள் ராணுவ சேவையிலிருந்து விடுவிக்கப்பட்டதற்கு பின்னர், விண்ணப்பங்களைப் பெறுவ தற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

# 402

## *வைஸ்ராய் எஸ்டேட் பிரிவில் வேலைபார்க்கும் ஊழியர்களின் சேவை விதிகள்

70. சர்தார் மங்கள் சிங்: சிம்லாவிலோ, டில்லியிலோ, 1946 ஜுலை 14க்கு முன்பாக, வைஸ்ராய் எஸ்டேட் பிரிவில் வழக்கமாக வேலைக்கு அமர்த்தப்படும் எழுத்தர்கள் மற்றும் துணைநிலை ஊழியர்களின் விரிவான சேவை விதிகளை, உதாரணமாக, சம்பள விகிதம், வழங்கப்படும் இதர இலவசச் சலுகைகள், வேலைபார்க்கும் இடம் முதலியவற்றை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து தெரிவிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஓர் அறிக்கை சபையில் சமர்ப்பிக்கப்படுகிறது. (252ம் பக்கம் பார்க்க).

# 403

## * ஜோத்பூர் ரயில்வேயில் வேலைநேர ஒழுங்குமுறை விதிகள் கடைப்பிடிக்கப்படுவது பற்றி

71. சேத் சுக்தேவ்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கீழ்வரும் கேள்விகளுக்கு தயவு செய்து பதில் கூறுவாரா:

(அ) வேலைநேர ஒழுங்குமுறை விதிகள், பிரிட்டிஷ் இந்தியா வழியாகச் செல்லும் ஜோத்பூர் ரயில்வே பகுதிக்குப் பொருந்துமா:

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1974.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1976.

*(ஆ) மேலே கூறிய (அ) கேள்விக்கான பதில் 'ஆம்' என்று இருக்குமானால் 1945 டிசம்பருக்கான இந்தியத் தொழிலாளர் அரசிதழில் வெளியிடப்பட்ட 1941-45 ஆண்டுகளுக்கான ரயில்வே தொழிலாளர் சம்பந்தமான சமரச அதிகாரி மற்றும் கண்காணிப் பாளர் அறிக்கையில் ஏன் அது பற்றி எதுவும் குறிப்பிடப்பட வில்லை?*

*(இ) ஜோத்பூர் ரயில்வேயின் பிரிட்டிஷ் பகுதிக்கு 1941-44 இடைப்பட்ட மூன்று ஆண்டுகளுக்குக் கீழ்வரும் தகவல்களைக் காட்டும் தனிஅறிக்கையை மாண்புமிகு உறுப்பினர் தயவு செய்து சபையில் சமர்ப்பிப்பாரா?*

i. *வேலையிலுள்ள ஊழியர்களின் எண்ணிக்கை;*

ii. *ஒழுங்கு முறைவிதிகளால் பாதிக்கப்படும் ஊழியர் களின் எண்ணிக்கை;*

iii. *நிரந்தரத் தொழிலாளிகள் என்று வகைப்படுத்தப்பட் டுள்ளவர்களின் எண்ணிக்கை;*

iv. *'சாராம்சத்தில் தற்காலிகத் தொழிலாளர்கள்' என்று வகைப்படுத்தப்பட்டுள்ளவர்களின் எண்ணிக்கை;*

v. *விலக்கப்பட்டுள்ள ஊழியர்களின் எண்ணிக்கை;*

vi. *காலப்படியான ஓய்வை அனுபவிக்கும் ஊழியர்களின் சதவீதம்;*

vii. *நடத்தப்பெற்ற சோதனைகளின் எண்ணிக்கை;*

viii. *வகைப்பிரிவை தொழிலாளர் நல மேற்பார்வை ஆணையம் ஆட்சேபித்த சம்பவங்களின் எண்ணிக்கை;*

ix. *இந்திய அரசின் தொழிலாளர் நலத்துறையின் முடிவுக்கு விடப்பட்ட, சந்தேகத்திற்குரிய சம்பவங்களின் எண் ணிக்கை; மற்றும்*

x. *நிர்ணயிக்கப்பட்ட மணி நேரத்திற்கு அதிகமாகவே வேலை செய்வதாகக் கண்டுபிடிக்கப்பட்ட ஊழியர் களின் எண்ணிக்கை i. வழக்கமாக அவ்வாறு செய் பவர்கள், ii. எப்போதாவது அவ்வாறு செய்பவர்கள்?*

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இல்லை.

(ஆ) எழவில்லை.

(இ) தகவல் தற்போது கைவசம் இல்லை.

# 404

## *ரயில்வே ஒப்பந்தக்காரர்களின்கீழ் பணிபுரியும் தொழிலாளர்களின் வேலையை மேற்பார்வையிடுவது சம்பந்தமான சட்டப்படியான விதிகள்

72. சேத்சுக்தேவ்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர், கீழ்வருவனவற்றுக்கு தயவு செய்து பதிலளிப்பாரா:

(அ) சம்பளங்கள், அபராதங்கள், சம்பளக் குறைப்புகளை ஒப்பந்தக்காரர்கள் பதிவு செய்வதை அவசியமாக்கும்:

சட்டபூர்வமான விதிகள் இல்லாத நிலையில், ரயில்வே ஒப்பந்தக்காரர்களின் தொழிலாளர் நிறுவனங்களை சோதனையிடுவதில், சம்பளப்பட்டுவாடா சட்டத்தின் கீழ் நியமிக்கப்பட்ட தொழிலாளர் நல மேற்பார்வை ஆணையத்திற்கு இடர்ப்பாடு ஏற்படுகிறது என்பதாக, 1945 நவம்பர் மாத இந்திய தொழிலாளர் அரசிதழில் வெளியிடப்பட்டிருக்கிறது என்று சமரச அதிகாரியின் (ரயில்வே) மற்றும் ரயில்வே மேற்பார்வையாளரின் 1941-44 ஆம் ஆண்டுகளுக்கான அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருப்பது அவருடைய கவனத்திற்கு வந்ததா?

ஆ. சட்டப்படியான விதிகளைத் திருத்துவதற்கு உத்தேசிக்கப்பட்டுள்ளதா? அப்படியனால் எப்பொழுது? இல்லாவிட்டால், ஏன்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அ. ஆம்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1998.

## அறிக்கை 6

**(எஸ்.எண். 403 பார்க்கவும், கேள்வி எண். 70க்கு டாக்டர் அம்பேத்கரின் பதில்)**

| வ. எண் | பெயர் | வேலைத் தகுதி | சம்பள விகிதம் ரூ. | வைஸ்ராய் எஸ்டேட்டிலிருந்து மாற்றும்போது சம்பளம் ரூ. | அனுபவிக்கப்பட்ட இலவச சலுகைகளின் தன்மை | வேலை இடம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | திரு. உசேன் அலி | துப்புரவு மேற்பாவையாளர் | 80-7-255 | 241 | வாடகையில்லாத குடியிருப்பு, வரிகள், தண்ணீர் வரி, மின் கட்டணம் ஆகியவற்றிலிருந்து விலக்கு | புதுடில்லி |
| 2. | திரு.சிவசரண்தாஸ் | கட்டட வேலை மேற்பார்வை யாளர் | 200-10-400 | 340 | ,, | ,, |
| 3. | திரு.பி.ஜி.மாசூர் | ,, | ,, | 290 | ,, | சிம்லா |
| 4. | திரு.பி.சி.பானர்ஜி | ,, | ,, | 200 | ,, | கல்கத்தா |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|
| 5. | திரு. மோகன்லால் | வரைவாளர் | 60-5-150 | 130 | ,, | புதுடில்லி |
| 6. | திரு. மாதவநாராயண் | துணை மேற்பார்வை யாளர் | 75-4-95-5-150 | 135 | ,, | சிம்லா |
| 7. | திரு.பி.என். சாட்டர்ஜி | மின்துறை மேற்பார்வையாளர் | 200-10-400 | 400 | ,, | ,, |

1. ஓய்வுபெற்றவர்
2. காலமாய்விட்டார்
3. ஓய்வுபெற்றவர்

4 -7 வைஸ்ராய் எஸ்டேட் டிவிஷனில் இப்பொழுது வேலையில் இல்லை.

# 405

## *தொழிற்சாலைகள் (திருத்த) மசோதா குறித்து தெரிவுக்குழுவின் அறிக்கை சமர்ப்பிப்பு

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, 1934ம் வருட தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான மசோதா பற்றிய தெரிவுக் குழுவின் அறிக்கையை சமர்ப்பிக்கிறேன்.

# 406

## *புதுடில்லியில் மத்திய பொதுப்பணித்துறையும் கட்டட ஒப்பந்தக்காரர்களும் வேலைக்கு அமர்த்தியுள்ள தொழிலாளர்களின் வீட்டுவசதி நிலைமைகள்

867. திரு.எம்.அனந்தசயனம் அய்யங்கார்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து கீழ்வரும் கேள்வி களுக்கு பதில் கூறுவாரா:

(அ) புது டில்லியிலும் அதற்கு அருகிலும் கட்டடங்கள் நிர்மாணிப்பதற்கு புதுடில்லியில் மத்தியப் பொதுப்பணித் துறை யினால் நேரடியாகவும் மற்றும் கட்டட ஒப்பந்தக்காரர்களாலும் வேலைக்கமர்த்தப்பட்ட தொழிலாளர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) இந்தத் தொழிலாளர்கள் மோசமான, காற்றோட்ட மில்லாத, நாள் முழுவதும் வெயில், மழை மற்றும் குளிரின்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 1999.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 2224.

மில்லாத, நாள் முழுவதும் வெயில், மழை மற்றும் குளிரின் பாதிப்புகளுக்கு உள்ளாகும் குடிசைகளில் வசிக்கிறார்கள் என்பது உண்மையா? மற்றும்

(இ) மேலே கூறப்பட்ட (ஆ) கேள்விக்கு பதில் 'ஆம்' என்பதானால் அவர்களுக்கு மலிவான, சுகாதாரமான வீட்டு வசதியை ஏற்படுத்திக் கொடுப்பதற்கு என்ன நடவடிக்கைகளை மேற்கொள்ள அமைச்சர் உத்தேசித்துள்ளார்? அத்தகைய உத்தேசம் ஏதும் இல்லையெனில் ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மத்தியப் பொதுப் பணித்துறையின் (சி.பி.டபிள்யூ.டி) கீழ் நேரடியாக, சுமார் 12,000 தொழிலாளர்கள் வேலைக்கமர்த்தப்பட்டுள்ளனர். அதே பொழுதில், கட்டட ஒப்பந்தக்காரர்கள் வேலைக்கு அமர்த்தியுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கை கட்டட நிர்மாணத் திட்டத்தின் அளவுக்கு ஏற்ப வேறுபடுகிறது.

(ஆ) சில சிபிடபிள்யூடி தொழிலாளர்களுக்கு அரசு குடியிருப்புகள் ஒதுக்கப்பட்டுள்ளன. இதரர்கள் குடியிருப்பதற்குத் தமது சொந்த ஏற்பாடுகளைச் செய்து கொண்டுள்ளனர்.

ஒப்பந்தக்காரர்கள் வேலைக்கு அமர்த்திக்கொண்டுள்ள தொழிலாளர்களைப் பொறுத்தமட்டிலும், சுமார் 9000பேர் டில்லியின் புறநகர்ப் பகுதியில் தமது வீடுகளில் வசிக்கின்றனர். எஞ்சியுள்ள தொழிலாளர்கள் - வெளியிலிருந்து வேலைக்கு வருபவர்கள் - தினசரி தங்கள் கிராமங்களிலிருந்து வேலைக்கு வருகின்றனர், அல்லது ஒப்பந்தக்காரர்களால் வேலை ஸ்தலத்தில் ஓலை வேய்ந்த குடிசைகளில் குடியிருக்கச் செய்துள்ளனர். இது அவர்களுக்கு வெயில் மழை மற்றும் குளிரிலிருந்து ஓரளவு பாதுகாப்பு அளிக்கிறது.

(இ) ஒப்பந்தக்காரர்களால் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ள தொழிலாளர்களுக்கு நிரந்தரக் குடியிருப்பு வசதியைச் செய்து கொடுக்கும் பிரச்சினையை அரசு ஏற்கனவே பரிசீலனை செய்துள்ளது. டில்லிக்கு அருகிலிருந்து தொழிலாளர்கள் வேலைக்கு வருகின்ற கிராமங்களில் மாதிரி குடியிருப்புப் பகுதிகளை உருவாக்குவது பற்றிப் பரிசீலனை செய்துவருகின்றனர். ஏழை மக்களுக்கு மானிய அடிப்படையிலான வீட்டு வசதியை அமைத்துக் கொடுப்பதற்கான அரசுத் திட்டம் ஒப்பந்தக்காரர்களின் தொழி

பதற்கு உதவி செய்ய வேண்டும். அரசு வீட்டு வசதி செய்து கொடுக்கப்படாத சிபிடள்யூடி தொழிலாளர்களுக்கு வீட்டு வசதியை ஏற்படுத்திக் கொடுக்கும் பிரச்சினையை அரசு தீவிர மாகப் பரிசீலனை செய்து வருகிறது.

# 407

## *மைக்காவை ஒரு மத்திய அரசு விஷயமாக்குவது

890. திரு. சத்யநாராயண் சின்ஹா: (அ) மைக்காவை ஒரு மத்திய அரசு விஷயமாக்கும் வகையில் இந்திய அரசுச் சட்டத்தை பிரிட்டிஷ் நாடாளுமன்றம் திருத்தப் போகிறது என்பது உண்மையா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா?

(ஆ) அது உண்மையெனில், பீஹாரில் ஒரு சில வாரங் களில் பிரதிநிதித்துவ அரசு பதவியேற்கும் வரையில் மாண்புமிகு உறுப்பினர் அதை ஒத்திப்போடுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) போரிலிருந்து சமாதானத்திற்கு மாறும் இடைக்கால கட்டத்தில் மைக்கா உள் ளிட்ட சில விஷயங்கள் சம்பந்தமாக சட்டங்கள் இயற்றுவதற்கு மத்திய அரசுக்கு அதிகாரம் வழங்கும்வகையில் இந்திய அரசுச் சட்டத்தைத் திருத்துவதற்கு ஒரு மசோதா பிரிட்டிஷ் நாடாளுமன்றத் தில் அறிமுகம் செய்து வைக்கப்பட்டுள்ளது.

(ஆ) மைக்காவின் சில அம்சங்களை மத்திய அரசின் கட்டுப் பாட்டின் கீழ்கொண்டு வருவதற்கு, இந்திய அரசு சட்டத்தின் 1வது பட்டியலின் 36வது இனம் சம்பந்தமாக இந்த சபையில் ஒரு மசோதாவை அறிமுகம் செய்வதற்கு நீண்டகாலமாக அரசு பரி சீலனை செய்து வருகிறது.

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 2224.

# 408

## *அலிகார் அரசு அச்சக ஊழியர்களின் குறைகள்

896. பண்டிட் திரு. கிருஷ்ணதத் பலிகார்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து கீழ்வரும் கேள்விகளுக்கு பதிலளிப்பாரா:

(அ) அலிகாரிலுள்ள அரசு அச்சக ஊழியர்கள் வேலை நிறுத்த அறிவிப்புச் செய்துள்ளாளர்களா? அப்படியெனில், அவர் களுடைய குறைகளும் கோரிக்கைகளும் என்ன?

(ஆ) அவர்களுக்கு அரசு குறைந்தபட்ச வாழ்க்கைச் சம்பளம் வழங்க உத்தேசித்துள்ளதா? அப்படியெனில், எப்பொழுது, எவ் வளவு வழங்கப் போகிறது?

(இ) குளிக்கும் வசதிகள், வெளிஅரங்க விளையாட்டுகள், குழந்தைகளுக்குக் கல்வி வசதிகள், குடியிருப்புப் பகுதிகள், மருத்துவ உதவி போன்றவை வழங்கப்பட்டுள்ளனவா?

(ஈ) வாரத்தில் அவர்களது வேலை நேரம் எவ்வளவு? அவற்றை வாரம் ஒன்றுக்கு 40 மணி நேரமாகக் குறைப்பதற்கு அரசு உத்தேசித்துள்ளதா?

(உ) டில்லி அச்சகம் மற்றும் பிற அரசு இலாக்காக்கள் அனு பவித்து வருவதைப் போன்று சலுகை விலைகளில் அவர்களுக்கு உணவு தானியங்களை வழங்குவதற்கு அரசு உத்தேசித்துள்ளதா?

(ஊ) அளவுசார் ஊதிய முறையை ரத்து செய்துவிட்டு, தற்பொழுது ஊழியர்கள் பெற்றுவரும் சம்பாத்தியத்தின் அடிப் படையில் மாதாந்திர சம்பள முறையை அறிமுகப்படுத்துவதற்கு அரசு உத்தேசித்துள்ளதா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 2224.

17

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அ. ஆம். அவர்களின் குறைகளும் கோரிக்கைகளும் பின்வருமாறு:

i. ரேஷனில் கோதுமை அளவை அரசு குறைந்திருப்பது,

ii. சம்பளம் மற்றும் கிரேடுகளை மாற்றியமைப்பது,

iii. டில்லியில் அரசு ஊழியர்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ள சலுகையைப் போன்று உணவு தானியங்களுக்கு சலுகை விலைகள்,

iv. அளவுசார் ஊதிய முறையை ரத்து செய்வது,

v. வேலை நேரங்களை மாற்றியமைப்பது, மற்றும்

vi. குடியிருப்பு வசதி.

(அ) கோதுமை ரேஷனைக் குறைத்ததுதான் வேலைநிறுத்த அறிவிப்புக் கொடுப்பதற்கு உடனடியான காரணமாயிற்று.

(ஆ) இது ஒரு பொதுவான பிரச்சினை, அரசு இதைப் பரிசீலித்து வருகிறது.

(இ) வெளி அரங்க விளையாட்டுகள் மற்றும் மருத்துவ கவனிப்பு தவிர தற்பொழுது வேறுவசதிகள் இல்லை. இதர வசதிகளை அளிக்கும் பிரச்சினை பரிசீலனையில் இருக்கிறது.

(ஈ) வாராந்திர வேலைநேர அளவு 48 மணி. இதைக் குறைப்பது உகந்ததா என்பது பரிசீலிக்கப்பட்டு வருகிறது.

(உ) இல்லை. அலிகார் அச்சக ஊழியர்கள், ஐ.மா. அரசின் உத்தரவுகளுக்கு ஏற்ப உணவுதானியங்களை சலுகை விலைகளில் பெறுகிறார்கள்.

(ஊ) சந்தர்ப்பம் ஏற்படும்போது அளவுசார் ஊதிய விகிதங்களுக்குப் பதிலாக நேரம்சார் ஊதிய விகிதங்களைப் படிப்படியாக அறிமுகப்படுத்துவதே அரசின் தற்போதைய கொள்கையாகும்.

# 409

## *இந்திய அரசு அச்சகங்களில் இளம்நிலை அச்சுப்படி திருத்துவோருக்கு சில பதவி உயர்வுகள்

900. திரு. ஹாஜி சௌதுரி முகம்மது இஸ்மாயில்கான்: (அ) இந்திய அரசின் அனைத்து அச்சகங்களிலும் இளம்நிலை அச்சுப்படி திருத்துவோர் (ஜூனியர் ரீடர்கள்), முதுநிலை அச்சுப்படி திருத்துவோராக (சீனியர் ரீடர்கள்), பதவி உயர்வு எந்த அடிப் படையில் செய்யப்படுகிறது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவு செய்து கூறுவாரா?

(ஆ) இந்திய அரசாங்கத்தின் எந்த அச்சகத்திலாவது ஏற்கனவே அச்சுப்படி திருத்துவோர் தேர்வில் வெற்றி பெற்று இளநிலை அச்சுப்படி திருத்துவோர் தரத்தை எய்திவிட்ட சில ஊழியர்களை ஒதுக்கிவிட்டு, இதன் பின்னர் இளநிலை அச்சுப்படி திருத்துவோர் தரத்தை எய்தியவர்களுக்கு இளநிலை அச்சுப்படி திருத்துவோர் தரத்திலும் மட்டுமன்றி, முதுநிலை அச்சுப்படி திருத்துவோர் தரத்திலும் பதவி உயர்வு அறிவிக்கப்பட்டது என்பது உண்மையா?

(இ) அச்சுப்படி திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவுவோர் (காப்பிஹோல்டர்கள்) சிலர் இளநிலை அச்சுப்படி திருத்துவோர் என்ற முறையில் நீண்டகாலம் சேவை செய்துள்ள போதிலும் அவர்கள் அச்சுப்படி திருத்துவோராக குறைந்த சேவை காலம் உடையவர்களையும் முன்னர் குறிப்பிட்டவர்களுடன் சேர்ந்து அச்சுப்படி திருத்துவோர் தேர்வு எழுதி தோல்வியடைந்த வர்களையும் விட இளநிலை அச்சுப்படி திருத்துவோர் தரத்தில் கீழ்நிலையில் உள்ளவர்கள் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 6, 1946, பக்கம் 2224.

(ஈ) அச்சுப்படி திருத்துவோருக்கு உதவுவோர் பதவிகளில் கூடுதல் சேவைக் காலத்தைக் கொண்டவர்கள் வெறும் முதுநிலை ஊழியர்கள் என்று கருதப்பட்டது உண்மையா?

(உ) இளநிலை அச்சுப்படி திருத்துவோர் தரத்தில் பணி புரிவோர் மொத்த சேவைக்காலத்தின் அடிப்படையில் முதுநிலை அச்சுப்படி திருத்துவோர் பதவிகளை நிரப்புவது விரும்பத்தக்கது என்று கருத மாண்புமிகு அமைச்சர் உத்தேசித்துள்ளாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 'தேர்வு நிலை பதவி'' என்று அறிவிக்கப்பட்டுள்ள தலைமை அச்சுப்படி திருத்து பவர் பதவிக்குத்தவிர ஒரு தரத்திலிருந்து மற்றொன்றுக்கு அச்சுப் படி திருத்துபவர்களை பதவி உயர்வு செய்வதற்கான அடிப்படை பதவி மூப்பும் தகுதியுமேயாகும்.

(ஆ) மற்றும் (இ) ஆம். அச்சுப்படித் திருத்துவோரின் முது நிலை உதவியாளர்களுக்கான பரீட்சையில் தகுதி பெற்றவர்கள் நிரந்தரமாக்கப்படுவதற்கு முன்னால் இளநிலையாளர்களின் அச்சுப்படி திருத்துவோர்களாக நியமிக்கப்படுகிறார்கள். தகுதியை அளிப்பதற்கான ஒன்றாக, பரீட்சை இருப்பதால் அச்சுப்படி திருத்து வோர் பதவிக்கு நியமிக்கப்படுவதற்கு பதவி மூப்பை நிர்ணயம் செய்ய சேவைக்காலம்தான் அடிப்படையாக எடுத்துக்கொள்ளப் படுகிறதேயன்றி, பரீட்சையில் தேர்வு பெற்ற தேதியல்ல.

(ஈ) ஆம். 1943 ஏப்ரல் வரையில்; அதற்குப் பிறகு பதவி மூப்பானது தொடர்ந்த சேவையின் கால அளவினால் நிர்ணயிக்கப் படுகிறது.

(உ) மேலே (அ) வில் கூறப்பட்டதுபோன்று வெவ்வேறு அச்சகங்களில் - தலைமை அச்சுப்படி திருத்துபவர்களின் சில தேர்வு நிலைப் பதவிகள் நீங்கலாக - ஏற்கனவே செய்யப்பட்டு வருகிறது. மற்றவை தகுதி அடிப்படையில் தேர்வு மூலம் நிரப்பப்பட்டு வரு கின்றன.

# 410

## *புதுடில்லி அரசு அச்சகத்தில் முஸ்லீம் செக்ஷன் தலைவர்களும் மேற்பார்வையாளர்களும்

904. **ஹாஜி சௌதுரி முகம்மது இஸ்மாயில்கான்:** (அ) புது டில்லி இந்திய அரசு அச்சகத்தில் மேற்பார்வையாளர்கள் மற்றும் செக்ஷன் தலைவர்களின் நிரந்தர மற்றும் தற்காலிகப் பதவி களின் மொத்த எண்ணிக்கை எவ்வளவு, அவற்றில் எத்தனை பதவிகளை தற்பொழுது முஸ்லீம்கள் வகிக்கிறார்கள் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) மேற்படி அச்சகத்தில் பல்வேறு மேற்பார்வையாளர் களின் கடமைகளும் செயல்பாடுகளும் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மேற்பார்வை யாளர்கள், 12 செக்ஷன் தலைவர்கள்: ஏழு மேற்பார்வையாளர் பதவிகளில் இரண்டை முஸ்லீம்கள் வகிக்கிறார்கள். ஒன்று காலி யாக உள்ளது. செக்ஷன் தலைவர்களின் 12 உறுப்பினர்களில் நால்வர் முஸ்லீம்கள்.

ஆ. ஒரு மேற்பார்வையாளர் கீழ்வருவனவற்றிற்கு முற்றி லும் பொறுப்பானவர்:

(i) தனக்குக் கீழ் வேலை செய்பவர்களின் பணியின் தரத்தை யும் அளவையும் பராமரிப்பது

(ii) தன் கீழ் உள்ள பிரிவுகளில் வேலை முழுமையாக நடை பெறச் செய்வது;

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 12, 1946, பக்கம் 2242.

iii. வேலைகளை விரைவாக நடத்துவது, சிக்கனமான முறையில் வேலை நடைபெறச் செய்வது;

iv. மிகைநேர உழைப்புக் கோரிக்கைகள் அனைத்தையும் கவனமாக ஆய்வு செய்வது மிகைநேரப் பணியைக் குறைந்தபட்ச அளவிற்குக் கட்டுப்படுத்துவது, மற்றும்

v. பணியாளர்களிடையில் சமத்துவ அளவில் பணி பகிர்ந் தளிக்கப்படும்படிப் பார்த்துக் கொள்வது.

அச்சகத்தில் மிகவும் இரகசியமான, பிறருக்குத் தெரியக் கூடாத பணியின் மீது எல்லாக் கட்டங்களிலும் கறாரான மேற் பார்வைக்குத் தொழில்துறை சாராத மேற்பார்வையாளர் பொறுப் பாவார்.

# 411

## *ராய் சாகிப் சி.பி. மல்லிக்கை பொறியாளராகப் பதவி உயர்வு செய்வது

907. டாக்டர் சர் ஜியா அகமது: (அ) ராய் சாகிப் சி.பி.மல்லிக் கண்காணிப்பு பொறியாளர் பணியைச் செய்து கொண்டிருப்பது சம்பந்தமாக, 1946, பிப்ரவரி 28ம் தேதிய எண் 599 நட்சத்திரக் குறியிட்ட கேள்விக்கு அளித்த பதில் தொடர்பாக, ஒரு நிர்வாகப் பொறியாளராக அவரை நியமனம் செய்யாமலே அப்பணியை அவரைச் செய்யச் செய்வதின் முக்கியத்துவத்தை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து விளக்குவாரா?

(ஆ) நிர்வாகப் பொறியாளர் என்ற பதவியின் கடமை களை நிறைவேற்றும்படி அந்த நபர் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 12, 1946, பக்கம் 2244.

கிறாரா? அப்படியெனில், நிர்வாகப்பொறியாளர் என்ற முறையில் அவர் தமது அறிக்கைகளை கண்காணிப்புப் பொறியாளர் என்ற முறையில் தனக்கே அனுப்பிக் கொள்கிறாரா? அப்படி இல்லை யெனில், அவருடைய அறிக்கைகள் யாருக்கு அனுப்பப்படுகின்றன? பதவியில் நியமனம் செய்யப்படுவதற்கும், அப்பதவிக்குரிய பணியை செய்து கொண்டே போவதற்கும் உள்ள வேறுபாட்டை மாண்புமிகு உறுப்பினர் விளக்குவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) மற்றும் (ஆ) இந்த ஏற்பாட்டின் குறிப்பிடத்தக்க அம்சம் என்னவெனில், அந்த அதிகாரி கண்காணிப்புப் பொறியாளரின் சம்பளம் பெறுவதில்லை. மாறாக, நிர்வாகப் பொறியாளர் என்ற வகையில் தனது கடமைகளோடுகூட, உயர் பதவியின் அன்றாடக் கடமைகளின் நடப்புப் பொறுப்பை வகிப்பதற்காக ஒரு சிறிய தொகையைத் தான் கூடுதல் படியாகப் பெறுகிறார். நிர்வாகப் பொறியாளர் என்ற வகையில் அவருடைய அறிக்கைகள் அவருக்கு அடுத்து உயர் அதிகாரிக்கு, அதாவது தலைமைப் பொறியாளருக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன.

இந்த ஏற்பாட்டுக்கு நிர்வாக விதிகள் மற்றும் வழக்கமான நடைமுறையின் முழு அனுமதி இருக்கிறது.

## 412

## *மத்திய பொதுப்பணித்துறையின் நிர்வாகப் பிரிவில் சில பதவிகளுக்கு முஸ்லீம்களைத் தேடிக்கண்டறிவதற்கான முயற்சிகள்

908. **டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** (அ) நிர்வாக அதிகாரிப் பதவியை ஏற்றுக்கொள்ளும்படி தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 12, 1946, பக்கம் 2244.

ஒரு நபரை அவர் அணுகினரா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயவுசெய்து கூறுவாரா? அப்படியெனில் யார் அந்த நபர்? அதற்கு அவருடைய பதில் என்ன?

(ஆ) ஒரு பொருத்தமான முஸ்லீமை அந்தப் பதவிக்கு கண்டறிவதற்கு அவர் ஏதாவது முயற்சி செய்தாரா?

(இ) மத்தியப் பொதுப்பணித்துறை நிர்வாகப் பிரிவில் அனைத்து அதிகாரிகள் பதவிகளையும் இந்துக்களையும் தாழ்த்தப் பட்ட வகுப்பினரையும் கொண்டு நிரப்புவதற்கு மாண்புமிகு உறுப்பினர் முடிவு செய்துள்ளாரா? இல்லையெனில், நிர்வாக அதிகாரியின் பதவியை நிரப்புவதற்கு பொருத்தமான அதிகாரியைக் கண்டறிவதற்கு அவர் என்ன முயற்சிகளை மேற்கொண்டுள்ளார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இல்லை. இந்தக் கேள்வி எழவில்லை.

(ஆ) இந்தக் கேள்வி எழவில்லை.

(இ) எந்த முடிவும் இன்னும் எடுக்கப்படவில்லை. இந்தப் பதவியை நிரப்பும் பிரச்சினை பரிசீலனையில் இருக்கிறது.

# 413

## *வேலையில்லாத பெண்களை நிலக்கரிச் சுரங்கத்தில் வேலைக்கு அமர்த்துவது பற்றி

1008. **பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கீழ்வரும் கேள்விகளுக்கு பதிலளிப் பாரா:

(அ) நிலக்கரி சுரங்கங்களில் பணியாற்றி வந்த பெண்கள் பிப்ரவரி முதல் தேதியிலிருந்து வேலையில்லாமல் இருக்கிறார்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 12, 1946, பக்கம் 2244.

கள். அவர்களுக்கு மாற்றுவேலை வழங்கப்படுவதற்கு ஏதாவது முயற்சிகள் செய்யப்படுகின்றனவா? அப்படியெனில் அந்த முயற்சிகள் என்ன?

(ஆ) வேலையில்லாதிருக்கும் அந்தப் பெண்களில் சிலருக்கு ஏதாவது வேலை கிடைக்கச் செய்வதற்கு ஒப்பந்தக் காரர்களின் சேவையைப் பயன்படுத்திக் கொள்வதற்கு அரசு அனுமதிக்குமா?

(இ) ஒப்பந்தக்காரர்களால் இந்தப் பெண்களுக்கு எவ்வளவு சம்பளம் கொடுக்கப்படுகிறது?

(ஈ) அந்தக் குடும்பங்களின் ஆண்கள் சுரங்கங்களில் வேலை செய்வதன் காரணமாக, இந்தப் பெண்களை முன்னிட்டு அவர் களின் குடும்பங்களுக்குக் கூடுதலாக அரைசேர் இலவச அரசி, அரைசேர் இலவசப் பால் மற்றும் அரிசி பருப்பு முதலியவை பெறும் சலுகைகளை தொடர்ந்து வழங்குவதற்கு அரசு ஏன் மறுக்கிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 1946 பிப்ரவரி 25 ஆம் தேதிய நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண்.466ன் (ஆ) பாகத் திற்குக் கொடுக்கப்பட்ட பதிலை கவனிக்கும்படி மதிப்பிற்குரிய உறுப்பினர் கேட்டுக்கொள்ளப்படுகிறார்.

(ஆ) கட்டிடம் கட்டுவது, மணலை லாரியில் நிரப்புவது, லாரியிலிருந்து இறக்குவது, செங்கல்செய்வது முதலிய வேலை களுக்கு ஒப்பந்தக்காரர்கள் நியமிக்கப்படுகிறார்கள்; நிலத்தடியில் வேலைசெய்வதற்கு விலக்கப்படும் சில பெண்கள் இதுபோன்ற பணிகளுக்கு அமர்த்தப்படுகிறார்கள்; இப்பணிகளெல்லாம் எப் போதும் குத்தகைக்கே விடப்படுகிறது.

(இ) இவ்வாறு வேலைக்கு அமர்த்தப்படும் பெண்களின் ஊதியம் ஒருநாளைக்கு 10-12 அணாக்களாகும்; அரைசேர் இலவச அரிசி இதில் சேரவில்லை. ஒவ்வொரு நாள் வருகைக்கும் 2 அணா போனஸாகக் கொடுக்கப்படுகிறது.

(ஈ) கூடுதல் ரேஷன் சலுகைகள் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளிகளுக்கு மட்டும் வழங்கப்படுகிறது.

நிலக்கரி சுரங்களில் நிலத்தடியில் வேலைக்கு அமர்த்தப்படும் பெண்தொழிலாளிகளுக்கு இலவசபால் வழங்கும் சலுகையானது, நிலத்தடியில் அவர்களை வேலைக்கமர்த்துவதற்கு இருந்த தடை நீக்கப்பட்டது சம்பந்தமாக, ஒரு நஷ்டஈடு நடவடிக்கையாக வழங்கப்பட்டது. 1946 பிப்ரவரிமுதல் தேதியிலிருந்து அந்தத் தடை மீண்டும் விதிக்கப்பட்டதன் விளைவாக அந்தத் தேதியிலிருந்து அந்தசலுகை ரத்து செய்யப்பட்டது.

**பேராசியர். என்.ஜி.ரங்கா:** அரிசியும் பருப்பும் வாங்குவதிலான சலுகை சம்பந்தமாக, முன்பு நிலத்தடியில் வேலை செய்து, இப்பொழுது மேற்பரப்பில் வேலைசெய்கிற பெண்கள் விஷயத்தில் அது இப்பொழுதும் ஏன் நீடிக்கப்படக் கூடாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்;** நான் என்னுடைய பதிலில் கூறியதுபோன்று, அவர்கள் நிலத்தடியில் வேலை செய்து வந்தபோது அந்தச் சலுகைகள் வழங்கப்பட்டன. அந்தத் தடை மீண்டும் விதிக்கப்பட்டவுடனே, இந்த நஷ்டஈட்டுச் சலுகை தொடர்ந்து வழங்கப்படுவதற்கு எவ்வித நியாயமும் கிடையாது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** மாண்புமிகு உறுப்பினரின் செயலாளர், சமீபத்தில், இந்த ஒப்பந்தக்காரர்களின் அடாவடிகளிலிருந்து தொழிலாளர்களைப் பாதுகாக்கப்பதற்காக சில பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்று கூறியிருந்தார். அவர்கள் சுரண்டப்படுவதினின்று இந்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுவதாக நாம் கருதலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** யார் அதைக் கூறினார்கள் என்று எனக்குத் தெரியவில்லை.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** ஒப்பந்தக்காரர்கள் இங்கு நியமிக்கப்படுவதாகவும், அவர்களின் மூலமாக இந்தப் பெண்கள் வேலைக்கு அமர்த்தப்படுவதாகவும் மாண்புமிகு உறுப்பினரின் செயலாளர் திரு.ஜோஷி கூறினார். இந்த ஒப்பந்தக்காரர்களால் பெண்கள் சுரண்டப்படாமல் தடுக்கப்படுவதற்கு அரசு போதிய நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது என்று நாம் கருதலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒரு திட்டவட்டமான கேள்வியை கேட்டால், அதற்கு பதிலளிக்க முடியும்.

*திவான் சமன்லால்:* தொழிலாளிகளுக்கு நியாயமான சம்பளங்கள் கொடுக்கப்படவேண்டுமென்ற ஒரு விதியை ஒப்பந்தத்தில் சேர்க்க வேண்டுமென்று அரசு வலியுறுத்தியுள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* எனக்குத் தெரிந்துள்ள தகவலின்படி அந்த விதி ஒப்பந்தங்களில் சேர்க்கப் பட்டுள்ளது.

*திரு. மனு சுபேதார்:* ஒப்பந்தக்காரர்கள் அகற்றப்பட்டு தொழிலாளர்கள் நேரடியாகவேலைக்கு அமர்த்தப்படும் பிரச்சினையைப் பரிசீலிப்பதற்கு அரசு பொதுவாக என்ன நடவடிக்கைகளை எடுத்து வருகிறது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த விஷயம் பரிசீலனையில் இருக்கிறது.

*திவான் சமன்லால்:* இந்தப் பெண் தொழிலாளிகளின் ஒப்பந்தங்களில் நியாயமான சம்பள விதி சேர்க்கப்படுவது சம்பந்தமான என் கேள்வி?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதுவரையிலும் அது செய்யப்படவில்லை. அதைப் பரிசீலனை செய்யலாம்.

# 414

## *லட்சுமணதீர்த்தம் நதியின் குறுக்கே ஓர் அணை கட்டப்படுவது பற்றி

1009. *திரு. டி.பி. கார்மர்க்கர்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து பின்வரும் கேள்விகளுக்கு பதிலளிப்பாரா:

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1946, மார்ச் 15, பக்கம்.2459.

*(அ) குடகில் லட்சுமண தீர்த்தம் நதியின் குறுக்கே ஓர் அணையைக் கட்டும் விஷயம் பரிசீலக்கப்படுகிறதா? சுமார் 30,000 ஏக்கர் நிலத்திற்கு நீர்ப்பாசனம் கிடைக்கும் என்ற எதிர்பார்ப்பில் இந்தத் திட்டம் மேற்கொள்ளப்படுகிறதா?*

*(ஆ) இந்தத் திட்டத்திற்கு மைசூர் அரசு ஆட்சேபனைகள் எழுப்பியுள்ளதா?*

*(இ) குடகின் பிரதம ஆணையர், இந்த விஷயம் சம்பந்தமாக இந்திய அரசுக்குத் தெரிவித்திருக்கிறாரா?*

*(ஈ) இந்த விஷயத்தில் இந்திய அரசு ஒரு முடிவுக்கு வந்துள்ளதா? அப்படியெனில், அந்த முடிவு என்ன? இன்னும் முடிவு செய்யாவிட்டால், அந்தத் திட்டத்தை குடகு அரசு விரைவாக நிறைவேற்ற வகை செய்வதற்கு விரைவில் ஒரு முடிவு செய்ய அரசு உத்தேசித்துள்ளதா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம், ஆனால் 1942ல் தயாரிக்கப்பட்ட அந்தத் திட்டம் சுமார் 3000 ஏக்கர்களுக்கு மட்டுமே பாசன வசதி அளிக்கும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது.*

*(ஆ) தகவல் கிடைக்கவில்லை. அது பற்றிக் கேட்கப்பட்டுள்ளது.*

*(இ) மற்றும் (ஈ) இந்தத் திட்டம் ஆய்வு செய்யப்பட்டது. சில தொழில்நுட்ப அம்சங்களில் குறைபாடு உள்ளது என்று கண்டறியப்பட்டுள்ளது. குடகின் பிரதம ஆணையர், தொழில்நுட்ப ஆலோசனையின் பேரில் திட்டத்தைத் திருத்துமாறும், மேலும் அண்டை சமஸ்தானத்திற்கு, அதை நிறைவேற்றுவதில் ஏதேனும் ஆட்சேபனை இருக்கிறதா என்று விசாரிக்கும்படியும் கேட்டுக் கொள்ளப்பட் டிருக்கிறார். திருத்தப்பட்ட திட்டம் குடகு நிர்வாகத்தின் யுத்தப் பிற்கால ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டிருந்த போதிலும் இன்னும் குடகின் பிரதம ஆணையரிடமிருந்து கிடைக்கப் பெறவில்லை.*

# 415

## *வேலைவாய்ப்பு மற்றும் மறுவாழ்வு இயக்கத்தின் செலவுக்கு நிதி ஒதுக்குதல்

*1017.* **திரு. வாதிலால் லல்லுபாய்:** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து பின்வரும் கேள்விகளுக்கு பதிலளிப்பாரா:

(அ) வேலைவாய்ப்பு மற்றும் மறுவாழ்வு இயக்கத்தின் செலவுக்கு ஒதுக்கப்பட்டுள்ள நிதி எவ்வளவு? மையத்திற்கும், பிராந்திய மையங்களுக்கும் தனித்தனியாக எவ்வளவு?

(ஆ) வெவ்வேறு மையங்களில் ஊழியர்களின் எண்ணிக்கை என்ன?

(இ) இந்த மையங்களில் வேலைக்காகப் பதிவு செய்து கொண்டுள்ள முன்னாள் படைவீரர்கள் எத்தனை பேர்?

(ஈ) இந்த முன்னாள் படைவீரர்களில் எத்தனை பேருக்கு இந்த இயக்ககத்தினால் பொருத்தமான வேலை வழங்கப்பட்டுள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இந்தக் கேள்வி தெளிவாக இல்லை. இருந்தபோதிலும், 1946 - 47 ஆண்டின்போது மறுவாழ்வு மற்றும் வேலைவாய்ப்பு தலைமை இயக்ககத்தின் இயக்கக மற்றும் நிர்வாக ஊழியர்களின் வருடாந்திர மதிப்பீடு செலவை மாண்புமிகு உறுப்பினர் தெரிந்து கொள்ள விரும்புகிறார் என்று நினைக்கிறேன். அது கீழ்வருமாறு :

| | |
|---|---|
| தலைமை நிலையம் | - ரூ. 27,14,800 |
| பிராந்திய மையங்கள் | - ரூ. 1,08,32,500 |
| மொத்தம் | - ரூ. 1,35,47,300 |

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1946, மார்ச் 15, பக்கம் 2468.

மேல்விவரங்களுக்கு 1946- 47 க்கான வரவு-செலவு மதிப்பீடுகளைப் பார்க்கும்படிக் கேட்டுக்கொள்ளப்படுகிறது. பிராந்திய மற்றும் துணைப் பிராந்திய வேலைவாய்ப்பு நிலையங்களின் செலவுகள் மையத்திற்கும் மாகாணங்களுக்கும் இடையில் முறையே 60-40 என்ற விகிதத்தில் பகிர்ந்து கொள்ளப்படுகிறது.

(ஆ) இந்த அமைப்பின் மத்திய மற்றும் பிராந்தியப் பகுதிகளுக்கு அனுமதிக்கப்பட்டுள்ள பணியிடங்கள், அவற்றில் இதுவரை நிரப்பப்பட்டுள்ள பதவிகள் ஆகியவற்றைக் காட்டும் விரிவான அறிக்கைகள், 1945 ஜூலை 18 லிருந்து டிசம்பர் 31 முடிய உள்ள காலகட்டத்திற்கான மறுவாழ்வு மற்றும் வேலைவாய்ப்புத் தலைமை இயக்ககத்தின் செயல்பாட்டு அறிக்கையின் அட்டவணை-1ல் கொடுக்கப்பட்டுள்ளன. அதனுடைய ஒரு நகல் அவையின் நூலகத்தில் வைக்கப்பட்டுள்ளது.

(இ) இராணுவச் சேவையிலிருந்து பணிவிடுப்பு பெற்றவர்கள் மட்டுமன்றி போர் சம்பந்தமான தொழில்களிலிருந்து வெளியேற்றப் பட்ட தொழிலாளர்களையும் பதிவுசெய்யவும், அவர்களைப் பொருத்தமான பணிகளில் அமர்த்தவும் பொறுப்புடையவை வேலை வாய்ப்பு நிலையங்களாகும். வேலைவாய்ப்பு நிலையங்களிலும் மறுவாழ்வு மற்றும் வேலைவாய்ப்பு நிலையங்களிலும் 1945 டிசம்பர் 31 வரை பதிவுசெய்துகொண்ட நபர்களின் மொத்த எண்ணிக்கை 50,658. இவர்களில் 29,925 பேர் முன்னாள் படைவீரர்களாவர். இராணுவ சேவையிலிருந்து பணிவிடுப்பு செய்யப்படும் இரண்டாவது கட்டம் 1945 நவம்பர் 15ல்தான் தொடங்கியது என்பதை இது சம்பந்தமாக சுட்டிக்காட்டப்பட வேண்டும். ராணுவ சேவையிலிருந்து வெளியே அனுப்பப்படுவது பற்றிய முன்னறிவிப்புப்படி, 1947 மார்ச் இறுதி வரையில் சுமார் 15,00,000 நபர்கள் வெளியில் அனுப்பப்படுவார்கள். இவர்களில் எத்தனை பேர்களுக்கு மறுவாழ்வு மற்றும் வேலைவாய்ப்பு உதவி தேவைப்படும் என்பதை இந்தக் கட்டத்தில் மதிப்பிடுவது சிரமமானதாகும்.

ஈ. 1945 டிசம்பர் 31 வரையில் வேலைவாய்ப்பு நிலையங்கள் மற்றும் மறுவாழ்வு வேலைவாய்ப்பு நிலையங்களினால் வேலையில் அமர்த்தப்பட்ட நபர்களின் மொத்த எண்ணிக்கை 9,516. இவர்களில் 2841 பேர் முன்னாள் படைவீரர்கள்.

# 416

## *முஸ்லீம்கள் மற்றும் முஸ்லீமல்லாதவர்களுக்கு மத்திய பொதுப்பணித்துறையால் வழங்கப்பட்ட ஒப்பந்தப் பணிகள்

1021. சேத் யூசுப் அப்துல்லா ஹரூன்: முஸ்லீம் அல்லது முஸ்லீமல்லாத ஒப்பந்தக்காரர்களுக்கு, கடந்த மூன்று ஆண்டுகளில் தற்போதைய செயற்பொறியாளர்களால், அல்லது அவர்களுக்கு முன்னால் பதவி வகித்தவர்களால் கட்டட நிர்மாணப் பிரிவு HI புதுடில்லி, 'ஏ' பிரிவு புதுடில்லி, 'பி' பிரிவு, மாகாண பிரிவு மற்றும் புதுடில்லியில் மத்திய பிடபிள்யூடியின் நெ.1. சிறப்புப் பிரிவு ஆகியவற்றில் ஒப்பந்தப் புள்ளிகளினாலும், பணி உத்தரவுகளாலும் வழங்கப்பட்ட ஒப்பந்தப் பணிகளின் தொகையைக் காட்டும் ஓர் ஒப்பீட்டு அறிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து இந்த அவையில் சமர்ப்பிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: கேட்கப்பட்டுள்ள தகவல் உடனடியாகக் கைவசம் இல்லை. அதனைச் சேகரிப்பதற்குத் தேவைப்படுகிற காலமும் உழைப்பும், அதனுடைய பயனின் மதிப்புக்கு உகந்ததாக இருக்காது.

சேத் யூசுப் அப்துல்லா ஹரூன்: இந்தத் தகவலை வெளிப்படுத்துவதற்கு அவர் ஏன் தயாரில்லை என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரிடமிருந்து நான் தெரிந்து கொள்ளலாமா? இந்தப் பிரிவில் முஸல்மான்களுக்குக் கொடுக்கப்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1946, மார்ச் 15, பக்கம் 2472.

பட்டுள்ள ஒப்பந்தங்கள் மிகவும் குறைவானவை என்று எனக்குத் திட்டவட்டமான தகவல் உண்டு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய உறுப்பினரிடம் தகவல் இருந்தால், பின்னர் ஏன் அவர் எனக்குத் தொந்தரவு தருகிறார் என்று எனக்குத் தெரியவில்லை?

**சேத் யூசுப் அப்துல்லா ஹரூன்:** மாண்புமிகு உறுப்பினருக்கு நான் தொந்தரவு கொடுப்பதற்குக் காரணம் எங்களுடைய நலன் பாதிக்கப்படுகிறது என்பதால்தான். மாண்புமிகு உறுப்பினரின் துறையினால் முஸ்லீம்கள் புறக்கணிக்கப்பட்டு வருகிறார்கள். அந்த நிலைமையை இந்த அவையில் வெளிப்படுத்துவதற்கு நான் விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் கொடுத்துள்ள பதிலுக்கு மேல் மேற்கொண்டு எதுவும் கூறுவதற்கில்லை.

**சேத்யூசுப் அப்துல்லா ஹரூன்:** மாண்புமிகு உறுப்பினர் பின் ஒரு சமயத்தில் இந்த அவையில் அந்தத் தகவலை சமர்ப்பிக்க முன்வருவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னால் அதைச் செய்யமுடியாது.

**திரு. ஸ்ரீ பிரகாசா:** மாண்புமிகு உறுப்பினர் நிதானமிழந்து விட்டாரா?

**திரு. தலைவர்:** அமைதி, அமைதி. அடுத்த கேள்வி.

# 417

## *புதுடில்லியில் உள்ள கிழக்கித்திய மற்றும் மேற்கத்திய இல்லங்களை இந்திய அரசு விற்பதைப் பற்றி

*1131. சேத் கோவிந்த தாஸ்:* மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தயைகூர்ந்து கீழ்வரும் கேள்விகளுக்கு பதிலளிப் பாரா?

அ. முறையே கர்ஸான் சாலையிலும் அசோகா சாலை யிலும் உள்ள மேற்கத்திய மற்றும் கிழக்கத்திய இல்லங்களை விலைக்கு வாங்கும்படி இந்திய அரசின் மீது பிரிட்டிஷ் அரசு நிர்ப்பந்தம் செலுத்தி வருகிறது என்று 1946 பிப்ரவரி 4ம் தேதிய இந்துஸ்தான் டைம்ஸ் பத்திரிகையில் வந்துள்ள செய்தி அரசின் பார்வைக்கு வந்ததா? அப்படியெனில், இந்திய அரசு அதற்கு என்ன பதில் கொடுத்தது; மற்றும்

(ஆ) அதற்கு அரசு பெற்றுள்ள விலை வாங்கிய விலையின் ஒரு சிறுபகுதியாகவே இருக்கும் என்பதை இந்திய அரசு கவனத் தில் கொள்ளுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம். இது தொடர்பாக 1946, பிப்ரவரி 8ல், மாண்புமிகு திரு.வெங்கட சுப்பா ரெட்டியாரின் குறுகியகாலக் கேள்வி எண் 23ன் (அ) மற்றும் (ஆ) பிரிவுகளுக்கு நான் அளித்த பதிலைத் திருப்பிப் பார்க்கும்படி மதிப்பிற்குரிய உறுப்பினரை கேட்டுக்கொள்கிறேன்.

(ஆ) வாங்கும் விலை இன்னும் முடிவு செய்யப்படவில்லை. ஆனால், கட்டிடம் இடிக்கப்பட்டதற்குப் பின்னர், பொருள்களின்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1946, மார்ச் 15, பக்கம் 2472.

விலை கட்டிடத்தின் விலையுடன் ஒப்பிடும்போது மிகவும் சிறிய தொகையாக இருக்கும்.

திரு. அகமது இ.எச். ஜாபர்: (அ) பகுதிக்கு மாண்புமிகு உறுப்பினர் 'ஆம்' என்று பதிலளித்தார். அப்படியெனில், பிரிட்டிஷ் அரசிடமிருந்து நிர்ப்பந்தம் வந்தது ஒன்று இதற்குப் பொருளாகுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை.

திரு. அகமது இ.எச். ஜாபர்: (அ) பிரிவுக்கு 'ஆம்' என்று அளித்த பதிலின் பொருள் என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்துஸ்தான் டைம்ஸில் வந்த செய்தியை நான் பார்த்தேன் என்று அதற்குப் பொருள்.

திரு. அவைத்தலைவர்: அடுத்த கேள்வி.

# 418

## *அலிகார் அரசு அச்சகத்தில் மேற்கொள்ளப் போவதாக அறிவிக்கப்பட்டுள்ள வேலை நிறுத்தம் பற்றி

*1134. திரு.மோகன்லால் சாக்சேனா: (அ) அலிகாரிலுள்ள அரசு அச்சக ஊழியர்கள் வேலைநிறுத்த அறிவிப்புக் கொடுத்துள்ளது மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா?

(ஆ) அந்த ஊழியர்களுக்கு மாதச் சம்பளமாக ரூ.12, ரூ.14, ரூ.15 என்று கொடுக்கப்படுவது உண்மையா?

(இ) சம்பளம், வசதிகள், வேலைநேரம், ரேஷன் வழங்கீடு சம்பந்தமான அவர்களுடைய இதர கோரிக்கைகளைப் பற்றியும் அவர் அறிவாரா?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1946, மார்ச் 21, பக்கம் 2691.

(ஈ) தொழிலாளர்களின் கோரிக்கைகளை நிறைவேற்று வதற்கு இந்திய அரசு என்ன நடவடிக்கை மேற்கொண்டுள்ளது? அல்லது மேற்கொள்வதற்கு உத்தேசித்துள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) ஆம். ஊழியர்களில் சில பிரிவினருக்கு.

(இ) ஆம்.

(ஈ) கோரிக்கைகள் பற்றி கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இது சம்பந்தமாக, 1946, மார்ச் 12 அன்று நட்சத்திரக் குறியிட்ட எண். 896 கேள்விக்கு அளிக்கப்பட்ட பதில் மதிப்பிற்குரிய உறுப் பினரின் கவனத்திற்கு கொண்டுவரப்படுகிறது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** இந்தக் கேள்வியின் (ஆ) பிரிவு சம்பந்தமாக, இந்தத் தொழிலாளர்களில் எத்தனை பேருக்கு மாதம் ரூ.12 அல்லது ரூ.14 அல்லது ரூ.15 மட்டுமே வழங்கப்படுகிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னிடத்தில் இப்பொழுது இது சம்பந்தமான விவரங்கள் இல்லை.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** இவ்வளவு மிகவும் குறைந்த சம்பளம் வழங்கப்படும் இந்தத் தொழிலாளர்களின் ஊதியங்களை உயர்த்துவதும் அரசின் பிரேரணைகளில் ஒன்றா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பிரச் சினையைப் பொதுவாகப் பரிசீலனை செய்வதற்கு அரசு சம்பளக் கமிஷன் ஒன்றை நியமித்திருப்பதை என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் அறிவார்.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** மிகவும் கீழ்மட்டத் திலுள்ள ஊழியர்களுக்கே அலிகார் பல்கலைக்கழகம் மாதம் குறைந்தபட்ச சம்பளமாக ரூ.30/- வழங்குவதை மாண்புமிகு உறுப் பினர் அறிவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது சம்பந்தமாக என்னுடைய மதிப்பிற்குரிய நண்பரை நான் பாராட்டுகிறேன்.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** இது எனக்குப் பாராட்டோ அல்லது உங்களுக்கு இரங்கல் தெரிவிக்கும் பிரச்சினையோ அல்ல. இது உயிர் வாழ்வதற்கான மிகக் குறைந்த பட்ச ஊதியமாகும். நமது சொந்த ஊழியர்களை நாமே பட்டினி போடக்கூடாது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** மாதம் ரூ.12,14,15 என உள்ள பரிதாபகரமான சம்பளங்களை அதிகரிப்பது பற்றி பரிசீலிப்பதற்கு முன்னால் பொதுவாக எல்லா ஊழியர்களின், இந்திய அரசு ஊழியர்களின் சம்பளங்கள் சம்பந்தமான கமிஷனின் அறிக்கைக்காக அரசு காத்திருக்க வேண்டியது அவசியம்தானா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரே சீரான கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்ட ஒரு பொதுவான கொள்கை வேண்டும் என்பதே அரசின் எண்ணமாகும். இந்தப் பிரச்சினையை ஒரு கமிஷன் பரிசீலனை செய்தாலன்றி, அந்தக் கொள்கையை நடைமுறைப்படுத்த முடியாது.

**சேத் கோவிந்த தாஸ்:** எந்தத் தேதிக்குள் கமிஷனின் அறிக்கை கிடைக்கும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுபற்றி என்னால் கூற முடியாது. ஆனால் இவ்விஷயத்தை துரிதப்படுத்துவதற்கு அரசு எண்ணியுள்ளது.

**சேத் கோவிந்ததாஸ்:** அது வருவதற்குள் இந்தத் தொழிலாளர்கள் பட்டினி கிடக்க நேரிடும். அதுவரையிலும் இந்தத் தொழிலாளர்கள் தொடர்ந்து மாதம் ரூ.12, 14 அல்லது ரூ.15 மட்டும் பெற்றுக் கொண்டிருக்க வேண்டுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசுக்கு அத்தகைய எண்ணம் ஒன்றும் கிடையாது.

திரு. மோகன்லால் சாக்சேனா: பரிந்துரைகள் கிடைக்கும் வரையிலும் அவர்களுக்கு ஏதாவது தற்காலிக நிவாரணம் வழங்குவது உகந்தது என்று அரசு கருதுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் ஏற்கனவே கூறியது போன்று, கோரிக்கைகள் கவனிக்கப்பட்டு வருகின்றன.

திரு. மோகன்லால் சாக்சேனா: இதுபற்றி முடிவு செய்வதற்கு அரசுக்கு எவ்வளவு காலம் பிடிக்கும்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயம் தீவிரமாகக் கவனிக்கப்பட்டு வருகிறது.

திரு. மோகன்லால் சாக்சேனா: பிற இடங்களிலும் அச்சகத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் இறங்கியிருக்கிறார்கள் என்பது உண்மையல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். அது உண்மைதான். ஆனால் அவர்கள் வேறு இடங்களில் வேலை செய்கிறார்கள் என்று அறிகிறேன்.

திரு. மோகன்லால் சக்சேனா: அவர்கள் வேலைநிறுத்தத்தில் இறங்கும்படியான நிர்ப்பந்தத்திற்கு உள்ளாவதற்கு முன்னால், மாண்புமிகு உறுப்பினர் அவர்களுக்குத் தற்காலிக நிவாரணம் கிடைக்கச் செய்வாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எத்தகைய கால வரம்பையும் நான் அளிக்க இயலாது.

திரு. அகமது இ.எச். ஜாபர்: என்னுடைய மாண்புமிகு நண்பர்களைப் பொறுத்தமட்டிலும் ‘தீவிரமாகப் பரிசீலிக்கப்பட்டு வருகிறது’’ என்ற சொற்கள் வழக்கமாகக் காலவரம்பு எதுவும் கிடையாது என்பதை வழக்கமாகக் குறிப்பிடுவதாகும் என்பது உண்மையல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் அவ்வாறு கருதவில்லை.

# 419

## *நிலக்கரிச் சுரங்கங்களில் பெண் தொழிலாளிகளுக்கு மேற்பரப்பில் வேலை

*1138*. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து பின்வரும் கேள்விகளுக்கு பதிலளிப்பாரா?

(அ) நிலக்கரிச் சுரங்களில் நிலத்தடி பணியிலிருந்து விடு விக்கப்பட்ட 20,000 பெண் தொழிலாளிகளில் எவ்வளவு பேருக்கு மேற்பரப்பில் வேலை கொடுக்கப்பட்டுள்ளது?

(ஆ) அரசு ரயில்வே நிலக்கரிச் சுரங்கங்களில் இருந்து விடுவிக்கப்பட்ட பெண்களில் எத்தனை பேருக்கு மேற்பரப்பில் நிரந்தர அடிப்படையில் முழு வேலை கிடைத்துள்ளது என்பதை யும், எவ்வளவு பேருக்கு வாரத்தில் 6 நாட்கள் வேலை கிடைத் துள்ளது என்பதையும், மற்றும்

(இ) இந்தப் பெண்களில் எத்தனை பேருக்கு, 1946, பிப்ரவரி 25ம் தேதிய எண், 466, நட்சத்திரக் குறியிட்ட கேள்விக்கு அளித்த பதிலில் குறிப்பிட்டிருந்த நல்வாழ்வு நிதியத்தினால் வேலை அளிக்கப்பட்டிருக்கிறது என்பதையும் எவ்வளவு பேருக்கு மாகாண அரசுகளால் வேலை கொடுக்கப்பட்டுள்ளது என்பதையும் விசா ரித்துத் தெரிவிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அ. திட்டவட்ட மான புள்ளிவிவரங்கள் கைவசமில்லை; ஆனால், நிலக்கரி சுரங் கங்களில் நிலத்தடிப் பணியிலிருந்து விடுவிக்கப்பட்ட பெண்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1946, மார்ச் 21, பக்கம் 2696.

தொழிலாளிகளில் ஏறத்தாழ 50 சதவீதத்தினருக்கு மேற்பரப்பில் வேலை கொடுக்கப்பட்டுள்ளது. எஞ்சியுள்ள 50 சதவீதத்தில் பாதிப்பேர் தங்கள் கிராமங்களுக்குப் போய்விட்டனர். மீதியுள்ளவர்களில் சிலர் சுரங்கங்களிலேயே உள்ளிருப்பு வேலைநிறுத்தம் செய்து வருகின்றனர். ஏனெனில் அவர்கள் ஒப்பந்தப் பணியை, உதாரணமாக, நிலக்கரியை வாகன்களில் ஏற்றும் பணியைச் செய்ய மறுத்து வருகின்றனர்.

(ஆ) அரசு ரயில்வேக்களுக்குச் சொந்தமான நிலக்கரிச் சுரங்கங்களில் நிலத்துக்கு அடியிலான பணிகளிலிருந்து விடுவிக்கப்பட்ட அனைத்துப் பெண்களும் மேற்பரப்புப் பணிகளில் நிரந்தர அடிப்படையில் பூரணமாக வேலைக்கமர்த்தப்பட்டுள்ளனர்; 1,060 பெண்கள் வாரத்திற்கு ஆறுநாள் வேலை அடிப்படையில் அமர்த்தப்பட்டுள்ளனர்.

(இ) நல்வாழ்வு நிதியத்தினால் இன்னும் பெண்கள் யாரும் வேலைக்கு அமர்த்திக் கொள்ளப்படவில்லை; ஆனால் ஜாரியா மற்றும் ராணிகஞ்ச் நிலக்கரி வயல்களில் காய்கறித் தோட்டங்களும் பண்ணைகளும் உருவாக்கப்படுவதற்கு நிலங்கள் ஆர்ஜிதப்படுத்தப்பட்டு வருகின்றன. அவை ஆர்ஜிதப்படுத்தப்பட்டதற்குப் பின்னர், நிலத்துக்கு அடியிலான பணிகளிலிருந்து விடுவிக்கப்பட்ட பெண்களை, நல்வாழ்வு நிதியத்தினால் நியமிக்கப்படும் தலைமை ''மாலிஸ்களின்'' கீழ்வேலைக்கு அமர்த்த எண்ணியுள்ளோம். மாகாண அரசுகளால் வேலைக்கு அமர்த்தப்படவிருக்கும் பெண்களின் எண்ணிக்கை பற்றி தற்பொழுது தகவல் இல்லை.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** ஒப்பந்தப் பணியின் நிபந்தனைகளின் கீழ் வேலைசெய்வதற்கு விரும்பாமல் வீட்டிலேயே தங்கியிருக்க வேண்டிய நிலைமையிலுள்ள பெண்கள் சம்பந்தமாக, இந்த ஒப்பந்தக்காரர்களின் தொடர்பு இல்லாமல் அவர்களுக்கு ஏதாவது வேலையளித்து உதவி செய்வதற்கு அரசு என்ன நடவடிக்கைகளை மேற்கொள்ள உத்தேசித்துள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதற்கு நான் உடனே பதிலளிக்க இயலாது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** இந்த ஒப்பந்தக்காரர்களின் தொடர்பில்லாமல் தொழிலாளர்களுக்கு வேலை வழங்குவதற்கு அரசு ஏன் தவறுகிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசு ரயில்வேக்குச் சேர்ந்த நிலக்கரி வயல்களில் இந்த நடைமுறை நீண்ட காலமாக இருந்து வருகிறது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** தொழிலாளர் சம்பந்தப்பட்ட ராயல் கமிஷன் ஒப்பந்த முறைக்கு எதிராக மிகவும் கடுமையாக அபிப்பிராயம் தெரிவித்திருப்பது உண்மையல்லவா? இந்த ஒப்பந்தக்காரர்களின் வக்கிரங்களைக் கட்டுப்படுத்துவதற்கு ஏதாவது ஒரு வழிமுறையை மாண்புமிகு உறுப்பினர் உருவாக்குவாரா? இந்தப் பெண்களுக்கு வேலைவாய்ப்பு அளிப்பதற்கு வேறு ஏதாவது வழிமுறையை வகுக்க அரசு ஏன் அவசர நடவடிக்கைகளை மேற்கொள்ளக்கூடாது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விஷயம் சம்பந்தமாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட முடியும் என்று நம்புகிறேன்.

**திரு. அகமது இ.எச். ஜாபர்:** இந்தியாவில் சுற்றுப்பயணம் செய்யவிருக்கும் நிலக்கரிக் கமிஷன் முன்னால் இதை சமர்ப்பிக்கும் பிரச்சினையை மாண்புமிகு அமைச்சர் பரிசீலனை செய்வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவ்வாறு செய்யமுடியுமா என்று எனக்குத் தெரியவில்லை. சம்பந்தப்பட்ட துறையின் கவனத்திற்கு இந்த விஷயத்தை நான் எடுத்துச் செல்ல முடியும்.

# 420

## *சி.பி.டபிள்யூ.டி அதிகாரிகளின் உறவினர்களாக உள்ள ஒப்பந்தக்காரர்களுக்குத் தடை விதிப்பது பற்றி

*1143.* திரு. சத்திய நாராயண சின்ஹா : (அ) தனது துறையில் பணியாற்றும் எந்த ஒரு அதிகாரிக்கும் நெருக்கமான உறவினராக இருக்கும் எந்த ஒப்பந்தக்காரருக்கும் பணி ஒப்பந்தம் வழங்கப்படக்கூடாது என்று மத்தியப்பொதுப் பணித்துறையில் உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டிருப்பது உண்மையா என்று மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து கூறுவாரா?

(ஆ) நெருக்கமான உறவினர்களில் ஒன்றுவிட்ட சகோதரர்கள், மைத்துனர் முதலியவர்களும் அடங்குவர் என்பது உண்மையா? மற்றும், அதிகாரி என்றால், இந்த உத்தரவைப் பொறுத்தமட்டிலும் தலைமை எழுத்தர்கள், எழுத்தர்கள், உறு வரைபடங்கள் எழுதுபவர்கள், நில அளவையாளர்கள் முதலியவர்களும் அடங்குவர் என்பது மெய்யா?

(இ) ஏன் அந்த உத்தரவு பிறப்பிக்கப்பட்டது? இந்த உத்தரவின் விளைவாக எத்தனை ஒப்பந்தக்காரர்கள் பட்டியலிலிருந்து அகற்றப்பட்டுள்ளனர்?

(ஈ) மாகாணங்களிலோ அல்லது பிற நாடுகளிலோ அல்லது இந்தியாவில் ராணுவ பொறியியல் பணித்துறை, ரயில் வேக்கள் போன்ற இலாகாக்கள் நகரசபை அல்லது மாவட்ட மன்றங்கள் ஆகியவற்றின் பொதுப் பணித்துறையின் செயல்பாட்டில் இத்தகைய ஏதாவது விதி இருந்து வருகிறதா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 21, 1946, பக்கம் 2700.

(உ) இந்த உத்தரவு இந்திய அரசின் ஆணைகளின்படி வெளியிடப்பட்டதா? அல்லது மத்திய பி.டபிள்யூ.டி.யின் பிரதமப் பொறியாளர் தனது சொந்த முன்முயற்சியின் பேரில் வெளியிடப் பட்டதா?

(ஊ) இலாகாவில் பணியாற்றுகின்ற மற்றவர்களுக்கு உற வினராயிருக்கும் பாவத்திற்காக தண்டிக்கப்படும் நபர்கள் மிகவும் கஷ்டப்படுவதை முன்னிட்டு அந்த உத்தரவை மறுபரிசீலனை செய்வதற்கும், அதை வாபஸ் பெறுவதற்கும் அரசு உத்தேசித்துள் ளதா? இல்லாவிட்டால், ஏன் அவ்வாறு செய்யவில்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம்.

(ஆ) 'நெருக்கமான உறவினர்' என்ற சொல்லில், முதலாவது ஒன்றுவிட்ட சகோதரர் மற்றும் மைத்துனரும் அடங்குவர்.

'அதிகாரி' என்ற சொல்லில், இந்த உத்தரவின் நோக்கத்திற்கு அரசிதழ் பதிவுபெறாத ஊழியர்கள் அடங்க மாட்டார்கள்.

(இ) மத்தியப் பொதுப் பணித்துறையின்பால் மக்களின் கூடுதல் நம்பிக்கையை உறுதிப்படுத்துவதே இதன் நோக்கமாகும்.

அங்கீகரிக்கப்பட்ட ஒப்பந்தக்காரர்களின் பட்டியலிலிருந்து இதுவரையில் 25 ஒப்பந்தக்காரர்களின் பெயர்கள் நீக்கப்பட்டுள் ளன. மற்றவர்களின் விஷயம் பரிசீலனையில் இருக்கிறது.

(ஈ) இந்த விஷயம் சம்பந்தமாக விசாரணை செய்யப் படவில்லை. பிற இலாகாக்களிலோ அல்லது நாடுகளிலோ இத்தகைய விதிகள் இருக்கின்றனவா என்பது இந்திய அரசுக்குத் தெரியாது.

(உ) இந்திய அரசின் ஆணையின்பேரில்.

(ஊ) இந்த விஷயம் அரசின் பரிசீலனையில் இருக்கிறது.

# 421

## *குடும்ப பட்ஜெட் விசாரணைகள் மீதான அறிக்கை

*1156. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார் : (அ)* சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் தொடங்கிய குடும்ப பட்ஜெட் விசாரணைகள் பற்றிய அறிக்கைகளை எப்பொழுது வெளியிட உத்தேசித்துள்ளார் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் தயவுகூர்ந்து தெரிவிப்பாரா?

(ஆ) விசாரணைகள் நடத்தப்பட்ட ஒவ்வொரு மையத்திலும் முதலாவது மற்றும் கடைசி குடும்ப பட்ஜெட் சேகரிக்கப்பட்ட தேதிகளை மாண்புமிகு உறுப்பினர் அவையின் முன் சமர்ப்பிப்பாரா? அத்தகைய விசாரணைகளை நடத்துவதற்கு ஏன் இவ்வளவு காலதாமதம் ஆகிறது என்பதையும் கூறுவாரா?

(இ) தொழிலாளர்கள் நுகரும் பொருள்களின் தரம் என்னும் அம்சத்தை குடும்ப பட்ஜெட் விசாரணைகள் கேள்விப் பட்டியலிலிருந்து முற்றாக நீக்கியதனால் இந்த விசாரணைகளின் முழுமையான நோக்கமும் பலன்களும் மிகவும் கடுமையாக பாதிக்கப்பட்டுள்ளதை அரசு அறியுமா?

(ஈ) இத்தகைய குடும்ப பட்ஜெட் விசாரணைகளில் ஒரு சீரான தன்மையையும் சரியான நடைமுறையையும் உறுதிப்படுத்துவதற்கு ஒரு நிபுணர் குழு அமைக்கப்பட்டதா என்று மாண்புமிகு உறுப்பினர் தயைகூர்ந்து கூறுவாரா? அப்படியெனில் அது எவ்வளவு தடவை கூடியது? இந்த விசாரணைகளில் விபரங்களைப்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 21, 1946, பக்கம் 2710.

பெறுவது மற்றும் அவற்றைத் தொகுப்பது சம்பந்தமான வழி முறைகள் மற்றும் கோட்பாடுகள் சம்பந்தமான மாதிரி உத்திகள் மற்றும் பிற முக்கிய முடிவுகளை நிபுணர் குழு அவற்றைக் கடைப்பிடிப்பதற்கு முன்னரோ அல்லது பிறகோ அங்கீகரித்ததா? இல்லையெனில், ஏன் அங்கீகரிக்கவில்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) குடும்ப பட்ஜெட் விசாரணைகள் பற்றிய அறிக்கைகள் 1946 செப்டம்பர் இறுதிக்குள் பூர்த்தி செய்யப்பட்டு வெளியிடப்பட்டுவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

(ஆ) தேவைப்பட்ட தகவல்களைக் கொண்ட ஓர் அறிக்கை சபையின் முன் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது.

வாழ்க்கைச் செலவுக் குறியீட்டுப் புள்ளி விவரங்கள் அகவிலைப் படியைக் கணக்கிடுவதற்கான ஓர் இன்றியமையாத அடிப்படையாக அமைந்திருந்ததால்; போர்க்கால கட்டத்தில் இது அவசரமாகத் தேவைப்பட்டது; மற்றும் இது சம்பந்தமாக வேறு நம்பகமான புள்ளிவிபரம் இல்லாமலிருந்தது; சகஜ நிலைமை திரும்பும் வரைக் காத்திராமல் ஓர் ஆரம்பம் செய்யப்பட வேண்டியிருந்தது.

(இ) இதற்கு பதில் ''இல்லை''யென்பதாகும்.

(ஈ) வாழ்க்கைச் செலவுக் குறியீடுகளைத் தயார் செய்வதற்கான வழிமுறைகளை விவாதிப்பதற்காக ஒரு நிபுணர் குழு அமைக்கப்பட்டது. அது ஒரு தடவைக் கூடி, ஆய்வுசெய்வதற்கான வழிமுறைகள் சம்பந்தமான பொதுவான கோட்பாடுகளை வரையறுத்தது. அவை பொதுவாகக் கடைப்பிடிக்கப்பட்டன.

## பல்வேறு தேர்வு செய்யப்பட்ட மையங்களில் குடும்ப பட்ஜெட் விசாரணைகள் துவங்கப்பட்ட மற்றும் முடிக்கப்பட்ட தேதிகளைக் காட்டும் அட்டவணை

| மையத்தின் பெயர் | பட்ஜெட்டுகள் சேகரிக்கப்படுவது தொடங்கப்பட்ட தேதி | பணி முடிக்கப்பட்ட தேதி |
|---|---|---|
| I. *ஆஜ்மீர் (1)* | *15.11.43* | *15.11.44* |
| II. *வங்காளம் (4)* | | |
| *1. ஹௌரா, பாலி* | *28.7.43* | *28.7.44* |
| *2. காரக்பூர்* | *28.7.43* | *28.7.44* |
| *3. நாராயண்கஞ்ச்* | *28.7.43* | *28.7.44* |
| *4. கல்கத்தா* | *1.8.44* | *31.7.45* |
| III. *பீஹார் (4)* | | |
| *1. மோங்கிர், ஜமால்பூர்* | *9.5.44* | *31.10.44* |
| *2. தெஹ்ரி-ஆன்-சோனே* | *1.11.44* | *31.1.45* |
| *3. ஜம்ஷெட்பூர்* | *1.2.45* | *30.6.45* |
| *4. ஜாரியா* | *1.7.45* | *25.11.45* |
| IV. *பம்பாய் (4)* | | |
| *1. பம்பாய்* | *22.1.44* | *28.2.45* |
| *2. ஆமதாபாத்* | *22.1.44* | *28.2.45* |
| *3. ஷோலாப்பூர்* | *22.1.44* | *28.2.45* |
| *4. ஜல்கான்* | *22.1.44* | *28.2.45* |
| V. *மத்திய மாகாணம், பேரார் (2)* | | |
| *1. ஜப்பல்பூர்* | *10.4.44* | *15.4.45* |
| *2. அகோலா* | *ஜூலை 2வது வாரம் 1944* | *15.4.45* |
| VI. *டில்லி (1)* | *13.10.43* | *31.10.44* |
| VII. *பஞ்சாப் (3)* | | |
| *1. லாகூர்* | *1.1.44* | *30.4.45* |
| *2. லூதியானா* | *1.1.44* | *30.4.45* |
| *3. சியால்கோட்* | *1.1.44* | *30.4.45* |

| 1 | 2 | 3 |
|---|---|---|
| VIII. கேவ்ரா (2) | | |
| 1. கேவ்ரா | ஏப்ரல் முதல் வாரம் 1944 | 10.1.45 |
| 2. தந்தோட், ஏ.சி.சி.ஐ. | 15.10.44 | 10.1.45 |
| IX சிந்து (1) | | |
| 1. கராச்சி | 1.8.44 | 31.7.45 |
| X ஒரிஸ்ஸா (2) | | |
| 1. கட்டாக் | 15.12.44 | 15.9.45 |
| 2. பெர்ஹாம்பூர் | 15.12.44 | 15.9.45 |
| XI ஐ.மா. (1) | | |
| 1. கான்பூர் | ஜனவரி 1945 | விசாரணைகள் நடந்து கொண் டிருக்கின்றன |
| XII அஸ்ஸாம் (3) | | |
| 1. தின்சுகியா | ஏப்ரல் 1944 | 15.10.45 |
| 2. சில்ச்சார் | ஏப்ரல் 1944 | 15.10.45 |
| 3. கௌஹாத்தி | ஏப்ரல் 1944 | 15.10.45 |

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : இத்தகைய விசாரணைகள் விவசாயத் தொழிலாளர்கள் சம்பந்தமாகக் குறைந்தபட்சம் ஒரு சில சோதனை அளவிலாவது செய்யப்படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: உறுதியாக இதைப் பற்றி நான் கூற முடியாவிட்டாலும் இதைக் கவனத்தில் கொண்டிருப்பேன்.

# 422

## *நிறுக்கப்படாத பொருள்களின் சில்லறை விலைக் குறியீட்டு எண் தொகுப்பு

1155. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: (அ) இந்தியத் தொழிலாளர் செய்தி இதழில் வெளியிடப்பட்டுள்ள, தொழில் துறை மாநகரங்கள் மற்றும் நகரங்களில் சில்லறை விலைக் குறியீட்டு எண்ணை சில பிரிவுகளாகத் தொகுத்துள்ளதன் உள் நோக்கம் என்ன என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து கூறுவாரா?

(ஆ) சில்லறை விலைக் குறியீட்டு எண்கள் வகுக்கப்பட்டுள்ள பிரிவுகளில் அடங்கியுள்ள பொருள்கள் மற்றும் அவற்றின் தரங்கள் யாவை என்று எப்பொழுதாவது பொது மக்களுக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளதா? இல்லையெனில் ஏன் தெரிவிக்கப்படவில்லை?

(இ) தொழிலாளர் நலத்துறை வெளியிட்டுவரும் சில்லறை விலைக் குறியீட்டு எண்கள் சம்பந்தமாக ஒவ்வொரு மையத்திலும் ஒவ்வொரு பிரிவிலும் அடங்கியுள்ள பொருள்களின் மொத்த எண்ணிக்கையை மாண்புமிகு அமைச்சர் அவையின் முன் தெரிவிப்பாரா? இது சம்பந்தமாக, ஒவ்வொரு பிரிவிலும் குறியீட்டு எண்கள் அடிப்படையாகக் கொண்டுள்ள பொருள்கள், அவற்றின் தரம், எண்ணிக்கை ஆகியவற்றை நிர்ணயம் செய்வதற்கான அளவுகோல் என்ன என்பதையும் அவர் தெரிவிப்பாரா?

---

★ மத்திய மன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 21, 1946, பக். 2708.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) வாழ்க்கைச் செலவுக் குறியீட்டு எண்களை ஒரு சீரான அடிப்படையில் தொகுப்பதற்கு ஒரு திட்டத்தை மேற்கொள்வதென்று இந்திய அரசு 1942ல் முடிவு செய்தது. அத்தகைய குறியீட்டு எண்கள் தயாரிக்கப்படுவதற்கு அவகாசம் தேவைப்படும் என்பதால் சில்லறை விலைப் புள்ளிவிவரங்கள் கிடைக்கச் செய்ய வேண்டும் என்று கருதப் பட்டது. ஏனெனில் சம்பளத் தகராறுகளில் இது சிறிது உபயோக மாயிருக்கும். எனவே ஓர் இடைக்கால ஏற்பாடாக, மாகாண அரசுகளுடன் ஆலோசனை கலந்தபின், நாட்டின் சில தேர்வு செய்யப் பட்ட மையங்களில் விலைவாசிப் புள்ளி விவரங்களை சேகரிப்ப தென்றும், அந்த விபரங்களின் அடிப்படையில் குறியீட்டு எண் களைத் தயாரிப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.

(ஆ) பல்வேறு பிரிவுகளில் அடங்கியுள்ள பொருள்கள் வெளியிடப்படவில்லை. தொழிலாளர் செய்தி இதழில் சுருக்க மான இடத்தை எடுத்துக் கொள்வது விரும்பத்தக்கது என்பதைத் தவிர இதற்கு வேறு காரணமில்லை.

(இ) ஒவ்வொரு மையத்திற்கும் சில்லறை விலைக் குறி யீட்டு எண்ணில் ஒவ்வொரு பிரிவிலும் சேர்க்கப்பட்டுள்ள பொருள்களின் எண்ணிக்கை பற்றிய அறிக்கை இந்த சபையில் சமர்ப்பிக்கப்படுகிறது. இந்தப் பட்டியலை முடிவு செய்வதற்காகக் கடைப் பிடிக்கப்பட்ட பிரதான அளவுகோல்கள் சம்பந்தப்பட்ட சமூகப் பிரிவுகளின் நுகர்வுப் பழக்கங்கள் மற்றும் கிடைக்கத் தக்க ஒப்பீட்டு விலைவாசிப் புள்ளி விவரங்கள் ஆகும்.

**இந்திய தொழிலாளர் செய்தி இதழில் வெளியிடப்பட்டுள்ள சில்லறை விலைவாசிக் குறியீட்டு எண்களுக்கு ஒவ்வொரு மையத்திற்கும் பல்வேறு பிரிவுகளில் சேர்க்கப்பட்டுள்ள பொருள்களின் எண்ணிக்கையைக் காட்டும் அட்டவணை**

**I. நகர்ப்புற மையங்கள்**

| | தானியங்கள் | பருப்பு வகைகள் | பிற உணவு வகைகள் | அனைத்து உணவு | எரிபொருள் மற்றும் விளக்கு வசதி | துணி மணிகள் | இதர வகைகள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. ஆஜ்மீர் | 7 | 5 | 15 | 27 | 3 | 9 | 2 | 11 |
| 2. ஹூப்ளி | 2 | 4 | 13 | 19 | 3 | 5 | 6 | 33 |
| 3. சூரத் | 3 | 3 | 11 | 17 | 3 | 7 | 6 | 33 |
| 4. தோஹட் | 3 | 3 | 12 | 18 | 3 | 6 | 4 | 31 |
| 5. அகோலா | 3 | 3 | 14 | 20 | 4 | 8 | 6 | 38 |
| 6. டில்லி | 9 | 3 | 16 | 28 | 5 | 5 | 6 | 44 |
| 7. ராவல்பிண்டி | 4 | 3 | 16 | 23 | 3 | 5 | 5 | 36 |
| 8. அமீருதசரஸ் | 4 | 4 | 15 | 23 | 3 | 6 | 4 | 36 |
| 9. லூதியானா | 4 | 3 | 17 | 24 | 3 | 6 | 4 | 37 |
| 10. சியால்கோட் | 4 | 3 | 15 | 22 | 3 | 5 | 4 | 34 |
| 11. லக்னோ | 9 | 3 | 10 | 22 | 3 | 9 | 7 | 41 |
| 12. ஆக்ரா | 9 | 3 | 10 | 22 | 3 | 9 | 7 | 41 |
| 13. பரேலி | 9 | 3 | 10 | 22 | 3 | 9 | 7 | 41 |
| 14. கௌஹாத்தி<br>15. தின்சுகியா | 3 | 4 | 19 | 26 | 3 | 6 | 7 | 42 |

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 16. தெஹ்ரி ஆன்கோனே | 5 | 3 | 11 | 19 | 4 | 3 | 6 | 32 |
| 17. பாட்னா | 5 | 3 | 12 | 20 | 4 | 4 | 6 | 34 |
| 18. கட்டாக் | 1 | 4 | 17 | 22 | 3 | 4 | 8 | 37 |
| 19. பெர்ஹாம்பூர் | 3 | 2 | 19 | 24 | 3 | 3 | 5 | 35 |
| 20. கேவ்ரா | 4 | 3 | 16 | 23 | 3 | 5 | 4 | 35 |
| 21. கராச்சி | 4 | 2 | 16 | 22 | 4 | 4 | 2 | 32 |
| 22. பனாரஸ் | 4 | 3 | 10 | 17 | 3 | 9 | 7 | 36 |
| 23. மீரத் | 9 | 3 | 10 | 22 | 3 | 9 | 7 | 41 |
| 24. ஹௌரா | | | | | | | | |
| 25. பட்ஜுபட்ஜ் | | | | | | | | |
| 26. கங்கினரா | | | | | | | | |
| 27. நாராயண்கஞ்ஜ் | | | | | | | | |
| 28. செராம்பூர் | | | | | | | | |
| 29. கௌரிபூர் | 4 | 4 | 16 | 24 | 5 | 5 | 7 | 41 |
| 30. காஞ்சரபாரா | | | | | | | | |
| 31. கிரக்பூர் | | | | | | | | |
| 32. கல்கத்தா | | | | | | | | |
| 33. ராணிகஞ்ஜ் | | | | | | | | |

★ துணி மணிகளின் தரத்திலான மாற்றங்களின் விளைவாக, துணிமணிகளின் பிரிவுக்கான குறியீட்டு எண்களை வகுப்பது சாத்தியமில்லை என்று கண்டறியப்பட்டது.

## கிராமப்புற மையங்கள்

| | தானியங்கள் | பருப்பு வகைகள் | பிற உணவு வகைகள் | அனைத்து உணவு | எரிபொருள் மற்றும் விளக்கு வசதி | துணி மணிகள் | இதர வகைகள் | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. பர்மா | 1 | 2 | 8 | 11 | 2 | 3 | 5 | 21 |
| 2. மைபாங் | 1 | 2 | 10 | 13 | 2 | 6 | 5 | 26 |
| 3. ராஜாபூர் | 1 | 2 | 14 | 17 | 3 | 6 | 5 | 31 |
| 4. சுங்கர்கர் | 7 | 3 | 8 | 18 | 2 | 3 | 4 | 27 |
| 5. சோனாய்லி | 3 | 3 | 12 | 18 | 2 | 6 | 5 | 31 |
| 6. முல்தாபி | 2 | 4 | 9 | 15 | 2 | 5 | 4 | 26 |
| 7. நானா | 4 | 2 | 13 | 19 | 3 | 5 | 3 | 30 |
| 8. சலாமத்பூர் | 3 | 4 | 12 | 19 | 2 | 4 | 3 | 28 |
| 9. ஷுஜாபாத் | 5 | 4 | 11 | 20 | 4 | 6 | 3 | 33 |
| 10. குஜர்கான் | 2 | 4 | 12 | 18 | 3 | 6 | 2 | 29 |
| 11. கிருஷ்ணா | 2 | 2 | 14 | 18 | 2 | 6 | 4 | 30 |
| 12. லாக் | 2 | 3 | 10 | 15 | 2 | 5 | 3 | 25 |
| 13. மாலூர் | 3 | 4 | 13 | 20 | 2 | 4 | 5 | 31 |
| 14. முனிகூடா | 2 | 3 | 13 | 18 | 2 | 4 | 4 | 28 |
| 15. குட்சி | 2 | 2 | 13 | 17 | 3 | 7 | 4 | 31 |

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** தொழிலாளர் வர்க்கங்கள் நடைமுறையில் கொடுக்கும் உண்மையான விலைகள் பற்றிய புள்ளி விவரங்கள் சேகரிக்கப்படுகின்றனவா? அல்லது சில்லறைக் கடைகளில் உள்ள விலைகளின் பட்டியல்படி சேகரிக்கப்படுகின்றனவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் சிறிது நேரம் பொறுத்திருப்பாரானால், திரு. அனந்தசயனம் அய்யங்காரின் அடுத்த கேள்விக்கு அளிக்கப் படவுள்ள பதிலில், குடும்ப பட்ஜெட் பற்றிய தகவலை நீங்கள் காண்பீர்கள்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா :** நகரத்திலுள்ள சாதாரண உழைக்கும் மக்கள் தங்களுடைய பெரும்பாலான அத்தியாவசியப் பொருட்களைக் கள்ளச் சந்தையில்தான் வாங்க முடிகிறது. அந்தக் கள்ளச் சந்தையில் நடைமுறையில் உள்ள விலைகளைப் பற்றி அரசு என்ன தகவலை சேகரித்துத் தங்கள் வசம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** கள்ளச்சந்தை விலைகளைப்பற்றி அரசிடம் எந்தத் தகவலும் இல்லை என்று நினைக்கிறேன்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா :** அரசு அந்தத் தகவலை சேகரிக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அந்த யோசனை எனக்கு அளிக்கப்பட்டதாக நான் கருதவில்லை.

**தலைவர் :** அடுத்த கேள்வி.

# 423

## *சுரங்கங்களில் முன்பு நிலத்துக்கடியில் வேலை செய்துவந்த பெண்களுக்கு மாற்று வேலை

152. குமாரி மணிபென்காரா : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து பின்வரும் கேள்விகளுக்கு பதிலளிப்பாரா:

(அ) சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்களை வேலைக்கு அமர்த்துவதற்கு மீண்டும் தடை விதிக்கப்பட்ட கடைசி நாளுக்கு முன்பாக, இந்தியாவில் நிலக்கரி சுரங்கங்களில் நிலத்தடியில் எவ்வளவு பெண்கள் வேலை செய்து வந்தார்கள்?

(ஆ) 'அ' கேள்வியில் குறிப்பிடப்பட்ட பெண்களில் எத்தனைப் பேருக்கு நிலத்தடியில் வேலை செய்வதற்குத் தடை விதிக்கப் பட்ட பின்னர் மாற்று வேலை கொடுக்கப்பட்டுள்ளது?

(இ) அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ள மாற்று வேலையின் தன்மை என்ன?

(ஈ) நிலத்தடியில் வேலை செய்தபோது அவர்களுக்குக் கிடைத்த ஊதியத்துடன் ஒப்பிடும்போது, புதிய வேலையில் அவர் களுக்குக் கிடைக்கும் ஊதியம் எவ்வாறுள்ளது?

(உ) சம்பளத்தைத் தவிர, நிலத்தடியில் வேலை செய்வதை நிறுத்திய பிறகு, அதன் விளைவாக வேறு என்னென்ன சலுகை களை அவர்கள் இழந்துள்ளார்கள்?

---

★ மத்திய மன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 21, 1946, பக். 2716.

(ஊ) ஊதிய இழப்பு மற்றும் பிற சலுகைகள் இழப்பை ஈடுகட்டுவதற்காக என்ன நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ள உத்தேசித்துள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) சுமார் 20,000.

(ஆ) திட்டவட்டமான புள்ளி விவரங்கள் கிடைக்க வில்லை. ஆனால் மீண்டும் தடை விதிக்கப்பட்ட பின்னர், (அ)வில் கூறப்பட்ட பெண்களில் ஏறத்தாழ 50 சதவீதத்தினருக்கு மாற்று வேலை கொடுக்கப்பட்டுள்ளது. எஞ்சியுள்ள 50 சதவீதத்தினரில் சுமார் பாதிப்பேர் அவரவர் கிராமங்களுக்குச் சென்று விட்டனர். எஞ்சியவர்களில் சிலர் சுரங்கங்களிலேயே உட்கார்ந்து கொண் டுள்ளனர். ஏனெனில் அவர்கள் ஒப்பந்த வேலையை- உதாரண மாக, நிலக்கரியை வாகன்களில் ஏற்றும் வேலையை செய்ய மறுத்து வருகின்றனர்.

(இ) சுரங்கத்தின் மேற்பரப்பில் நிலக்கரியை வாகனில் ஏற்றுவது, மணலை ஏற்றுவது, லாரியிலிருந்து அதனைக் கீழே இறக்குவது, சுரங்கங்களில் மேலே தரையில் உள்ள இடிபாடுகளை அகற்றுவது முதலியன.

(ஈ) இத்தகைய பணிகளில் அமர்த்தப்பட்டுள்ள பெண் களின் ஊதியம் நாளொன்றுக்கு பத்து முதல் பன்னிரண்டு அணாக் களாகும். இது தவிர அரைசேர் அரிசி இலவசமாகவும், ஒவ்வொரு பெண்ணுக்கும் இரண்டு அணா போனஸாகவும் வழங்கப்படு கிறது. நிலத்தடியில் வேலை செய்பவர்களுக்கு நாளொன்றுக்கு பன்னிரண்டு முதல் பதினான்கு அணா வரை வழங்கப்படுகிறது.

(உ) இவ்வாறு பணியில் அமர்த்தப்பட்டுள்ள பெண்கள் இலவச பால் சப்ளை சலுகையை இழக்கிறார்கள். நிலத்தடியில் வேலை செய்யும் காரணத்தினாலேயே இந்த சலுகை அவர்களுக்கு வழங்கப்பட்டது.

(ஊ) 1946 பிப்ரவரி 25ஆம் தேதிய நட்சத்திரக் குறியிட்ட 466 ஆம் எண் கேள்வியின் (ஆ) பிரிவுக்கு அளிக்கப்பட்ட பதிலைப் பார்க்குமாறு மதிப்பிற்குரிய உறுப்பினர் கேட்டுக்கொள்ளப்படு கிறார்.

# 424

## *டில்லியில் வாடகைக் கட்டுப்பாடு உத்தரவுகளுக்குத் திருத்தம்

*1239. பண்டிட் தாகூர் தாஸ் பார்கவா :* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து பின்வரும் கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா?

(அ) 1944 ஜனவரிக்கு முன்பாக, டில்லியில் வாடகைக் கட்டுப்பாடு உத்தரவுகள், ஒரு வீட்டு சொந்தக்காரர், அவருடைய சொந்த உபயோகத்திற்கு அந்த வீடு தேவைப்பட்டால், அங்கு வாடகைக்குக் குடியிருப்பவரை வெளியேற்றுவதற்கு அனுமதித்ததா?

(ஆ) மேலே குறிப்பிடப்பட்ட உத்தரவுகள் 1944 ஜனவரியில் திருத்தப்பட்டு, திருத்தப்பட்ட உத்தரவு டில்லியில் வசிக்கும் வீட்டுச் சொந்தக்காரர்கள், அவ்வீடுகள் தமது சொந்த உபயோகத்திற்குத் தேவைப்பட்டாலும், அவற்றில் குடியிருப்போரை வெளியேற்றுவதைத் தடைசெய்தது என்பது உண்மையா? அப்படியெனில், அந்தத் திருத்தத்திற்கான காரணங்கள் என்ன?

(இ) 1945, டிசம்பர் 22 தேதிய டைம்ஸ் ஆப் இந்தியா இதழில் வெளியான ஒரு வீட்டுச் சொந்தக்காரரின் கடிதம் அரசின் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா?

(ஈ) வீட்டுச் சொந்தக்காரர்களின் சொந்த உபயோகத்திற்கு அவர்களின் வீடுகள் தேவைப்பட்டால், அதில் குடியிருப்போரை வெளியேற்றுவதற்கு உள்ள உரிமையை மீண்டும் அவர்களுக்கு அளிப்பதன் அவசியத்தைப் பற்றி அரசு பரிசீலனை செய்யுமா?

(உ) வீட்டு வசதி நிலைமை டில்லியில் முன்பு இருந்ததை விட இப்பொழுது இலகுவாகியுள்ளது என்பது உண்மையா?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 27, 1946, பக். 2964.

மற்றும் அதன் விளைவாக, போர்க்காலத்தில் கட்டப்பட்ட தற்காலிக அரசுக் கட்டடங்களை இடித்து விடுவது என்று அரசு முடிவு செய்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) ஆம். 1939-ம் வருடத்திய புது டில்லி வீட்டு வாடகைக்கட்டுப்பாடு உத்தரவின் கீழ், ஒரு வீடு நியாயமாகவும், நல்லெண்ணபூர்வமாகவும், வீட்டு உடைமையாளருக்குத் தேவைப்படுகிறது என்று வாடகைக் கட்டுப்பாடு அதிகாரி திருப்தி அடைந்தால் மட்டுமே, குடியிருப்போரை வெளியேற்ற முடியும்.

(ஆ) 1939 புதுடில்லி வீட்டுவாடகைக் கட்டுப்பாடு உத்தரவின் பழைய விதியில் காணப்படும் நியாயமாகவும், நல்லெண்ண பூர்வமாகவும் என்று காணப்படும் சொற்றொடர்கள், கட்டுப்பாட்டின் படியான வாடகைகளுக்கும் அதிகமாகச் செலுத்தும்படி குடியிருப்போரை நிர்ப்பந்தப்படுத்துவதற்கு ஈவிரக்கமற்ற வீட்டுச் சொந்தக்காரர்களுக்கு ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தன, நீண்ட காலமாக வாடகைக்குக் குடியிருப்பவர்களை (டில்லியில் அவர்கள் இருக்க வேண்டியது இன்றியமையாததாக உள்ள நிலையில்) வெளியேற்றுவதை குறிப்பாக அந்த வீட்டுச் சொந்தக்காரர்கள் டில்லியிலேயே வசித்து வரும்போது தடைசெய்வது அவசியம் என்றும் கண்டறியப்பட்டது. இதன் விளைவாக, புதுடில்லி வீட்டு வாடகைக் கட்டுப்பாடு உத்தரவின், (1939), 11ஏ பிரிவு சட்டமாக்கப் பட்டது.

(இ) ஆம்.

(ஈ) இல்லை, டில்லியில் வீட்டுவசதி நிலைமை மேம்படுகின்ற வரையில் இல்லை.

(உ) இக்கேள்வியின் முதற் பாகத்திற்கான பதில், இல்லை என்பதுதான்.

கட்டடங்கள் இனி ஒருபோதும் அத்தியாவசிய நோக்கத்திற்குத் தேவையில்லாதபோது மட்டுமே அவற்றை இடிப்பதற்கு அரசு உத்தேசிக்கிறது. அல்லது, வீட்டு வசதி நிலைமையின் நலனுக்காக தற்காலிகக் கட்டமைப்புகள் அகற்றப்பட்டு, நிரந்தரக்

கட்டடங்கள் கட்டப்படுவது அத்தியாவசியம் என்று கருதும் போதும் பழைய கட்டடங்கள் இடிக்கப்படுகின்றன.

திரு. மனு சுபேதார் : ஒரு குடியிருப்போர், உள் வாடகைக்கு வீட்டைக் கொடுக்கும்போதும்கூட, அந்தக் குடியிருப்போரை பாதுகாக்க அரசு உத்தேசிக்கிறதா, அந்தக் குடியிருப்பவர் தவறாக லாபம் சம்பாதிக்க முனையும்போதும் அரசு அந்த வீட்டை அவரது வசத்திலேயே விட்டு வைக்குமா என்ற பிரச்சினையை அரசு பரிசீலனை செய்யுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்தப் பிரச் சினையை பரிசீலனை செய்கிறேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : இந்தத் தற்காலிக அரசுக் கட்டடங்கள் இடிக்கப்படுவதை நாங்கள் விரும்பவில்லை. அந்தக் கட்ட டங்களை இடிப்பதில் இந்த வீட்டு உடைமையாளர்களோ அல்லது அரசோ அக்கறை கொண்டுள்ளதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்தக் கேள்வியை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

பேராசிரியர் என்.ஜி.ரங்கா: கேள்வியின் (உ) பிரிவு இவ்வாறு கூறுகிறது: ''டில்லியில் வீட்டு வசதி நிலைமை முன்பிருந் ததை விடவும் இலகுவாயிருக்கிறது என்பதும், அதன் விளைவாக போரின்போது கட்டப்பட்ட தற்காலிக அரசுக் கட்டடங்களை இடித்து விடுவது என்று அரசு முடிவு செய்துள்ளது என்பதும் உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அரசு முடிவு செய்து விட்டது என்று நான் கூறவில்லை. அத்தியாவசியக் காரியத்திற்குத் தேவையில்லை என்று கண்டறியப்பட்டாலொழிய, தற்காலிகக் கட்டடங்களை அரசு இடிக்காது என்றுதான் நான் கூறினேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : இந்தச் கட்டடங்களை, அவற்றின் அரசு - உபயோகம் முடிந்தவுடனேயே, அவற்றை வீட்டு வசதி தேவையுள்ள பொது மக்களுக்கு வாடகைக்கு விடுவதன் உசிதத்தை அரசு பரிசீலனை செய்யுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசின் காரியங்களுக்கு அவை தேவையில்லையென்றால், அவற்றைப் பொதுமக்கள் வாடகைக்கு எடுத்துக் கொள்வதற்குத் தயாராயிருந்தால், அரசு அதை மகிழ்ச்சியுடன் பரிசீலனை செய்யும்.

**சர். முகம்மது யாமின்கான் :** 1944, ஜூன் மாதத்திய வாடகைக் கட்டுப்பாடு அவசரச் சட்டம் எவ்வளவு காலத்திற்கு அமலிலிருக்கும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவசர கால நிலை இருக்கும் வரையில் அது அமலிலிருக்கும் என்பதை என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் அறிவார்.

**திரு. தலைவர் :** அடுத்த கேள்வி.

# 425

## *டில்லியில் செங்கல் கட்டுப்பாடு உத்தரவை ரத்து செய்தல்

1242. **திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார் :** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்வரும் வினாக்களுக்கு தயைகூர்ந்து பதிலளிப்பாரா?

(அ) செங்கல் விலைகள் திருத்தப்பட்டது சம்பந்தமாக 1946 மார்ச் 3-ம் தேதிய இந்துஸ்தான் டைம்ஸ் இதழில் வெளியான செய்தி, மாண்புமிகு உறுப்பினரின் கவனத்திற்கு வந்ததா?

(ஆ) வீட்டு வசதிக்காக சாத்தியமான வரையில் விரைவாகக் கட்டடங்கள் கட்டப்பட வேண்டியதன் உடனடி அவசியம் பற்றியும், இது சம்பந்தமாக கட்டுப்பாட்டுக்குட்பட்ட அனைத்துப் பொருள்களையும் விடுவிக்க வேண்டியதன் அவசியம் பற்றியும் மாண்புமிகு நிதித்துறை உறுப்பினர் தமது பட்ஜெட் உரையில் கூறியுள்ளதை அவர் கவனித்தாரா?

(இ) செங்கல் விற்பனை இன்னும் ஏன் கட்டுப்பாட்டுக்குட்படுத்தப்பட்டுள்ளது? போர் முடிந்து இவ்வளவு காலமான

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 27, 1946, பக்கம் 2967.

தற்குப் பின்பும், டில்லியில் செங்கற்களை வாங்குவதற்கு அனுமதிச் சீட்டுகள் பெற்றுக் கொள்ள வேண்டியது அவசியம்தானா?

(ஈ) டில்லி மற்றும் புதுடில்லியின் பெருமளவு அதிகரித்து வரும் மக்கட் தொகைக்குக் கூடுதல் வீட்டு வசதி அமைத்துக் கொடுக்கப்பட வேண்டியதன் அவசரத் தேவையை முன்னிட்டு, இந்த நிதியாண்டு முடிவுக்குள் அதாவது 1946 ஏப்ரல் 1க்குள் எல்லாக் கட்டுப்பாடுகளையும் தம்முடைய இலாகாவில் ரத்து செய்ய வேண்டி யதன் அவசியத்தைப் பரிசீலனை செய்ய அவர் உத்தேசித்துள்ளாரா? இல்லாவிட்டால், ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) ஆம்.

(ஆ) ஆம்.

(இ) மற்றும் (ஈ) : செங்கற்களின் விலைகளை நியாயமான மட்டத்தில் பராமரிப்பதற்கும், அரசு மற்றும் தனியார் இருப்பு களிலிருந்து செங்கற்கள் விற்பனையை ஒழுங்குபடுத்துவதற்கும் விலைக் கட்டுப்பாடும் வினியோகக் கட்டுப்பாடும் நீடிப்பது அவசியம் என்று கருதப்பட்டது. ஆயினும் இந்த விஷயம் முழுவதும் மேலும் மறுபரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** மத்திய அரசின் நேரடி நிர் வாகத்திற்குட்பட்ட பிரதேசங்களில் வீடுகளைக் கட்டுவதற்கும் மற்றும் இதுபோன்ற விஷயங்களுக்கும் மாண்புமிகு உறுப்பினர் பொறுப்பு உடையவர் அல்லவா? அப்படியெனில், மத்திய நிர் வாகத்திற்கு உட்பட்ட பிரதேசங்களில் உள்ள பிற நகரங்களுக்கும் இதே பரிவுணர்ச்சியைக் கடைப்பிடிப்பதற்கு அவர் முயற்சி செய் வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் கூறியவற்றை நான் மனதிற் கொள்வேன்.

**திரு. மனு சுபேதார்:** பம்பாயில் எல்லாக் கட்டுப்பாடு உத்தரவுகளும் ரத்து செய்யப்பட்டுள்ள நிலைமையில் இந்தியா முழுமையிலும் அவற்றை இறுதியாக ஏன் ரத்து செய்யக்கூடாது என்பது குறித்து அரசு ஆராயுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நான் இதுபற்றி விசாரிக்கிறேன்.

# 426

## *டில்லி கரோல்பாக் பகுதியில் அரசு கையகப்படுத்திய வீடுகள்

*1258. திரு. அகமது ஈ.எச். ஜாபர் : (அ) அரசு ஊழியர்கள் குடியிருப்பதற்கு ஒதுக்கப்படுவதற்காக அரசினால் கையகப் படுத்தப்பட்ட, டில்லி கரோல்பாக் பகுதியிலுள்ள கீழே கூறப் பட்டுள்ள வீடுகள் ஒரு மாதம் முதல் ஆறு மாதங்கள் வரையில் காலியாக இருந்து வருகின்றன அல்லது இன்னும் அவற்றில் குடி புகவில்லை என்பது உண்மையா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து கூறுவாரா?*

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | 15-A/39 | - | முதல் தளம் | I |
| 2. | 15-A/9 | - | தரைத் தளம் | I |
| 3. | 15-A/9 | - | தரைத் தளம் | II |
| 4. | 6/73 | - | முதல் தளம் | II |
| 5. | 6/73 | - | தரைத் தளம் | I |
| 6. | 24-25 | - | முதல் தளம் | I |
| 7. | எண். 19 | - | பிர்லா | |
| 8. | 53/7 | - | தரைத் தளம் | I |
| 9. | 15-A/2-3-4 | - | தரைத் தளம் | I |
| 10. | பிர்லா பில்டிங் | - | தரைத் தளம் | II |
| 11. | பிர்லா பில்டிங் | - | தரைத் தளம் | I |
| 12. | 6/75-76 | - | முதல் தளம் | VI |
| 13. | 642 | - | பி.டி. | |
| 14. | 25310 | - | எம்.சி. | |
| 15. | 15-A39 | - | தரைத் தளம் | II |
| 16. | 15-A/39 | - | தரைத் தளம் | I |
| 17. | 6/75-76 | - | முதல் தளம் | V |
| 18. | கணேஷ்பவன் | - | ,, | ,, |
| 19. | 6/64 | - | தரைத் தளம். | |

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 27, 1946, பக்கம் 2977.

(ஆ) இத்தகைய வீடுகளில் பெரும்பாலானவை தொடர்ந்து ஒதுக்கப்பட்டு வந்தன என்பதும் ஆனால் ஒதுக்கீடு செய்யப்பட்ட பல்வேறு நபர்கள் இவ்வீடுகளில் போதிய வசதிகளும் அந்தரங்க சூழ்நிலைமையும் இல்லாததால் அவற்றை மறுத்து வந்துள்ளனர் என்பதும் உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) கேள்வியிலுள்ள கையகப்படுத்தப்பட்ட வீடுகளின் நிலைமையைக் காட்டும் ஓர் அறிக்கை சபையில் சமர்ப்பிக்கப்படுகிறது.

(ஆ) இவற்றில் சில வீடுகள் மக்களுக்கு விருப்பமானதாக இருக்கவில்லை. எனவே அவை வழங்கப்பட்டபோது மறுக்கப்பட்டன. ஆதலால் சில காலமாக அவை காலியாக இருந்து வருகின்றன; சபையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ள அறிக்கையில் அவை தெரிவிக்கப்பட்டுள்ளன.

**கேள்வியில் குறிப்பிடப்பட்டிருக்கும் குத்தகைக்கு விடப்பட் டுள்ள வீடுகளின் நிலைமையைக் காட்டும் அறிக்கை**

| தொடர் எண். | வீட்டின் பெயர் | காலியாக இருந்துவரும் தேதி | குறிப்புகள் |
|---|---|---|---|
| 1. | 15-A/39 எஃப்.எஃப். I | 1945 ஜுன் 26. | அதிகாரிகளுக்கு இது வழங்கப்பட்ட தேதிகள் 1945, ஜுன் 26, 1945 ஆகஸ்டு 15, 1945, நவம்பர் 12, 1945 நவம்பர் 21, 1946, ஜனவரி 31. ஆனால் தொடர்ந்து எல்லோராலும் மறுக்கப்பட்டது. 1946 மார்ச் 8லிருந்து இது விடுவிக்கப்பட்டது. |
| 2. | 15-A/9 ஜி.எஃப். I | 1946, ஜனவரி 14. | முந்திய ஒதுக்கீடுதாரர்களுக்கு வழங்கப்பட்ட ஒதுக்கீடு 1946 ஜனவரி 14லிருந்து ரத்து செய்யப்பட்டது. 1946 ஜனவரி 28ல் மறு ஒதுக்கீடு செய்யப்பட்டது, 1946 பிப்ரவரி 7ல் ஏற்றுக்கொள்ளப்பட்டது. |
| 3. | 15-A/9 ஜி.எஃப். II | 1945 நவம்பர் 15 | இந்த வீடு 1945 நவம்பர் 20, 1945 டிசம்பர் 21, 1946 ஜனவரி 8 மற்றும் பிப்ரவரி 16ல் அதிகாரிகளுக்கு ஒதுக்கப்பட்டது. |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| | | | ஆனால் தொடர்ந்து எல்லோராலும் மறுக்கப்பட்டது. 1946 மார்ச் 14லிருந்து அது மறு ஒதுக்கீடு செய்யப்பட்டது. |
| 4. | 6/73 எஃப். எஃப். II | செப்டம்பர் 1945 | இந்த வீடு 1945 அக்டோபர் 4, அக்டோபர் 26, டிசம்பர் 4 ஆகிய தேதிகளில் வெவ் வேறு அதிகாரிகளுக்கு வழங்கப்பட்டது. ஆனால் எல்லோராலும் நிராகரிக்கப் பட்டது. இறுதியாக 1946 ஜனவரி 3ல் அது ஏற்றுக்கொள்ளப்பட்டது. |
| 5. | 6/73 ஜி.எஃப். I | 1946, பிப்ரவரி 5 | இந்த வீடு ஒதுக்கப்பட்டவர் அரசு வீட்டைப் பெறுவதற்குத் தகுதியற்றவர் என்று அறிவிக்கப்பட்டதைத் தொடர்ந்து அவர் அதை 1946 பிப்ரவரி 5ல் காலி செய்தார். 1946 பிப்ரவரி 22ல் அது மறு ஒதுக்கீடு செய்யப்பட்டது. |
| 6. | 24/76 (22/6 ஆக இருக்க வேண்டும்) | 1945 நவம்பர் | இந்த வீடு, 1945 அக்டோபர் 19, நவம்பர் 26, டிசம்பர் 21 மற்றும் 1946 ஜனவரி 28ல் வெவ்வேறு அதிகாரிகளுக்கு வழங் கப்பட்டது. ஆனால் ஒவ்வொருவரும் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. இறுதி யாக 1946 பிப்ரவரி 16ல் ஏற்றுக் கொள்ளப் பட்டு, அந்த ஒதுக்கீடுதாரர் அதில் குடி யேறினார். |
| 7. | எண். 19, பிர்லா குடியிருப்பு | 1946 ஜனவரி | எப்போதாவது வரும் விருந்தினர்களுக் காக ஒதுக்கி வைக்கப்பட்டது. |
| 8. | 53/75 ஜி.எஃப். I | 1945 டிசம்பர் 23 | முன்பு ஒதுக்கீடு செய்யப்பட்டவர் 1945, டிசம்பர் 23ல் விட்டுக்கொடுத்து விட் டார். 1945 டிசம்பர் 28ல் இது மறு ஒதுக் கீடு செய்யப்பட்டு 1946 ஜனவரி 3ல் ஏற்றுக் கொள்ளப்பட்டது. |
| 9. | 15-A/2 3, 4 ஜி.எஃப். I | 1945 டிசம்பர் 7 | 1946 ஜனவரி 30லும், பிப்ரவரி 16லும் இது வழங்கப்பட்டது. ஆனால் நிரா கரிக்கப்பட்டது. 1946 மார்ச் 14லிருந்து இது மறு ஒதுக்கீடு செய்யப்பட்டது. |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| 10. | பிர்லா குடியிருப்பு, ஜி.எஃப். II (பிர்லா குடியிருப்பு எண். 11ஐச் சேர்ந்தது) | 1946 ஜனவரி 31 | இந்த வீடு ஓர் அதிகாரிக்கு ஒதுக்கப் பட்டது. அவர், பரஸ்பரப் பரிமாற்றத் தின் அடிப்படையில் எண். 22 தளத்தில் குடியிருக்கிறார். அவருடைய தளத்திற்கு மாறிச் செல்லுமாறு அவர் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார். |
| 11. | பிர்லாகுடியிருப்பு ஜி.எஃப். I (பிர்லா குடியிருப்பு எண். 7ஐச் சேர்ந்தது) | 1946, ஜனவரி 31 | இந்த தளம், குடியிருப்பு எண். 164 ஒதுக்கப்பட்டிருந்தவரால் பரஸ்பரப் பரிமாற்றத்தின் பேரில் வசப்படுத்திக் கொள்ளப்பட்டது. அவர் இதைக் காலி செய்துவிட்டு தனது தளத்திற்குப் போகு மாறு கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார். |
| 12. | 6/75-76 எஃப், எஃப். VI | 1946, ஜனவரி 20 | முன் ஒதுக்கப்பட்டிருந்தவர் இந்த வீட்டை - வேலையிலிருந்து ராஜினாமா செய்ததன் காரணமாக, 1946 ஜனவரி 20ல் காலி செய்து விட்டார். 1946 மார்ச் 4ம் தேதியிலிருந்து இது மறு ஒதுக்கீடு செய்யப்பட்டது. |
| 13. | பி.டி/642 | 1946 ஜனவரி | முன்பு ஒதுக்கீடு செய்யப்பட்டவர் 1946 ஜனவரியில் காலி செய்து விட்டார். இதை விடுவிப்பதற்குப் பரிந்துரை செய்யப்பட்டுள்ளது. |
| 14. | 25310 எம்.சி. (25310 எம்.சி. ஆக இருக்க வேண்டும்) | 1945, ஆகஸ்டு 18 | இந்த வீடு அதிகாரிகளுக்கு 1945 ஜூன் 26, ஆகஸ்டு 15, செப்டம்பர் 13, அக் டோபர் 19, நவம்பர் 26, டிசம்பர் 21 ஆகிய தேதிகளில் ஒதுக்கப்பட்டது. ஆனால் ஒவ்வொருவரும் வரிசையாக நிராகரித்து விட்டனர். 1946 மார்ச் 15 லிருந்து இது விடுவிக்கப்பட்டுவிட்டது. |
| 15. | 15-A/39, ஜி.எஃப். II | 1945, ஜூலை 3 | இந்த இரண்டு வீடுகளும் மக்களுக்கு விரும்பத்தக்கதாக இல்லை. எனவே வழங்கப்பட்ட போது நிராகரிக்கப் பட்டன. |

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| 16. | 15-A/39 ஜி. எஃப். I | 1944 ஆகஸ்ட் 9 | இந்த வீடுகள் 1946 மார்ச் 8-லிருந்து விடுவிக்கப்பட்டுவிட்டன. |
| 17. | கணேசபவனம் (ரமேஷ் பவனம் என்று இருக்க வேண்டும்) | 1946, பிப்ரவரி 28 | ஒதுக்கீடு செய்யப்பட்டவர் அரசு குடியிருப்புப் பெறுவதற்குத் தகுதியற்றவர் என்று அறிவிக்கப்பட்டதால், காலியாயிற்று, 1946 மார்ச் 4ம் தேதியிலிருந்து மறு ஒதுக்கீடு செய்யப்பட்டது. |
| 18. | 6/64 | 1946, பிப்ரவரி 28 | 1946 மார்ச் 4லிருந்து வீடு வேறொருவருக்கு ஒதுக்கப்பட்டது. |

# 427

## *டில்லி, கரோல்பாகில் கையகப்படுத்தப்பட்ட வீடுகள்

*1259.* **திரு. அகமது இ.எச். ஜாபர் :** (அ) டில்லி கரோல்பாகில் கையகப்படுத்தப்பட்ட வீடுகளை ஏற்றுக்கொண்ட பெரும்பாலானவர்கள், கள்ளச் சந்தை வாடகை விகிதங்களில் பொதுமக்களுக்கு உள்-வாடகைக்கு விட்டிருக்கிறார்கள் என்பதும், டில்லியில் குடியிருப்பு இடங்கள் மிகவும் பற்றாக்குறையாக இருப்பதால் மக்கள் அதிக வாடகை கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தத்திற்குள்ளாகியிருக்கிறார்கள் என்பதும் அரசுக்குத் தெரியுமா? இது குறித்து மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பதில் கூறுவாரா?

(ஆ) உள்-வாடகைக்கு விடும் பழக்கம் மிகவும் பரவலாக இருப்பதால் எஸ்டேட் அலுவலகத்தினால் நடத்தப்பட்ட ஒரு

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக்கம். 1259.

விசாரணையில் கரோல்பாகில், எண். 6/73 வீட்டில் நான்கு தளங்களில் மூன்று தளங்கள் உள்-வாடகைக்கு விடப்பட்டிருந்தன என்று கண்டறியப்பட்டது அரசுக்குத் தெரியுமா?

(இ) கரோல்பாகில் குடியேறாத பெரும்பாலான வீடுகள், மத்தியப் பொதுப்பணித் துறையினரின் ஸ்தல ஊழியர்களால் தமது தனிப்பட்ட காரியங்களுக்குப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன என்பது உண்மையா?

(ஈ) இந்த விவரங்களை முன்னிட்டு முந்திய கேள்வியின் (அ) பாகத்தில் குறிப்பிடப்பட்ட வீடுகளின் குத்தகையை ரத்து செய்து, அவற்றைக் கள்ளச் சந்தை பேரங்களினின்றும், தவறாகப் பயன்படுத்துவதனின்றும் காப்பாற்றி, தேவையுள்ள பொது மக்களுக்கு அவ்வீடுகள் கிடைக்கச் செய்வதற்கு அரசு நடவடிக்கை மேற்கொள்ள உத்தேசித்திருக்கிறதா? அவர்களில் பலர் அரசு ஊழியர்களாகவும் உள்ளனர், அரசு வீடுகள் கிடைக்கப் பெறுவதற்கான பட்டியலில் அவர்கள் காத்திருக்கிறார்கள்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இல்லை.

(ஆ) கரோல்பாகிலுள்ள வீடு எண். 6/73ல் நான்கில் இரண்டு குடியிருப்புகள் உள்-வாடகைக்கு விடப்பட்டிருப்பதாகக் கண்டறியப்பட்டது. ஆனால் இந்த ஒரு சம்பவத்திலிருந்து உள்-வாடகைக்கு விடுவது பரவலாக இருந்து வருகிறது என்று கூறுவது சரியல்ல.

(இ) இல்லை.

(ஈ) கரோல்பாக் பகுதியில் ஒரு சில வீடுகளை அரசு ஏற்கனவே தன் வசத்திலிருந்து விடுவித்து விட்டது. தங்களுக்குத் தேவைப்படாத அல்லது தங்களால் பயன்படுத்த முடியாத வீடுகளை விடுவிக்கும் பிரச்சினையை அரசு எப்பொழுதும் தனது கவனத்தில் கொண்டுள்ளது.

# 428

## *இந்திய சுரங்கப் பள்ளியில் வேலை நிறுத்தம்

1265. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: (அ) இந்தியச் சுரங்கப் பள்ளியில் வேலை நிறுத்தம் நடைபெற்றதா என்று மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை அமைச்சர் தயைகூர்ந்து கூறுவாரா?

(ஆ) அந்த வேலை நிறுத்தம் முடிவடைந்து விட்டதா?

(இ) அண்மையில் மாணவர்களின் ஒரு தூதுக் குழு மாண்பு மிகு உறுப்பினரைக் காண வந்தார்கள் என்பது உண்மையா?

(ஈ) இந்தியச் சுரங்கப் பள்ளியில் படித்துப் பட்டம் பெற்றவர்கள், நிலக்கரிச் சுரங்க விதிகளின்படி நிலக்கரிச் சுரங்கங்களில் எத்தகைய பொறுப்பான பதவியையும் வகிப்பதற்கு அனுமதிக்கப் படுவதில்லை என்பது உண்மையா?

(உ) இந்தியச் சுரங்கப் பள்ளியின் பட்டச் சான்றிதழ் இரண்டாம் வகுப்பு சுரங்க மேலாளர் சான்றிதழுக்கு சமமாக அங்கீகரிக்கும் வகையில் நிலக்கரி சுரங்க சட்டத்தைத் திருத்துவதன் அவசியத்தை அரசு கவனத்தில் எடுத்துக் கொள்ளுமா? இதில், இச்சான்றிதழ் பெற்றிருப்பவர்கள் நிலக்கரிச் சுரங்கங்களில் மேற்கொண்டு ஓராண்டுக் காலம் நடைமுறை அனுபவத்தை மட்டும் பெற்றிருக்கும்படி செய்யலாம். அரசு இதைச் செய்யுமா? இல்லா விட்டால் ஏன்?

(ஊ) மாணவர்களின் குறைகளுக்குப் பரிகாரம் தேடுவ

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக்கம் 2981.

தற்கு அரசு என்ன நடவடிக்கைகளை மேற்கொள்ள உத்தேசித்துள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம். (ஆ) ஆம். (இ) ஆம். (ஈ) ஆம்.

இந்தியச் சுரங்கப் பள்ளியின் பட்டச் சான்றிதழ் பெற்றிருப்பவர்கள், ஒரு நிலக்கரிச் சுரங்கத்தில் ஒரு பொறுப்பான பதவிக்கு நியமிக்கப்படுவதற்கு முன்னால் ஓர் இரண்டாவது அல்லது முதல் வகுப்பு நிலக்கரி சுரங்க மேலாளரின் சான்றிதழைப் பெற்றிருக்க வேண்டும்.

(உ) மற்றும் (ஊ) இந்த விஷயம் பரிசீலனையில் இருக்கிறது. சுரங்கப் பள்ளியின் பட்டச் சான்றிதழ் விதிகளின்கீழ் ஓரளவு மதிப்புக் கொடுப்பதற்கு சுரங்கச் சட்டத்தின் விதிகளை எந்த அளவுக்கு மாற்ற முடியும் என்பதை அரசு பரிசீலித்து வருகிறது; ஆனால் அந்தப் பட்டச் சான்றிதழை அந்த விதிகளின் கீழ் வழங்கப்படும் இரண்டாம் வகுப்பு சுரங்க மேலாளரின் சான்றிதழுக்கு ஒரு பதிலியாகக் கருதுவது சாத்தியமல்ல என்று அவர்கள் கருதுகிறார்கள்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** சான்றிதழ்களுக்கு அரசு பொறுப்பாக இருக்கும்போது, சான்றிதழ் வைத்திருப்பவர்கள் பெற்றிருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படும் பயிற்சிக்கும் அல்லது திறமைக்கும் சமமாக இருக்கும் பயிற்சியை சான்றிதழ் வைத்திருப்பவர்களுக்கும் கொடுப்பதற்கு இந்திய அரசை எது தடுக்கிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்தப் பிரச்சினையை நான் பரிசீலனை செய்தபோது இதில் சில முரண்பாடுகள் இருப்பதைக் கண்டறிந்தேன். அவற்றை சரி செய்வதற்கு நடவடிக்கை எடுத்து வருகிறேன்.

# 429

## *புதுடில்லியிலுள்ள அமெரிக்க ராணுவத்தின் தேவாலயம்

1268. திரு. எஸ்.டி. ஆதித்தன் : (அ) புது டில்லியிலுள்ள அமெரிக்க ராணுவத்தின் தேவாலயம் மதச்சார்பற்ற காரியங்களுக்குப் பயன்படுத்துவதற்கு உத்தேசிக்கப்பட்டுள்ளது என்பது உண்மையா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) இந்த தேவாலயத்தை வாங்குவதற்கு முன் வந்துள்ளவர்களின் பெயர்களை மாண்புமிகு அமைச்சர் அறிவிப்பாரா?

(இ) ஒரு தேவாலயமானது கிறிஸ்துவ முறையிலான வழிபாட்டுக்கு அல்லாது வேறு எந்த உபயோகத்திற்காவது பயன்படுத்தப்பட்டால் கிறிஸ்துவர்களின் ஒரு பெரும் பகுதியின் மத உணர்ச்சிகளை அது புண்படுத்தும் என்பதை அரசு அறியுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இந்த விஷயம் பரிசீலனையில் இருக்கிறது.

(ஆ) இந்த தேவாலயத்தை வாங்குவதற்குத் தயாராயிருப்பதாக யாரிடமிருந்தும் அரசுக்குத் தகவல் வரவில்லை.

(இ) இந்த தேவாலயம் புனிதப் பணிக்கென்று (வழிபாட்டுக்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946.

கென்று) நேர்ந்து விடப்படவில்லை. எனவே, கிறிஸ்துவ முறையிலான சமயவழிபாட்டைத் தவிர வேறு காரியத்திற்கு அது பயன்படுத்தப்படுவது கிறிஸ்துவர்களில் ஒரு பெரும்பகுதியினரது சமய உணர்ச்சிகளைப் புண்படுத்தாது.

# 430

## *இந்தியாவில் தோரியம் மற்றும் யுரேனியம் படிவங்கள்

1276. திவான் சமன்லால்: இந்தியாவில் எங்கேயாவது தோரியம் மற்றும் யுரேனியம் படிவங்கள் உள்ளனவா, அப்படியெனில் எந்த அளவுக்கு இருக்கின்றன என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை அமைச்சர் தயை கூர்ந்து கூறுவாரா? தற்போதுள்ள மேற்படி வளங்களைப் பயன்படுத்துவதற்கு என்ன நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : மதிப்புமிக்க எந்தப் படிவமும் இதுவரை கண்டறியப்படவில்லை.

மோனாசைட் கனிவளம் தோரியத்தைக் கொண்டுள்ள கனிப் பொருள்களில் ஒன்றாகும். இந்தியாவின் தெற்குக் கடற்கரையோரத்தில் குறிப்பாக, திருவிதாங்கூர் கடற்கரையில் இது காணப்படுகிறது.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946.

# 431

## *தட்டச்சுப் பொறிகள் இறக்குமதி

1279. திரு. மனு சுபேதார் : (அ) 1940 ஏப்ரல் முதல் தேதியிலிருந்து எவ்வளவு தட்டச்சுப் பொறிகள் இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்டுள்ளன என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து கூறுவாரா?

(ஆ) இவற்றில் எத்தனை இயந்திரங்கள் சாதாரண மக்களுக்கு விடுவிக்கப்பட்டிருக்கின்றன? எந்தெந்த மாகாணங்களில்? எந்த அடிப்படையின் பேரில்?

(இ) இந்தியாவில் இந்த இயந்திரங்கள் பெரும் பற்றாக்குறையாக இருக்கின்றன என்பதும் இதனால் வர்த்தக நிறுவனங்கள் மிகவும் அசௌகரியத்திற்கு உள்ளாகியிருக்கின்றன என்பதும் உண்மையா?

(ஈ) இந்த இயந்திரங்கள் அதிகமாகக் கிடைப்பதற்கு அரசு என்ன நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறது?

(உ) ஹைதரி தூதுக்குழு எந்தப் பொருள்களைப் பற்றிப் பேச்சுவார்த்தை நடத்தியதோ அவற்றில் இதுவும் ஒன்றா?

(ஊ) தட்டச்சுப் பொறிகள் கிடைப்பது சம்பந்தமான பொதுவான நிலைமை என்ன? அடுத்த பன்னிரண்டு மாதங்களுக்கு அரசின் முன்னறிவிப்பு என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) 1945 டிசம்பர் வரையில் சுமார் 76,000.

(ஆ) ஏப்ரல் 1940 முதல் 1943 அக்டோபர் வரை தகவல் கிடைக்கவில்லை. அக்டோபர் 1943 முதல் 1945 முடிவு வரை சுமார் 2950.

---

* மத்திய சட்டப் பேரவை விவாதங்கள், தொகுதி IV, மார்ச். 29, பக். 2987.

மக்களுக்காக விடுவிக்கப்படுவதற்கு அத்தியாவசியமான சோதனைகள் மேற்கொள்ளப்பட்டன. இந்த விடுவிப்புகள் வர்த்தக மற்றும் தொழில்துறை நிறுவனங்கள், பொது உபயோக நிறுவனங்கள், கல்வி நிறுவனங்கள், வாழ்க்கைத் தொழில் புரிவோர் மற்றும் வர்த்தகர்களுக்காக செய்யப்பட்டன. போர் முயற்சிகளுடன் தொடர்புள்ள பணியில் ஈடுபட்டுள்ள போர்த்தொழில்கள் அல்லது நிறுவனங்களுக்கு முன்னுரிமை வழங்கப்பட்டது.

(இ) ஆம், இந்தியாவில் தட்டச்சுப் பொறிகள் மிகவும் பற்றாக்குறையாக இருக்கின்றன.

(ஈ) போர் முடிவுற்றதிலிருந்து, பொது மக்களின் உபயோகத்திற்கான தட்டச்சுப் பொறிகள், யுத்த-முற்கால நாட்களைப் போன்றே வர்த்தக மார்க்கங்கள் வாயிலாக இறக்குமதி செய்யப்படுகின்றன. சாத்தியமானவரையில் அதிக எண்ணிக்கையில் தட்டச்சுப் பொறிகளை இறக்குமதி செய்வதன் அவசியம் பல்வேறு இறக்குமதி நிறுவனங்களிடம் அரசு வலியுறுத்தியுள்ளது. அமெரிக்காவில் சம்பந்தப்பட்ட நிறுவனங்களின் வழங்கீடு ஆற்றலைத் தெரிந்துகொண்ட பின்னர், தேவைப்பட்டால் அரசின் உதவியைக் கேட்கும்படி நிறுவனங்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது. பெரும் எண்ணிக்கையிலான தட்டச்சுப் பொறிகளுக்கு இறக்குமதி உரிமங்கள் வழங்கப்பட்டுள்ளன. 1945 ஜூலை முதல் டிசம்பர் வரையிலுள்ள காலகட்டத்திற்கு மட்டுமே அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்வதற்கான உரிமங்கள் 11,717 தட்டச்சுப் பொறிகளுக்கு வழங்கப்பட்டன. இந்தியாவில் தட்டச்சுப் பொறிகளுக்கு ஏற்பட்டுள்ள கடுமையான தட்டுப்பாடு பற்றி அமெரிக்க அரசின் கவனத்திற்கும் கடந்த ஆகஸ்டில் கொண்டுவரப்பட்டது. 1946 ஜூன் மாத முடிவிற்குள் குறைந்தபட்சம் 15,000 தட்டச்சுப் பொறிகளை இந்தியாவிற்கு அனுப்புவதற்கு உயர் முன்னுரிமை அளிக்கும்படி அவர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளார்கள்.

(உ) இல்லை.

(ஊ) 4,400 தட்டச்சுப் பொறிகள் மட்டுமே (சுவிட்ஸர்லாந்திலிருந்துவரும் ஹெர்மெஸ் ''பேபி'' தட்டச்சுப் பொறிகள் நீங்கலாக இவை முறையான அலுவலகப் பணிக்குப் பொருத்த மற்றவை) 1945 செப்டம்பரிலிருந்து 1946 பிப்ரவரி வரையிலான ஆறு மாதங் களின்போது இந்த நாட்டினுள் இறக்குமதி செய்யப்

பட்டன. ஆனால் இந்தியாவின் குறைந்தபட்ச வருடாந்தரத் தேவை 15,500 பொறிகளாகும். எனவே தற்போதைய நிலைமை திருப்திகரமாயில்லை. ஆனால் அடுத்த பன்னிரண்டு மாதங்களில் ஓரளவு அபிவிருத்தி எதிர்பார்க்கப்படுகிறது.

# 432

## *புதுடில்லி, மத்தியப் பொதுப்பணித் துறையின் தோட்டக்கலைப் பிரிவினால் அளிக்கப்பெற்ற ஒப்பந்தப் பணிகள்

1381. திரு. அகமது இ.எச். ஜாபர் : புதுடில்லி, மத்தியப் பொதுப்பணித் துறையின் தோட்டக்கலைப் பிரிவினால் 1943 நவம்பர் முதல் தேதியிலிருந்து 1946 பிப்ரவரி 28ம் தேதி வரையிலான காலகட்டத்தின்போது, புதுடில்லி தோட்டக்கலை செயல்பாடுகளின் தற்போதைய மேலாளரால் (i) ஒப்பந்தப்புள்ளிகள் மூலமாகவும் (ii) பணி உத்தரவுகளினாலும் தனித்தனியாக முஸ்லீம் கள், இந்துக்கள் மற்றும் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு அளிக்கப்பெற்ற ஒப்பந்தப்பணிகளின் அளவைக் காட்டும் ஓர் ஒப்பீட்டு அறிக்கையை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து இந்த அவையின் முன்வைப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : கேட்கப்பட்டுள்ள தகவல் உடனடியாகக் கிடைக்கப்பெறவில்லை; அதைச் சேகரிப்பதற்குத் தேவைப்படும் காலமும் உழைப்பும், அதன் பலனின் மதிப்புக்கு ஏற்றதாக இருக்காது.

திரு. அகமது சி.எச். ஜாபர்: இந்தத் தகவல் உடனடியாகக் கிடைக்காமலிருப்பதற்கான காரணங்கள் யாது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என்னுடைய மாண்புமிகு நண்பர் விரும்பும் வடிவத்தில் அது கிடைக்கப்பெறவில்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3133.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: ஷெட்யூல்டு வகுப்பைச் சார்ந்த ஒப்பந்ததாரர்கள் தங்களுடைய பங்கைப் பெறுவதற்குக் கூடுதலான வாய்ப்புகளை அவர்களுக்கு அளித்திட முயற்சிகள் ஏதேனும் மேற்கொள்ளப்பட்டுள்ளனவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : உருவாக்கப் பட்டுள்ள விதிமுறைகளுக்கேற்ப அவர்களுடைய பங்கை பெற முடியும்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: ஷெட்யூல்டு வகுப்பினர் பெரிதும் ஏழைகளாய் இருப்பதால் அவ்வகுப்பைச் சேர்ந்த ஒப்பந்த தாரர்கள் வெகு சிலராக இருக்கின்றனர்.

# 433

## *மத்திய பொதுப்பணித்துறையில் முஸ்லிம் தோட்டக்கலை கடைநிலை ஊழியர்கள்

1382. திரு. அகமது இ.எச். ஜாபர் : மத்திய பொதுப்பணித் துறையில் 1945 பிப்ரவரி 28, மார்ச் 19, மே 23 ஆகிய தினங்களில் தோட்டக் கலைத் துறை கடைநிலை ஊழியர்களாக ஆனால் பி.எஸ்.ஸி படித்த முஸ்லிம் மூவர் நியமனம் செய்யப்பட்டிருப் பதும், அவர்களுக்கு 1945 நவம்பர் 28 வரையில் இந்தப் பிரிவில் பொறுப்பு அளிக்கப்படாதிருப்பதும் உண்மைதானா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க வேண்டுகிறேன்.

(ஆ) இந்த இடைப்பட்ட காலத்தில் அவர்களுக்கு என்ன பணிகள் கொடுக்கப்பட்டிருந்தன?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3133.

(இ) அவர்களிடம் இருந்து குறிப்பிடத்தக்க பணியை எதிர் பார்க்க வேண்டிய தேவை இல்லையானால் இப்படி மக்களின் பணம் 5000 ரூபாய் அளவிற்கு வீணாக்கப்பட வேண்டுமா? அதற்கு காரணம் யார்? சம்பந்தப்பட்ட அதிகாரி மீது அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்தது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) ஆம்.

(ஆ) மற்றும் (இ) அவர்கள் கல்லூரியிலிருந்து படித்து முடித்து வேலைக்கு வந்த புதியவர்கள் நடைமுறை அனுபவம் இல்லாதவர்கள். அலுவலகப் பிரிவுகளின் பொறுப்பளிப்பதற்கு முன்பாக ஆரம்பக் கட்ட பயிற்சி அளித்து பயிற்சி பெறுநர்களாக இருந்தனர்.

# 434

## *தோட்டக்கலைப் பிரிவில் சௌத்திரிகளுக்கும் உதவி சௌத்திரிகளுக்கும் சம்பள விகிதம் - ஊதிய உயர்வுகள்

1383. திரு. அகமது ஈ.எச். ஜாபர்: தோட்டக் கலைப் பிரிவில் சௌத்திரிகளுக்கும் உதவி சௌத்திரிகளுக்கும் அனுமதிக்கப்பட்டுள்ள சம்பள விகிதம் மற்றும் ஊதிய உயர்வுகள் என்னவென்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க வேண்டுகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : சௌத்திரிகளுக்கு ரூ. 20-1-35-2-55 (பழைய ஆட்களுக்கு). ரூ. 25-1-45 (புதியவர்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3133.

களுக்கு. உதவி சௌத்திரிகளுக்கு ரூ. 20-1/2-30 (பழைய ஆட்களுக்கும், புதிய ஆட்களுக்கும்).

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா :** சௌத்திரி என்பது என்ன பதவி?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைமைத் தோட்டக்காரர் (மாலி) போன்றது.

**திரு. மனு சுபேதார் :** இன்றைய வாழ்க்கை நிலைமைகளில் மாதம் 20 ரூபாய் சம்பளத்தில் ஒரு சௌத்திரி வாழ முடியும் என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவர்களுக்கு கிராக்கிப்படியும் வழங்கப்படுகிறது.

**திரு. மனு சுபேதார் :** அவர்கள் எவ்வளவு பெறுகிறார்கள்? ரூ. 14 அல்லது 8 - எவ்வளவு?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அந்த விவரம் என்னிடம் இல்லை.

**திரு. மனு சுபேதார் :** தொழில் துறை வர்க்கத்தைச் சேர்ந்த அரசாங்க ஊழியர்கள் இப்போது அவர்கள் பெறுகின்ற சம்பளத்தில் வாழ முடியுமா என்பது பற்றி அரசாங்கம் கவனத்தில் எடுத்துக் கொண்டுள்ளதா?

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** மாலிகளுக்கு எவ்வளவு சம்பளம் வழங்கப்படுகிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இக்கேள்விக்குப் பதிலளிக்க எனக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

# 435

## *மத்திய பொதுப்பணித் துறையைச் சேர்ந்த தோட்டக்கலை கண்காணிப்பாளர் செய்த நியமனங்கள்

384. திரு. அகமது ஈ.எச். ஜாபர்: புதுடில்லியிலுள்ள மத்திய பொதுப்பணித் துறையைச் சேர்ந்த தோட்டக்கலைத் துறையின் கண்காணிப்பாளரால் 1943 நவம்பர் முதல் தேதியில் இருந்து 1946 பிப்ரவரி 28 ஆம் தேதி வரை எழுத்தர்கள், சௌத்திரிகள், உதவி சௌத்திரிகள், லாரி ஓட்டுனர்கள், ஃபிட்டர்கள், நேரப் பதிவாளர்கள் மற்றும் மெக்கானிக்குகள் ஆகியோர் நியமனம் செய்யப்பட்டதில் இந்துககள், முஸ்லீம்கள், பிற சிறுபான்மையோர் மற்றும் ஷெட்யூல்டு வகுப்பினர் எத்தனை பேர் என்று வகுப்புவாரியாக மாண்புமிகு தொழிலாளர்நலத் துறை உறுப்பினர் தெரிவிக்கும்படி வேண்டுகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இது பற்றிய அறிக்கை இங்கே தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

**1943 நவம்பர் 1-ல் இருந்து 1946 பிப்ரவரி 28 வரை தோட்டக்கலை துறையின் கண்காணிப்பாளரால் பணி நியமனம் செய்யப்பட்டவர்களின் எண்ணிக்கை பற்றிய அறிக்கை**

| | இந்து | முஸ்லீம் | ஷெட்யூல்டு வகுப்பினர் | பிற சிறுபான்மை சமூகத்தவர் |
|---|---|---|---|---|
| எழுத்தர்கள் | 9 | 2 | - | 1 |
| சௌத்திரிகள் | - | 1 | - | - |
| உதவி சௌத்திரிகள் | 1 | - | - | - |
| லாரி ஓட்டுனர்கள் | 2 | - | - | - |
| ஃபிட்டர்கள் | 2 | 1 | - | - |
| நேரப் பதிவாளர்கள் | 1 | 1 | - | - |
| மெக்கானிக்குகள் | 1 | - | - | - |

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3135.

# 436

## *தொழிலாளர் நலத்துறையில் உள்ள முஸ்லீம் அதிகாரிகள்

1385. திரு. அகமது ஈ.எச். ஜாபர் : (அ) தொழிலாளர் நலத் துறையில் செயலாளர், இணைச் செயலாளர், துணைச் செயலாளர் ஆகிய அனைவரும் இந்துக்கள் என்பது உண்மையா என மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க வேண்டு கிறேன். அந்தத் துறையிலுள்ள ஊழியர்களுக்கு பொறுப்பாக ஒரு முஸ்லீம் அதிகாரியை நியமிக்கும் உத்தேசம் ஏதும் மாண்புமிகு உறுப்பினருக்கு உண்டா? இல்லையெனில் ஏன் இல்லை?

(ஆ) மத்திய பொதுப் பணித்துறையில் கடைநிலை ஊழியர்கள் எத்தனைபேர் துணைப் பிரிவு அதிகாரிகளாக கடந்த ஐந்தாண்டு காலத்தில் பதவி உயர்வு பெற்றுள்ளனர்? அதில் முஸ்லீம்கள் உள்ளனரா, இருந்தால் எத்தனை பேர்? எந்த விகிதத்தில்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) இல்லை. செயலாளராக இருப்பவர் ஐரோப்பியர். இருவர் முஸ்லீம்கள். அவர்களில் ஒருவர் அலுவல் சார்ந்த இணைச் செயலாளர்; மற்றவர் துணைச் செயலாளர். இவர்கள் இருவரும் ஊழியர்கள் தொடர்பான பிரச்சினைகளைக் கவனித்துக் கொள்கிறார்கள். எனவே கேள்வியின் கடைசிப் பகுதி இங்கு எழவில்லை.

(ஆ) கடந்த ஐந்தாண்டுகளில் 385 கடைநிலை ஊழியர்க்ள் துணைப்பிரிவு அதிகாரிகளாக பதவி உயர்வு பெற்றுள்ளனர். அவர்களில் 56 பேர் முஸ்லீம்கள். கணக்கிட்டுப் பார்த்தால் இது 14.5 சதவிகிதமாகிறது.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3135.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : எண்ணற்ற ஆண்டுகளாக இந்தத் துறைக்கென இந்தியர் ஒருவர் செயலாளராக இல்லை என்ற நிலையில் இந்தத் துறைக்கு ஓர் இந்தியச் செயலாளரை நியமனம் செய்வது குறித்து மாண்புமிகு உறுப்பினர் எப்போது கவனம் செலுத்துவார்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயம் தெரிவுக் குழு சம்பந்தப்பட்டது.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: துறைச் செயலாளர்களை தெரிவுசெய்வது யார்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இக்கேள்விக்கு முன்னறிவிப்புத் தேவை.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: இப்பிரச்சினையைக் கையாளு கிற தெரிவுக்குழு இருக்கிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இத்தகைய குழு ஒன்று இருக்கிறது. இவ்விஷயத்தை கட்டாயமாக அக்குழுவின் பரிசீலனைக்கு அனுப்ப வேண்டும். அங்கீகரிக்கப்பட்ட பட்டியலி லிருந்துதான் தெரிவு செய்யப்படுகிறது.

திரு. அகமது ஈ.எச். ஜாபர்: நியமன விஷயத்தில் மாண்புமிகு உறுப்பினருக்கு எவ்வித பங்குமில்லை என்பது இதன் பொருளா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அப்படியில்லை, பணியிடம் காலியாக இருக்கும்போது நியமன விஷயத்தில் எனக்குப் பங்கு உண்டு.

# 437

## *அரசாங்க குடியிருப்புகளின் ஒதுக்கீடு விஷயத்தில் சில அதிகாரிகளின் பணிமூப்பைக் கணக்கிலெடுத்துக் கொள்ளுதல்

1389. திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார் : மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்டவற்றுக்கு அன்பு கூர்ந்து பதிலளிப்பாரா: நெருக்கடி காலக்கட்டத்தில் மத்திய அரசாங்கத்தின் சில குறிப்பிட்ட அலுவலகங்கள் (தலைமைச் செயலகம், மற்றும் அதனைச் சார்ந்த அலுவலகங்கள்) போதிய இடவசதி இல்லாததால் டில்லி மற்றும் சிம்லாவிலிருந்து வேறு இடங்களுக்கு இடம் பெயர்ந்தது உண்மையா?

(ஆ) தங்கள் அலுவலகங்களுடன் திரும்பிய ஊழியர்கள் அரசுக் குடியிருப்புகளுக்கு உரிமை கோரும் விஷயத்தில் அவர்களது முந்திய சேவைக் காலம் கணக்கிலெடுத்துக்கொள்ள அனுமதிக்கப் படவில்லை என்பதும், டில்லி, சிம்லா தவிர வேறு இடங்களுக்கு அவர்கள் சென்றது இதற்குக் காரணமாகக் கூறப்பட்டது என்பதும், அவர்களுக்குக் குடியிருப்புகளை ஒதுக்கும் விஷயத்தில் அவர்களது பணிமூப்புக் காலம் அவர்கள் டில்லிக்குத் திரும்பிய நாளிலிருந்து தான் கணக்கிடப்பட்டது என்பதும் உண்மையா?

(இ) கல்கத்தாவில் பணியாற்றும் தலைமைச் செயலக ஊழியர்கள் வேறு இடங்களுக்கு மாற்றப்பட்டாலும் குடியிருப்பு பெறுவதற்கு அவர்களுக்குள்ள உரிமை அனுமதிக்கப்பட்டது என்பது உண்மையா?

(ஈ) இது உண்மையானால் தலைமைச் செயலகத்தையும்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3140.

அதனைச் சார்ந்த அலுவலகங்களையும் சேர்ந்த ஊழியர்களிடையே ஏன் இவ்வகையான பாரபட்சம் காட்ட வேண்டும்?

(உ) இவர்கள் பக்கம் எந்தத் தவறும் இல்லை என்பதையும் தொழிலாளர் நலத்துறையின் உத்தரவின் பேரில், நிர்வாக சௌகர்யம் கருதி அவர்கள் வேறு இடங்களுக்குச் செல்ல நேர்ந்தது என்பதையும் அரசாங்கம் அறியுமா?

(ஊ) இவர்கள் விஷயத்தில் மேற்கொள்ளப்பட்ட நடைமுறையை ரத்து செய்து, டில்லி / சிம்லா அலுவலகங்களில் அவர்கள் சேர்ந்த தேதிக்கு இணங்க அவர்களுக்கு குடியிருப்புகளை ஒதுக்க அரசாங்கம் முன்வருமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (அ) ஆம்.

(ஆ) உண்மை நிலைமை வருமாறு:

டில்லியில் இல்லாத காலம் ஒரு வருடத்திற்கு அதிகப்படாது இருக்கும் சில ஊழியர்கள் டில்லியில் அரசாங்கக் குடியிருப்புகளுக்கு உரிமை கொண்டாட அனுமதிக்கப்பட்டார்கள். பின்னர், இந்த உரிமை பெறுவதற்கான காலவரையறை அதிகபட்சம் ஆறு மாதங்களாகக் குறைக்கப்பட்டது.

(இ) ஆம். ஆனால் 1945 ஏப்ரல் 1ஆம் தேதிக்கு முன்னர் கல்கத்தா தலைமைச் செயலகத்தில் பணி அமர்வு செய்யப்பட்டவர்களுக்கோ அல்லது டில்லி/சிம்லா தலைமைச் செயலகத்திலிருந்து மாற்றப்பட்டவர்களுக்கோ மட்டுமே இது பொருந்தும்.

(ஈ) தலைமைச் செயலகத்தின் அல்லது அதனைச் சார்ந்த அலுவலகங்களின் ஊழியர்கள் விஷயத்தில் எத்தகைய பாரபட்சமும் காட்டப்படவில்லை. கல்கத்தா விஷயம் மட்டும் தனி. இந்திய அரசாங்கத்தின் தலைமைச் செயலகத்தின் ஒரு கிளை இங்கு அமைந்துள்ளது; இதனால் தலைமைச் செயலகத்துக்கும் கிளைச் செயலகத்துக்கும் இடையே அடிக்கடி பணிமாற்றங்கள் நடைபெற்று வந்தன. திருத்தப்பட்ட விதிமுறைகள் நடைமுறைக்கு வந்ததைத் தொடர்ந்து, 1945 ஏப்ரல் 1ஆம் தேதியிலிருந்து இந்தச் சலுகை

ரத்து செய்யப்பட்டது. எனவே, இந்தத் தேதிக்குப் பிறகு கல்கத்தா விலுள்ள தலைமைச் செயலகத்துக்கு மாற்றலானவர்கள் டில்லியில் அரசாங்கக் குடியிருப்புகளைப் பெறுவதற்கு முந்திய சேவைக் காலத்தைக் கணக்கிலெடுத்துக் கொள்ள அனுமதிக்கப்படவில்லை.

(உ) இந்த விதிமுறைகளால் சில அலுவலர்கள் பாதிக்கப் பட்டது அரசாங்கத்துக்குத் தெரியும். மாறறங்களைக் கூடிய மட்டும் குறைப்பதன் மூலம் நிர்வாகத் திறமையை மேம்படுத்தும் நோக்கத்தோடு வகுக்கப்பட்ட இந்த விதிமுறைகளின் செயல் பாட்டில் இது தவிர்க்க முடியாதது.

(எ) இது சம்பந்தமாக இந்த விதிமுறைகளை மாற்றும் உத்தேசம் ஏதும் அரசாங்கத்துக்கு இல்லை.

# 438

## *புதுடில்லியில் குடியிருப்புகளை நிர்மாணிக்க சர்தார் சோபாசிங்குக்கு கட்டுமானப் பொருட்கள் வழங்கல்

1390. திரு. அனந்தசயனம் அய்யங்கார் : (அ) புதுடில்லியில் குடியிருப்புகளைக் கட்டுவதற்கு அரசாங்கம் கட்டுமானப் பொருட் களை சர்தார் சோபாசிங்குக்கு கொடுத்தது உண்மையா என்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்குமாறு வேண்டுகிறேன்.

(ஆ) வழங்கப்பட்ட கட்டுமானப் பொருட்களின் விலை என்ன? எந்த ஏற்பாட்டின் கீழ் அவ்வாறு வழங்கப்பட்டது?

(இ) அவர் எத்தனை அடுக்குமாடிக் குடியிருப்புகளைக் கட்டினார். அவை ஒவ்வொன்றின் மதிப்பு எவ்வளவு? இதில் எத்தனை அடுக்குமாடிக் குடியிருப்புகளில் குடிவந்திருக்கிறார்கள்? காலியாக இருப்பவை எத்தனை?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3141.

(ஈ) அரசாங்கம் மானியம் ஏதும் வழங்குகிறதா? அவ்வாறானால் அது எந்த அடிப்படையில், எங்கே? சோபாசிங்குக்கு மானியம் அனுமதிக்கப்பட்டதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (அ) புதுடில்லியில் ஹுமாயூன் சாலை மற்றும் கான்வாலிஸ் சாலையின் சந்திப்பில் எஸ்.பி. சோபாசிங் கட்டிய அடுக்குமாடி குடியிருப்புகளைத் தான் மதிப்புக்குரிய உறுப்பினர் சுட்டிக்காட்டுகிறார் என்று கருதுகிறேன். அவ்வாறானால் 'ஆம்' என்பதுதான் அவரது கேள்விக்கு பதில்.

(ஆ) வழங்கப்பட்ட கட்டுமானப் பொருட்களின் மதிப்பு ஒன்றரை லட்ச ரூபாய் ஆகும். அவருக்கு வழங்கப்பட்ட கட்டுமானப் பொருட்களின் மொத்த தொகையையும் அந்த ஒப்பந்தக்காரரே ஏற்றுக் கொள்ள வேண்டும்.

(இ) இதுவரை கட்டப்பட்டுள்ள அடுக்குமாடிக் குடியிருப்புகளின் எண்ணிக்கை எழுபத்திரெண்டு. இதில் இரண்டு வகையான குடியிருப்புகள் உள்ளன. ஒன்று, இரண்டு படுக்கையறைகள் கொண்ட குடியிருப்பு; மற்றது ஒரு படுக்கையறை கொண்ட குடியிருப்பு. முதலில் குறிப்பிடப்பட்ட குடியிருப்புக்கு மாத வாடகை ரூபாய் 220 என்றும், பிந்தைய குடியிருப்புக்கு மாத வாடகை ரூபாய் 175 என்றும் தற்காலிகமாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. எழுபத்திரெண்டு குடியிருப்புகளில் அரசாங்கம் அறுபத்தைந்தை தன் பொறுப்பில் எடுத்துக்கொண்டது. அவற்றில் ஐம்பத்தொன்பது வீடுகளில் குடியிருக்கிறார்கள். மீதி ஆறு வீடுகள் காத்திருப்போர் பட்டியலில் உள்ள அலுவலர்களுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளன.

(ஈ) இல்லை.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : சர்தார் பகதூர் சர் சோபாசிங் எனும் இந்த ஒப்பந்தக்கார இளவரசர் விஷயத்தில் அரசாங்கம் இவ்வளவு பரிவோடு நடந்துகொள்ள என்ன காரணம்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அப்படி ஒரு பரிவானப் போக்கு இங்கு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா : எத்தனையோ ஒப்பந்தக்காரர்கள் இருக்க இவருக்குச் சலுகைகள் காட்டப்படுவது உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : அப்படியெல்லாம் இல்லை.

# 439

## *ஹஜாரிபாக் மைக்கா சுரங்கங்களில் உள்ள தொழிலாளர்களுக்கு அத்தியாவசியப் பண்டங்களையும் மற்றும் பிற வசதிகளையும் வழங்குதல்

*1409. ஸ்ரீஜித் சேத் தாமோதர் ஸ்வரூப்: அ) ஹஜாரிபாக் மைக்கா சுரங்கங்களில் உள்ள தொழிலாளர்களுக்கு குடிநீர் வசதி முறையாக ஏற்பாடு செய்யப்படவில்லை என்பதும், அந்தப் பகுதி தொற்று நோய் பரவக்கூடிய பகுதி என்பது நன்றாகத் தெரிந்திருந்தும் மருத்துவர் உதவி வழங்கப்படவில்லை என்பதும் அரசாங்கத் துக்குத் தெரியுமா?*

*ஆ) வாழ்க்கைச் செலவு ஆறு முதல் ஒன்பது மடங்கு அதிகரித்து வந்துள்ள போதிலும் அங்குள்ள தொழிலாளர்களுக்கு அகவிலைப் படியோ வேறு உதவித் தொகையோ வழங்கப்பட வில்லை என்பதையும் மார்க்கெட்டில் உணவு தானியங்கள் தீர்ந்து போன நிலையில் கட்டுப் படுத்தப்பட்ட விலையில் அரிசி மற்றும் பிற உணவு தானியங்களை விற்பனை செய்ய முறையான ஏற்பாடு கள் இல்லையென்பதையும் அரசாங்கம் அறியுமா?*

*(இ) நியாய விலையில் ஒரு ரூபாய்க்கு மூன்று சேர், எட்டு சட்டாக் அரிசி வழங்க வேண்டும். ஆனால் அந்தப் பகுதியில் உள்ள துணை-பிரிவு அதிகாரி ஒரு ரூபாய்க்கு, இரண்டு சேர், நான்கு சட்டாக் அரிசி விற்பனை செய்யும்படியாக ஆணையிட் டுள்ளார் என்பதை அரசாங்கம் அறியுமா?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ)* குடிநீர் வழங்கல் ஏற்பாடுகள் திருப்திகரமாக இல்லை. இப்போது வழங்கப் பட்டுவரும் மருத்துவ உதவியும் போதுமானதாக இல்லை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3157.

விரைவில் இந்திய அரசாங்கம் சட்டமியற்றி நிலைமைகளை மேம்படுத்த முடியும் என்று எதிர்பார்க்கிறது.

(ஆ) சில இடங்களில் சம்பளம் உயர்த்தப்பட்டு அதிலேயே அகவிலைப்படியும் சேர்க்கப்பட்டுள்ளது. அதேவேளையில் சில முக்கிய நிறுவனங்களில் சம்பளமும் அகவிலைப்படியும் வழங்கப் படுகின்றன.

அரிசி மற்றும் பிற உணவு தானியங்களை நியாய விலையில் வழங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டிய பொறுப்பு மாகாண அரசாங்கத்தைச் சார்ந்தது. எனவே இவ்விஷயத்தை மாகாண அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு செல்லும்படியாக மதிப்புக்குரிய உறுப்பினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

(இ) இவ்விஷயமும் ஸ்தல நிர்வாகம் மற்றும் மாகாண அரசாங்கம் சம்பந்தப்பட்டது என்பதைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

# 440

## *ஹஜாரிபாக் மைக்கா சுரங்கங்களில் உள்ள தொழிலாளர்களின் குறைகள்

1410. ஸ்ரீஜத் சேத் தாமோதர் ஸ்வரூப்: அ) கூட்டு மைக்கா மிஷன் வழங்கிய பணம் ஹஜாரிபாக் மைக்கா தொழிலாளர்கள் மத்தியில் ஒருபோதும் பகிர்ந்தளிக்கப்படவில்லை என்பதை அரசு அறியுமா? இதனை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப் பினர் தெரிவிக்க வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.

(ஆ) மைக்கா சுரங்கக் கம்பெனிகள் தொழிற்சாலைச் சட்டங் களையும், விதிமுறைகளையும் கடைபிடிப்பதில்லை. மேலும்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3157.

தஸ்தூரி என்ற பெயரில் தொழிலாளர்களிடமிருந்து ரூபாய்க்கு ஒரு அணா வீதம் குறைத்துக் கொடுக்கிற சட்டவிரோதமான, ஆட்சேபனைக்குரிய நடைமுறை சர்வசாதாரணமாக வெளிப்படையாகவே காணப்படுகிறது. இவற்றையெல்லாம் அரசு அறியுமா?

(இ) இங்கே தெரிவிக்கப்பட்டுள்ள குறைபாடுகள் மைக்கா மஸ்தூர் சங்கத்தை வேலை நிறுத்த முன்னறிவிப்பு கொடுக்கும்படியான நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தி இருக்கிறது என்பதை அரசு அறியுமா? அவ்வாறானால் தொழிலாளர்களின் குறைகளை நிவர்த்திக்க அரசாங்கம் எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொண்டு வேலை நிறுத்த அபாயத்தைத் தவிர்க்க எண்ணியுள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) மதிப்பிற்குரிய உறுப்பினர் இங்கே எதைக் குறிப்பிடுகிறார் என்பது தெரியவில்லை. கூட்டு மைக்கா மிஷன் சப்ளையர்களுக்கு வழங்கி வருகிற விலை மீதான கூடுதல் செலவுத் தொகையைத்தான் அவர் குறிப்பிடுகிறார் என்று நினைக்கிறேன். அந்த உதவித் தொகையைப் பகிர்ந்தளிப்பதென்பது முற்றிலும் முதலாளிகளுக்கும், தொழிலாளர்களுக்கும் இடையிலானது என்பதை கேள்வி எழுப்பிய மதிப்பிற்குரிய உறுப்பினருக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

ஆ) தொழிற்சாலைகள் சட்டம், சம்பளப் பட்டுவாடாச் சட்டம் ஆகியவை மைக்கா தொழிற்சாலைகளுக்கு பொருந்தாது. மதிப்பிற்குரிய உறுப்பினர் தெரிவித்த சட்டவிரோதமான நடைமுறை சர்வசாதாரணமாக காணப்படுவது குறித்த விஷயம் அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ளது. மைக்கா சுரங்கங்கள் மத்திய கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரவேண்டும் என்ற அரசாங்கத்தின் யோசனை கைகூடும் போதும், மைக்கா விசாரணைக் குழுவின் பரிந்துரைகள் நடைமுறைக்கு வரும்போதும் இம்மாதிரியான சட்டவிரோத நடைமுறை மறைந்தொழிந்து போகும் என்று கருதுகிறேன்.

(இ) ஆம். இவ்விஷயம் விசாரணையில் இருக்கிறது.

# 441

## *மத்திய பொதுப்பணித் துறையின் அதிகாரிகளோடு தொடர்புடைய ஒப்பந்தக்காரர்களுக்கு ஒப்பந்தப் பணிகள் கொடுப்பதற்குத் தடை

1411. பாபு ராம் நாராயண் சிங்: (அ) மத்தியப் பொதுப்பணித் துறையின் அலுவலகங்களில் ஒப்பந்தக்காரர்களின் உறவினர்கள் வேலைபார்த்து வந்தால் அத்தகைய ஒப்பந்தக்காரர்களுக்கு பணிகள் வழங்குவதை தடுக்கக்கூடிய 1944 நவம்பர் 14 ஆம் தேதியிட்ட தொழிலாளர் நலத்துறை சுற்றறிக்கைக் கடித எண். எம்.எஸ். 21-ஐ வெளியிடுவதற்கான சூழ்நிலைகள் என்னவென்று மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க வேண்டுகிறேன்.

(ஆ) இந்த சுற்றறிக்கையானது புகழ்பெற்ற, நீண்ட நெடுங்கால ஒப்பந்தக்காரர்கள் பலருக்கு அதிருப்தியையும், சங்கடங்களையும் ஏற்படுத்தி இருப்பதை அவர் அறிவாரா?

(இ) இதே மாதிரி ஆணைகள் அரசாங்கத்தின் வேறு துறை எதிலாவது இருந்து வருகிறதா? அவ்வாறானால் அத்தகைய ஆணைகளின் நகலை இந்த மன்றத்தில் தாக்கல் செய்வாரா?

(ஈ) தொழிலாளர் நலத்துறை இத்தகைய ஆணைகளை வெளியிடும் முன்னர் இந்திய அரசாங்கத்தின் சட்டத்துறையின் ஆலோசனையைக் கேட்டுக் கொண்டதா? அவ்வாறானால் சட்டத் துறை நிபுணர்களின் கருத்தென்ன?

(உ) ஓர் ஒப்பந்தக்காரரின் உறவினர் வேலை செய்யும் பிரி

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3158.

விலிருந்து வேறு பிரிவுக்கோ, வேறு இடத்துக்கோ மாற்றப்படுவாரானால் இத்தகைய ஆணைகள் பயன்பட மாட்டா அல்லவா? அப்படி இல்லையானால் பின் எப்படி?

(ஊ) இந்த ஆணைகளை ரத்து செய்யுமாறு ஆலோசனை வழங்குவது பற்றி அவர் கருத்தில் கொள்வாரா? கருத்தில் கொள்ள மாட்டாரெனில் அதற்கென்ன காரணம்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* 1946 மார்ச் 21 ஆம் தேதி அன்று கேட்கப்பட்ட கேள்வி எண். 1143-க்கு அளிக்கப்பட்ட பதிலில் மதிப்பிற்குரிய உறுப்பினர் இங்கே எழுப்பியுள்ள (அ), (ஆ), (இ), (ஈ), மற்றும் (ஊ) ஆகிய கேள்விகளுக்கான பதில் அடங்கியுள்ளது.

(உ) இல்லை. அது முற்றிலும் நிர்வாகம் சம்பந்தப்பட்ட விஷயம்.

# 442

## *அரசாங்கக் குடியிருப்பு ஒதுக்கீட்டு விதிகளைத் திருத்தியமைத்தல்

1412. பாபு ராம் நாராயண் சிங்: (அ) போர் நடைபெற்று வந்த காலத்தில் புதுடில்லியில் நடைமுறையிலிருந்த குடியிருப்புகளின் ஒதுக்கீட்டைப் பொறுத்தவரை, இப்போது போர் முடிந்து விட்டபடியால் அந்த முந்தைய ஒதுக்கீட்டு விதிகளின் கீழ் அனுமதிக்கப்பட்ட அதே பிரிவினர் அல்லது தொகுதியினருக்கிடையில் குடியிருப்புகளை பரிமாறிக் கொள்வதற்கு வகை செய்ய

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3158.

மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் திருத்தம் கொண்டு வருவாரா?

(ஆ) ஒதுக்கீடு பெற்றவர்களில் சிலர் அவர்களுடைய விருப்பத்தின்படி குடியிருப்புகளைப் பெறும் வாய்ப்பினைப் பெறாததால் அதிருப்தியடைந்துள்ள நிலைமையில் அவர்கள் தங்களது பழைய குடியிருப்புகளிலேயே தொடர்ந்து குடியிருக்கும்படி நிர்ப்பந்திக்கப் படுகிறார்கள் என்பதை அவர் அறிவாரா?

(இ) குடியிருப்புகளைப் பெறும் விஷயத்தில் தற்போதுள்ள விதிமுறைகளின்படி இங்கேயே இருக்கிற இளநிலை அதிகாரிகளுடன் ஒப்பிடுகையில் சிம்லாவிலிருந்து இங்கு வந்த முதுநிலை அதிகாரிகள் பாதிப்புக்குள்ளாகி இருக்கிறார்கள் என்பதையும் அவர் அறிவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இப்போதைய ஒதுக்கீட்டு விதிகளில் திருத்தம் செய்ய வேண்டும் என்ற விஷயம் விரைவில் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும். குடியிருப்புகளை மாற்றிக் கொள்வதற்கு விதிமுறைகளில் வழிவகை செய்யும் விஷயமும் பரிசீலிக்கப்படும்.

(ஆ) இது அவரவர்களது கருத்து பற்றிய விஷயம்.

(இ) ஆம். சில முதுநிலை அலுவலர்கள் விஷயத்தில் அவர்களுக்கு அவ்வளவு அனுகூலம் இல்லை என்பது உண்மைதான். அதற்காக ஏற்கனவே குடியிருப்புகளில் இருந்து வருகிற ஏராளமான அதிகாரிகளைத் தொல்லைகளுக்கு ஆளாக்குவதற்கு போதுமான காரணம் ஏதுமில்லை.

# 443

## *அதிகம் சம்பளம் பெறும் பணியாளர்களுக்கு சாதாரண வகுப்பினருக்கான குடியிருப்புகளை ஒதுக்கீடு செய்வதன் மூலம் ஏற்படும் வருவாய் இழப்பு

*1413. பாபு ராம் நாராயண் சிங்: அ)* புதுடில்லியில் எழுத்தர்களுக்கான சாதாரண குடியிருப்புகளில் எண்ணற்ற அதிகாரிகள் குடியிருந்து வருகிறார்கள். இவர்களில் (i) மாதம் ரூபாய் 600 அல்லது அதற்கு மேல் வருவாய் உள்ளவர்கள் பங்களாக்கள் பெறுவதற்கும், மாதம் ரூபாய் 600க்கும் குறைவாக வருவாய் உள்ளவர்கள் (ii) 'அ' மற்றும், (iii) 'ஆ' ரக குடியிருப்புகளைப் பெறுவதற்கும் தகுதி படைத்தவர்கள் எத்தனை பேர் என்பதை மாண்புமிகு உறுப்பினர் தெரிவிப்பாரா?

*(ஆ)* இந்த அதிகாரிகளுக்கு அவர்களது தகுதிக்கேற்ற குடியிருப்புகளை அல்லது அதைவிட சற்றுக் குறைவான தகுதி படைத்த குடியிருப்புகளை வழங்காததால் வாடகையில் ஒரு கணிசமான தொகையை அரசாங்கம் இழந்து வருகிறது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

*(இ)* அரசாங்கத்துக்கு ஏற்படும் இந்த இழப்பை தவிர்க்க அவர் எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்ளப் போகிறார்? மேலும் உயர் வகுப்பினருக்கு அதிகக் குடியிருப்புகளை கட்டுவதற்கு யோசனை ஏதும் வைத்திருக்கிறாரா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3159.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) (i) 98 (ii) 57 (iii) 138.

(ஆ) அரசாங்கத்துக்கு எவ்வித இழப்பும் இல்லை. சாதாரண குடியிருப்புகளில் இருக்கக்கூடிய அதிகாரிகள் கூட அதிகப்பட்ச வாடகை தருகிறார்கள். எந்தக் குடியிருப்பும் காலியாக இல்லை.

(இ) கேள்வியின் முதல் பகுதி இங்கு எழவில்லை. கேள்வியின் இரண்டாவது பகுதி - அதிகாரிகளுக்கு அதிக அளவில் குடியிருப்புகளை ஒதுக்கீடு செய்வதற்கான விதிமுறைகள், பொது யோசனையின் ஒரு பகுதியாக கருத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

## 444

## *புதுடில்லி மின்ட்டோ சாலைப் பகுதி மற்றும் டி.ஐ.இசட் பகுதியில் உள்ள குடியிருப்புகளில் வடிகட்டப்படாத தண்ணீர் வழங்கல் பற்றி

1415. பாபுராம் நாராயண்சிங்: புதுடில்லி மின்ட்டோ சாலைப் பகுதி மற்றும் டி.ஐ.இசட். பகுதியிலுள்ள பழம்பாணி குடியிருப்புகளுக்கு வடிகட்டப்படாத நீரை வழங்குவதற்கான குழாய்களை அக்குடியிருப்புகளின் முற்றங்களில் பொருத்தும் யோசனை ஏதும் உள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிக்க வேண்டுகிறேன்.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3159.

(ஆ) ஒவ்வொரு நாளும் குடியிருப்புகள் ஒவ்வொன்றிலும் தரையை கழுவுவதற்கும், மலர்கள், தாவரங்கள் மற்றும் காய்கறி கள் மீது தெளிப்பதற்கும், கோடை காலத்தில் கஸ் கி தட்டிகளை நனைப்பதற்கும் வடிகட்டிய எண்ணற்ற கேலன் நீர் வீணாக்கப் படுவதை அவர் அறிவாரா?

(இ) விரிவான பொருளாதார மற்றும் பொதுநல சேவை நலன்களின் அடிப்படையில் குடியிருப்புகளில் வடிகட்டப்படாத நீர் வழங்குவது பற்றிய யோசனையை கோடை வருவதை ஒட்டி கவனத்தில் கொள்வாரா? இல்லையெனில், ஏன் இல்லை?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) இல்லை. ஒவ்வொரு ஆண்டும் கோடை காலத்தில் வடிகட்டப்படாத நீரைப் பெறக்கூடிய விதத்தில் இந்தக் குடியிருப்பு களின் அருகில் தகுந்த இடங்களிலிருந்து வடிகட்டப்படாத நீரைப் பெறுவதற்குத் துணைக் குழாய்கள் அமைக்கப்பட்டு வருகின்றன. இங்கே உறுப்பினர் தெரிவித்துள்ள நோக்கங்களுக்காக ஆண்டு முழுவதும் பயன்படுத்துகிற நீர் அளவுக்கு அதிகமானது என்று நான் கருதவில்லை.

(இ) இல்லை. கடந்த காலத்தில் அரசாங்கம் இந்த யோசனையை மிகவும் கவனமாகப் பரிசீலித்தது. ஆனால் முக்கிய மாக அதிகப்படியான செலவினம் கொண்டது என்பதால் அந்த யோசனை கைவிடப்பட்டது.

# 445

## *சார்-பிரிவு அதிகாரிகளாகவும், மேற்பார்வை அதிகாரிகளாகவும் பணியாற்றிவரும் சில தகுதி வாய்ந்த நிர்வாகப் பொறியாளர்களுக்குப் பதவி உயர்வு தரப்படாதது குறித்து

*1416. பாபு ராம் நாராயண் சிங்:* (அ) மத்தியப் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த கட்டுமானப் பிரிவு, சாலை மற்றும் மின்சாரப் பிரிவுகளில் நிர்வாகப் பொறியாளர்கள் மற்றும் கண்காணிப்புப் பொறியாளர்கள் ஆகியோருக்கான பணியிடங்களைப் பூர்த்தி செய்வதில் பொறியாளர்கள் பற்றாக்குறை இருப்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அறிவாரா?

(ஆ) வெளிநாட்டில் படித்த அனுபவம் வாய்ந்த பொறியாளர் கள், சார்-பிரிவு அதிகாரிகளாகவும் இன்னும் சொல்லப் போனால் மேற்பார்வையாளர்களாகவும் இருக்கிறார்கள் என்பதையும், அவர்கள் அந்தப் பிரிவின் பொறுப்பாளர்களாகவோ அல்லது அதற்கு மேலான பதவியில் இருப்பவர்களாகவோ பதிவு உயர்வு பெறவில்லை என்பதையும், இத்துறையில் பணியாற்றும் இதர தகுதி வாய்ந்திராத சார்-பிரிவு பொறியாளர்களுக்கு இவர்கள் இன்னமும் இளநிலையில் உள்ளவர்களாக இருப்பதே இதற்குக் காரணம் என்பதையும் மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(இ) உயர் பணியிடங்களை நிரப்புவதற்கு மேல் பயிற்சி பெற்றவர்களை உருவாக்கும் பொருட்டு மாணவர்களை அரசாங்கம் வெளிநாடுகளுக்கு அனுப்பி வருகிறது என்பது மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினருக்குத் தெரியுமா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3160.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) அயல்நாடுகளில் பயிற்சி பெற்ற சில பொறியாளர்கள் பொதுப்பணித் துறையில் இருந்து வருகிறார்கள்; இத்துறையிலுள்ள இதர தகுதி பெற்ற பொறியாளர்களுக்கு இவர்கள் இளநிலையில் இருப்பதாலோ அல்லது இத்தகைய பதவி உயர்வுக்கு தகுதியற்ற வர்களாக இருப்பதாலோ இவர்களுக்கு இன்னமும் பதவி உயர்வு தரப்படவில்லை.

(இ) ஆம்.

# 446

## *சார்-பிரிவு அதிகாரிகளாகவும் மேற்பார்வை அதிகாரிகளாகவும் பணியாற்றிவரும் சில தகுதி வாய்ந்த நிர்வாகப் பொறியாளர்களுக்கு பதவி உயர்வு தரப்படாதது குறித்து

1417. பாபு ராம் நாராயண் சிங்: (அ) அயல்நாடுகளில் பயிற்சி பெற்ற, அனுபவம் வாய்ந்த சார்-பிரிவு அதிகாரிகளின் பெயர்களையும், அவர்கள் ஒவ்வொருவரது சேவை காலத்தையும், மத்தியப் பொதுப்பணித் துறையில் அவர்கள் நியமனம் செய்யப்பட்ட தேதியையும் குறிக்கும் பட்டியலை இந்த அவையில் சமர்ப்பிக்க மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் முன்வருவாரா?

(அ) நிர்வாகப் பொறியாளர்களாக அல்லது கண்காணிப்புப் பொறியாளர்களாக நேரடியாக நியமிக்கப்பட்ட அதிகாரிகளின் எண்ணிக்கை எவ்வளவு?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3160.

(இ) மேலே குறிப்பிடப்பட்ட பணியிடங்களுக்கு நியமனம் செய்யப்படும்போது (அ) கேள்விக்கான பதிலில் கூறியுள்ளவாறு ஒவ்வொரு தனி நபரும் இத்தகைய நியமனங்களுக்குப் பரிசீலிக்கப் படுகிறாரா? அவ்வாறு இல்லையென்றால், அதற்குக் காரணங்கள் யாவை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) இது சம்பந்த மான ஓர் அறிக்கை அவையில் சமர்ப்பிக்கப்படுகிறது.

(ஆ) கண்காணிப்புப் பொறியாளர்கள் - எவரும் இல்லை.

நிர்வாக மற்றும் மின்விசைப் பொறியாளர்கள் - 28.

(இ) கீழே குறிப்பிடப்பட்டிருப்பவர்கள் நீங்கலாக இதர எல்லோரது விஷயமும் உரிய முறையில் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

| | |
|---|---|
| (1) திரு. பி.எஸ். கிருஷ்ணசுவாமி | இவர் தற்காலிகத் துணைப் பணியாளர். நிர்வாகப் பொறியாளர்களாக பதவி உயர்வு பெற்ற ஏனையோர் நிரந்தரத் துணைப் பொறியாளர்கள் அல்லது அரசிதழ் பதிவு பெற்ற தாற்காலிகப் பொறியாளர்கள். |
| (2) திருவாளர்கள் ஏ.கே. சென் மற்றும் நஸீர் ஹுசைன் | இவர்கள் விஷயம் இன்னும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் படவில்லை; ஏனென்றால் பணி மூப்பாளர் பட்டியலில் அவர்கள் இன்னமும் உரிய இடத்தைப் பெறவில்லை; மேலும் இதுவரை மின்விசைப் பொறியாளர்களாகப் பதவி உயர்வு பெற்றவர்கள் அனைவரும் இவர்களை விடப் பணி மூப்புடையவர்களாவர். |

(ஈ) இத்தகைய உறுதிமொழி எதுவும் அளிப்பதற்கில்லை; ஏனென்றால் (அ) கேள்விக்கான பதிலில் குறிப்பிடப்பட்டிருக்கும் அதிகாரிகள் சார்-பிரிவு அதிகாரப் பொறுப்பை வகிப்பதற்கு தகுதியற்றவர்களாகவோ அல்லது அனுபவமில்லாதவர்களாகவோ இருக்கின்றனர்.

அயல்நாடுகளில் பயிற்சி பெற்று, மத்தியப் பொதுப்பணித் துறையில் பணிபுரியும் சார்-பிரிவு அதிகாரிகளின் பட்டியல் வருமாறு:

| தொடர் எண் | பெயர் | மத்தியப் பொதுப்பணித் துறையில் நியமனம் செய்யப்பட்ட தேதி | தகுதிகள் | முந்தைய அனுபவம் |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| | | | **I.** பொறியியல் பிரிவு | |
| 1. | திரு. என்.என். மேத்தா | 17.9.1935 | பி.ஏ., பி.எஸ்ஸி (இந்.), ஷெப்பீட்டு ஏ.எம்.ஐ.இ. | மத்தியப் பொதுப்பணித்துறையில் 15 மாதத் தொழில் துறையில் ஏ.எம்.ஐ.இ. பயிற்சி பெற்று கியோத்ரி சமஸ்தான பி.டபிள்யூ. டி.யில் கண்காணிப்பாளராக 12 ஆண்டு சேவை |
| 2. | திரு. குர்பச்சன் சிங் | 5.3.1942 | பி.எஸ்ஸி.(சிவில்) எடின்பரோ | ,, |
| 3. | திரு. ஆர்.ஆர். தோமர் | 18.5.1942 | லண்டன் பெட்டர்சியா பாலிடெக் னிக்கில் டிப்ளமா பட்டம் பெற்றவர். | .... |
| 4. | திரு. பி.எஸ். கிருஷ்ண | 13.6.1942 | பி.எஸ்ஸி.(இஞ்சி), ரங்கூன் (பர்மா) | .... |
| 5. | திரு. எஸ்.வி. சுப்பாராவ் | 20.7.1942 | பி.ஏ.பி.எஸ்ஸி. (ஹானர்ஸ்) கட்டுமானப் பொறியியல் (எடின்பரோ) | .... |
| 6. | திரு. ஏ.கே. தாஸ் | 1.1.1943 | பி.எஸ்ஸி, கட்டுமானப் பொறியியல் (எடின்பரோ) | 1 வருட முன் அனுபவம் |

| 1 | 2 | 3 | 4 | 5 |
|---|---|---|---|---|
| 7. | திரு. எம். ரஹ்மான் | 19.4.1943 | பி.எஸ்ஸி. (டில்லி), பி.எஸ்ஸி. (கட்டுமாணம்) துர்ஹாம் | இங்கிலாந்திலுள்ள நிறுவனத்தில் ஓரளவு அனுபவம் |
| 8. | திரு. அப்துல் கபார் | 11.2.1942 | பி.எஸ்ஸி. (கட்டுமானப் பொறியியல்) எடின்பரோ | .... |
| 9. | திரு. முகமது ஷாபி | 15.3.1944 | கட்டுமாணப் பொறியியல் (பிரிஸ்டல்) | .... |
| 10. | திரு. நரிஞ்சன் சிங் பிசார்கி | 4.4.1944 | பி.எஸ்ஸி (கட்டுமானம்) கிளாஸ்கோ (எடின்பரோ) | எம்.இ.எஸ். போன்றவற்றில் 15 வருட அனுபவம் |
| 11. | திரு. எஸ்.ஏ. ஹக்கீம் | 30.8.1944 | தற்காலிகக் கண்காணிப்பாளர், சி.இ. (ஷெப்பீல்டு), ஏ.எம்.ஐ.இ. (இந்தியா), சி.ஐ.எஸ்.இ. (லண்டன்) | பஞ்சாப் பொதுப்பணித் துறையில் 15 வருட அனுபவம், மாவட்ட மன்ற பணியில் 8 வருட அனுபவம் |
| | | | **II. மின்விசைப் பிரிவு** | |
| 12. | திரு. பி.கே. மஜூம்தார் | 4.5.1942 | லண்டன் மின்விசைப் பொறியியல் கல்லூரியில் இயந்திரப் பொறியியலிலும் மின்விசைப் பொறியியலிலும் டிப்ளமா பெற்றவர் | மான்செஸ்டர் கிராஸ்லே பிரதர்ஸ் நிறுவனத்திலும் லண்டன் சதர்ன் எலெக்ட்ரிக்கல் பில்டிங்ஸ் நிறுவனத்திலும் 2 ஆண்டுக்காலம் பயிற்சி பொறியாளராகப் பணிபுரிந்தவர். கல்கத்தா சப்ளை கார்ப்பரேஷனில் 3 வருட அனுபவம் |
| 13. | திரு. எம்.என். தத் | 23.9.1942 | பி.எஸ்ஸி (கிளாஸ்கோ) | ஓரளவு முந்தைய அனுபவம் உள்ளவர். முழு விவரம் தெரியவில்லை. |
| 14. | திரு. ஏ.கே. சென் | 13.3.1943 | -மேற்படி- பி.எஸ்ஸி., | .... |
| 15. | திரு. நஸீர் ஹுசைன் | 1.5.1945 | ஏ.எம்.ஐ.இ.இ. (இலண்டன்) | .... |

# 447

## *வைசிராய் வளாகக் கண்காணிப்பாளர் செய்யும் துணைநிலை ஊழியர்கள் நியமனம் சம்பந்தமான விதிமுறைகளும் நிபந்தனைகளும்

*1419. சர்தார் மங்கள் சிங்:* சிம்லா அல்லது டில்லியில் குறிப்பிட்ட பணிபுரியும் பொருட்டு வைசிராய் வளாகக் கண்காணிப்பாளரால் 1936 ஜுலை 14 ஆம் தேதிக்கு முன்னர் நேரடியாகத் துணை நிலை ஊழியர்களை நியமித்தது சம்பந்தமான விதிமுறைகள், நிபந்தனைகளின் முன்மாதிரிப் பிரதி ஒன்றை தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து அவையில் சமர்ப்பிப்பாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஊழியர்கள் நியமனம் சம்பந்தமாகக் குறிப்பிட்ட நிர்ணயமான படிவம் ஏதும் இல்லை. எனினும் இந்தக் காலகட்டத்தில் அனுப்பப்பட்ட நியமனக் கடிதங்களில் ஒன்றின் பிரதியை அவையில் சமர்ப்பிக்கிறேன்:

வைசிராய் வளாகத்தின் கண்காணிப்பாளருக்கு மேதகைய வைசிராயின் செயலாளர் நுகுதார்த் 1920 பிப்ரவரி 25 ஆம் தேதியிட்டு எழுதிய 1031-ஆம் எண்ணிட்ட கடிதத்தின் நகல்.

1920 பிப்ரவரி 20 ஆம் தேதியிட்ட உங்கள் 279-எம் எண்ணிட்ட கடிதம்.

பதவி விலகிய எஸ். அமீர் சந்த்துக்குப் பதிலாக லாலா திவான் சந்தை 1920 ஜனவரி 1 ஆம் தேதி முதல் ரூ. 50-5-70 சம்பள விகிதத்தில் தகுதி ஆய்வுகால அடிப்படையில் ஆறு மாதத்துக்கு வைசிராய் வளாகத்தில் பண்டகசாலை காப்பாளராக நியமிப்பதற்கு ஒப்புதல் அளிக்கிறேன். அவர் செலுத்த வேண்டிய பிணைய வைப்புத் தொகை ரூ. 350ஐ மாதம்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3162.

ரூ. 10 வீதம் அவரிடமிருந்து வசூலிப்பதற்கும் இசைவாணை அளிக்கிறேன்.

ஒப்பந்த பத்திரம் இத்துடன் திருப்பி அனுப்பப்படுகிறது.

# 448

## *அரசுக் குடியிருப்புகள் ஒதுக்கீடு விதிகளைத் திருத்தியமைத்தல்

1420. சர்தார் மங்கள் சிங்: (அ) டில்லியிலிருந்து சிம்லாவுக்கோ அல்லது கல்கத்தாவிலுள்ள தலைமைச் செயலகப் பிரிவுக்கோ மாற்றப்படும் ஓர் அதிகாரி 1945 ஏப்ரல் 1 ஆம் தேதிக்குப் பிறகு திரும்பவும் டில்லிக்கு மாற்றலாகி வரும்போது அவர் தமது முந்தைய சேவைகால அனுகூலங்களை இழக்கிறார் என்பதும், குடியிருப்பு ஒதுக்கீட்டைப் பெறுவதற்கு அவர் புதிதாகப் பணிமூப்பைப் பெற வேண்டியிருக்கிறது என்பதும் உண்மையா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயை கூர்ந்து கூறுவாரா?

(ஆ) பொதுநலனை முன்னிட்டு மாற்றல் ஆணை பிறப்பிக்கப்பட்டு மாற்றலாகிச் செல்லும் அதிகாரிகளுக்கு டில்லியிலேயே பணிபுரியும் அதிகாரிகளைப் போல் அவர்கள் பணியில் அமர்வுற்ற தேதியிலிருந்து பணிமூப்பு அளிக்காததன் மூலம் என்ன நோக்கம் நிறைவேறியுள்ளது?

(இ) வீட்டு வசதி நிலைமை கடுமையாக இருப்பதாலும், பாதிக்கப்பட்டவர்கள் அரசு ஊழியத்தில், தொடர்ந்து பல ஆண்டுக் காலம் இருந்து வருபவர்களாதலாலும், பெரிய குடும்பங்களைப் பராமரிக்க வேண்டியவர்களாக இருப்பதாலும் இந்த முடிவை மாற்ற வேண்டிய அவசியத்தைப் பரிசீலிக்கும் உத்தேசம் மாண்புமிகு உறுப்பினருக்கு உண்டா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3163.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) டில்லியில் தொடர்ந்து நீண்டகாலம் இருந்து வருபவர் களும் சிம்லாவை விட டில்லியில் மோசமான வீட்டு வசதி நிலைமை களால் பெரிதும் பாதிக்கப்பட்டவர்களுமான இளநிலை அதிகாரி களுக்கு நிவாரணமளிப்பதே இதன் நோக்கம்.

(இ) ஒதுக்கீட்டு விதிகள் பொதுவாக மறுஆய்வு செய்யப் படும்போது இந்த விதி மறுபரிசீலனை செய்யப்படும்.

# 449

## *பம்பாய் மாகாணத்தில் கால்வாய் பாசன வசதி கொண்ட குறிப்பிட்ட தக்காணப் பகுதியில் அதிக சர்க்கரை ஆலைகள் கட்டுவதற்கு அனுமதிப்பது குறித்து

1421. ஸ்ரீஜித் பி.எஸ். ஹிரே: மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பின்கண்ட விவரங்களைத் தெரி விப்பாரா:

(அ) பம்பாய் மாகாணத்தின் தக்காணப் பகுதியில் பாதுகாப்பு நோக்கங்களுக்காக கால்வாய்கள் வெட்டப்பட்டன என்பது உண்மையா?

(ஆ) இந்த நோக்கம் நிறைவேற்றப்பட்டதா? இல்லை யென்றால் கரும்பு பயிரிடும் பொருட்டு சர்க்கரை ஆலைகள் நிறைந்த பிரதேசத்தை விஸ்தரிக்கும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உண்டா?

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3163.

(இ) இந்தப் பிரதேசத்தில் எத்தனை ஏக்கர் நிலம் கால்வாய் நீர் மூலம் பாசன வசதி பெற்றுள்ளது? சர்க்கரை ஆலைகள் இவற்றை எந்த அளவுக்குப் பயன்படுத்திக் கொள்கின்றன?

(ஈ) இப்பகுதியில் மேலும் பல சர்க்கரை ஆலைகள் கட்டு வதற்கு அரசாங்கம் அனுமதிக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது சம்பந்த மான தகவல்களைப் பம்பாய் அரசாங்கத்திடமிருந்து எதிர்பார்க் கிறோம்; அவை கிடைத்ததும் அவையில் சமர்ப்பிக்கப்படும்.

# 450

## *சிம்லாவில் வைசிராய் வளாக ஊழியர்கள் அனுபவித்துவரும் சலுகைகளை மத்தியப் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த சிம்லா மத்தியப் பிரிவு ஊழியர்களுக்கு விஸ்தரித்தல்

165. சர்தார் மங்கள் சிங்: சிம்லாவிலுள்ள வைசிராய் வளாகப் பணியாளர்கள் அனுபவித்துவரும் சலுகைகளை சிம்லா மத்தியப் பிரிவைச் சேர்ந்த துணை நிலை மற்றும் கடைநிலை ஊழியர்களுக்கு விஸ்தரிப்பது குறித்து நட்சத்திரக் குறியிடப்படாத கேள்வி எண். 136க்கு 1945 ஏப்ரல் 9 ஆம் தேதி அளிக்கப்பட்ட பதில் சம்பந்தமாக மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப் பினரிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன்: இதுகுறித்து ஏதேனும் முடிவு மேற்கொள்ளப்பட்டதா? அவ்வாறானால் இதுவிஷயம் பற்றி பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளின் நகலை மாண்புமிகு உறுப்பினர் இந்த அவையில் முன்வைப்பாரா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, மார்ச் 29, 1946, பக். 3165.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயம் குறித்து எடுக்கப்பட்ட இறுதி முடிவுகள் அடங்கிய உத்தரவுகளின் நகல் அவையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ளது:

புதுடில்லி இந்திய அரசாங்கத் தொழிலாளர் நலத்துறை துணைச் செயலாளர் புதுடில்லி மேற்கத்தியப் பிராந்திய மத்தியப் பொதுப்பணித் துறையின் கூடுதல் தலைமைப் பொறியாளருக்கு 1945 டிசம்பர் 6 ஆம் தேதி அனுப்பிய இ-6 எண்ணுள்ள கடிதத்தின் நகல்.

பொருள் - சிம்லாவிலுள்ள மத்தியப் பொதுப்பணித் துறையின் மத்தியப் பிரிவையும், வாடகைக் கட்டுப்பாட்டு அலுவலகத் தையும் சேர்ந்த ஊழியர்களுக்கு ஈட்டுப்படி வழங்க இசைவளிக்கப்படுகிறது.

1944 ஜுன் 7 ஆம் தேதியிட்ட உங்கள் 01171-இ ஆம் எண் கடிதம் கிடைத்தது. சிம்லாவிலுள்ள மத்தியப் பிரிவைச் சேர்ந்த அரசிதழ் பதிவுபெறாத பணியாளர்களுக்கும், சிம்லா மத்தியப் பொதுப்பணித் துறையின் வீட்டு வாடகைக் கட்டுப்பாட்டு அலுவலக ஊழியர்களுக்கும் பின்கண்ட விகிதங்களில் ஈட்டுப்படி வழங்க கவர்னர்-ஜெனரலின் நிர்வாக சபை அனுமதிக்கிறது:

(அ) கடைநிலை ஊழியர்கள் நீங்கலாக அரசிதழ் பதிவு பெறாத துணைநிலை ஊழியர்களுக்கும், தொழில்நுட்பப் பணியாளர்களுக்கும் அவர்களது சம்பளத்தில் 15 சதவீதம் வழங்கப் படும்; இது குறைந்தபட்சம் மாதம் ரூ. 15 ஆகவும் அதிகபட்சம் ரூ. 35 ஆகவும் இருக்கும்.

(ஆ) கடைநிலை ஊழியர்களுக்கு மாதம் ரூ. 2 என நிர்ணயிக்கப்படுகிறது.

2. இந்த ஆணைகள் முன்தேதியிட்டு 1945 ஜுலை 1 முதல் நடைமுறைக்கு வரும்.

# 451

## *தாமோதர் பள்ளத்தாக்கு அபிவிருத்தித் திட்டம்

*1503. பாபு ராம் நாராயண் சிங்: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களை அன்புகூர்ந்து தெரிவிப்பாரா:*

*(அ) தாமோதர் பள்ளத்தாக்கு அபிவிருத்தித் திட்டத்தின் இப்போதைய நிலை என்ன?*

*(ஆ) பூர்வாங்க ஆய்வு பூர்த்தியடைந்து விட்டதா?*

*(இ) சம்பந்தப்பட்ட எல்லா மாவட்டங்களிலும் இதுவரை கையகப்படுத்தப்பட்ட மற்றும் இன்னமும் கையகப்படுத்தப்பட விருக்கின்ற சாகுபடி நிலத்தின் மொத்த அளவு எவ்வளவு?*

*(ஈ) அனைத்து மாவட்டங்களிலும் பாதிக்கப்பட்ட கிராமங்கள் எத்தனை?*

*(உ) (i) தங்கள் வீடுகளை இழப்போர், (ii) தங்கள் நிலங்களிலிருந்து வெளியேற்றப்படுவோர், (iii) தங்கள் வீடுகள், நிலங்கள் இவை இரண்டையுமே இழப்போர் எத்தனை பேர்?*

*(ஊ) வெளியேற்றப்படும் மக்களுக்கு மறுவாழ்வு அளிக்கத் திட்டம் ஏதேனும் உண்டா?*

*(எ) பாதிக்கப்படும் அனைத்துப் பகுதிகளையும் சேர்ந்த*

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 3, 1946, பக். 3429.

மக்களின் உணர்வுகளையும், இந்தத் திட்டம் குறித்து பீகார் மாகாண காங்கிரஸ் காரியக் கமிட்டி நிறைவேற்றியுள்ள தீர்மானத்தையும் மாண்புமிகு உறுப்பினர் அறிவாரா?

(ஏ) மத்தியிலும் மாகாணங்களிலும் மக்கள் அரசாங்கங்கள் செயல்படத் தொடங்கும் வரை இந்தத் திட்டத்தின் செயல்பாட்டை ஒத்திவைப்பது உசிதம் என்பதை மாண்புமிகு உறுப்பினர் சிந்தித்துப் பார்த்தாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) பூர்வாங்க ஆய்வு நடைபெற்று வருகிறது.

(ஆ) இல்லை.

(இ), (ஈ), (உ). இந்த விஷயங்கள் குறித்த விரிவான தகவல்கள் தற்போது சேகரிக்கப்பட்டு வருகின்றன.

(ஊ) இது சம்பந்தமாக எந்தத் திட்டமும் இறுதி செய்யப்படவில்லை; எனினும் இந்த விஷயம் அரசாங்கத்தின் தீவிர பரிசீலனையில் உள்ளது. வீடுகளையும் நிலங்களையும் இழந்து தவிப்போருக்குப் போதிய அளவு மறுவாழ்வு அளிக்க வேண்டிய அவசியத்தை அரசாங்கம் பிரதானமாக மனத்தில் கொண்டிருக்கும் என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு உறுதிகூற விரும்புகிறேன்.

(எ) இந்த விஷயம் பற்றிய சில பத்திரிகைச் செய்திகளை அரசாங்கம் கண்ணுற்றுள்ளது.

(ஏ) பூர்வாங்க ஆய்வுகள்தான் தற்போது மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அவற்றை ஒத்திவைப்பதோ அல்லது அவற்றை மறுபரிசீலனை செய்வதை அவசியமாக்கும் எத்தகைய நடவடிக்கையும் எடுப்பதோ விரும்பத்தக்கது என்று அரசாங்கம் கருதவில்லை.

*பாபு ராம் நாராயண் சிங்:* மக்களுக்கு மறுவாழ்வு அளிக்கும் திட்டம் எவ்வகையில் அமைந்திருக்கும்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதுகுறித்து திட்டவட்டமான கருத்து எதையும் கூறும் நிலையில் இப்போது நான் இல்லை.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* நிலங்களிலிருந்து வெளியேற்றப் படும் அனைவருக்கும் குறிப்பாக விவசாயிகளுக்கு தங்கள் வேளாண் தொழிலைத் தொடர்ந்து மேற்கொள்வதற்கு மாற்று நிலங்கள் வழங்குவது மிக அவசியம் என்பதை மாண்புமிகு உறுப்பினர் மனத்தில் கொள்வாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அந்த விஷயம் நிச்சயம் என் மனத்தில் இருக்கும்.

*பாபு ராம் நாராயண் சிங்:* கையகப்படுத்திக் கொள்ளப்பட்ட பிரதேசத்திலுள்ள தமது இல்லங்களிலிருந்து மக்கள் வெளியேற இரண்டு அல்லது மூன்று வருட கால அவகாசம் அளிக்கப்பட வேண்டும்; அப்போதுதான் அவர்கள் தங்கள் பூர்வீக இல்லங்களைக் காலி செய்து விட்டுப் புதிய இடங்களில் வீடுகளைக் கட்டி அவற்றில் அவர்கள் குடியேற முடியும். இவ்வாறு அவர்களுக்கு அவகாசம் அளிக்கப்படுமா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* குறிப்பிட்ட காலக்கெடு குறித்து நான் உறுதி எதுவும் அளிக்க இயலாது. எனினும் இது விஷயத்தில் நிச்சயமாக போதிய அவகாசம் அளிக்கப் படும் என்பதை மட்டும் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

*பாபு ராம் நாராயண் சிங்:* ஐயா, தாமோதர் பள்ளத்தாக்கு அபிவிருத்தித் திட்டத்தின் ஒரு பகுதியாக சந்தால் பர்கானாக்கள் மாவட்டத்திலுள்ள நதிகளில் சில அணைக்கட்டுகள் கட்டப்பட விருக்கின்றனவா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது குறித்து இந்தக் கட்டத்தில் நான் எதுவும் கூற முடியாதவனாக இருக்கிறேன்.

மௌலானா ஜாபர் அலி கான்: (உ) கேள்வியைப் பொறுத்த வரையில், அசாமில் ஏராளமான கிராமவாசிகள் தங்கள் வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள் என்பதும், அவர்களது இல்லங்கள் இடித்துத் தகர்த்துத் தரைமட்டமாக்கப்பட்டு விட்டன என்பதும், இதனால் அவர்கள் சொல்லொண்ணா துன்ப துயரங்களுக்கு உள்ளாகியிருக்கின்றனர் என்பதும், அவர்களுடைய நிலங்கள் கையகப்படுத்திக் கொள்ளப்பட்டு விட்டன என்பதும் உண்மையா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தக் கேள்விக்கும் இந்த விஷயத்துக்கும் என்ன சம்பந்தம் என்று எனக்குப் புரியவில்லை.

திரு. தலைவர்: தாமோதர் பள்ளத்தாக்கு அபிவிருத்தித் திட்டம் சம்பந்தமாக அவர் கூறுகிறார்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இத்திட்டத்தால் அசாம் எவ்வகையிலும் பாதிக்கப்பட மாட்டாது.

பாபு ராம் நாராயண் சிங்: இந்தத் திட்டம் இறுதியாக்கப்பட்டு விட்டதா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், ஐயா.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: இது ஒரு பல-நோக்குத் திட்டம் அல்லவா?

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், ஐயா.

## 452

## *தன்பாத் இந்திய சுரங்கப் பள்ளியில் வேலைநிறுத்தம்

1504. பாபு ராம் நாராயண் சிங்: தன்பாத் இந்திய சுரங்கப் பள்ளியில் வேலைநிறுத்தம் நடைபெற்று வருகிறதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா? அவ்வாறு வேலை நிறுத்தம் நடைபெறுமானால் அது ஏன் நடைபெறுகிறது? அது முடிவுக்கு வந்துவிட்டதா? அவ்வாறாயின் அது எப்படி முடிவுக்கு வந்தது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: 1946 மார்ச் 26 ஆம் தேதி கேட்கப்பட்ட நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண். 1265க்கு அளிக்கப்பட்ட பதிலை மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மாணவர்கள் முறையீடு செய்துள்ள டிப்ளமாக்கள் சம்பந்தமாக அரசு எத்தகைய முடிவுக்கும் வந்திருக்கிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயம் பரிசீலனையில் உள்ளது.

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் IV, 1946, பக். 3429.

# 453

## *சர்வதேச தொழிலாளர் அலுவலகத்தில் (ஐ.எல்.ஓ) பணிபுரியும் இந்தியர்களின் எண்ணிக்கை

*1511. பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தயைகூர்ந்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) ஐ.எல்.ஓ. தனது தலைமை அலுவலகத்தில் பணிக்கு அமர்த்தியுள்ள இந்தியர்களின் எண்ணிக்கை எவ்வளவு?

(ஆ) ஐ.எல்.ஓ. அலுவலகங்களில் பணிபுரியும் இந்தியர்களுக்காக ஐ.எல்.ஓ. செலவிடும் மொத்தத் தொகையும், இந்திய அரசாங்கம் ஐ.எல்.ஓ.க்கு அளிக்கும் பங்குத் தொகையும் எவ்வளவு?

(இ) இந்தியாவிலுள்ள ஐ.எல்.ஓ. அலுவலகத்தை மேம்படுத்துவதற்கும், மாகாண அரசாங்கங்களுடன் ஐ.எல்.ஓ. நெருங்கிய தொடர்புகளைப் பராமரிக்கும் பொருட்டு அனைத்து மாகாணத் தலைநகரங் களிலும் அதன் கிளைகளைத் திறப்பதற்கும் திட்டங்கள் ஏதேனும் உண்டா?

(ஈ) ஐ.எல்.ஓ. தலைமை அலுவலகத்தில் இந்தியாவின் பிரதிநிதித்துவத்தை அதிகரிக்க அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கை எடுத்து வருகிறதா? அவ்வாறாயின் இந்த முயற்சிக்குக் கிட்டியுள்ள பலன்கள் என்ன?

(உ) தொழிலாளர் சட்டங்களையும், அச்சட்டங்கள் செயல்படுத்தப்படும் நாடுகளையும் பற்றித் தெரிந்து கொள்வதற்காகவும், ஐ.எல்.ஓ.வின் பணியை அறிமுகம் செய்து கொள்வதற்காகவும்

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, ஏப்ரல் 3, 1946, பக். 3429.

இந்திய அரசாங்கம் தனது தலைமைச் செயலக உறுப்பினர்கள் சிலரை ஒரு சில மாதங்களுக்கு ஐ.எல்.ஓ. தலைமை அலுவலகத்துக்கு அனுப்பும் யோசனை ஏதும் உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) சர்வதேசத் தொழிலாளர் அலுவலகத்தின் தலைமையகத்தில் மூன்று இந்தியர்கள் பணிக்கு அமர்த்தப்பட்டிருப்பதாகத் தெரிய வருகிறது. சர்வதேசத் தொழிலாளர் அலுவலகத்தின் இந்தியக் கிளையில் பணிபுரிவோர் அனைவரும் இந்தியர்களே ஆவர். 1946 ஆம் ஆண்டுக்கு ஒரு மூத்த அதிகாரியும் ஏழு ஊழியர்களும் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

(ஆ) தனது பல்வேறு அலுவலகங்களில் பணிபுரியும் இந்திய ஊழியர்களுக்காக சர்வதேசத் தொழிலாளர் நிறுவனம் செலவிடும் தொகை வருமாறு:

தலைமை அலுவலகங்கள் ... 60,000 சுவிஸ் பிராங்குகள் அல்லது ஏறத்தாழ ரூ. 45,900

இந்தியக் கிளைகள் ... ரூ. 44,640

ஐ.எல்.ஓ. நிதிக்கு இந்தியா நேரடியாகப் பங்களிப்பதில்லை. எனினும் சர்வதேச சங்கத்துக்கு இந்தியா வழங்கும் பணத்தில் ஒரு பகுதி ஐ.எல்.ஓ.க்கு அளிக்கப்படுகிறது. பின்கண்ட அட்டவணையில் இந்த விவரங்களைக் காணலாம்:

| ஆண்டு | சர்வதேச சங்கத்துக்கு வழங்கப்படும் மொத்தத் தொகை (தங்க பிராங்குகளில்) | சர்வதேசத் தொழிலாளர் அலுவலகத்துக்கு ஒதுக்கப்படும் தொகை (தங்க பிராங்குகளில்) |
|---|---|---|
| 1943 | 8,93,04,424 | 3,00,73,188 |
| 1944 | 8,15,02,464 | 3,00,96,018 |
| 1945 | 1,99,03,339 | 8,95,200 (சுவிஸ் பிராங்குகள்) |
| 1946 | 13,02,93,867 | தெரியவில்லை |

சர்வதேசத் தொழிலாளர் நிறுவனத்தைச் சேர்ந்த இந்தியக் கிளையின் இயக்குநரிடமிருந்து பெறப்பட்ட தகவல்.

குறிப்பு: நாணயமாற்று வீதங்கள்:

| | ரூ. | அணா | பைசா (ஏறத்தாழ) |
|---|---|---|---|
| 1 தங்க பிராங்க் | 1 | 1 | 5 |
| 1 சுவிஸ் பிராங்க் | 0 | 12 | 4 |

(இ) அரசாங்கத்துக்குத் தகவல் ஏதும் இல்லை.

(ஈ) இந்தக் கேள்விக்கு 'ஆம்' என்பதே பதில்.

(i) மாண்ட்ரீலிலுள்ள சர்வதேசத் தொழிலாளர் அலுவலகத்துக்கு துணைநிலை அலுவலர்களாக தகுதி வாய்ந்த ஒரு சிலர் சமஷ்டி அரசுப் பணிகள் தேர்வாணையத்தால் தேர்ந்தெடுத்து அனுப்பப்படுகின்றனர்.

(ii) மேல்நிலைப் பதவிகளைப் பொறுத்தவரையில், ஓர் இந்தியரை துணை இயக்குநராக நியமிக்கும் விஷயம் பரிசீலனையில் உள்ளது.

(உ) இந்த விஷயம் பரிசீலனையில் இருக்கிறது.

**திரு. மோகன்லால் சாக்சேனா:** ஒரு தங்க பிராங்கின் ரூபாய் மதிப்பு என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரு தங்க பிராங்கின் ரூபாய் மதிப்பு 1-1-5 ஆகும். சர்வதேசத் தொழிலாளர் அலுவலகம் இந்தத் தகவலைத் தந்துள்ளது. ஆனால் என்னால் இதனை உறுதி செய்ய இயலாது.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** (இ) கேள்வியைப் பொறுத்த வரையில், ஐ.எல்.ஓ. மாகாண அரசாங்களுடன் தொடர்புகளைப் பராமரித்துவரும் பொருட்டு அனைத்து மாகாணங்களிலும் தனது கிளைகளை ஆரம்பிக்கும்படி ஐ.எல்.ஓ.க்குப் பரிந்துரை செய்வது பற்றி அரசாங்கம் பரிசீலிக்குமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயத்தைக் கவனிக்கிறேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: ஐ.எல்.ஓ.வின் நிர்வாக அமைப்பில் ஆசிய நாடுகளுக்கும் அதேபோல் ஐரோப்பிய இனமல்லாத இதர இனங்களைச் சேர்ந்த மக்கள் வாழும் நாடுகளுக்கும் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை என்பது உண்மை அல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது ஒரு பொதுப்படையான கருத்து; ஆனால் உண்மை நிலை என்ன என்பதை என்னால் துல்லியமாகக் கூறுவதற்கில்லை.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: இந்தியாவும் ஐரோப்பியரல்லாத இன மக்கள் வாழும் ஏனைய நாடுகளும் ஐ.எல்.ஓ.வின் நிர்வாக அமைப்பில் தகுந்த பிரதிநிதித்துவம் பெறுவதற்கு என்ன நடவடிக்கைகள் மேற்கொள்ள அரசாங்கம் உத்தேசித்துள்ளது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தியாவின் கோரிக்கையை எப்போதுமே நாம் வலியுறுத்தி வந்திருக்கிறோம்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: பலன் என்ன? இத்திசை வழியில் ஏதேனும் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது விஷயத்தில் ஒருநாள் நாம் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: ஐ.எல்.ஓ. நிர்வாக அமைப்பில் நமது நிலைமை மூன்றாண்டுகளுக்கு முன்பிருந்ததை விட இப்போது பலவீனமாக இருக்கிறது என்பது உண்மையில்லையா?

மாண்புமிகு திவான் பகதூர் சர் ஏ. ராமசாமி முதலியார்: இக்கேள்விக்கு நான் பதிலளிக்கலாமா? எனக்குத் தெரிந்தவரை அரசுத் தரப்பிலும் சரி, தொழிலாளர் தரப்பிலும் சரி பல ஆண்டுகளாகவே இந்த அமைப்பில் நாம் பிரதிநிதித்துவம் பெற்று வந்திருக்கிறோம். இந்த அவையிலுள்ள நமது சகா திரு. ஜோஷி 10 அல்லது 12 ஆண்டுகள் ஐ.எல்.ஓ. நிர்வாக அமைப்பின் உறுப்பினராக இருந்திருக்கிறார். சர் அதுல் சாட்டர்ஜி அரசாங்கத்தின்

சார்பில் ஐ.எல்.ஓ. நிர்வாக அமைப்பின் உறுப்பினராகவும், ஒரு சந்தர்ப்பத்தில் அதன் தலைவராகவும் இருந்திருக்கிறார். தற்போதைய ஹைக்கமிஷனரான சர். சாமுவேல் ரங்கநாதன் நிர்வாக அமைப்பில் ஓர் உறுப்பினராக இருந்து வருகிறார்; சென்ற சர்வதேசத் தொழிலாளர் மாநாட்டின்போது, சட்ட திட்டங்களைத் தயாரிக்கும் இந்த அமைப்பைச் சேர்ந்த குழுவின் தலைவராக அவர் இருந்தார். திரு. ஜோஷி இந்த அமைப்பின் உறுப்பினராக இல்லாத கடந்த ஒரு வருட காலமாக இந்தியாவிலிருந்து ஊழியர்களின் பிரதிநிதி எவரும் இதில் இடம்பெறவில்லை. இது விஷயத்தில் நமது நிலைமை பலவீனமடைந்திருக்கிறது என்று எதையேனும் கூறுவதாக இருந்தால் இதை ஒன்றைத்தான் கூறமுடியும். ஆனால் அதே சமயம் அரசாங்கத்தைப் பொறுத்தவரையில், நமது ஹைக் கமிஷனர் இந்த நிர்வாக அமைப்பின் ஓர் உறுப்பினராகத் தொடர்ந்து இருந்து வருகிறார். ஐரோப்பியல்லாத மற்ற இன மக்களைப் பற்றி நான் எதுவும் கூறுவதற்கில்லை; ஆனால் இந்திய இனம் சம்பந்தப்பட்ட மட்டில் அரசு தரப்பிலும் சரி, தொழிலாளர் தரப்பிலும் சரி எப்போதுமே ஐ.எல்.ஓ. நிர்வாக அமைப்பில் ஓர் உறுப்பினராக இருந்து வந்திருக்கிறது.

**திரு. என்.வி. காட்கில்:** ஐ.எல்.ஓ. நிர்வாக அமைப்பின் சட்ட திட்டங்களில் சில மாற்றங்கள் பரிந்துரைக்கப்பட்டன என்பதும், அந்த மாற்றங்கள் இந்த அவையில் முன்வைக்கப் பட்டன என்பதும் உண்மையில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் கொண்டு வர உத்தேசித்திருக்கும் தீர்மானத்தின்போது இந்த விஷயம் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும்.

**திவான் சமன் லால்:** மாண்புமிகு உறுப்பினர் தமது தீர்மானத்தை எப்போது கொண்டுவரப் போகிறார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கூட்டத் தொடரின்போது கொண்டுவரவிருக்கிறேன்.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** சர்வதேச சங்கத்தைக் கலைத்துவிடும் யோசனை ஒன்று இருக்கிறது; இந்நிலைமையில், ஐ.எல்.ஓ.வுக்கு இந்தியக் கருவூலத்திலிருந்து நேரடியாகவே பணம் அனுப்பும் உத்தேசம் இருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது சம்பந்தமாக நான் எதுவும் கூறுவதற்கில்லை. இது ஐ.எல்.ஓ. முடிவு செய்ய வேண்டிய விஷயம்.

# 454

## *மத்திய மற்றும் மாகாண அரசாங்க அச்சகங்களில் வேலை நிறுத்தங்கள்

*1526. பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட விஷயங்களைத் தெளிவுபடுத்துவாரா:

(அ) புதுடில்லி இந்திய அரசாங்க அச்சகத்தில் எவ்வளவு காலமாக வேலைநிறுத்தம் நடைபெற்று வருகிறது?

(ஆ) அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்ட தொழிலாளர்களின் கோரிக்கைகளும் குறைகளும் என்ன?

(இ) இந்தக் கோரிக்கைகள் அரசாங்கத்திடம் எப்போது முன்வைக்கப்பட்டன? தொழிலாளர்களின் சட்டபூர்வமான, நியாயமான தேவைகளை நிறைவேற்ற அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துள்ளது?

(ஈ) தற்போது வேலை நிறுத்தத்தில் எத்தனைத் தொழிலாளர்கள் ஈடுபட்டுள்ளனர்?

(உ) இந்த வேலை நிறுத்தம் மத்திய அரசாங்கத்துக்கும் மாகாண அரசாங்கங்களுக்கும் சொந்தமான அச்சகங்களுக்கும் பரவி அங்கும் இதேபோன்ற வேலை நிறுத்தங்கள் நடைபெற்று வருகின்றன என்பது உண்மையா?

(ஊ) இப்படிப்பட்ட ஒரு வேலை நிறுத்தம் பம்பாயில் நடைபெற்று வருவதாக ஹிந்துஸ்தான் டைம்ஸ் தனது மார்ச் 21 ஆம் தேதிய இதழின் 4 ஆவது பக்கத்தில் வெளியிட்டிருக்கும் செய்தி உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 3, 1946, பக்கம் 3443.

(எ) தொழிலாளர்களுடன் உடன்பாடு காண அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்து வருகிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இந்த வேலை நிறுத்தம் 1946 மார்ச் 6 ஆம் தேதி முதல் மார்ச் 24 ஆம் தேதி வரை மொத்தம் 19 நாட்கள் நீடித்தது.

(ஆ) தொழிலாளர்கள் முன்வைத்த கோரிக்கைகள் வருமாறு:

(1) மாதம் ரூ. 50க்குக் குறையாமல் வாழ்க்கை நடத்தப் போதிய நியாயமான ஊதியம் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

(2) இந்திய அரசாங்கத்தின் எல்லா அச்சகங்களிலும் சமத்துவமாக இருக்கும் வகையில் இப்போதுள்ள ஊதிய விகிதங்களை மாற்றியமைக்க வேண்டும்.

(3) வைப்பு நிதி மற்றும் ஓய்வு பெறும்போது அல்லது மரணமடையும்போது அளிக்கப்படும் உதவித் தொகை போன்ற விஷயங்களில் அரசு ரயில்வேக்கள் கடைப்பிடிக்கும் முறையை அனுசரித்து பங்களிப்பு நிதி விதிமுறைகள் திருத்தியமைக்கப்பட வேண்டும்.

(4) அகவிலைப்படியையும் யுத்தகாலப் படியையும் உயர்த்த வேண்டும்.

(5) விடுப்பு விதிகள் திருத்தப்பட வேண்டும்.

(6) வேலைநேரம் வாரம் 48 மணியிலிருந்து 40 மணியாகக் குறைக்கப்பட வேண்டும்.

(7) இரவு 'ஷிப்டில்' பணியாற்றும் ஆண் தொழிலாளர்களுக்கு விசேஷப் படி வழங்கப்பட வேண்டும்.

(8) அளவுசார் ஊதியம் பெறும் தொழிலாளர்களின் ஊதிய விகிதங்களை அதிகப்படுத்த வேண்டும்.

*(9) அளவுசார் ஊதியம் பெறும் தொழிலாளர்களுக்கு நேர்வு விடுப்பும், சம்பளத்துடன் கூடிய விடுமுறைகளும் அனுமதிக்கப்பட வேண்டும்.*

*(10) தற்காலிகத் தொழிலாளர்கள் பணியில் நீடிக்கப்படச் செய்ய வேண்டும்.*

*(இ) மற்றும் (எ). இந்தக் கோரிக்கைகள் கடந்த பிப்ரவரியில் அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டன. கடைசி ஐந்து கோரிக்கைகள் பகுதி அளவு ஏற்றுக்கொள்ளப்பட்டன; பல சலுகைகள் அறிவிக்கப்பட்டன. முதல் ஐந்து கோரிக்கைகள் அனைத்துப் பிரிவு மத்திய அரசு ஊழியர்கள் சம்பந்தப்பட்ட பொதுவான கோரிக்கைகளாக இருப்பதால், தக்க முறையில் பரிசீலனை செய்யாமல் அவற்றை ஏற்பதற்கில்லை; மேலும், சம்பளக் கமிஷன் பரிந்துரைகள் வரும்வரை காத்திருப்பது அவசியமாகிறது. எல்லா அச்சகத் தொழிலாளர்களுக்கும் பின்கண்ட கூடுதல் சலுகைகளையும் அரசு வழங்கியுள்ளது:*

(i) *அகவிலைப்படியும் யுத்த காலப்படியும் உயர்த்தப்பட்டு, இப்போது அவற்றைப் பெற்று வருபவர்களுக்கு 1946 ஜனவரி 1 ஆம் தேதிக்குப் பதிலாக 1944 ஜூலை 1லிருந்து முன்தேதியிட்டு வழங்கப்படும்.*

(ii) *அகவிலைப்படி பெற்றுவரும் அனைத்துத் தொழிலாளர்களது ஓய்வூதியத்தை நிர்ணயிப்பதில் அந்த அகவிலைப்படியில் பாதி சம்பளமாகக் கணக்கிடப்படும்.*

(iii) *கடைநிலை பணியாளர்களாகக் கருதப்படுபவர்கள் அவர்களது சராசரி ஊதியத்தில் பாதியை ஓய்வூதியமாகப் பெறுவர்.*

*இதுவல்லாமல், வெவ்வேறு இந்திய அரசு அச்சகங்களில் பணியாற்றும் பல்வேறு பிரிவு தொழிலாளர்களின் ஊதியங்களிலும் வேலை நிலைமைகளிலும் நிலவும் ஒழுங்கின்மையை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிப்பதற்காக ஒரு தனி அதிகாரியை நியமிக்க அரசாங்கம் உத்தேசித்துள்ளது.*

*(ஈ) வேலை நிறுத்தத்தில் 775 தொழில் துறைத் தொழிலாளர்கள் ஈடுபட்டுள்ளனர்.*

(உ) ஆம், அலிகாரிலுள்ள இந்திய அரசாங்க அச்சகத்துக்கு வேலை நிறுத்தம் பரவியுள்ளது. அதன் தொழிலாளர்கள் 1946 மார்ச் 15 முதல் வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள். கல்கத்தா இந்திய அரசாங்க அச்சகம் மற்றும் அச்சுப்படிவ அச்சகம் ஆகியவற்றைச் சேர்ந்த தொழிலாளர்களும் வேலைநிறுத்த அறிவிப்பு செய்துள்ளனர். ஆனால் அந்த வேலைநிறுத்தம் இன்னும் தொடங்கவில்லை.

(ஊ) பத்திரிகையில் வெளிவந்த செய்தியைத் தவிர அரசாங்கத்துக்கு வேறு எந்தத் தகவலும் இல்லை. இதில் சம்பந்தப்பட்ட அச்சகம் மாகாண அரசாங்கத்தின் பொறுப்பில் உள்ளது.

# 455

## *புதுடில்லியில் தனியார் குடியிருப்புகளை அரசு கட்டாயமாகக் கைவசப்படுத்திக் கொள்ளுதல்

1530. திவான் சமன் லால்: (அ) 1946 மார்ச் 13 ஆம் தேதி, நட்சத்திரக் குறியிட்ட 924 ஆம் எண் கேள்விக்கு இந்த அவையில் அளிக்கப்பட்ட பதிலில், தனியார் குடியிருப்புகளைக் கட்டாயமாகக் கைவசப்படுத்திக் கொள்ளும் நடைமுறையைக் கூடிய விரைவில் கைவிட யுத்த இலாகா உத்தேசித்திருப்பதாக அறிவிக்கப்பட்டது. இந்த அறிவிப்பின் பகைப்புலனில், இதேபோன்று, மத்திய அரசு அதிகாரிகளுக்கு வீட்டு வசதி செய்துதர புதுடில்லியில் தனியார் குடியிருப்புகளைக் கட்டாயமாகக் கைவசப்படுத்திக் கொள்வதை நிறுத்திவிட தொழிலாளர் நலத்துறை எண்ணியுள்ளதா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா?

(ஆ) புது டில்லியில் அரசாங்கத்தால் ஏற்கெனவே கோரப்பட்டு, இன்னமும் கைவசப்படுத்திக் கொள்ளாத தனியார் குடியிருப்பு

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 3, 1946, பக்கம் 3445.

களை (உதாரணம், ராதண்டன் சாலையிலுள்ள 4ஆம் எண் குடியிருப்பு) தன் வசப்படுத்திக் கொள்ள அரசாங்கம் இப்போதும் உத்தேசித்துள்ளதா? அவ்வாறாயின் இதற்குக் காரணங்கள் என்ன? இத்தகைய குடியிருப்புகளைக் கட்டாயமாக எடுத்துக் கொள்வதை அவசியம் என்று அரசாங்கம் இன்னமும் ஏன் கருதுகிறது?

(இ) தனியார் குடியிருப்புகளைக் கட்டாயமாக கைவசப் படுத்திக் கொள்ளும் திட்டம் பொதுவாகக் கைவிடப்பட்டுவரும் நிலைமையில், (ஆ) பிரிவில் குறிப்பிடப்பட்ட குடியிருப்புகளில் வசித்து வருபவர்களை தொடர்ந்து அங்கேயே குடியிருக்க அனுமதிப்பது உசிதமானது, உகந்தது என்பதை அரசாங்கம் எண்ணிப் பார்த்ததா? அவ்வாறாயின் இது சம்பந்தமான உத்தரவுகளை விரைவில் பிறப்பிக்கும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உண்டா? இல்லையென்றால், ஏன் இல்லை?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* (அ) ஜப்பானுடனான போர் முடிவுற்றதிலிருந்து, மத்திய அரசு அதிகாரிகளுக்கு வீட்டு வசதி செய்து தருவதற்கு தனியார் குடியிருப்புகளைக் கட்டாயமாக கைவசப்படுத்திக் கொள்ளும் நடைமுறையை தொழிலாளர் நலத்துறை விட்டுவிட்டது.

(ஆ) இது சம்பந்தமாக எத்தகைய பொது விதியையும் வகுத்துத் தருவது சாத்தியமல்ல. பொது உபயோகத்துக்காக ஏற்கெனவே வரித்துக் கொண்ட ஒரு குடியிருப்பை தனது ஊழியர் ஒருவர் பயன் படுத்திக் கொள்ள அனுமதிப்பதற்கு அரசாங்கத்திற்கு உரிமை இருக் கும்போது அதே குடியிருப்பை வேறு பொது உபயோகத்துக்கு விடவும் அதற்கு உரிமை உண்டு. ராதண்டன் சாலையிலுள்ள 4 ஆம் எண் குடியிருப்பும் இதே வகையைச் சேர்ந்ததுதான்.

அரசின் பொது நோக்கங்களுக்குக் குடியிருப்புகளை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்வதற்கு இது அவசியமாகிறது.

(இ) பொது நோக்கங்களுக்குக் குடியிருப்புகளை மிகச் சிறப்பாகப் பயன்படுத்திக் கொள்ளும் கண்ணோட்டத்திலிருந்தே எந்த ஒரு பிரச்சினையும் பரிசீலிக்கப்படும்.

# 456

## *மைக்கா சுரங்கத் தொழிலாளர்கள் நல்வாழ்வு நிதியம் அமைப்பு மசோதா

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, மைக்கா சுரங்கத் தொழிலில் பணியிலமர்த்தப்பட்டிருக்கும் தொழிலாளர்களின் நல்வாழ்வுக்கான நடவடிக்கைகளை ஊக்குவிக்கும் நோக்கத்தோடு நிதியம் அமைப்பதற்கு வகை செய்யும் மசோதாவை தாக்கல் செய்ய அனுமதி வேண்டுகிறேன்.

**திரு. தலைவர்:** தீர்மானம் வருமாறு:

''மைக்கா சுரங்கத் தொழிலில் பணியிலமர்த்தப்பட்டிருக்கும் தொழிலாளர்களின் நல்வாழ்வுக்கான நடவடிக்கைகளை ஊக்குவிக்கும் நோக்கத்தோடு நிதியம் அமைப்பதற்கு வகை செய்யும் மசோதாவை தாக்கல் செய்ய அனுமதி கோரப்படுகிறது.''

தீர்மானம் ஏற்கப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்த மசோதாவை தாக்கல் செய்கிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 3, 1946, பக்கம் 3457.

# 457

## *தொழிற்சாலைகள் (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா,*

''1934 ஆம் வருட தொழிற்சாலைகள் சட்டத்தைத் திருத்தும் மசோதாவை, தெரிவுக்குழு பரிந்துரைத்த வடிவத்தில், பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.''

இந்த மசோதா தெரிவுக் குழுவில் விவாதிக்கப்பட்டு வந்திருப்பதால், இந்தக் கட்டத்தில் இம்மசோதா பற்றி நீண்ட சொற்பொழிவு எதுவும் நிகழ்த்துவது அவசியமில்லை என்று கருதுகிறேன். இந்த மசோதாவில் ஆரம்பத்தில் ஏழு ஷரத்துகள் இடம்பெற்றிருந்தன. இந்த ஏழு ஷரத்துகளில் நான்கு ஷரத்துகளுக்கு மட்டுமே தெரிவுக் குழு சில திருத்தங்களைச் செய்துள்ளது. தொழிலாளர்களுக்குச் சாதகமாக மசோதாவில் இடம்பெற்றுள்ள மூல ஷரத்துகளை மேலும் தாராளமாக்குவதையே பிரதானமாக இந்தத் திருத்தங்கள் வலியுறுத்துகின்றன. மசோதாவின் மூலவரைவுக்கு தெரிவுக்குழுவில் செய்யப்பட்டுள்ள திருத்தங்கள் அரசாங்கத்தின் நோக்கங்களுக்கு அப்பால் சென்ற போதிலும், தெரிவுக் குழுவின் திருத்தங்களுக்கு நான் ஆட்சேபம் ஏதும் தெரிவிக்கப் போவதில்லை. இப்போதுள்ள வடிவத்திலேயே அதனை ஏற்கத் தயாராக இருக்கிறேன். எனவே, ஐயா, இந்த மசோதாவை இப்போது பிரேரிப்பிக்கிறேன்.

*திரு. தலைவர்: தீர்மானம் வருமாறு:*

''1934 ஆம் வருட தொழிற்சாலைகள் சட்டத்தைத் திருத்தும் மசோதாவை, தெரிவுக்குழு பரிந்துரைத்த வடிவத்தில், பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளுமாறு கோரப்படுகிறது.''

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 3, 1946, பக்கம் 3457.

# 458

## *இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு மாதாந்திர மானியம்

1632. திரு. சத்திய நாராயண் சின்ஹா: (அ) தொழிலாளர்களிடையே பிரசாரம் செய்வதற்காக இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துக்கு மாதந்தோறும் 13,000 ரூபாய் மானியம் வழங்கப்பட்டு வருவது சம்பந்தமாக மார்ச் 24 ஆம் தேதியிட்டு நேஷனல் கால் எனும் ஏட்டின் ஞாயிறு காலைப் பதிப்பில் வெளிவந்த செய்தி மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் கவனத்துக்கு வந்ததா?

(ஆ) பிரசாரகர்களுக்கு அளிக்கப்படும் ஊதியம் குறைந்திருக்கும் அதே வேளையில் பிரச்சார செலவு வெகுவாக அதிகரித்திருக்கிறது என்பது உண்மையா?

(இ) இது விஷயத்தில் கணக்கு வைக்கும் முறையை தலைமைக் கணக்குத் தணிக்கையாளர் கடுமையாகச் சாடியிருக்கிறார் என்பதும், இது குறித்து அவர் மிகுந்த அதிருப்தி தெரிவித்திருக்கிறார் என்பதும் உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தின் கணக்குகள் 1946 மார்ச் 19 ஆம் தேதியன்று அவையில் முன்வைக்கப்பட்டன; செலவினத்தில் பல வேறுபாடுகள் இருப்பதை அவை காட்டின. ''பிரசாரகர்களுக்கு ஊதியம்'' என்ற தலைப்பில் செலவினம் குறைந்திருக்கும்போது, 1945 ஆம் ஆண்டு மே, ஜுன், ஜுலை மாதங்களில் ''தொழிலாளர்கள் பற்றிய தகவல்களைப் பரப்புதல்'' என்ற தலைப்பில் செலவினம் பெரிதும் அதிகரித்திருப்பதைப் புலப்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 3, 1946, பக்கம் 3457.

படுத்தின. தொழிலாளர் பிரசார நடவடிக்கைகள் திட்டத்தை செயல்படுத்தும் பொறுப்பு தகவல், ஒலிபரப்புத் துறையிலிருந்து தொழிலாளர் நலத்துறைக்கு மாற்றப்பட்டதன் விளைவாய் 1945 ஏப்ரலில் செலவினங்களை வகைப்படுத்துவதில் மேற்கொள்ளப் பட்ட மாற் றங்கள் காரணமாக ஏற்பட்டவையே இந்த வேறுபாடு களே தவிர வேறன்று. தொழிலாளர் மையங்கள், தொழிலாளர் மன்றங்கள் போன்றவற்றுக்குப் பொறுப்பு வகித்துவந்த பிரசார கர்களுக்கு ஊதியம் அளித்து வந்ததால் ஏற்பட்டு வந்த செலவினம் இதுவரை 'நிர்வாகச் செலவினமாக'க் காட்டப்பட்டு வந்தது. 1945 மே மாதம் முதல் ''தொழிலாளர்கள் சம்பந்தப்பட்ட செய்திகளைப் பரப்பும் பணிக்கு மதிப்பூதியம்'' என்ற தலைப்பில் இது காட்டப் படலாயிற்று. எனினும் இந்த மாதங்களில் 'பிரசாரகர்களுக்கு ஊதியம்' அளிப்பதற்காக ஏற்பட்ட செலவினமும், 'தகவல் பரப்புவது' சம்பந்த மான செலவினமும் முந்திய மாதங்களைப் போன்றே ஏறத்தாழ ஒரே அளவிலேயே இருந்தன.

(இ) 1945 டிசம்பர் 2 ஆம் தேதி திரு. லால்சந்த் நாவல்ராய் கேட்ட 31 ஆம் எண் கேள்வியின் (அ) மற்றும் (ஈ) முதல் பகுதிக்கு நான் அளித்த பதிலையும், அதேபோன்று 1943-44 ஆம் ஆண்டுக் கான கணக்குகள் குறித்து பொதுக் கணக்குக் குழு சமர்ப்பித்த அறிக்கையையும் மதிப்பிற்குரிய உறுப்பினரின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

**திரு. சத்திய நாராயண் சின்ஹா:** இதன் பின்னர் என்ன நடந்தது? இந்தக் கணக்குகளை எல்லாம் பொதுக் கணக்குக் குழு விடம் மாண்புமிகு உறுப்பினர் சமர்ப்பிப்பாரா? இதெல்லாம் பொது மக்களின் பணவிரயம் என்றே கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஏற்கெனவே என் பதிலில் குறிப்பிட்டிருப்பதுபோல், இவற்றைப் பற்றியெல்லாம் பொதுக் கணக்குக் குழு உரிய முறையில் பரிசீலித்தது. 1943-44-ஆம் ஆண்டுக்கான கணக்குகள் குறித்து பொதுக் கணக்குக் குழு சமர்ப்பித் துள்ள அறிக்கையின் 68 ஆவது பத்தியை மதிப்பிற்குரிய உறுப் பினரின் கவனத்துக்கு மீண்டும் கொண்டு வருகிறேன்.

**திவான் சமன் லால்:** 1945 ஆம் ஆண்டுக்குப் பிறகு நிலைமை என்னவென்பதையும், இந்த மானியம் இப்போது நிறுத்தப்பட்டு

விட்டதா என்பதையும் மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் கூறு வாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மானியம் நிறுத்தப் பட்டு விட்டது.

**திவான் சமன்லால்:** 1945 ஆம் ஆண்டுக்கும் மானியம் நிறுத் தப்பட்டதற்கும் இடைப்பட்ட காலத்தில் இருந்த நிலைமை என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது சம்பந்த மான தகவல் தற்போது என்னிடம் இல்லை. எனினும் இதுபற்றி மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் கேள்வி கேட்டால் அதற்குப் பதிலளிப்பேன்.

**திவான் சமன்லால்:** இந்த மானியம் நிறுத்தப்பட்ட சமயத் தில் கணக்குகள் தணிக்கை செய்யப்பட்டன என்பது உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தக் கேள்விக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

**திவான் சமன்லால்:** இதற்குப் பிறகு கணக்குகள் தணிக்கை செய்யப்பட்டனவா என்பது மாண்புமிகு என் நண்பருக்குத் தெரியாது, அப்படித்தானே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுபற்றி நான் எதுவும் கூறுவதற்கில்லை.

**திரு. சத்திய நாராயண் சின்ஹா:** முழு விஷயத்தையும் மாண்பு மிகு உறுப்பினர் ஆழமாக ஆராய வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆராயவே செய் தேன். இதற்கு மேல் நான் என்ன செய்ய முடியும்?

**திரு. மனு சுபேதார்:** இந்தியத் தொழிலாளர் சம்மேளனத் தின் மூலம் நடைபெறும் தொழிலாளர் பிரசாரத்திற்கு இப்போது ஆகும் செலவு எவ்வளவு?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த மானியம் நிறுத்தப்பட்டு விட்டது என்று ஏற்கெனவே கூறியிருக்கிறேன்.

திரு. மோகன் லால் சாக்ஸேனா: அது எப்போது நிறுத்தப் பட்டது என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: சென்ற ஆண்டில்.

குமாரி மனிபென் காரா: மானியம் வழங்கப்பட்டு வந்த காலத்தில் தகவல், ஒலிபரப்புத்துறை வகுத்துத் தந்த விதிமுறை யின்படி இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் கணக்குகளைச் சமர்ப் பித்தது உண்மை இல்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவ்வாறுதான் கருதுகிறேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மானியம் அனுமதிக்கப்பட்ட நீண்ட காலத்துக்குப் பிறகும்கூட இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் தனது செயல் திட்டத்தைத் தயாரிக்கவில்லை என்பதும், சம்பந்தப் பட்ட இலாகா பின்பற்றிய நடைமுறைக்கு தலைமைக் கணக்கு அதிகாரி கடும் ஆட்சேபம் தெரிவித்தார் என்பதும் உண்மை இல்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எனது பதிலில் ஏற்கெனவே கூறியதுபோல் தகவல், ஒலிபரப்புத் துறைதான் உண்மை யில் இந்த மானியத்தை நிர்வகித்து வந்தது. பிந்திய கட்டத்தில்தான் நிர்வாகம் தொழிலாளர் நலத்துறைக்கு மாற்றப்பட்டது.

திவான் சமன் லால்: ஏன் மாற்றப்பட்டது?

குமாரி மனிபென் காரா: 1944 மே மாதத்திற்கு முன்னர், பற்றுச் சீட்டுகள் இல்லாமல் வெறும் கணக்குகளை மட்டும் சமர்ப் பித்தால் போதும் என்று சம்மேளனத்திடம் கூறப்பட்டது என்பதும், ஆனால் இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் சம்பந்தப்பட்ட துறை கூறியபடி நடந்துகொள்ளவில்லை என்பதும் உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது சம்பந்தமாக நான் எதுவும் கூற இயலாதவனாக இருக்கிறேன். இந்த விஷயம் மற்றொரு துறையால் கவனிக்கப்பட்டு வந்தது.

குமாரி மனிபென் காரா: போர் முடிவடைந்ததன் விளைவாக இந்த மானியம் இப்போது நிறுத்தப்பட்டு விட்டது என்பது உண்மை இல்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், நானும் அதைத்தான் சொன்னேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: இந்த மானியத் திட்டத்தின் படி பிரசாரகர்களாக இருந்தவர்களில் எத்தனை பேர் தகவல், ஒலிபரப்புத் துறையில் பணிக்கு அமர்த்தப்பட்டுள்ளனர்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மாண்புமிகு தகவல், ஒலிபரப்புத் துறை உறுப்பினரிடம் கேட்கப்பட வேண்டிய கேள்வி இது.

திரு. மோகன் லால் சாக்ஸேனா: இந்த மானியம் யுத்தம் முடிவடைவதற்கு முன்னரே நிறுத்தப்பட்டு விட்டதா அல்லது பின்னர் நிறுத்தப்பட்டதா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இதுபற்றி நான் துல்லியமாகக் கூறுவதற்கில்லை.

திரு. மோகன் லால் சாக்ஸேனா: சென்ற ஆண்டு 1945 ஏப்ரலில் அது நிறுத்தப்பட்டதல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம்.

திவான் சமன் லால்: முடிவான கணக்குகள் பொதுக் கணக்குக் குழுவிடம் சமர்ப்பிக்கப்படுமா என்பதை மாண்புமிகு என்னுடைய நண்பர் கூறுவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவை பொதுக்

கணக்குக் குழுவிடம் கூடிய விரைவில் சமர்ப்பிக்கப்படும் என்று உறுதி கூறுகிறேன்.

**திரு. அகமது இ.எச். ஜாபர்:** இந்தப் பணம் ரூ. 30,000 துஷ்பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறது என்பது உண்மை இல்லையா? இப்பணத்தை இந்த அரசாங்கம் எந்த நோக்கத் துக்காக ஒதுக்கியதோ அந்த நோக்கத்துக்காக அது பயன்படுத்தப் படவில்லை; மாண்புமிகு உறுப்பினரின் கட்சிப் பிரசாரத்திற் காகவே அது பயன்படுத்தப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பணம் கட்சிப் பிரசாரத்திற்காக செலவிடப்பட்டது என்று மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் கூறியதை வன்மையாக ஆட்சேபிக்கிறேன். நீங்கள் கூறியதை திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

**திரு. தலைவர்:** அமைதி, அமைதி.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** அவர் அவ்வாறு கூறவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், அவர் அவ்வாறுதான் கூறினார்.

**திரு. அகமது இ.எச். ஜாபர்:** மாண்புமிகு உறுப்பினர் வேண்டு மானால் இதனை அவையில் மறுத்துக் கூறட்டும். சீற்றமடையக் கூடாது.

**திரு. தலைவர்:** அமைதி, அமைதி. மதிப்பிற்குரிய உறுப் பினர் தமது இருக்கையில் அமர்வாரா? தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் சீற்றமடைவதாக மதிப்பிற்குரிய எனது நண்பர் கூறுவது முறையல்ல.

**திரு. அகமது இ.எச். ஜாபர்:** மாண்புமிகு உறுப்பினர் அவை யில் தமது கோபத்தை வெளியிடுவதை வழக்கமாகக் கொண்டிருக் கிறார். இவ்வாறு அவர் செய்வது நியாயமா என்று கேட்க விரும்பு கிறேன்.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** இத்தகைய கேள்விகளை தாம் வன்மையாக ஆட்சேபிப்பதாக மாண்புமிகு உறுப்பினர் கூறினார். இவை சட்டமன்ற மரபுக்கு ஏற்புடைய சொற்களா?

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சார்ந்துள்ள கட்சிக்காக இந்தப் பணம் செலவிடப்பட்டது என மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் கூறியதை நான் வன்மையாக ஆட்சேபிக்கிறேன் என்றுதான் சொன்னேன். நான் இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தைச் சேர்ந்தவன் அல்ல.

**திரு. தலைவர்:** டாக்டர் சர் ஜியாவுத்தீனின் ஆட்சேபத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** 'எந்த ஒரு கேள்வியையும் நான் வன்மையாக ஆட்சேபிக்கிறேன்' என்று மாண்புமிகு உறுப்பினர் கூறமுடியுமா?

**திவான் சமன் லால்:** இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தைப் பிரபலப்படுத்த இந்தப் பணம் பயன்படுத்தப்பட்டது என்பது உண்மையா என நான் வினவலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் எதுவும் சொல்லுவதற்கில்லை. அரசாங்கத்துக்குக் கிடைத்துள்ள தகவலின்படி, அப்பணம் எந்த நோக்கத்துக்காக வழங்கப்பட்டதோ அந்த நோக்கத்துக்காகவே செலவிடப்பட்டுள்ளது.

**திவான் சமன் லால்:** அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் போன்ற நேர்மையான, பண்பார்ந்த அமைப்புகள் இந்தப் பணத்திலிருந்து ஒரு பைசாவைக் கூடத் தொட மறுத்துவிட்டன என்பது உண்மையா என்பதை மாண்புமிகு என்னுடைய நண்பர் கூறுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சில நிறுவனங்கள் குறித்துத் தமது சொந்தக் கருத்துகளைக் கொண்டிருக்க மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு உரிமை உண்டு.

**திவான் சமன் லால்:** மாண்புமிகு என்னுடைய நண்பர் இது சம்பந்தமாக அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரசை அணுகினார்

என்பதும், இந்தப் பணத்தைத் தொடுவதற்கு அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸ் மறுத்துவிட்டது என்பதும் உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எல்லா நிறுவனங் களையுமே நாங்கள் அணுகினோம். அனைத்து அமைப்புகளுக்கும் ஒரு பொதுவான சுற்றறிக்கை அனுப்பப்பட்டது; தொழிலாளர் களின் ஒழுங்குணர்வையும் கட்டுப்பாட்டையும் மேம்படுத்தும் ஒரு திட்டத்துடன் அந்த நிறுவனங்கள் இந்திய அரசாங்கத்தை அணுகி னால் இது விஷயத்தில் அனைத்து உதவியையும் செய்ய அரசு தயாராக இருக்கிறது என்று அந்த சுற்றறிக்கையில் குறிப்பிடப்பட் டிருந்தது. இந்தத் திட்டத்தில் சேரும்படி எந்த ஒரு குறிப்பிட்ட நிறு வனத்துக்கும் தனிப்பட்ட முறையில் இந்திய அரசாங்கம் அழைப்பு ஏதும் விடுக்கவில்லை.

**திவான் சமன் லால்:** மாண்புமிகு என்னுடைய நண்பரை அணுகி, இந்தப் பணத்தைப் பயன்படுத்திக் கொண்ட ஒரே அமைப்பு இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் மட்டுமே என்பது உண்மையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

**திரு. அகமது ஈ.எச். ஜாபர்:** இந்தப் பணம் முறையாகப் பயன்படுத்தப்படவில்லை என்பதையும், இந்த விஷயத்தில் ஐயப் பாடு கொள்ள முகாந்திரம் இருக்கிறது என்பதையும் பல துணைக் கேள்விகள் கேட்கப்பட்டதன் விளைவாக நடைபெற்ற இந்த விவா தத்திலிருந்து மாண்புமிகு உறுப்பினர் இப்போது தெரிந்து கொண் டிருப்பார் என்று நம்புகிறேன். இத்தகைய நிலைமையில், இந்தப் பணம் செலவிடப்படுவதற்கான கணக்குகளைச் சரிபார்க்க அதிகார சார்பற்ற ஒரு கணக்குத் தணிக்கையாளரை நியமிக்க மாண்புமிகு உறுப்பினர் முன்வருவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவ்வாறு செய்வது அவசியம் என நான் கருதவில்லை. ஏனென்றால் இந்த அவையே நியமித்த பொதுக் கணக்குக் குழுவின் பரிசீலனைக்கு இந்த விஷயம் கொண்டு வரப்படவிருக்கிறது.

**திவான் சமன் லால்:** பொதுக் கணக்குக் குழுவிடம் இந்த விஷயத்தைக் கொண்டு வருவதில் மாண்புமிகு உறுப்பினர் ஏன் தாமதம் செய்தார் என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா...

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதில் தாமதம் ஏதும் இல்லை.

*திவான் சமன் லால்:* ... இந்த செலவினம் சென்ற ஆண்டோடு நின்றுவிட்டதைப் பார்க்கும்போது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதில் எத்தகைய தாமதமும் இல்லை. பொதுக் கணக்குக் குழுவிடம் இது முன்வைக்கப் பட்டுள்ளது.

*திவான் சமன்லால்:* இதனை ஏன் முன்னமே செய்யவில்லை?

*திரு. தலைவர்:* அடுத்த கேள்வி.

# 459

## *அரசு அச்சகங்களில் பணிபுரியும் இளநிலை அச்சுப்படி திருத்துவோர்

1635. *ஹாஜி சௌதுரி முகமது இஸ்மாயில் கான்:* (அ) அனைத்து இந்திய அரசாங்க அச்சகங்களிலும் தற்காலிகப் பொறுப்பிலுள்ள இளநிலை அச்சுப்படி திருத்துவோர் எந்த அடிப் படையில் நிரந்தர இளநிலை அச்சுப்படி திருத்துவோர் பணியிடங் களில் அமர்த்தப்படுகின்றனர் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

(ஆ) அச்சுப்படி திருத்துவோருக்கு உடனிருந்து வாசித்து உதவும் 'காப்பிஹோல்டர்கள்' எனப்படுவோரின் கடமைகளும் பணிமுறையும் இளநிலை அச்சுப்படி திருத்துவோரின் கடமை களிலிருந்தும், பணிமுறையிலிருந்தும் முற்றிலும் மாறுபட்டவை என்பது உண்மையா?

(இ) இளநிலை அச்சுப்படித் திருத்துவோர் தகுநிலையை ஏற்கெனவே எய்தி, இளநிலை அச்சுப்படித் திருத்துவோராக தற்காலிகப் பொறுப்பில் சிலர் இருந்து வருகிறார்கள் என்பதும்,

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 8, 1946, பக்கம் 3649-50.

அச்சுப்படித் திருத்தும் தேர்வில் இவர்களுடன் சேர்ந்து கலந்து கொண்டு அதில் தோல்வி கண்ட சில 'காப்பிஹோல்டர்களுடன்' ஒப்பிடும்போது இவர்கள் தாழ்நிலையில் உள்ளவர்களாக அறிவிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதும் உண்மையா?

(ஈ) தகுதி பெற்ற 'காப்பிஹோல்டர்கள்' எந்த வரிசை முறைப்படி இளநிலை அச்சுப்படித் திருத்துவோருக்கான பணியிடங்களில் அமர்த்தப்பட்டு, அவர்கள் பெருமளவுக்குத் தமது திறமையை திருப்திகரமாக வெளிப்படுத்தும்போது, அந்த வரிசை முறையை மாற்ற முடியும் என்பது உண்மையா?

(உ) இளநிலை அச்சுப்படித் திருத்துவோருக்கான நிரந்தரப் பணியிடங்களை நிரப்பும்போது இளநிலை படித்திருத்துவோராக தற்காலிகப் பொறுப்பில் நீண்டகாலமாக பணிபுரிந்துவரும் 'காப்பிஹோல்டர்களுக்கு' முன்னுரிமை அளிப்பது குறித்து அரசாங்கம் பரிசீலிக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 'காப்பிஹோல்டர்கள்' விஷயத்தில் பணிமூப்பைப் பொறுத்தே பதவி உயர்வு உறுதி செய்யப்படுகிறது; எனினும் அச்சுப்படித் திருத்துவோருக்கான தேர்வில் மூன்றாவது வாய்ப்பில் தகுதி பெறுவோருக்கு சில தனி ஒதுக்கீடுகள் செய்யப்படுகின்றன.

(ஆ) ஆம்.

(இ) ஆம்.

(ஈ) ஆம், இளநிலை 'காப்பிஹோல்டர்' இதற்கு முன்னர் பதவி உயர்வு பெற்றிருக்கக் கூடாது.

(உ) இல்லை. இப்போதைய விதிமுறைகள் முழுப் பரிசீலனைக்குப் பிறகே வகுக்கப்பட்டுள்ளன.

1636. ***ஹாஜி சௌதுரி முகமது இஸ்மைல் கான்:** (அ) மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்புகூர்ந்து பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா: புதுடில்லி இந்திய அரசு அச்சகத்தில் பணியாற்றும் இளநிலை அச்சுப்படித் திருத்துவோரின் புதிய சம்பள விகிதம் ரூ. 55-3-85 என்பதும், 'காப்பிஹோல்டர்களின்' சம்பளம் ரூ. 45-4-60 கி.பி. 5-80 ( ஒன்றுபட்ட சம்பள விகிதத்தில் 'சி' வகைப் பிரிவில்) என்பதும் உண்மையா?

*(ஆ) இளநிலை அச்சுப்படித் திருத்துவோர் பொறுப்பில் இருந்துவரும் ஒரு தற்காலிக 'காப்பிஹோல்டர்' மாதம் ரூ. 67 சம்பளம் பெற்று வருகிறார்; ஆனால் அதே சமயம் நான்கு அல்லது ஐந்தாண்டுக் கால சேவை அனுபவமுள்ள ஒரு நிரந்தர இளநிலை அச்சுப்படித் திருத்துபவர் மாதம் ரூ. 64 மட்டுமே பெற்று வருகிறார்; இதைக் கொண்டு பார்க்கும்போது இளநிலை அச்சுப்படி திருத்து வோரின் சம்பள விகிதத்துக்கும் 'காப்பிஹோல்டரின்' சம்பள விகிதத்துக்கும் இடையே வேறுபாடுகள் நிலவுவதும் உண்மையா?*

*(இ) மிகக் கவனமாகப் பரிசீலனை செய்த பிறகு மேற்கண்ட அச்சகத்தின் நிர்வாகி இளநிலை அச்சுப்படித் திருத்துவோரை 'பி' வகைப் பிரிவில் சேர்க்க வேண்டுமென்று பரிந்துரைத்திருக்கிறார் என்பதும், சம்பள விகிதங்களில் தற்போதுள்ள ஏற்றத்தாழ்வுகளை அகற்றுவதற்கு இதுவே சிறந்த மாற்றுவழி என்பதும் உண்மையா?*

*(ஈ) இத்தகைய வேறுபாடுகளை அகற்றுவதற்கு இளநிலை அச்சுப்படித் திருத்துவோருக்கு 'பி' வகைப் பிரிவுக்குரிய ஒன் றிணைந்த சம்பள விகிதத்தை விரைவிலேயே அனுமதிக்க மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் முன்வருவாரா? இல்லை யென்றால், ஏன் இல்லை?*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம். (ஆ) திருத்தப்பட்ட சம்பள விகிதப்படி ஒரு நிரந்தர இளநிலை அச்சுப் படித் திருத்துவோர் நான்காண்டு சேவைக்குப் பிறகு மாதம் ரூ. 64-ம், ஐந்தாண்டு சேவைக்குப் பிறகு மாதம் ரூ. 67-ம் சம்பளமாகப் பெற உரிமை பெற்றிருக்கிறார். சில சந்தர்ப்பங்களில் ஒரு தற்காலிக 'காப்பி ஹோல்டர்' ஒன்றுபட்ட சம்பள விகிதத்தில் நியமிக்கப் பட்டால் மாதம் ஒரே சம்பளம் பெறுவார்.*

*(இ) ஆம்.*

*(ஈ) ஒன்றுபட்ட சம்பள விகிதம் தற்காலிகமானது; இந்திய அரசாங்கத்தின் எழுத்தர்களுக்காக உருவாக்கப்பட்டது. இந்திய அரசாங்க அச்சகங்களில் பணிபுரியும் 'காப்பிஹோல்டர்களுக்கும்' அச்சுப்படிகளை மறுபார்வையிடும் இளநிலை பணியாளர்களுக் கும் இது முக்கியமாகப் பொருந்தும். ஒன்றுபட்ட சம்பள விகி தத்தைக் கொண்டு 'பி' வகைப் பிரிவு முறையைப் பயன்படுத்துவது மேலும் அதிக ஏற்றத்தாழ்வுகளையும் சிக்கல்களையும் தோற்று விக்கும்; பல்வேறு அரசு அச்சகங்களில் பல்வேறு சம்பள விகிதங் களைக் கொண்ட அநேக வகைப் பிரிவுகளைச் சேர்ந்த அச்சுப்படித் திருத்துவோர் இருந்து வருவதே இதற்குக் காரணம்.*

# 460

## *தோரியத்தின் பயன்பாடுகள்

1642. திரு. எம்.கே. ஜீனசந்திரன்: தோரியத்தை ராணுவ ரீதியில் எவ்வகையில் பயன்படுத்தலாம் என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா? இந்த உலோகத் தனிமத்தை ராணுவம் சாராத ஏதேனும் பொது நோக்கத்துக்குப் பயன்படுத்தும் சாத்தியக்கூறு உண்டா? அவ்வாறாயின் எந்த நோக் கத்துக்கு அதனைப் பயன்படுத்தலாம்?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அணுசக்தி வெளிப் பட வகை செய்யும் எதிர் விளைவுகள் நிகழ்வில் யுரேனியத் தின் ஒரு பகுதிக்குப் பதிலாக தோரியத்தைப் பயன்படுத்துவது சாத்தியம் என்பது அண்மையில் தெரியவந்துள்ளது. வளி விளக்கு களின் மெல்லிய ஒளித்திரை வலைகள், விளக்குகள், வானொலிப் பெட்டியின் வால்வுகள் முதலியவற்றைத் தயாரிப்பதில் தோரியம் பயன்படுத்தப்படுகிறது.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: இந்தியாவில் தோரியம் எங்கே கிடைக்கிறது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: திருவாங்கூரில்.

திரு. ஏ. கருணாகர மேனன்: திருவாங்கூரில் மட்டும்தான் கிடைக்கிறதா? இந்தியாவில் வேறு எங்கும் கிடைப்பதில்லையா?

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தக் கேள்விக்குப் பதிலளிக்க எனக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 8, 1946, பக்கம் 3650.

**திரு. மனு சுபேதார்:** தோரியம் சம்பந்தமாகக் கட்டுப் பாட்டைக் கொண்டு வருவதற்கு மன்னர்பிரான் அரசோ அல்லது இந்தியாவுக்கு வெளியே உள்ள வேறு எந்த அரசோ இந்திய அர சாங்கத்தை அணுகியது உண்டா? இது சம்பந்தமாக அரசாங்கம் எந்த ஒரு நாட்டுக்கும் வாக்குறுதி அளித்திருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது குறித்து எனக்கு எந்தத் தகவலும் இல்லை.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** தோரியம் சம்பந்தமாக மண்ணியல் ஆய்வுத் துறையைக் கொண்டு மேலும் ஆய்வு நடத்த அரசாங்கம் உத்தேசித்துள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த யோசனையை நான் மனத்தில் கொள்வேன்.

**திரு. ஏ. கருணாகர மேனன்:** இந்தக் கனிமப் பொருள் எந்த அயல்நாட்டுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது சம்பந்த மாக எனக்குத் தகவல் இல்லை. மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் இது குறித்த தகவல்கள் வேண்டுமென விரும்பினால், அவர் எனக்குப் போதிய அவகாசத்துடன் முன்னறிவிப்பு த் தர வேண்டும்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** அது ஏற்றுமதி செய்யப்படு கிறதா? அவ்வாறாயின் தேசிய பந்தோபஸ்தைக் கருதி, தோரியம் ஏற்றுமதியைத் தடுத்து நிறுத்த சாத்தியமான எல்லா நடவடிக்கை களும் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுபற்றிக் கவனிக்கிறேன்.

# 461

## *மத்தியப் பொதுப்பணித் துறையில் முஸ்லீம்கள்

*1646.* திரு. முகமது ரகமத்துல்லா: மத்தியப் பொதுப்பணித் துறையின் பின்கண்ட பணியிடங்களில் முஸ்லீம் ஊழியர்களின் விகிதாசாரத்தை தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அன்பு கூர்ந்து தெரிவிப்பாரா:

(i) கண்காணிப்புப் பொறியாளர்கள், (ii) நிர்வாகப் பொறியாளர்கள், (iii) துணை நிர்வாகப் பொறியாளர்கள், (iv) சார்-பிரிவு அதிகாரிகள், (v) கீழ்நிலை பணியாளர்கள், (vi) தலைமை எழுத்தர்கள், (vii) வட்டாரக் கணக்கர்கள்.

(ஆ) அரசிதழ் பதிவு பெற்ற பணியிடங்களில் முஸ்லீம்களின் விகிதாசாரம் போதிய அளவு இல்லாதிருப்பது ஏன்?

(இ) வகுப்புவாரி அடிப்படையில் நியமனங்கள் செய்யப்படும் நிலைமையில், முஸ்லீம்களின் விகிதாசாரம் 8 சதவீதம் கூட இல்லாத நிலைமையில், முஸ்லீம்களுக்கு வகுப்புவாரி அடிப்படையில் ஏன் பதவி உயர்வு தரப்படுவதில்லை?

(ஈ) மத்தியப் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த ஊழியர்களின் பணியிடங்களை உறுதிசெய்யும் விஷயத்தில் அண்மை வருங்காலத்தில் அரசாங்கத்தின் கொள்கை எத்தகையதாக இருக்கும்?

(உ) சார்-பிரிவு அதிகாரிகளுக்கும் கீழ்நிலைப் பணியாளர்களுக்கும் கட்டுமானப் பணிகளும் பராமரிப்புப் பணிகளும் எந்த அடிப்படையில் ஒதுக்கப்படுகின்றன? முஸ்லீம்களுக்கு இந்தப் பணிகள் ஒதுக்கப்படாத நிலைமையில் தலைமைப் பொறியாளருக்கோ,

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 8, 1946, பக்கம் 3656.

*கண்காணிப்புப் பொறியாளர்களுக்கோ இதுகுறித்து அவர்கள் முறையீடு செய்யும்போது வகுப்புவாதத்தைக் கட்டுப்படுத்த அந்த அதிகாரிகள் எத்தகைய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்கிறார்கள்?*

*(ஊ) முஸ்லீம் கீழ்நிலைப் பணியாளர்களுக்குப் பண்டக சாலைகளைப் பராமரித்தல் போன்ற பணிகளே ஒதுக்கப்படுகின்றன என்பதும், டில்லியிலும் பிற இடங்களிலும் மத்தியப் பொதுப் பணித்துறையில் கட்டுமானப் பணிகள் தரப்படுவதில்லை என்பதும் உண்மையா?*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:**

(அ) (i) கண்காணிப்புப் பொறியாளர்கள் - 6 சதவிகிதம்.

(ii) நிர்வாகப் பொறியாளர்கள் - 17 சதவிகிதம்.

(iii) துணை நிர்வாகப் பொறியாளர்கள் - 14 சதவிகிதம்.

(iv) சார்-பிரிவு அதிகாரிகள் - 17 சதவிகிதம்.

(v) கீழ்நிலைப் பணியாளர்கள் - 22 சதவிகிதம்.

(vi) தலைமை எழுத்தர்கள் - 24 சதவிகிதம்.

(vii) வட்டாரக் கணக்கர்கள் சம்பந்தமான புள்ளி விவரங்கள் கிடைக்கவில்லை.

(ஆ) கண்காணிப்புப் பொறியாளர் மற்றும் நிர்வாகப் பொறி யாளர் பணியிடங்கள் பதவி உயர்வு மூலமே நிரப்பப்படு கின்றன; சிறுபான்மை வகுப்பினருக்கான இட ஒதுக்கீடு ஆணை கள் பதவி உயர்வு விஷயத்துக்குப் பொருந்த மாட்டா. எனவே, இத்தகைய பணியிடங் களில் 25 சதவிகிதத்தை முஸ்லீம்களுக்கு ஒதுக்குவது சாத்தியமல்ல. நேரடி ஆளெடுப்பு மூலமும் பதவி உயர்வு மூலமும் நியமிக்கப்படும் துணை நிர்வாகப் பொறியாளர் களைப் பொறுத்தவரையில், அண்மையில் இந்நியமனத்தை ஏற்க ஒரு முஸ்லீம் வேட்பாளர் மறுத்ததன் காரணமாக இப்பணியிடங் களுக்கு முஸ்லீம்கள் கிடைப்பது அரிதாக இருக்கிறது.

(இ) ஏற்கெனவே நான் குறிப்பிட்டதுபோல், பதவி உயர்வு கள் வகுப்புவாரி அடிப்படையில் அளிக்கப்படுவதில்லை.

(ஈ) நேரடி ஆளெடுப்பு மூலம் செய்யப்படும் எல்லா நிய மனங்களும், அதேபோன்று தற்காலிக நியமனங்களும் சிறுபான்மை

வகுப்பினருக்கான ஒதுக்கீடுகள் குறித்த ஆணைகளுக்கு இணங்க ஊர்ஜிதம் செய்யப்படும். எனினும் பதவி உயர்வு அடிப்படையில் நடைபெறும் நியமனங்கள் விஷயத்தில் விகிதாசார சீரமைவு எதுவும் இருக்காது. ஆனால் ஆட்குறைப்பை நடைமுறைப் படுத்துவதில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ விதிகள் உரிய முறையில் பின்பற்றப்படும்.

(உ) கட்டுமான மற்றும் பராமரிப்புப் பணிகள் சார்-பிரிவு அதிகாரிகளுக்கும் கீழ்நிலைப் பணியாளர்களுக்கும் எத்தகைய வகுப்புவாரி ஒதுக்கீட்டு அடிப்படையிலும் ஒதுக்கப்படுவதில்லை.

(ஊ) இல்லை.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** கண்காணிப்புப் பொறியாளர் நியமனத்தைப் பொறுத்தவரையில், ஒரு பணியிடம் காலியாக இருப்பதாகவும், இப்பொறுப்பை நிறைவேற்றக்கூட தகுதியில்லாத ஒருவரை அப்பணியிடத்துக்கு நியமித்திருப்பதாகவும், கண்காணிப்பு பொறியாளராக நியமிக்கப்படக்கூடிய முசல்மான்களை நியமிக்க முடியவில்லை என்றும் இதே அவையில் அவர் கூறவில்லையா என்று மாண்புமிகு உறுப்பினரைக் கேட்க விரும்புகிறேன். மேலும், சட்டமன்றக் கூட்டம் முடிவடைந்ததும் இந்த நியமனம் செய்யப்படும் என்று அவர் கூறியதையும், அவ்வாறு செய்யப்படாததால் நாங்கள் ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வர நேர்ந்ததையும் இங்கு நினைவுகூர விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய என் நண்பர் கூறுவது தவறு. நிர்வாகப் பொறியாளர் கண்காணிப்புப் பொறியாளருக்குரிய கடமைகளைச் செய்யும்படிதான் கேட்டுக் கொள்ளப்பட்டார். மற்றபடி நியமனம் எதுவும் செய்யப்படவில்லை.

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** இந்தக் கண்காணிப்புப் பொறியாளர் பணியை அவர் செய்ய முடியும் என்று நீங்கள் கூறினீர்கள். அவர் ஒரு நாள், இரண்டு நாள் அல்ல மாதக்கணக்கில் இந்தப் பணியைச் செய்து வருவதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இதுதான் இந்த இலாகாவின் திறமையின் லட்சணமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய என்னுடைய நண்பருக்கு தம் சொந்த கருத்தைச் சொல்ல உரிமை உண்டு.

# 462

## *தொழில்துறை வேலைவாய்ப்பு (நிலை ஆணைகள்) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்)*: தொழில் நிலையங்களின் உரிமையாளர்கள் தங்களுடைய தொழில் நிலையங்களிலுள்ள வேலைவாய்ப்பு நிலைமைகளை வரையறுத்துக் கூறும்படி அவர்களைக் கோரும் ஒரு மசோதாவை முன்மொழிய அனுமதி வேண்டுகிறேன்.

*திவான் சமன் லால் (மேற்கு பஞ்சாப்: முஸ்லீம் அல்லாத தொகுதி)* : இங்கு ஓர் ஒழுங்குப் பிரச்சினையை எழுப்ப விரும்புகிறேன்: மற்றொரு மசோதா விவாதிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் போது இந்த மசோதாவை எப்படி முன்மொழிய முடியும்? மற்ற மசோதாவைப் பற்றிய விவாதம் முடிவடைந்த பிறகு இந்த மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வது முறையாக இருக்குமல்லவா?

*திரு. தலைவர்*: அவை முன்னுள்ள மசோதாவைப் பற்றிய விவாதத்தை நாம் இன்னும் தொடங்கவில்லை. இது வெறும் சம்பிரதாயம் சம்பந்தப்பட்ட சாதாரண விஷயம்தான். எனக்குத் தெரிந்த வரை, அவை முன்னுள்ள ஒரு விஷயம் ஒத்திவைக்கப்பட்டு, மற்றொரு விஷயம் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட சம்பவங்கள் கடந்த காலத்தில் எத்தனையோ நடைபெற்றிருக்கின்றன; இது செளகர்யமானதும் கூட. இது முற்றிலும் நடைமுறை சம்பந்தப்பட்ட, அனுசரித்துப் போகக்கூடிய விஷயமேயாகும். எனவே தீர்மானம் இதுதான்:

''தொழில் நிலையங்களின் உரிமையாளர்கள் தங்களுடைய தொழில் நிலையங்களிலுள்ள வேலைவாய்ப்பு நிலைமைகளை வரையறுத்துக் கூறும்படி அவர்களைக் கோரும் ஒரு மசோதாவை முன்மொழிய அனுமதி வேண்டுகிறேன்.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்)*: ஐயா, இப்போது மசோதாவை முன்மொழிகிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 8, 1946, பக்கம் 3667.

# 463

## *தொழிலாளர் விசாரணைக் குழுவின் அறிக்கைகள்

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, தொழிலாளர் விசாரணைக் குழு சமர்ப்பித்த பின்கண்ட அறிக்கைகள் ஒவ்வொன்றின் பிரதியையும் அவையில் முன்வைக்கிறேன்:

(1) இந்தியாவில் பட்டுத் தொழில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.

(2) இந்தியாவில் சிமெண்டுத் தொழில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.

(3) கம்பளி நெசவுத் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.

(4) இரும்புத் தாதுத் தொழிலில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.

(5) கயிறு மற்றும் சணல் பாய்கள் தொழிலில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.

(6) மைக்கா சுரங்கத் தொழிலும் மைக்கா தயாரிப்புத் தொழிலிலும் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.

(7) இந்தியாவில் துறைமுகத் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.

(8) அவரவருக்குத் தொழிலில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 9, 1946, பக்கம் 3744.

*(9) ரிக்ஷாக்காரர்கள் குறித்த அறிக்கை.*

*(10) நெல் அரவை மில்களில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த அறிக்கை.*

*(11) கண்ணாடித் தொழிலில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த அறிக்கை.*

*(12) பீடி, சுருட்டு, சிகரெட்டுத் தயாரிப்புத் தொழில்களில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.*

*(13) இந்தியாவில் தோட்டத் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.*

*(14) இந்தியாவில் தங்கச் சுரங்கத் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.*

*(15) மட்பாண்டத் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த அறிக்கை.*

*(16) இரசாயனத் தொழிலில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த அறிக்கை.*

*(17) இந்தியாவில் மாங்கனீஸ் சுரங்கத் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த அறிக்கை.*

*(18) இந்தியாவில் தாதுப்பொருள் எண்ணெய்த் தொழிலில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.*

*(19) இந்தியாவில் கம்பளி நெசவுத் தொழிலில் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.*

*(20) இந்தியாவில் காகித ஆலைத் தொழிலாளர்களின் நிலைமைகள் குறித்த விசாரணை அறிக்கை.*

**திரு. என்.வி. காட்கில்** *(பம்பாய் மத்தியப் பிரிவு: முகமதியரல்லாத கிராமப்புறத் தொகுதி): இந்த அறிக்கைகள் சுற்றுக்கு விடப்*

படவில்லை. விண்ணப்பித்துக் கொள்வோருக்கு இந்த அறிக்கைகளை வழங்க மாண்புமிகு உறுப்பினர் மனமுவந்து முன்வருவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இதனை நிச்சயமாகக் கவனத்தில் கொள்வேன்.

திரு. தலைவர்: தங்களுக்கு வேண்டுமெனக் கேட்பவர்களுக்கு மட்டுமே இந்தப் பிரதிகளை வழங்க வேண்டுமென்பதே இப்போதைய வேண்டுகோள்.

# 464

## *குறைந்தபட்ச ஊதிய மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, சில தொழில்களில் குறைந்தபட்ச ஊதியங்களை நிர்ணயிப்பதற்கு வகை செய்யும் மசோதாவை முன்மொழிய அனுமதி வேண்டுகிறேன்.

திரு. தலைவர்: தீர்மானம் வருமாறு:

> "சில தொழில்களில் குறைந்தபட்ச ஊதியங்களை நிர்ணயிப்பதற்கு வகை செய்யும் மசோதாவைப் முன்மொழிய அனுமதி கோரப்படுகிறது."

தீர்மானம் ஏற்கப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, இந்த மசோதாவை முன்மொழிகிறேன்.

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 9, 1946, பக்கம் 3842.

# 465

## *மைக்கா சுரங்கத் தொழிலாளர்களின் நல்வாழ்வு நிதி அமைப்பதற்கான மசோதா

### தெரிவுக்குழுவின் அறிக்கை சமர்ப்பிப்பு

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, மைக்கா சுரங்கத் தொழிலில் பணிபுரியும் தொழிலாளர்களின் நல்வாழ்வை மேம்படுத்துவதற் கான நடவடிக்கைகளுக்குப் பண உதவி அளிக்க நிதியம் ஒன்றை அமைக்க வழிசெய்யும் மசோதா குறித்த தெரிவுக்குழுவின் அறிக்கையை அவையில் சமர்ப்பிக்க விழைகிறேன்.

# 466

## +தோரியம் படிவுகள்

1740. திரு. அகமது இ.எச். ஜாபர்: அணுசக்தி உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்தப்படும் தோரியப் படிமங்கள் இந்தியா வின் பல்வேறு பகுதிகளில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றனவா என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நட்சத்திரக் குறியிட்ட 1276 ஆம் எண் கேள்விக்கு 1946 மார்ச் 26 ஆம் தேதி இந்த அவையில் அளிக்கப்பட்ட பதிலை மதிப்பிற்குரிய உறுப் பினரின் கவனத்துக்குக் கொண்டு வருகிறேன்.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 11, 1946, பக்கம் 3871.

+ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 12, 1946, பக்கம் 3873.

*திரு. அகமது இ.எச். ஜாபர்:* திருவாங்கூர் சமஸ்தானத்தில் ஏராளமான தோரியப் படிவுகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன என்பது உண்மையா, அவ்வாறாயின் இவற்றின் வழங்கீட்டையும் பயன்பாட்டையும் கட்டுப்படுத்துவதற்கு அரசாங்கம் ஏதேனும் நடவடிக்கைகள் எடுத்துள்ளதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* திருவாங்கூர் ஓர் இந்திய சமஸ்தானம், அதில் தலையிட இந்திய அரசாங்கத்துக்கு உரிமை இல்லை.

*1743. சர்தார் மங்கள் சிங்:* மாண்புமிகு தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் பின்கண்ட விவரங்களைத் தெரிவிப்பாரா:

(அ) டில்லியிலும் புதுடில்லியிலும் குடியிருப்புக் கட்டிடங்களில் நிறுவுவதற்கு அரசாங்கம் வாங்கிய குளிர்பதனப் பெட்டிகள் எத்தனை?

(ஆ) அந்தக் கட்டிடங்களில் குடியிருப்பவர்களுக்கு இந்தக் குளிர்பதனப் பெட்டிகள் எந்த நிபந்தனைகளின் பேரில் வாடகைக்கு விடப்பட்டன?

(இ) இந்தப் பெட்டிகள் தற்காலிகமாகவோ, நிரந்தரமாகவோ வழங்கப்பட்ட எஸ்டேட் அதிகாரிகள் மற்றும் பொதுப் பணித்துறை அதிகாரிகளின் விவரங்கள் என்ன?

(ஈ) மத்திய சட்டமன்றக் கூட்டங்களிலும் குழுக் கூட்டங்களிலும் அரசுப் பணி நிமித்தம் கலந்து கொள்ள வரும் மத்திய சட்டமன்ற உறுப்பினர்கள் இந்தக் கட்டிடங்களில் தங்கும்போது அவர்கள் இந்தக் குளிர்ப்பதனப் பெட்டிகளைப் பயன்படுத்திக் கொள்ள முடியாதா?

(உ) இந்தக் கட்டிடங்களில் அமைந்திராத அலுவலகங்களையும் துறைகளையும் சேர்ந்த பெரும்பாலான பணியாளர்களுக்கு இக்குளிர்ப்பதனப் பெட்டிகள் வழங்கப்படுகின்றன என்பது உண்மையா?

(ஊ) இந்த அலுவலகங்களையும் துறைகளையும் சேர்ந்த பணியாளர்களிடமிருந்து இந்தச் சாதனங்களைத் திரும்பப் பெற்று அவற்றை மத்திய சட்டமன்ற உறுப்பினர்களின் உபயோகத்துக்கு அளிக்கும் உத்தேசம் அரசுக்கு உண்டா? இல்லையென்றால், ஏன் இல்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) 334.

(ஆ) டில்லியிலும், புது டில்லியிலும் குளிர்ப்பதனப் பெட்டிகள் எந்த நிபந்தனைகளின்படியும் விதிகளின்படியும் வாடகைக்கு விடப்படுகின்றன என்ற விவரங்களின் ஒரு பிரதி அவையில் முன் வைக்கப்படுகிறது.

(இ) ஒரே ஓர் அதிகாரிக்குத்தான் அதாவது மத்தியப் பொதுப்பணித் துறையின் கூடுதல் தலைமைப் பொறியாளருக்குத் தான் 1946 கோடையில் ஒரு குளிர்ப்பதனப் பெட்டி ஒதுக்கப்பட்டது.

(ஈ) இல்லை

(உ) இல்லை

(ஊ) இந்தக் கேள்வி இங்கு எழவில்லை.

**திவான் சமன்லால்:** (ஈ) கேள்விக்கான பதிலைப் பொறுத்த வரையில், இந்த சாதனங்கள் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு வழங்கப்பட மாட்டாதா என அறிய விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதிமுறைகளின் படி அவர்களுக்கு வழங்க இயலாது.

**திரு. மனு சுபேதார்:** யுத்தத்தின்போது தனி நபர்களிடமிருந்து அரசாங்கம் கையகப்படுத்திக் கொண்ட குளிர்பதனப் பெட்டிகள் என்னவாயின?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இக்கேள்விக்கு எனக்கு முன்னறிவிப்பு வேண்டும்.

# 467

## *புதுடில்லி ஹனுமான் சந்திலுள்ள 42-பி எண் குடியிருப்பை அரசு தன் பொறுப்பில் எடுத்துக் கொள்ளுதல்

1756. திரு. பி.பி. கோலே: (அ) அரசு தன் பொறுப்பில் எடுத்துக் கொண்ட புதுடில்லி ஹனுமான் சந்திலுள்ள 42-பி எண் குடியிருப்பு நீண்டகாலம் காலியாக இருக்கிறதா என்பதை மாண்பு மிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறுவாரா? காலியாக இருக்கும் அந்த வீட்டுக்கு அரசாங்கம் வாடகை கொடுத்து வருகிறதா?

(ஆ) அரசாங்கம் தன் பொறுப்பில் எடுத்துக் கொள்வதற்கு முன்னர் அந்த வீட்டில் திரு. மனோகர் லால் துலி குடியிருந்தார் என்பது உண்மையா?

(இ) திரு. மனோகர் லால் அந்த வீட்டைக் காலி செய்த போது அது மிகுந்த சேதம் அடைந்திருந்தது என்பதும், இதனால் எந்த ஒதுக்கீட்டாளரும் அதில் குடியிருக்க முன்வரவில்லை என்பதும் உண்மையா?

(ஈ) இப்போது அந்த வீட்டை அதன் சொந்தக்காரருக்கே திருப்பிக் கொடுக்க அரசு எண்ணியுள்ளது என்பது உண்மையா? யாரும் அதில் குடியிருக்கத் தயாராக இல்லாதபோது, அந்த வீட்டை அதன் சொந்தக்காரருக்கு முன்னமேயே ஏன் திருப்பித் தந்திருக்கக்கூடாது?

(உ) அந்த வீட்டை அரசாங்கம் தோராயமாக எப்போது திருப்பித் தரப்போகிறது?

---

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 12, 1946, பக்கம் 3886.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) அந்த வீடு 1945 செப்டம்பர் 15 ஆம் தேதி ஓர் அதிகாரிக்கு ஒதுக்கப்பட்டது; ஆனால் அவர் குடிவராததால் அந்தத் தேதியிலிருந்து அது காலியாக இருக்கிறது. வீடு காலியாக இருக்கும் காலத்துக்கு அரசாங்கம் வாடகை செலுத்தி வருகிறது.

(ஆ) ஆம்.

(இ) இல்லை.

(ஈ) ஆம். (இ) கேள்விக்குப் பதிலளித்திருக்கும் நிலைமையில் இக்கேள்வியின் இரண்டாம் பகுதி எழவில்லை.

(உ) ஏறத்தாழ 1946 ஏப்ரல் 15 ஆம் தேதி.

# 468

## *தேசியத் தொழிலாளர் நடுவர்மன்ற அவசரச் சட்டத்தை வணிக சரக்குக் கப்பல் அதிகாரிகளுக்குச் செயல்படுத்தல்

1757. குமாரி மனிபென் காரா: மாண்புமிகு தொழிலாளர் உறுப்பினர் பின்கண்ட தகவல்களை அளிப்பாரா:

(அ) தேசிய தொழிலாளர் நடுவர் மன்ற அவசரச் சட்டத்தை இந்திய வாணிகச் சரக்குக் கப்பல் அதிகாரிகள் விஷயத்தில் 1944 டிசம்பரில் அமல்படுத்தியது ஓர் அவசரகால நடவடிக்கையா?

(ஆ) இதே அவசர நிலைமை தொடர்ந்து நீடிப்பதாக அரசாங்கம் கருதுகிறதா, அவ்வாறாயின் அதற்கான காரணங்கள் யாவை?

(இ) இந்த அவசரச் சட்டம் மாலுமிகளின் சுதந்திரங்களைக் கட்டுப்படுத்துவதால், குறைந்தபட்சம் வாணிகச் சரக்குக்

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 12, 1946, பக்கம் 3886.

கப்பல் அதிகாரிகள் விஷயத்திலாவது இந்தச் சட்டத்தை கூடிய விரைவில் திரும்பப் பெறும் உத்தேசம் அரசாங்கத்துக்கு உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) ஆம்.

(ஆ) இல்லை.

(இ) 1940 ஆம் வருட தேசியப் பணித்துறை (தொழில்நுட்ப ஊழியர்கள்) அவசரச் சட்டத்தின் விதிகள் 1946 பிப்ரவரி முதல் பொதுவாகத் தளர்த்தப்பட்டு வருகின்றன; தொழில்நுட்ப ஊழியர் களைத் தேசியப் பணித்துறையில் ஈடுபடுத்த அவை பயன்படுத்தப் படுவதில்லை. தேசிய முக்கியத்துவம் வாய்ந்த பணியில் ஈடுபட் டிருக்கும் முக்கிய தொழில்நுட்ப ஊழியர்கள் விஷயத்தைத் தவிர ஏனைய தொழில்நுட்ப ஊழியர்களுக்கு இருந்த கட்டுப்பாடுகளும் தளர்த்தப்பட்டு வருகின்றன. ஆனால் கப்பல் ஓட்டும் மாலுமிகளைப் பொறுத்தவரையில், 1946 ஏப்ரல் இறுதிவரை அவர்கள் தங்கள் பணி யிடங்களில் இருந்து தமது கடமைகளை ஆற்றுவது அவசிய மாகும் வரை அவசரச் சட்டத்தின் விதிகள் அமல்படுத்தப்படும். இறக்குமதி செய்யப்படும் உணவு தானியங்களைத் துறைமுகங் களில் விரைவாகக் கையாளும் பொருட்டு கட்டுப்பாடுகள் நீடிப்பது அவசியம் என்று உணரப்பட்டாலொழிய மற்றபடி இந்தத் தேதிக் குள் அவர்கள் மீதுள்ள கட்டுப்பாடுகள் விலக்கிக் கொள்ளப்படும் என்று நம்பப்படுகிறது. இதர தொழில்நுட்ப ஊழியர்கள் மீதுள்ள எல்லாக் கட்டுப்பாடுகளையும் 1946 ஏப்ரல் இறுதிக்குள்ளாக விலக்கிக் கொள்ள உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

**குமாரி மனிபென் காரா:** இந்த அவசரச் சட்டம் இந்திய வாணிகச் சரக்குக் கப்பல் அதிகாரிகளுக்கு எதிராக குறிப்பாக இந்திய நிறுவனங்களால் பிரயோகிக்கப்படுகிறது என்பதும், இந்த அவசரச் சட்டத்தைக் கொண்டு வாணிகச் சரக்குக் கப்பல் அதிகாரிகள் பெரிதும் தொல்லைக்கு உட்படுத்தப்படுகிறார்கள் என்பதும் மாண்புமிகு உறுப்பினருக்குத் தெரியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்குத் தெரி யாது. குறிப்பிட்ட சம்பவங்களை என் கவனத்துக்குக் கொண்டு வந்தால் அவற்றின் மீது நடவடிக்கை எடுக்கத் தயங்க மாட்டேன்.

குமாரி மனிபென் காரா: சிந்திய நிறுவனம் (இந்தியா) இந்த அவசரச் சட்டத்தைப் பயன்படுத்திக் கொள்வதை எதிர்த்து இந்திய வாணிகச் சரக்குக் கப்பல் பணியாளர்கள் முறையீடு செய்தது உண்மையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இது பற்றி முன்னறிவிப்புத் தேவை.

திரு. தலைவர்: இக்கேள்விக்கு முன்னறிவிப்புத் தரப்பட வேண்டும் என்று உறுப்பினர் விரும்புகிறார்.

# 469

## *டில்லி, புதுடில்லி, பம்பாய், கல்கத்தா முதலான நகரங்களில் மின் கட்டண விகிதங்கள்

1771. பண்டிட் தாகூர் தாஸ் பார்கவா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட தகவல்களை அன்பு கூர்ந்து அளிப்பாரா:

(அ) கல்கத்தா மற்றும் பம்பாயுடன் ஒப்பிடும்போது டில்லியிலும் புதுடில்லியிலும் மின் கட்டணங்கள் எவ்வளவு?

(ஆ) கல்கத்தா அல்லது பம்பாயில் நிலவும் கட்டணங்களுக்கு இசைந்த முறையில் டில்லியிலும் புதுடில்லியிலும் கட்டணங்களை நிர்ணயிக்க இயலாததற்குக் காரணங்கள் என்ன?

(இ) டில்லியில் அண்மை வருங்காலத்தில் கட்டணங்கள் குறைக்கப்படும் என்று எதிர்பார்க்கலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) இது குறித்த அறிக்கை அவையில் முன்வைக்கப்பட்டிருக்கிறது.

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 12, 1946, பக்கம் 3897.

(ஆ) டில்லியிலும் புதுடில்லியிலும் மின் விளக்குகளுக்கும் மின் விசிறிகளுக்குமான கட்டணங்கள் ஏற்கெனவே ஒரே மாதிரி யானதாக இருக்கின்றன. மின்விசைக் கட்டணங்களில் நிலவும் இலேசான வேறுபாட்டை அகற்றும் பிரச்சினை பரிசீலனையில் உள்ளது.

ஒருபுறம் புதுடில்லி, டில்லி கட்டணங்களுக்கும் இன்னொரு புறம் பம்பாய் அல்லது கல்கத்தா கட்டணங்களுக்கும் இடையே வேறுபாடு நிலவுவதற்கு பம்பாயிலும் கல்கத்தாவிலும் பெரிய மின் நிலையங்கள் பராமரிக்கப்பட்டு வருவதும் அதேசமயம் டில்லி யிலும் புது டில்லியிலும் சிறிய மின் நிலையங்கள் இருந்து வரு வதுமே காரணமாகும். இதுவல்லாமல், நிலைமைகள் இடத்துக்கு இடம் மாறுபடுகின்றன; எத்தகைய மின் நிலையம் பயன்படுத்தப் படுகிறது, அந்த மின் நிலையத்துக்கு வேறு எந்த வசதிகள் கிடைக் கின்றன என்பதையும் பெரிதும் பொறுத்திருக்கிறது.

(இ) இந்த விஷயம் குறித்து இப்போதைக்கு திட்டவட்ட மாக எதுவும் கூறுவது சாத்தியமல்ல. எனினும் இந்த விஷயம் இடையறாது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது என்பதை மதிப் பிற்குரிய உறுப்பினருக்கு உறுதிகூற விரும்புகிறேன்.

# 470

## *டில்லி மத்திய மின்விசை ஆணையம் அமைப்பு

1772. பண்டிட் தாகூர் தாஸ் பார்கவா: (அ) டில்லி மத்திய மின்விசை ஆணையம் அமைக்கப்பட்டிருப்பது குறித்து கூறுவ தோடு பின்கண்ட விவரங்களையும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெரிவிப்பாரா:

(ஆ) ஓர் இந்தியரைத் தவிர இந்த ஆணையத்திலுள்ள உறுப்பினர்கள் அனைவரும் ஐரோப்பியர்களே என்பது உண்மையா?

---

★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 12, 1946, பக்கம் 3899.

(இ) டில்லி நகரசபை இந்த ஆணையத்தின் குழுமத்தில் பிரதிநிதித்துவம் பெற்றிருப்பது உண்மையா?

(ஈ) ஒரு பிரதிநிதிக்குப் பதிலாக இரண்டு பிரதிநிதிகளை அனுமதிக்க வேண்டும் என்று டில்லி நகரசபை வலியுறுத்தி வருவது உண்மையா?

(உ) டில்லி எலெக்ட்ரிக் அண்டு டிராக்ஷன் கம்பெனி லிமிடெட்டை அரசாங்கம் தன்வசம் எடுத்துக் கொள்ள உத்தேசித்திருக்கிறது என்பதும், டில்லி மத்திய மின்விசை ஆணையத்தில் இந்நிறுவனத்தின் பிரதிநிதி ஒருவர் இடம் பெற்றிருக்கிறார் என்பதும் உண்மையா?

(ஊ) இது உண்மையானால், டில்லி எலெக்ட்ரிக் அண்டு டிராக்ஷன் கம்பெனி லிமிடெட்டை அரசாங்கம் எடுத்துக் கொள்ளும் போது, அதற்கு இருக்கும் பிரதிநிதித்துவத்தை டில்லி நகரசபைக்குக் கூடுதலாக வழங்குவதற்கு என்ன ஆட்சேபம் இருக்க முடியும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (அ) டில்லி மத்திய மின்விசை ஆணையத்தைத்தான் மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிடுகிறார் என்று நினைக்கிறேன். அதன் உறுப்பினர்கள் வருமாறு:

(1) கவர்னர்-ஜெனரலின் நிர்வாக சபை;

(2) டில்லி தொழிற்சாலை உரிமையாளர்கள் சம்மேளனம்;

(3) டில்லிப் பிரதேசப் படைத்தளபதி;

(4) பஞ்சாப் வர்த்தக சபை;

(5) டில்லி எலெக்ட்ரிக் சப்ளை அண்டு டிராக்ஷன் கம்பெனி லிமிடெட்;

(6) புதுடில்லி நகரசபை.

(ஆ) ஆம்.

(இ) இல்லை.

(ஈ) 1938ல் டில்லி மத்திய மின்விசை ஆணையம் அமைக்கப் பட்டபோது டில்லி நகரசபையின் நிலைப்பாடு இவ்வாறுதான் இருந்தது. ஆனால் அதற்குப் பிறகு இந்தப் பிரச்சினையை அது எழுப்பவில்லை.

(உ) ஆம்.

(ஊ) டில்லி நகரசபை டில்லி மத்திய மின்விசை ஆணை யத்தில் உறுப்பினரல்லாததால், அதற்குக் கூடுதல் பிரதிநிதித் துவம் அளிக்கும் பிரச்சினை இல்லை.

# 471

## *இந்தியாவில் கனிப்பொருள் வளங்கள் குறித்து டாக்டர் கிருஷ்ணனின் பரிந்துரைகள்

1773. பேராசிரியர் என்.ஜி. ரங்கா: மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பின்கண்ட கேள்விகளுக்கு அன்புகூர்ந்து பதிலளிப்பாரா:

(அ) சென்னை ராஜதானி கல்லூரியின் மண்ணியல் ஆராய்ச் சிக் கழகத்தில் மார்ச் 14 ஆம் தேதி டாக்டர் எம்.எஸ். கிருஷ்ணன் ஆற்றிய உரை ஹிந்து மார்ச் 14 ஆம் தேதி இதழில் வெளிவந்துள் ளது; இது அவரது கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா?

(ஆ) தாமிரம், வெள்ளி, நிக்கல், பிளாட்டினம், வெள்ளீயம், பாதரசம், காரீயம், மர உப்பு போன்ற கனிப் பொருள்களைப் போதிய அளவு பெறுவதற்கும் அவற்றை இருப்பில் வைப்பதற்கும் என்ன நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன?

(இ) இதேபோல், நிலக்கரிச் சுரங்கங்கள் அருகில் இல்லாத மாகாணங்களில் உள்ளூர் தொழில்களை வளர்ப்பதற்கு நீர்மின்

* மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 12, 1946, பக்கம் 3899.

வளங்களைப் பயன்படுத்திக் கொள்வதற்கு என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன?

(உ) காற்று விசையாலைகளைப் பயன்படுத்தி காற்றி லிருந்து மின்விசை பெறுவதற்கு ஏதேனும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றனவா?

(ஊ) பல்வேறு கனிப் பொருள்களின் தரத்தையும் அளவை யும் மதிப்பிடுவதற்கு சிறந்த சாதனங்களைக் கொண்ட ஆய்வுக் கூடங்கள் அமைக்கப்பட வேண்டும் என்றும், இறக்குமதி செய்யப் படும் கனிப்பொருள்களையும் உள்ளூரில் கிடைக்கும் கனிப் பொருள்களையுமே பயன்படுத்த வேண்டும் என்றும் டாக்டர் கிருஷ்ணன் தெரிவித்த யோசனைகள் முழு அளவுக்குப் பரிசீலிக்கப் படுமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (அ) ஆம்.

(ஆ) போர் நடைபெற்று வந்த சமயம் கேந்திர முக்கியத் துவம் வாய்ந்த சில கனிப்பொருள்களை இருப்பு வைக்கும் திட்டம் பரிசீலனையில் இருந்து வந்தது; ஆனால் அந்தத் திட்டம் நிறைவேற வில்லை. அரசாங்கம் தனது கனிப்பொருள் கொள்கையை மாற்றி யமைப்பது குறித்து யோசித்து வருகிறது; இந்தியாவில் பற்றாக் குறையாக இருக்கும் இந்தக் கனிப்பொருள்கள் விஷயத்தில் உரிய கவனம் செலுத்தப்படும்.

(இ) பொதுவாகக் கூறினால், தற்போது தொழில்நுட்ப வல்லுநர்களின் சேவை எந்த அளவுக்குக் கிட்டுகிறது என்பதைப் பொறுத்து நீர்மின்விசை வளங்களை அதிகப்பட்ச அளவுக்குப் பயன் படுத்திக் கொள்ள மாகாண அரசாங்கங்களும் சமஸ்தான அரசாங் கங்களும் நடவடிக்கைகள் மேற்கொண்டு வருகின்றன. மத்திய தொழில்நுட்ப மின்விசை வாரியம் அதன் தற்போதைய மனித சக்தி ஆற்றலுக்கு உட்பட்டு இந்த விஷயத்தில் ஏற்கெனவே உதவி செய்து வருகிறது; தொழில்நுட்பப் பணியாளர்கள் போதிய எண்ணிக்கை யில் கிட்டியதும் அது மேற்கொண்டு, வேண்டிய உதவிகளைச் செய்யும். நாடு முழுவதும், அதிலும் குறிப்பாக பிரதான நிலக்கரிச் சுரங்கங்களிலிருந்து தொலைதூரத்தில் இருக்கும் பிரதேசங்களில்

நீர்மின்விசை வளத்தைப் பெருமளவுக்குப் பெருக்க வேண்டிய அவசியத்தை, முக்கியத்துவத்தை இந்திய அரசாங்கம் முழு அளவுக்கு உணர்ந்துள்ளது. ஆனால் அதேசமயம், அனுபவமிக்க தொழில்நுட்பப் பணியாளர் எண்ணிக்கையைப் பெருமளவுக்கு அதிகரிக்காமல் இதனை சாதிக்க முடியாது என்பது கண்கூடு. எனவே, இதனைக் கருத்திற் கொண்டு தொழில்நுட்ப வல்லுநர்களின் சேவையை ஒப்பந்த அடிப்படையில் பெறுவதற்கு அரசாங்கம் முழு முயற்சியில் இறங்கியுள்ளது.

(ஈ) காற்றிலிருந்து மின் விசை பெறுவதற்கோ அல்லது காற்று விசையாலைகளைப் பிரபலப்படுத்துவதற்கோ தற்போது இந்திய அரசாங்கம் எத்தகைய பிரத்தியேக நடவடிக்கைகளையும் எடுத்து வரவில்லை. இத்தகைய காற்று விசையாலைகள் குறிப்பிட்ட சில இடங்களில் வானிலையைப் பொறுத்து பயனளிக்கக் கூடியவையாக இருந்தாலும், அவற்றிலிருந்து மிகக் குறைந்த அளவே மின் விசை பெறமுடியும் என்பதோடு, அந்த மின்விசையும் விட்டு விட்டுத்தான் கிடைக்கும் என்று அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறப்பட்டது.

(உ) இந்திய மண்ணியல் ஆய்வுத்துறை அண்மைக் காலத்தில் மறுசீரமைக்கப்பட்டிருப்பதோடு, அதன் ஆய்வுக்கூட வசதிகளும் பெருமளவுக்கு விரிவுபடுத்தப்பட்டுள்ளன. கனிவளங்கள் மற்றும் கனிவள விஷயங்கள் குறித்து இலவச ஆலோசனையும் தகவல்களும் வழங்கும் திசைவழியில் அது மேலும் முன்னேறி வருகிறது. அண்மையில் திட்டமிடப்பட்டிருக்கும் தேசிய வானிலை மற்றும் தேசிய வேதிப்பொருள் ஆய்வுக்கூடங்கள் இந்தியக் கனிப் பொருள் களின் தரத்தை உரிய முறையில் மதிப்பிடும் வகையில், முழு அளவுக்கு ஆய்வு சாதனங்களைப் பெற்றிருக்கும்; கனிப் பொருள்கள் தொழில்துறையை வளர்ப்பதில் அது மிகவும் உதவிகரமாக இருக்கும். இந்தியாவின் கனிப்பொருள்களையும் தாதுப் பொருள்களையும் கச்சாப் பொருள்களாக ஏற்றுமதி செய்வதை விடவும் அவற்றை உள்நாட்டிலேயே சுத்திகரித்து உரிய முறையில் பயன்படுத்திக் கொள்வது பற்றி இந்திய அரசாங்கம் பரிசீலித்து வருகிறது. 1944 முதல் அமைக்கப்பட்ட பல தொழில்துறை ஆய்வுக் குழுக்கள் ஏராளமான அரிய தகவல்களைச் சேகரித்துள்ளன; ஒரு

புதிய கனிவளக் கொள்கையை உருவாக்குவதற்கு இவை ஆராயப் பட்டு வருகின்றன.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* (இ) கேள்விக்குப் பதிலளிக்கும் போது இந்த நீர்மின்விசை வளங்களை நன்கு பயன்படுத்திக் கொள் வதற்கு ஏராளமான எண்ணிக்கையில் நிபுணர்கள் தேவை என்று மாண்புமிகு உறுப்பினர் கூறுகிறார். இந்தத் திசை வழியில் இந்தியர் கள் தேவையான ஆற்றல்களையும் தகுதிகளையும் பெறுவதற்கும், அவர்களது சேவையைப் பயன்படுத்திக் கொள்வதற்கும் அரசாங்கம் என்ன நடவடிக்கைகளை எடுத்து வருகிறது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தத் துறை யில் விசேடப் பயிற்சி பெறுவதற்கு ஏராளமான இந்தியர்கள் அயல் நாடுகளுக்கு அனுப்பப்பட்டுள்ளனர்.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* பயிற்சி பெறுவதற்கு அவர்களை வெளிநாடுகளுக்கு அனுப்பும் இந்தப் புதிய திட்டத் தின் ஒரு பகுதியாகவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இவர்களையன்றி வேறு பலரும் அனுப்பப்பட்டுள்ளனர்.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* (ஈ) கேள்விக்குப் பதிலளிக்கும் போது, காற்றிலிருந்து மின்விசை பெறும் யோசனைக்கு ஊக்கம் கொடுக்காமல், அதனைப் புறக்கணித்திருக்கிறார்; காற்று விசை யாலைகளால் இடைவிட்டு இடைவிட்டுத்தான் மின்விசை உற்பத்தி செய்ய முடியும் என்று இதற்கு சாக்குப்போக்குக் கூறியிருக்கிறார். இந்தக் காற்று விசையாலைகளின்பால் ஆயிரக்கணக்கான விவசாயிகள் மிகுந்த ஆர்வம் காட்டிவரும் நிலைமையில், இந்த விஷயத்தை இன்னும் அதிகக் கவனமாக ஆராய்ந்து, காற்றிலிருந்து கூடிய மட்டும் மின்விசை பெறுவதற்கு விவசாயிகளுக்கும் மற்ற வர்களுக்கும் உதவ அரசாங்கம் முன்வருமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல், ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் காற்று எந்த அளவுக்கு வீசுகிறது என்பதை இது பொறுத்துள்ளது.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: நம் நாட்டில் ஏராளமான வானிலை ஆய்வு நிபுணர்கள் இருக்கிறார்கள்; நாட்டின் பல்வேறு பகுதிகளில் காற்றைப் பயன்படுத்தி எந்த அளவுக்கு மின்விசை பெறமுடியும் என்பதற்கு அவர்கள் தகுந்த திட்டங்கள் தீட்டி வழங்க முடியுமல்லவா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: உண்மைதான்; இதைப் பற்றிப் பரிசீலிப்போம்.

# 472

## படைத்துறையிலிருந்து விடுவிக்கப்பட்ட ராணுவ அதிகாரிகளுக்கு பொதுத்துறையில் வேலைவாய்ப்பு

படைத்துறையிலிருந்து விடுவிக்கப்பட்ட ராணுவ அதிகாரிகளுக்கு மத்திய அரசாங்கத்தின் பல்வேறு இலாகாக்களில் கடந்த ஆறு மாதங்களில் எந்த அளவுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை அமைச்சர் தெரிவிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினர் கேட்ட தகவல்கள் சேகரிக்கப்பட்டு வருகின்றன; அவை சேகரிப்பட்டு முடிந்ததும், அவருக்குத் தெரிவிக்கப்படும்.



★ மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, ஏப்ரல் 12, 1946, பக்கம் 2904.

